ஸ்ரீ:

# ஸ்ரீபாகவதம்.

## தசமஸ்கந்தம் - உத்தரார்த்தம்

## தமிழ் வசனம்

இஃது

ஸ்ரீ-அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

இயற்றப்பெற்று

DR. U. V. S. IYER LIBRARY
22483
MADRAS-90

சென்னை

ஸ்ரீ வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.

1920

All Ri hts Reserved.

ALL RIGHTS RESERVED

காபிரைட்:—1920ஹு ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்கள் காபிரைட்டுக் குரியவர்கள். இப் புத்தகம் இந்தியன் காபிரைட் ப்ரகாரமாகவும், அன்ய தேஶீயரது காபிரைட் ப்ரகாரமாகவும் காக்கப்பட்டிருக்கின்றது. எவராயினும் இப்புத்தகத்தை முழுவதுமாவது, அல்லது இதில் ஒரு பாகத்தையாவது தாம் வேருக அச்சிடவும், மற்றொரு பாஷையில் மொழிபெயர்த்து அச்சிடவும் அதிகாரமில்லை. இதிலுள்ள பதங்களையாவது, பாவங்களையாவது, படங்களையாவது காபி செய்வார்களாயின், அது காபிரைட்டை உல்லங்கனஞ் செய்ததே ஆகும்.

Dr. U. V. S. IYER LIBRARY ★ MADRAS ★
22483

# முகவுரை

ஸ்ரீ பாகவதத்தில் தசமஸ்கந்தம் ஸ்ரீக்ருஷ்ணவ தார சரித்ரங்களையெல்லாம் விரிவாக எடுத்துரைப்ப தும் அடிக்கடி அவன் பெருமையை வெளியிடுவதும் தத்வஹித புருஷார்த்தங்களை ஆராய்ந்தறிய விரும்பு வோர்களுக்குப் பேருதவி செய்வதுமாகையால் ஸாரமா னது. இதை வாசிப்பவர்கள் பகவானிடத்தில் பக்தி உண்டாகப் பெற்றுத் தம்மையும் மறப்பார்களென்றால் ஸாம்ஸாரிக துக்கங்களை அவர்கள் அறியமாட்டார்க ளென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? இதை எழு தின என்னுடைய புல்லறிவினால் ஏற்பட்ட பிழைகளை யெல்லாம் பொறுத்துப் பெரியோர்கள் பகவத்கதை யென்று விரும்பி அடியேனைக் கடாக்ஷிப்பார்களென்று நம்புகிறேன்.

அ. வீ. நரஸிம்ஹாசாரியர்.

Dr. U. V. S. IYER LIBRARY MADRAS
22483

# பொருளடக்கம்.

தசமஸ்கந்தத்தின் உத்தரார்த்தத்திலுள்ள

# படங்களின் விவரம்.

நெ. பக்கம்.

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

# ஸ்ரீமத்பாகவதம்.

## தசமஸ்கந்தம்

### உத்தரார்த்தம்.

(ஜராஸந்தாதிகளோடு யுத்தமும், ஸமுத்ரத்தினிடையில் த்வாரகாபுரியை நிர்மித்துத் தன் பந்துக்களை அவ்விடம் கொண்டு போய்ச் சேர்த்தலும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரதஸ்ரேஷ்டனே! கம்ஸனுக்கு அஸ்தியென்றும் ப்ராஸ்தியென்றும் இரண்டு பட்டமஹிஷிகள் இருந்தார்கள். அவர்கள் பர்த்தாவான கம்ஸன் முடிகையில் துக்கத்தினால் வருந்தித் தந்தையாகிய ஜராஸந்தனுடைய க்ருஹத்திற்குப் போனார்கள். அப்பால் வருத்தமுற்றிருக்கின்ற அக்கம்ஸமஹிஷிகள் மகததேசங்களுக்கு ப்ரபுவும் தங்கள் தந்தையுமாகிய ஜராஸந்தனுக்குத் தங்கள் வைதவ்யத்தின் காரணத்தையெல்லாம் ஸவிஸ்தரமாகத் தெரிவித்தார்கள். அந்த ஜராஸந்தன் அப்ரியமான அந்தச் செய்தியைக் கேட்டுச் சோகம் கோபம் இவைகளுடன்கூடிப் பூமியில் யாதவப்பூண்டே இல்லாதபடி செய்யப் பெருமுயற்சி கொண்டான். அவன் இருபத்து மூன்று அக்ஷௌஹிணி ஸைன்யங்களைத் திரட்டிக்கொண்டு சென்று யாதவர்களின் முக்யபட்டணமாகிய மதுரையை எல்லாத் திசை

களிலும் தகைந்தான். ஸ்ரீக்ருஷ்ணன் கரைபுரண்ட ஸமுத்ரம்போன்றிருக்கிற அந்த ஜராஸந்தனுடைய ஸைன்யத்தையும், அவனால் தன்பட்டணம் தகையப்பட்டிருப்பதையும், தன்ப்ரஜைகளெல்லாம் பயந்து வ்யாகுலமுற்றிருப்பதையும் கண்டு,பாரத்தை நீக்குகையாகிறகாரணத்திற்காக மானிட உருவத்தை ஏற்றுக் கொண்டவனும் தன்னைப்பற்றினவர்களுடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அந்தத் தேசகாலங்களுக்குத் தகுந்திருக்கும்படி தன்னுடைய அவதாரத்தின் ப்ரயோஜனத்தை ஆராய்ந்து இங்ஙனம்செய்யவேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டான். 'இந்த மாகதன் திரட்டிக்கொண்டு வந்திருக்கிற இந்த ராஜாக்களின் ஸைன்யம் பல அக்ஷௌஹிணிக்கணக்குடையது. போர்வீரர்களும் குதிரைகளும் தேர்களும் அளவற்றிருக்கின்றன. இந்த ஸைன்யம் முழுவதும் பூமிக்குப் பாரமாயிருக்கிறதாகையால் இதை வதித்துவிடுகிறேன். மாகதனைமாத்ரம் இப்பொழுது வதிக்கலாகாது. ஏனென்றால், அவனை வதிக்காமல் விட்டுவிடுவோமாயின், அவன் மீளவும் ஸைன்யங்களைத் திரட்டிக்கொண்டு வருவான். அவற்றையும் வதிக்கலாம். அவதரித்தது பூமியின்பாரத்தை நீக்குவதும் ஸத்புருஷர்களைக் காப்பதும் துஷ்டர்களை வதிப்பதும் ஆகிய இவற்றிற்காகவன்றோ? இதுவன்றி,என்னுடைய அவதாரத்திற்கு வேறு சில ப்ரயோஜனங்களும் உண்டு. ஒருகால் மிகவும் தலையெடுத்து வளர்ந்துவருகின்ற அதர்மத்தை அழிப்பதற்காகவும் தர்மத்தைப் பாதுகாப்பதற்காகவும் நான் தேஹத்தை ஏற்றுக்கொள்ளுகிறேன்' என்று இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அப்பொழுதே ஸூர்யனுடைய ஒளிபோன்ற ஒளியுடையவை

களும் ஸாரதியோடு கூடினவைகளும் மற்றும் வேண்டிய பரிகரங்களெல்லாம் அமைந்தவைகளுமாகிய இரண்டு ரதங்கள் ஆகாயத்தினின்று இறங்கிவந்தன. அமானுஷங்களான பழைய ஆயுதங்களும் திடீரென்று வந்து தோன்றின. அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் அவற்றைக் கண்டு பலராமனைப் பார்த்து மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—பெரியோனே! அண்ணனே! யாதவர்களுக்கு வருத்தம் நேர்ந்திருக்கின்றது; காண்பீராக. இவர்கள் அனைவரும் உம்முடைய பக்தர்களும் ப்ருத்யர்களுமாயிருப்பவர். ஆகையால் இவர்களை உபேக்ஷிக்கலாகாது. இதோ உமக்கு இஷ்டமான ரதமும் ப்ரியமான ஆயுதங்களும் வந்திருக்கின்றன. இந்த ரதத்தில் ஏறிக்கொண்டு இதோ வந்திருக்கின்ற சத்ருஸைன்யத்தை அழித்துப் பந்துக்களை ஆபத்தினின்று கரையேற்றுவீராக. நம்பிறவி சத்ருக்களை அழிப்பதற்காகவும் ஸத்புருஷர்களுக்கு ஸுகத்தைத விளைப்பதற்காகவுமன்றோ? இருபத்துமூன்று அக்ஷௌஹிணிக் கணக்குடைய ஸைன்யமாகிற பூமியின் பாரத்தை ஒழிப்பீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ராமக்ருஷ்ணர்கள் ஆலோசித்துக்கொண்டு கவசந் தரித்துத் தங்களுக்கு அஸாதாரணமான ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு ரதத்தின்மேல் ஏறி ஸ்வல்பஸைன்யத்தோடுகூட மதுரைப்புரியினின்று புறப்பட்டார்கள். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் தாருகனைச்சாரதியாக வுடையவனாகிப்பாஞ்சஜன்யமென்கிற தன்சங்கத்தை ஊதினான். அந்தச் சங்கத்தின் த்வனியைக் கேட்டமாத்ரத்தில் சத்ருஸைன்யங்களின் ஹ்ருதயத்தில் பயமும் நடுக்கமும் உண்டாயின. மகத

தேசாதிபதியான ஜராஸந்தன் அந்த ராமக்ருஷ்ணர் களைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ஜராஸந்தன் சொல்லுகிறான்:—ஏ க்ருஷ்ண! புருஷாதமா! பந்துவைக் கொன்றவனே! நீ கம்ஸனிடத்தினின்று பயந்து கோகுலத்தில் மறைந்திருந்தனையல்லவா? ஆகையால் நான் உன்னோடு யுத்தஞ் செய்யமாட்டேன். இளம் பிள்ளையோடு லஜ்ஜையினால் யுத்தஞ் செய்ய விருப்பம் உண்டாகாததுபோல, உன்னோடு யுத்தஞ் செய்ய எனக்கு இச்சையுங்கூட உண்டாகவில்லை. ராமனே! உனக்கு யுத்தஞ்செய்ய வேண்டுமென்னும ச்ரத்தை உளதாயின், யுத்தஞ்செய்வாயாக; நிலைநிற்பாயாக. யுத்தஞ் செய்யத் தொடங்கி ஓடிப்போகவேண்டாம். இப்படியாயின் என்பாணங்களால் பிளக்கப்பட்ட தேஹத்தைத் துறந்து ஸ்வர்க்கம்போவாய். அல்லது நீயே ஸமர்த்தனாயிருப்பயாயின் என்னை வதிப்பாயாக.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—சூரர்கள் பலவாறு தங்களைத் தாமே புகழ்ந்துகொள்ளமாட்டார்கள். பின்னை என்ன செய்வார்களென்றால், பௌருஷத்தையே காண்பிப்பார்கள். ஆகையால் சூரத்தன்மையற்றவனும் மரணம் அடைய விரும்புகின்றவனும் ஆதுரம்பிடித்தவனுமாகிய உன்னுடைய வசனத்தை நாங்கள் வெகுமதிக்கமாட்டோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஜராஸந்தன் அந்த ராமக்ருஷ்ணர்களை எதிர்த்து வந்ததுடன் காற்று மேகங்களால் ஸூர்யனையும், தூட்களால் அக்னியையும் மறைப்பதுபோலப் பெரியஸைன்யஸமூஹத்தினால் மறைத்தான். அப்பொழுது பட்டணத்து மடந்தையர்கள் மேல்மெத்தைகளிலும் உப்பரிகைகளிலும் கோபுரங்களிலும் ஏறி யுத்தத்தில் கருடத்வஜத்தினும் தாலத்வஜத்தினும்

அடையாளஞ் செய்யப் பெற்ற க்ருஷ்ணராமர்களின் ரதங்களைக் கண்டு சோகத்தினால் நிரம்பி மோஹித்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் தன்ஸைன்யமெல்லாம் சத்ருக்களின் ஸைன்யங்களாகிற மேகங்களினின்று வந்து விழுகின்ற பாணங்களாகிற மழையினால் பீடிக்கப்பட்டு வருந்துவதைக் கண்டு தேவதைகளாலும் அஸுரர்களாலும் வெகுமதிக்கப்பட்டதும் சார்ங்கமெனும் பெயருடையதுமாகிய மேலான தனுஸ்ஸை நாணேற்றி ஒலிப்பித்தான். அவன் அம்பறாத்தூணியினின்று பாணங்களை எடுத்துத் தனுஸ்ஸில் தொடுத்துக் காதுவரையில் இழுத்துக் கூரான பாணங்களை நிரைநிரையாக விடுத்துத் தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் காலாட்களையும் ஓயாமல் வதித்துக்கொண்டிருந்தான். கொள்ளிக்கட்டையைச் சுற்றினால் அது சக்ரம்போல் தோற்றுவதுபோல, அவனுடைய தனுஸ்ஸு ஓயாமல் பாணப்ரயோகஞ் செய்துகொண்டிருக்கையால் வளைந்து சக்ரம்போல் தோன்றிக்கொண்டிருந்தது. அப்பொழுது யானைகள் கும்பஸ்தலங்கள் பிளவுண்டு விழுந்தன. குதிரைகள் பலவும் பாணங்களால் கழுத்து முறியப் பெற்று விழுந்தன. தேர்கள் குதிரைகளும் த்வஜங்களும் ஸாரதிகளும் தேர்வீரர்களும் அடியுண்டு சூன்யமாயின. காலாட்கள் புஜங்களும் துடைகளும் கழுத்துகளும் அறுப்புண்டு விழுந்தார்கள். பாணங்களால் சேதிக்கப்படுகின்ற காலாட்கள் யானைகள் குதிரைகள் ஆகிய இவற்றின் சரீரங்களினின்று ரக்தநதிகள் பலவும் உண்டாயின. அந்நதிகளில் அறுந்து விழுந்த புஜங்களாகிற ஸர்ப்பங்களும், தலைகளாகிற ஆமைகளும், அடியுண்ட யானைகளாகிற தீவுகளும், குதிரைகளாகிற முதலைகளும், கைகளும் துடைகளுமாகிற மீன்களும், மனுஷ்யர்களின்

தலைமயிர்களாகிற வேலம்பாசியும்; தனுஸ்ஸுக்களாகிற அலைகளும், ஆயுதங்களாகிற புதர்களும், தேர்சக்ரங்களாகிற நீர்ச்சுழிகளும், சிறந்த பெரிய ரத்னங்களும் உயர்ந்த ஆபரணங்களுமாகிற பறல்களும் பாறைகளும் அமைந்திருந்தன. இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் யுத்தபூமியில் பயஸ்தர்களுக்குப் பயத்தை விளைப்பவைகளும், தீரர்களுக்கு ஒருவர்க்கொருவர் ஸந்தோஷத்தை விளைப்பவைகளுமாகிய பற்பல ரக்தநதிகளைப் பெருகச் செய்தான். மன்னவனே! மற்றும் சத்ருக்களை அழிக்குந்திறமையாகிற பராக்ரமம் அளவற்றிருப்பவனும் தன் ஆயுதமாகிய உலக்கையினால் சத்ருக்களை வதித்துக்கொண்டிருப்பவனுமாகிய பலராமன் அங்ஙனம் அடித்து மிகுந்திருப்பதும் மகதராஜனால் பாதுகாக்கப்பட்டிருப்பதும் ஸமுத்ரம்போல் நுழைய முடியாததும் பயங்கரமுமாகிய பலத்தை முழுவதும் அழித்து விட்டான். அந்த ராமக்ருஷ்ணர்களிருவருமே அத்தனை ஸைன்யங்களையும் அழித்துவிட்டார்களேயென்று வியப்புறவேண்டாம். அவர்கள் கேவலம் வஸுதேவ குமாரர்களன்று; ஸர்வேச்வரனுடைய அவதாரம். ஆகையால் அவர்களுக்கு அது விளையாட்டேயன்றி ஒரு பொருளேயன்று. அளவற்ற கல்யாணகுணங்களையுடைய எவன் இந்த மூன்று லோகங்களையும் காப்பதும் படைப்பதும் அழிப்பதும் ஆகிய இவைகளை விளையாட்டாகவே நடத்துகிறானோ, அப்படிப்பட்ட ஸர்வேச்வரனுக்குச் சத்ருபக்ஷத்தை அழிப்பதென்பது ஆச்சர்யமன்று. ஆயினும் மானிடஉருவத்தை ஏற்றுக்கொண்டு மானிடவர்களைப் போல் நடனஞ் செய்கிறவன் அமானுஷமான செயலை நடத்துவது ஆச்சர்யமாகையால் அதை வர்ணிக்கிறேனன்றி வேறில்லை. பிறகு பலராமன் ஸைன்யங்களெல்லாம் முடிந்து ரதமுமின்றி

ப்ராணன்கள்மாத்ரமே மிகுந்திருக்கின்ற ஜராஸந்தனைச் சிங்கம் அற்பம்ருகத்தைப் பிடிப்பதுபோலப் பிடித்துக்கொண்டான். அவன் சத்ருக்களை முடித்த மஹா வீரனாகிய அந்த ஜராஸந்தனைப் பிடித்து வாருண பாசங்களாலும் மானுஷபாசங்களாலும் பந்தனஞ் செய்கையில், ஸ்ரீக்ருஷ்ணன் அவன் மூலமாகக் கார்யம் நடத்த நினைத்திருக்கையால் வேண்டாமென்று தடுத்தான். வீரர்களால் புகழப்பட்ட மஹாவீரனாகிய அந்த ஜராஸந்தன் லோகநாதர்களான ராமக்ருஷ்ணர்களால் விடப்பட்டு அப்பொழுதே தவஞ்செய்ய வனம் போக விரும்புகையில், சிசுபாலன் முதலிய ராஜாக்கள் வழியில் ஸந்தித்து விசித்ரமான அர்த்தங்களும் பதங்களும் அமைந்த வாக்யங்களாலும் 'அற்பர்களான யாதவர்களால் மஹாபராக்ரமசாலியான உனக்குப் பரிபவம் நேர்ந்ததென்பது என்கர்மத்தினால் ப்ராப்தமாயிற்றேயன்றி வேறில்லை' என்னும் இது முதலிய லௌகிக ந்யாயங்களாலும் தடுத்தார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ப்ருஹத்ரதனுடைய பிள்ளையாகிய ஜராஸந்தமன்னவன் தான் திரட்டிக்கொண்டுவந்த ஸைன்யங்களெல்லாம் முடிகையில் பகவானால் உபேக்ஷிக்கப்பட்டு மனவருத்தத்துடன் மகததேசம் போனான். ஸ்ரீக்ருஷ்ணனோவென்றால் தன்ஸைன்யத்தில் சிறிதும் அழியாமலே சத்ருஸைன்யங்களாகிற ஸமுத்ரத்தைக் கடந்து 'நல்லது நல்லது' என்று தேவதைகளால் அனுமோதனஞ்செய்து பூமழை பொழியப்பெற்றுச் சத்ருக்களின் பீடையாகிற ஜ்வரம் நீங்கி மனக்களிப்புற்ற மதுரைப்பட்டணத்து ஜனங்களுடன்கூடிப் பௌருஷத்தை எடுத்துரைப்பவர்களான ஸூதர்களாலும் வம்சாவளியைப் பாடுகின்ற மாகதர்களாலும் ஸ்துதிபாடகர்க

ளான வந்திகளாலும் விஜயம் பாடப்பெற்றுப் பட்டணத்திற்குச் சென்றான். ப்ரபுவாகிய பகவான் பட்டணத்திற்குள் நுழையும்பொழுது சங்கம் துந்துபி பேரி வீணை வேணு ம்ருதங்கம் ஆகிய இவ்வாத்யங்களும் மற்றும் பல வாத்யங்களும் முழங்கின. பட்டணத்து மார்க்கங்கள் தண்ணீர் தெளித்து விளங்கியிருந்தன. ஜனங்கள் அனைவரும் ஸந்தோஷமுற்றிருந்தார்கள். பட்டணம் முழுவதும் பதாகைகள் கட்டி அலங்கரித்திருந்தார்கள். அந்நகரம் வேதகோஷத்தினால் எங்கும் பெரிய நாதமுண்டாகப் பெற்றிருந்தது. ஸ்ரீக்ருஷ்ணன பட்டணத்திற்குள் ப்ரவேசிக்கையாகிற மஹோத்ஸவத்திற்காகத் தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. பட்டணத்து மடந்தையர்கள் அந்த ஸ்ரீக்ருஷ்ணன்மேல் புஷ்பங்களையும் தயிரையும் அக்ஷதைகளையும் இறைத்தார்கள். பட்டணத்து ஜனங்கள் ப்ரீதியினால் பேராவலுற்ற கண்களுடையவர்களாகி ஸ்னேஹத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இங்ஙனம் அந்த மஹானுபாவன் மதுரைக்குள் நுழைந்தான். ஸமர்த்தனாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணன் யுத்தபூமியினின்று கொண்டுவந்த அளவற்ற பணத்தையும் வீரர்களின் பூஷணத்தையும் யதுராஜனாகிய உக்ரஸேனனுக்குக் கொடுத்தான். மகதராஜனாகிய ஜராஸந்தன் இங்ஙனம் பதினெட்டுத் தடவைகள் அத்தனை அக்ஷௌஹிணீ ஸைன்யங்களுடன் வந்து ஸ்ரீ க்ருஷ்ணனால் பாதுகாக்கப்பட்ட யாதவர்களுடன் யுத்தஞ் செய்தான். வ்ருஷ்ணிகளென்னும் ப்ரஸித்திபெற்ற அந்த யாதவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய தேஜஸ்ஸினால் அந்த ஸைன்யங்களையெல்லாம் பாழ் செய்தார்கள். இங்ஙனம் தன் ஸைன்யமெல்லாம் முடிகையில் ஜராஸந்தமன்னவன் சத்ருக்களால் விடப்பட்டு

மீண்டுபோனான். பிறகு பதினெட்டாவது வரப்போகிறதா யிருக்கையில் பதினேழாம் யுத்தத்திற்கும் பதினெட்டாம் யுத்தத்திற்கும் இடையில் காலயவனனென்னும் மஹா வீரன் நாரதமஹர்ஷியால் அனுப்பப்பட்டு மதுரைஜனங் களுக்குப் புலப்பட்டான். மனுஷ்யலோகத்தில் தனக்கு எங்கும் இணையெதிரில்லாத அக்காலயவனன் யாதவர்கள் தன்னோடொத்த பலமுடையவர்களென்று நாரதர் மூல மாய்க் கேள்விப்பட்டு மூன்று கோடி ம்லேச்சர்களுடன் வந்து மதுரைப்புரியை எல்லாப்புறங்களிலும் தகைந் தான். ஸ்ரீக்ருஷ்ணன் அந்த யவனனைக் கண்டு பலராம னிடத்தில் கலந்தாலோசித்தான். 'அண்ணா! யாதவர் களுக்கு இரண்டு விதத்திலும் பெரிய பயம் நேர்ந்திருக் கின்றது. ஆ! என்ன செய்யலாம்? இப்பொழுது மஹா பலிஷ்டனாகிய இந்தக் காலயவனன் நம்மைத் தகைந்து கொண்டிருக்கின்றான். ஜராஸந்தனும் இன்றைக்கோ அல்லது நாளைக்கோ அல்லது நாளையின்றைக்கோ வரப்போகிறான். இப்பொழுது நாம் இந்த யவனனோடு யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில் ஜராஸந்தன் வரு வானாயின், அவன் நம் பந்துக்களை வதித்து விடுவான். அல்லது பலிஷ்டனாகிய அன்னவன் அவர்களைத் தன் பட்டணத்திற்காவது கொண்டுபோய்விடுவான். ஆகை யால் இப்பொழுது நாம் மனுஷ்யர்களுக்கு வருந்தியும் நுழையமுடியாத ஒரு ஜலதுர்க்கத்தை ஏற்படுத்தி அதில் பந்துக்களைக் கொண்டுபோய் வைத்து இந்த யவனனைக் கொல்லுவோம்' என்று மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ் ணன் ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டு ஸமுத்ரத்தி னிடையில் பன்னிரண்டு யோஜனை யளவுள்ள ஒரு துர்க் கத்தையும், அதில் ஸமஸ்த ஆச்சர்யங்களும் அமைந்த ஒரு பட்டணத்தையும் ஏற்படுத்தினான். அந்தப்பட்டணத்

தில் விஸ்வகர்மாவின் விஜ்ஞானத்தை வெளியிடுகிற சிற்பஸாமர்த்யங்கள் பலவும் புலப்படும். அந்நகரத்தில் வாஸ்துசாஸ்த்ரங்களில் நிரூபிக்கப்பட்ட விதியின்படி ராஜவீதிகளும் முற்றங்களும் சிறியவீதிகளும் நிர்மிக்கப்பட்டிருந்தன. கல்பவ்ருக்ஷங்களும் கல்பலதைகளும் நிறைந்த உத்யானங்களும், அற்புதமான உபவனங்களும் அமைக்கப்பட்டிருந்தன. ஸ்படிகரத்னமயமான உப்பரிகைகளும் கோபுரங்களும் ஸ்வர்ணமயமான சிகரங்கள் அமைந்து ஆகாயத்தை அளாவியிருந்தன. அஶ்வசாலை அன்னசாலை முதலிய பலசாலைகள் வெள்ளி பித்தளை முதலிய லோஹங்களால் இயற்றிப் பொன்குடங்கள் வைத்து அலங்கரிக்கப்பட்டிருந்தன. வீடுகள் ஸ்வர்ணங்களால் நிர்மித்துப் பத்மராகம் முதலிய ரத்னங்களால் இயற்றின சிகரங்களும் மரகதரத்னங்கள் படுத்த அகன்ற தரைகளும் அமைந்திருந்தன. அந்நகரத்தில் பொதுவாகவும் ஒவ்வொரு வீடுகளிலும் தேவாலயங்களும் சந்த்ரசாலைகளும் நிர்மிக்கப்பட்டிருந்தன. ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் வைஶ்யர் சூத்ரர் ஆகிய நான்கு வர்ணத்தவர்களும் நிறைந்திருந்தார்கள். அந்நகரம் யாதவர்கள் வஸிப்பதற்குரிய மாளிகைகளால் மிகவும் விளக்கமுற்றிருந்தது. மஹேந்த்ரன் ஸுதர்மையென்னும் தன் ஸபையையும் பாரிஜாதவ்ருக்ஷத்தையும் ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுத்தனுப்பினான். அந்த ஸுதர்மையில் நுழைவாருயின் பசி தாஹம் முதலிய மனுஷ்யதர்மங்களால் தீண்டப்படமாட்டான். வருணன ஒற்றைக்காதுமாத்ரம் கறுத்து உடம்பெல்லாம் வெளுத்திருப்பவைகளும் மனோவேகமுடையவைகளுமான குதிரைகளை அனுப்பினான். குபேரன் தன்னிடத்திலுள்ள எட்டு நிதிகளையும் அனுப்பினான். மற்ற லோகபாலர்களும் தங்கள் தங்களுக்கு

அஸாதாரணமாயுள்ள ஐஸ்வர்யங்களை அனுப்பினார்கள். ஸித்தர் முதலிய மற்றவர்களும் பகவானால் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட ஆதிபத்யம் எதுவெது உண்டோ அதையெல்லாம் அவன் பூலோகத்திற்கு வந்திருக்கையில் அவனுக்குத் திருப்பிக்கொடுத்துவிட்டார்கள். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்யோகமஹிமையினால் பந்துக்களையெல்லாம் ஒருவர்க்கும் தெரியாதபடி அவ்விடம் கொண்டுபோய்ச்சேர்த்து மீண்டு மதுரைக்கு வந்து ராமனுடன் கலந்தாலோசித்துப்பத்மமாலையைத் தரித்து ஆயுதமொன்றுமில்லாமலே பட்டணத்தின் வாசலினின்று புறப்பட்டான். ஐம்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ஸ்ரீக்ருஷ்ணன் காலயவனனை முசுகுந்தனுடைய த்ருஷ்டியால் தஹிப்பித்தலும், முசுகுந்தன் ஸ்ரீக்ருஷ்ணனைத் துதித்தலும், ஸ்ரீக்ருஷ்ணன் முசுகுந்தனுக்கு வரங்கொடுத்தலும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அப்பொழுது உதயகின்ற சந்த்ரன்போல் பார்க்கப் பதினாயிரங்கண்கள் வேண்டும்படி அழகியனும் கறுத்துப் பொன்னிறமுள்ள பட்டுவஸ்த்ரம் தரித்து மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளம் அமைந்து கழுத்தில் திகழ்கின்ற கௌஸ்துப மணியை அணிந்து திரண்டுருண்டு நீண்ட நான்கு பாஹுதண்டங்களும் அப்போதலர்ந்த செந்தாமரை மலர்போல் சிவந்தழகிய திருக்கண்களும் என்றும் ஸந்தோஷமுற்று அளவற்ற ஸௌந்தர்யமும் அழகிய கபோலயங்களும் பரிசுத்தமான புன்னகையும் திகழ்கின்ற மகரகுண்டலங்களும் அமைந்த முகாரவிந்தமும் விளங்கப்பெற்று மிகவும் விளங்குகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பட்டணத்து வாசலினின்று வெளிக்கிளம்பி வருவதைக் கண்டு காலயவனன்

நாரதரிடத்தில் 'ஸ்ரீக்ருஷ்ணன் இத்தகைய அடையாளங்களுடையவன்' என்று கேட்டிருப்பவனாகையால் 'ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளமுடையவனும் நான்கு புஜதண்டங்களுடையவனும் செந்தாமரைக்கண்ணனும் வனமாலை அணிந்தவனும் பேரழகனுமாகிய இப்புருஷன் வாஸுதேவனே யாகவேண்டும். நாரதர் சொன்ன லக்ஷணங்களெல்லாம் இவனிடத்தில் அமைந்திருக்கின்றன. ஆகையால் இவன் மற்றொருவனுமல்லன். இவன் ஆயுதமில்லாதிருக்கின்றனன். இவனோடு நான் காலால் நடந்து கொண்டு ஆயுதமில்லாமலே யுத்தஞ் செய்யவேண்டும்' என்று நிர்சயித்துக்கொண்டு அம்மஹானுபாவன் தன்னை எதிர்க்காமல் பராங்முகனாய் ஓடக் கண்டு யோகிகளுக்குங் கூட எட்டாத அப்பரம புருஷனைப் பிடிக்க முயன்று பின்றொடர்ந்தோடினான். ஸ்ரீக்ருஷ்ணன் அடிகள் தோறும் தன்னைக் கையில் அகப்படுகிறவன்போல் காட்டிக்கொண்டே அந்த யவனனை வெகுதூரம் இழுத்துக் கொண்டுபோய்ப் பர்வதகுஹையில் சேர்த்தான். 'நீ யதுகுலத்தில் பிறந்தவன், நீ பலாயனஞ் செய்வது யுக்தமன்று' என்று பழித்துக்கொண்டே அந்த யவனன் வேகமாகத் தொடர்ந்து சென்றும் பாபங்கள் தொலையப்பெறாதவனாகையால் இவனைப் பெறவில்லை. மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனோவென்றால் இங்ஙனம் பழிக்கப்பெற்றும் பேசாமல் பர்வதகுஹையில் நுழைந்தான். அக்காலயவனனும் அந்தப் பர்வத குஹையில் நுழைந்து அங்கு வேறொரு மனுஷ்யன் படுத்திருக்கக் கண்டான். அவன் 'வாஸுதேவன் என்னை இவ்வளவு தூரம் இழுத்துக்கொண்டுவந்து விட்டு இப்பொழுது ஸாதுவைப்போல் பேசாமல் படுத்திருக்கிறான். நிச்சயம். இவன் க்ருஷ்ணனே' என்று மூடனாகையால் அம்மனிதனை ஸ்ரீக்ருஷ்ணனாகவே நினைத்து

அவனைப் பாதத்தினால் உதைத்தான். நெடுநாளா ய்த் தூங்கிக்கொண்டிருக்கிற அப்புருஷன் எழுந்து மெல்லமெல்லக் கண்களை விழித்துத் திசைகளையெல் லாம்பார்த்துக்கொண்டு வந்துபக்கத்திலிருக்கின்ற அந்த யவனனைக் கண்டான். பரதவம்சாலங்காரனே! அந்த யவனன் கோபமுற்றிருக்கிற அப்புருஷனுடைய கண் பட்ட மாத்ரத்தில் பற்றி எரிகின்ற தன் தேஹத்தி னின்றுண்டான அக்னியால் தஹிக்கப்பட்டு அந்தக்ஷண மே பஸ்மமானான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ராஹ்ம ரிஷி! யவனனைக் கொன்ற அப்புருஷன் யாவன்? யாரு டைய வம்சத்தில் பிறந்தவன்? எத்தகைய வீர்யமுடைய வன்? அவன் எந்தக் காரணத்தினால்குஹைக்குள்சென்று படுத்திருந்தான்? அவனுடைய தேஜஸ்ஸு எத்தகை யது?

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—அப்புருஷன் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவன்; மாந்தாதாவின் புதல்வன்; மஹா னுபாவன்; முசுகுந்தனென்னும் பெயர்பெற்றவன்; ப்ராஹ் மணர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் நிறைவேற் றிக்கொடுப்பவன்; தர்மந்தவறாமல் யுத்தஞ் செய்யுந் தன் மையுடையவன். அந்த முசுகுந்தன் அஸுரர்களிடத்தி னின்று மிகவும் பயந்த இந்த்ரன் முதலிய தேவகணங்க ளால் தங்களைப் பாதுகாக்கும்படி வேண்டப் பெற்று வெகுகாலம் அவர்களைப் பாதுகாத்து வந்தான். அப் பால் அவர்கள் ஸுப்ராஹ்மண்யனை ஸ்வர்க்கத்தைப்பாது காக்கும் ஸேனாபதியாகப் பெற்றுமுசுகுந்தனைப் பார்த்து மொழிந்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—மன்னவனே! நீ எங்களைப்பாதுகாக்கையாகிற வருத்தத்தினின்று மீளு

வாயாக வீரனே! சத்ருக்களற்ற ராஜ்யத்தையும் மனுஷ்யலோகத்தையும் துறந்து எங்களையே பாதுகாத்துக்கொண்டிருக்கின்ற நீ ஸமஸ்தபோகங்களையும் கைவிட்டனை. உன்னுடைய பிள்ளைகளும் பட்ட மஹிஷிகளும் பந்துக்களும் அமாத்யர்களும் மந்த்ரிகளும் உன்காலத்தி லிருந்த மற்றுமுள்ள ப்ரஜைகளும் காலதர்மத்திற்குட்பட்டு இப்பொழுதில்லை. காலத்தினால் விளையும் விகாரங்களற்றவனும் ஸர்வநியாமகனுமாகிய பகவான் காலத்தைச் சரீரமாக வுடையவனாகி, இடையன் பசுக்களையெல்லாம் தன் வசத்தில் நடத்துவதுபோல விளையாடிக்கொண்டே ப்ரஜைகளை யெல்லாம் தன்வசத்தில் நடத்துகிறான். ஆகையால் அவர்கள் அனைவரும் காலஸ்வரூபனை பகவானுக்கு உட்பட்டு மரணம் அடைந்தார்கள். நீ பூமண்டலத்தையாளுங்காலத்தில் இருந்தவர்களில் ஒருவரும் இப்பொழுதில்லை. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. இப்பொழுது நீ மோக்ஷந் தவிர மற்ற எந்த வரத்தையாயினும் எங்களிடத்தினின்று வேண்டுவாயாக. விகாரங்களற்றவனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு வொருவனே அந்த மோக்ஷங்கொடுக்க வல்லவன். எங்களால் அதைக் கொடுக்க முடியாது. ஆகையால் எங்களிடத்தில் மோக்ஷத்தை விரும்பவேண்டாம். அதைத் தவிர மற்ற எதை விரும்பினும் நாங்கள் கொடுக்க ஸித்தமாயிருக்கின்றோம்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—(அதைக் கேட்ட அம்மன்னவனும் 'ஆனால் வெகுகாலமாக நித்ரையில்லாமலிருக்கின்ற எனக்குப் படுத்துறங்கும்படி ஜனஸஞ்சாரமில்லாத ஓரிடம் காட்டுவீர்களாக' என்று வேண்டுகையில் தேவதைகள் அப்படியே ஆகட்டுமென்று நிர்ஜனமான இடத்தைக் காட்டி 'நீ இவ்விடத்தில் ஸுகமாகப்

படுத்துறங்குவாயாக. உறங்குகிற உன்னை எவனேனும் தெரியாமல் எழுப்புவானாயின், அவன் அப்பொழுதே உன் கண் பட்டமாத்ரத்தில் பஸ்மமாவானாக' என்று இவ் வரத்தையும் கொடுத்தார்கள். இங்ஙனம் தேவதைகளால் மொழிந்து விடைகொடுக்கப்பெற்ற அம்மன்னவன் உறங்குவதற்காகத் தேவதைகள் காட்டின குஹைக்குள் சென்று படுத்துக்கொண்டான். இங்ஙனம் யவனன் பஸ்மமாகையில் யாதவஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் மிகுந்த மதியுடைய முசுகுந்தனுக்குத் தன்னைக் காட்டினான். சிறந்தமதியுடைய அம்முசுகுந்தமன்னவன் அந்தப் பகவானுடைய தேஜஸ்ஸினால் திரஸ்கரிக்கப்பட்டு இது யாருடைய தேஜஸ்ஸென்று பலவாறு சங்கித்துக்கொண்டே தேஜஸ்ஸினால் எவர்க்கும் அணுகமுடியாதவனும் மேகம்போல் கறுத்த நிறமுடையவனும் பொன்னிறமுள்ள பட்டுவஸ்த்ரம் தரித்தவனும் மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவுடையவனும் ஜ்வலிக்கின்ற கௌஸ்துப மணியால் திகழ்கின்றவனும் நான்குபுஜதண்டங்களுடையவனும் வைஜயந்தியென்னும் வனமாலையால் ப்ரகாசிக்கின்றவனும் தெளிந்தழகிய முகமுடையவனும் திகழ்கின்ற மகரகுண்டலங்கள் அணிந்தவனும் மூன்று லோகங்களுக்கும்பார்க்கப் பதினாயிரங்கண்கள் வேண்டும்படி அனுராகமும் புன்னகையும் அமைந்த கண்ணோக்கமுடையவனும் அழகான யௌவன வயதுடையவனும் மதித்த மஹாகஜம்போல் கம்பீரமாக நடப்பவனுமாகிய அந்தப் பகவானை மெல்லமெல்லப்பார்த்து மேல்வருமாறு வினவினான்.

முசுகுந்தன் சொல்லுகிறான்:—நுழைய முடியாத இவ்வரண்யத்தில் பர்வத குஹைக்குள் வந்திருக்கின்ற நீ யாவன்? முள்ளுகள் அளவற்றிருக்கின்ற இவ்வரண்யத்

தில் தாமரையிதழ்போன்ற பாதங்களால் ஸஞ்சரிக்கின்றனையே. நீ யாவன்? தேஜஸ்ஸுடையவர்களின் தேஜஸ்ஸெல்லாம் ஒன்று சேர்த்து மூர்த்திகரித்து வந்தாற்போல் திகழ்கின்றனை. அத்தகைய தேஜஸ்ஸேதானோ? அல்லது மஹானுபாவனாகிய அக்னியா? அல்லது அத்தகைய ஸூர்யனா? அல்லது சந்த்ரனா? அல்லது மஹேந்த்ரனா? அல்லது மற்ற லோகபாலர்களில் யாரேனுமொருவனா? இந்த்ரன் முதலிய தேவர்களுக்கும் தேவர்களாகிய ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களென்கிற மூவரில் நடுத்தேவனாகிய பரமபுருஷனே நீ யென்று யான் நினைக்கின்றேன். ஏனென்றால் நீ விளக்குபோலத் தன்னொளியால் இக்குஹையிலுள்ள இருட்டையெல்லாம் பறக்கடிக்கின்றனை. புருஷஸ்ரேஷ்டனே! உன்னுடைய பிறவியையும் செயலையும் குலத்தையும் நான் கேட்க விரும்புகிறேன். உனக்கு ருசிக்குமாயின் அதையெல்லாம் ஒளிக்காமல் எனக்கு மொழிவாயாக. புருஷஸ்ரேஷ்டனே! நானோவென்றால் க்ஷத்ரியன்; இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தவன்; யௌவனாஸ்வனுடைய பிள்ளை; முசுகுந்தனென்று ப்ரஸித்தி பெற்றவன். நான் நெடுநாள் கண்விழித்துக்கொண்டிருந்தமையால் இந்த்ரியங்களெல்லாம் நித்ரையினால் இழுக்கப்பட்டு ஜனஸஞ்சாரமில்லாத இவ்விடத்தில் ஸுகமாகப் படுத்துறங்கிக்கொண்டிருந்தேன். இப்பொழுது எவனோ ஒருவன் வந்து என்னை எழுப்பினான். அவனும் தன்னுடைய பாபத்தினாலேயே பஸ்மமாய் விட்டான். நான் கண்ணைத் திறந்து பார்த்தது வ்யாஜமேயன்றி வேறொன்றுமில்லை. இது நிச்சயம். அப்பால் சத்ருக்களைத் தண்டிப்பவனும் பேரழகனும் பெருஞ்சோபையுடையவனுமாகிய நீ புலப்பட்டனை. பொறுக்க முடியாத உன் தேஜஸ்ஸினால் கண்கள் தடைபடப்பெற்று உன்னை

வெகுநேரம் உற்றுப் பார்க்க முடியாதிருக்கின்றோம். மஹானுபாவனே! கர்மத்தினால் அறிவு குறுகப்பெற்ற எங்களைப்போன்ற மூடஜந்துக்களுக்கு நீ மிகவும் பூஜிக்கத் தகுந்தவன். (பணியத்தகுந்தவன்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ப்ராணிகளைப் பாதுகாக்குந்தன்மையுடைய மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் முசுகுந்தமன்னவனால் இங்ஙனம் வெகுமதிக்கப்பட்டுச் சிரித்துக்கொண்டே மேககர்ஜனம்போல் கம்பீரமான உரையுடன் மறுமொழி கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— ஓ முசுகுந்தமன்னவனே! என்னுடைய பிறவிகளும் செயல்களும் பெயர்களும் அளவற்றவைகளாயிருக்கின்றன. அவை அனந்தங்களாகையால் என்னாலுங்கூடக் கணக்கிடமுடியாதவை. (உங்கள் பிறவி முதலியவை கர்மத்தினால் அறிவு குறுகப்பெற்ற உங்களுக்கு மறந்துபோனமையாலும் பலவகையாலும் உங்களால் கணக்கிட்டுச் சொல்லமுடியாது. ஆயினும் ஸர்வஜ்ஞனாகிய என்னால் சொல்லக்கூடியவைகளே. என் பிறவி முதலியவைகளோவென்றால், அனந்தங்களாகையால் சொல்லமுடியாது. ஆயினும் அதனால் என்னுடைய அறிவுக்குக் குறையில்லை. அளவற்றவைகளை அளவற்றவைகளென்று அறிகையே ஸர்வஜ்ஞதைக்குப் பொருந்துமன்றி, அவற்றை அளவுடையவைகளென்றறிகை ஸர்வஜ்ஞதைக்குப் பொருந்தாது. அது உண்மையல்லாமையால் அங்ஙனம் அறிகை அறிவின்மையையே தெரிவிக்கும்.) ஒருகால் ஸூக்ஷ்மபுத்தியுடையவன் பலஜன்மங்களால் பூமியிலுள்ள புழுதிகளையெல்லாம் எண்ணினாலும் எண்ணக்கூடுமேயன்றி என்னுடைய குணங்களையும் செயல்களையும் பெயர்களையும் ஒரு

158

காளும் எண்ணமுடியாது. மன்னவனே! ஸ்ரீபராசரர் வைசம்பாயனர் சௌனகர் முதலிய மஹர்ஷிகள் மூன்றுகாலங்களிலுமுள்ள என்பிறவி செயல் முதலியவைகளைமொழியத்தொடங்கி இன்னும் கரைகாணப் பெறுதிருக்கின்றார்கள். ஓ முசுகுந்தனே! ஆயினும் இப்பொழுதுள்ள என் பிறவிமுதலியவைகளைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. நான் தர்மத்தைப் பாதுகாப்பதற்காகவும் அஸுரஸ்வபாவர்களாகிப் பூமிக்குப் பாரமாயிருக்கின்ற மன்னவர்களை முடிப்பதற்காகவும் ப்ரஹ்மதேவனால் வேண்டப்பெற்று யதுகுலத்தில் வஸுதேவனுடைய பார்யையிடத்தில் அவதரித்தேன். வஸுதேவனுடைய பிள்ளையாகையால் என்னை வாஸுதேவனென்று சொல்லுகிறார்கள். என்னால் காலநேமியும் கம்ஸனும் ப்ரலம்பன் முதலிய மற்றும் பல சத்ருக்களும் கொல்லப்பட்டார்கள். ராஜனே! தீக்ஷ்ணமாயிருக்கின்ற உன்கண்ணால் இந்த யவனனை நானே பஸ்மம் செய்தேன். அத்தகைய நான் உன்னை அனுக்ரஹிக்கும்பொருட்டு இந்தக்குஹைக்கு வந்தேன். பக்தவத்ஸலனான நான் உன்னால் முன்ஜன்மத்தில் வெகுகாலம் வேண்டப்பெற்றேன். ராஜரிஷீ! உனக்கு இஷ்டமான வரங்களை வேண்டுவாயாக. உனக்கு நான் எல்லாவிருப்பங்களையும் கொடுக்கின்றேன். என்னைச் சரணம் அடைந்தவன் எவனும் மீளவும் சோகிக்க உரியவனல்லன். (ஆகையால் உனக்கு மீளவும் இந்த ஸம்ஸாரமாகிற வருத்தம் நேராதபடி மோக்ஷங்கொடுக்கச் சித்தமாயிருக்கின்றேன். ஆயினும் மற்ற விருப்பங்கள் எவ்வெவை வேண்டுமோ, அவற்றையெல்லாம் வேண்டிப்பெறுவாயாக.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— இங்ஙனம் பகவானால் மொழியப்பட்ட முசுகுந்தன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை அவ

னுடைய வார்த்தைகளால் தேவதையென்றும், அதிலும் ஸ்ரீமந்நாராயணனென்றும் தெரிந்துகொண்டு 'இருபத்தெட்டாவது யுகத்தில் பகவான் வஸுதேவனுடைய க்ருஹத்தில் அவதரிக்கப்போகிறான்' என்று வ்ருத்தகர்க்கர் சொன்ன வசனத்தை நினைத்து ஸந்தோஷமுற்று வணங்கி மேல்வருமாறு மொழிந்தான்.

முசுகுந்தன் சொல்லுகிறான்:—ஜகதீசனே! ஆணும் பெண்ணுமாயிருக்கின்ற இவ்வுலகத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் உன்னுடைய மாயையினால் மோஹிக்கப்பட்டுத் தங்களுக்கு அனர்த்தத்தை விளைவித்துக்கொள்வதிலேயே புத்தி செல்லப்பெற்று வாஸ்தவத்தில் அனர்த்தமாயிருப்பதையே அர்த்தமாக நினைத்து துக்கங்களுக்கு விளைநிலமாகிய இல்லறவாழ்க்கையில் ஸுகத்தை அனுபவிக்க விரும்பிக் கால்தாழ்கின்றனவேயன்றி உன்னை அடைகிறதில்லை. ஆகையால் ஜந்துக்களெல்லாம் உன்னால் வஞ்சிக்கப் பட்டிருக்கின்றன. விஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்னும் விருப்பமாகிற காரணத்தினால் நான் இத்தகைய ஸம்ஸாரமாகிற அனர்த்தத்தை அடைந்திருக்கின்றேன். மீளவும் நீ விஷயங்களை வேண்டும்படி தூண்டுவாயாயின், உன்னால் வஞ்சிக்கப்பட்டவனாவேன். ஆகையால் உன்பக்தர்களை இங்ஙனம் வஞ்சிப்பது உனக்குத் தகுதியன்று. நிர்த்தோஷனே! உன்னைப் பணிந்தவர்கள் வருந்தமாட்டார்கள். இவ்வுலகத்திலுள்ள ஜந்துக்கள் கர்மக்ஷேத்ரமாகிய இப்பூமண்டலத்தில் கிடைக்க அரிதான மனுஷ்யதேஹத்தைத் தங்கள் ப்ரயத்னமில்லாமல் கேவலம் உன்னுடைய அனுக்ரஹத்தினால் பெற்றும் தானே பரமபுருஷார்த்தஸ்வரூபனும் அதைக் கைகூடுவிக்கும் உபாயஸ்வரூபனுமாயிருக்கின்ற உன்னைப் பணிகிறதில்லை. பின்னையோவென்றால், ப்ராக்ரு

தியின் பரிணாமமாகிய தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமித்து, பசு தெரியாமையால் புல் முதலியவற்றால் மறைந்திருக்கின்ற கிணற்றைக் கண்டு அங்குப் புல் மேய விரும்பிச் சென்று அதில் விழுவதுபோல, இல்லறவாழ்க்கையாகிற பாழ்ங்கிணற்றில் விழுகின்றன. ஒருவராலும் வெல்லப்படாதவனே! நான் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாகிச் சப்தாதிவிஷயங்களை விரும்பும் மதியுடையவனாகி ராஜ்யஸம்பத்தினால் பெருமதங்கொண்டு மரணம் அடையுந்தன்மையதான தேஹத்தையே ஆத்மாவாக நினைத்துப் பிள்ளை பெண்டிர் கருவூலம் பூமி இவைகளில் அளவற்ற சிந்தையுடன் மனப்பற்று கொண்டிருந்தேனாகையால் இதுவரையில் கடந்த என்காலமெல்லாம் வீணாகவே கடந்துவிட்டது. (நான் என் காலத்தையெல்லாம் அஹங்கார மமகாரங்களோடு வீணாகக் கழித்து விட்டேன்.) குடம் சுவர் முதலியவைபோன்ற இந்தத் தேஹத்தில் ஆத்மாவென்னும் ப்ரமம் வேரூன்றப்பெற்று என்னை நான் மனுஷ்யர்களுக்கெல்லாம் ப்ரபுவென்று அபிமானித்துத் தேர்கள் யானைகள் காலாட்கள் இவற்றின் ஸைன்யங்களைப் பாதுகாக்கின்ற ஸேனாபதிகளால் சூழப்பட்டுப் பூமியெல்லாம் சுற்றிக்கொண்டு உன்னை ஒரு பொருளாகவே நினையாமல் கொடுமதங்கொண்டிருந்தேன். நான் 'இங்ஙனம் செய்யவேண்டும். அங்ஙனம் செய்யவேண்டும்' என்று மேன்மேலும் அலைகள்போல் கிளர்ந்தெழுகின்ற மனோரதபரம்பரைகளால் மிகவும் வளர்ந்த லோபமுடையவனாகிச் சப்தாதிவிஷயங்களில் பெருவிருப்பமுற்றுத் திரிந்துகொண்டிருக்கையில், நீ உலகங்களின் விநாசத்திற்கு ஹேதுவான காலஸ்வரூபனாகிப் பசியினால் நாக்கை கோணுகின்ற ஸர்ப்பம் எலியைப் பிடிப்பதுபோல் என்னைப் பிடித்திழுக்கின்றனை. மிக

வும் கிடைக்க அரியதும் மங்களமுமாகிய மன்னவசரீரத்தைப் பெற்றும் ஏன் இப்படிபழிக்கின்றனை?" என்றால், சொல்லுகிறேன். முன்பு ஸ்வர்ணமயமான அலங்காரங்கள் செய்யப் பெற்ற ரதங்களிலும் யானைகளிலும் ஏறித் திரிந்துகொண்டு மனுஷ்யர்களுக்கெல்லாம் ப்ரபுவென்று பெயர்பெற்றிருந்ததுமாகிய அத்தேஹமே காலத்தினால் தீண்டப்பட்டு நாய் நரி முதலியவைகளால் பக்ஷிக்கப்படுமாயின் விஷ்டையென்றும், அவைகளால் பக்ஷிக்கப்படாமல் மண்ணில் மக்கிப் புழுக்குமாயின் புழுவென்றும், அதுவுமன்றித் தஹனஸம்ஸ்காரம் செய்யப்பெறுமாயின் பஸ்மமென்றும் பெயர்களைப் பெறுகின்றது. இத்தகையதேஹத்தை எவன் அபிமானிப்பான்? ஜகதீசனே! திசைகளையெல்லாம் ஜயித்து எங்கும் தன்னை எதிர்த்துச் சண்டை செய்பவன் நேரப் பெறாமல் ஸார்வபௌம ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து தனக்கு முன்னிருந்த தன்னோடொத்த ராஜாக்களாலும் பூஜிக்கப்பட்டு மேன்மையுடனிருக்கும் புருஷனும் ஆணும் பெண்ணுமாய்க் கலக்குங்கலவியாகிற ஸுகத்திற்கிடமான இல்லறவாழ்க்கையில் அழுந்தி ஸ்த்ரீகளுக்கு விளையாட்டும்ருகம்போன்று (விளையாட்டிற்காக வளர்க்கப்பட்ட வானரம்முதலிய ம்ருகம்போன்று) அவர்களால் இங்கும் அங்கும் சுற்றப்படுகிறான். (ஸர்வஸ்வதந்த்ரனாகிய உன்னைப் பணியாமல் தன்னைத் தானே ஸ்வதந்த்ரனாக நினைத்துக்கொள்வதின் பயனல்லவோ இது?) ஸார்வபௌமனாயிருப்பவன் ஜன்மாந்தரத்திலும் நான் ஸார்வபௌமனாகப் பிறக்கவேண்டுமென்று பெருவிருப்பங்கொண்டு தரையில் படுப்பது ஸித்ரீஸம்போகமில்லாதிருப்பது முதலிய தவங்களில் நிஷ்டையுடையவனாகி ஜன்மாந்தரத்தில் வரப்போகிற போகங்களை அபேக்ஷித்

துப் போகங்களையெல்லாம் துறந்து தவங்களை அனுஷ்டித்துக்கொண்டு தேஹதாரணத்திற்கு வேண்டிய போஜனாதிகர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு வருவானாயின் அவன் ஸுகத்தை அனுபவித்தவனாகமாட்டான். ஜன்மாந்தரத்தில் ஸார்வபௌமனாகப் பிறந்தாலும் அடுத்த ஜன்மத்திலும் தான் ஸார்வபௌமனாகப் பிறக்கவேண்டுமென்னும் விருப்பம் உண்டாகுமல்லவா? அப்பொழுதும் போகங்களைத் துறந்து தவஞ் செலுத்துவானாயின் எப்பொழுதுதான் அவன் ஸுகத்தை அனுபவிப்பான்? ஜன்மாந்தரத்தைப் பற்றின நினைவின்றிப் போகங்களை அனுபவிப்பானாயின், ஜன்மாந்தரத்தில் அவன் ஸர்வபௌமனாய்ப் பிறக்க நேருமோ? நேருதல்லவா? ஸாதாரண ஜந்துவாய்ப் பிறப்பானாயின் அவன் என்ன ஸுகத்தை அனுபவிக்கமுடியும்? ஆகையால் விஷயங்களை அனுபவிக்கையால் வரும் ஸுகத்தை ஸுகமென்று நினைக்கலாகாது. அப்படி நினைக்கினும் அது நீடித்து நிற்காது? ஸம்ஸாரத்தில் ப்ரமித்துக்கொண்டிருக்கும் புருஷனுக்கு ஸம்ஸாரநிவ்ருத்தியாகிற மோக்ஷம் எப்பொழுது அணித்தாகுமோ, அப்பொழுதுதான் அவன் ஸுகத்திற்காளாவான். ஆனால் எப்பொழுது ஸம்ஸாரநிவ்ருத்தி சேரிடுமென்றால், அச்சுதனே! இந்த ஸம்ஸாரிசேதனனுக்கு எந்த ஜன்மத்தில் உன் பக்தர்களான ஸத்புருஷர்களோடு ஸஹவாஸம் நேருமோ, அப்பொழுது மேன்மையுடைய இந்த்ராதி தேவதைகள் அனைவரும் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படியான மேன்மையுடை ப்ரஹ்மதேவனுக்கும் நியாமகனும் அந்த ஸத்புருஷர்களுக்கு கதியுமாகிய உன்னிடத்தில் பக்தி உண்டாகும். பக்தி விளைந்து வளர்ந்து வருமாயின் அது ஸம்ஸாரநிவ்ருத்யை விளைவிக்கும். ஜகதீசனே! நீ ஒன்று தேவ

தைகளுக்கு ஸஹாயஞ் செய்யவேண்டுமென்னும் வ்யா ஜத்தினால் ராஜ்யமாகிற பாசத்தினின்று விடுவித்து எனக்குப் பெரிய அனுக்ரஹஞ் செய்தனையென்று யான் நினைக்கின்றேன். ஏனென்றால், விவேகமுடையவர்களும் தவஞ்செய்வதற்காக வனம்போக விருப்பமுற்றவர்களுமா கிய ஸார்வபௌமர்கள் வனத்தில் தனியே திரிவதற்காக இந்த ராஜ்யபந்தத்தினின்று விடுபடவேண்டுமென்று உன்னை வேண்டுகிறார்களல்லவா? (அப்படிப்பட்ட ராஜ் யபந்தத்தை எனக்கு நீயே விடுவித்தனையாகையால் என்னை முன்னமே அனுக்ரஹித்தனை.) ப்ரபூ! அனன் யப்ரயோஜனர்களால் மிகவும் விரும்பத்தக்கதாகிய உன் பாதஸேவையைக்காட்டிலும் வேறான எந்த வரத்தை யும் நான் விரும்பமாட்டேன். தன்னைப் பற்றினவர்களு டைய வருத்தங்களைப் போக்குந்தன்மையனே! விவேக முள்ள புருஷன் எவன்தான், ஒன்றான மோக்ஷங்கொ டுப்பவனாகிய உன்னை ஆராதித்தும் ஆத்மாவுக்கு ஸம் ஸாரபந்தத்தை விளைக்கும்படியான சப்தாதிவிஷயங்களை விரும்புவான்? (மூர்க்கனாயின் விரும்புவானன்றி விவேக முடையவன் விரும்பமாட்டான்). ஜகதீசனே! ரஜஸ்ஸு தமஸ்ஸு ஸத்வம் ஆகிய இவற்றின் கார்யமாகிய காம க்ரோதாதிகளால் தொடரப்பெற்ற விருப்பங்களையெல் லாம் துறந்து புண்யபாபங்களின் ஸம்பந்தமற்றவனும் ப்ரக்ருதிக்கு உட்பட்டிருக்கையாகிற அழுக்கற்றவனும் எப்பொழுதும் ஸத்வாதிகுணங்களின் ஸம்பந்தமற்றவ னும் இணையெதிரில்லாதவனும் ஸர்வஸ்மாத்பரனும் எல் லோரும் பணிந்து உஜ்ஜீவிக்கும்படி யதுகுலத்தில் மானி டனாய் வந்தவதரித்திருப்பவனும் கேவலஜ்ஞானஸ்வரூப னும் வாத்ஸல்யம் முதலிய பலகுணங்கள் அமைந்தவ னு ாகிய உன்னையே சரணம் அடைகின்றேன். சரணங்

கொடுப்பவனே ! இந்த ஸம்ஸாரத்தில் ஆத்யாத்மிகம் முதலிய அளவற்ற தாபங்களால் தபிக்கப்பட்டு நெடுநாளாய் தாக்கத்தினால் பீடிக்கப்பட்டு மனம் முதலிய ஆறு இந்த்ரியங்களாகிற ஆறுசத்ருக்களை வெல்லமுடியாமல் மனத்தெளிவற்றிருக்கின்ற நான் பலவருத்தங்களின் மேல் ஸம்ஸாரபயமற்றதும் சோகம் தீண்டப்பெறாததும் நித்யமுமாகிய உன்பாதாரவிந்தங்களை அடைந்தேன். பரமாத்மனே ! இங்ஙனம் ஆபத்தில் அழுங்கியிருப்பவனும் இப்பொழுது உன்னைச் சரணம் அடைந்தவனுமாகிய என்னைப் பாதுகாப்பாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஸமஸ்தபூமண்டலத்தையும் ஆண்டுவந்த மஹாராஜனே! உன் மதி ராகம்முதலிய தோஷங்களாகிற மலங்கள் எவையுமின்றி நிவ்ருத்தி தர்மத்தில் மிகவும் உறுதியாயிருக்கின்றது. வரங்களை வேண்டச்சொல்லி ஆசைமூட்டி வஞ்சிக்கப்பார்க்கினும் உன் மதி சப்தாதிவிஷயங்களால் சிறிதும் தடைபடாதிருக்கின்றதல்லவா ? உன்னை நான் வரங்களால் ஆசைமூட்டி வஞ்சிக்கப் பார்த்தது உன்புத்தி மயங்காதிருப்பதற்காகவேயென்று தெரிந்துகொள்வாயாக. என்னிடத்தில் மற்றொரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் மாறாத பக்தியுடையவர்களின்புத்தி ஒருகாலும் சப்தாதிவிஷயங்களைப்பற்றின விருப்பங்களால் தடைபடாது. என்னிடத்தில் பக்தியில்லாமல் ப்ராணாயாமம் முதலிய உபாயங்களால் மனத்தை அடக்க முயன்றவர்களின் மனம் வாஸனை ஒழியப்பெறாமையால் ஒருகால் சப்தாதிவிஷயங்களில் தாழ்ந்திருக்கக் காண்கிறோம். (என்னிடத்தில் பக்தி செய்பவர்களின் மனம் அங்ஙனம் ஒருகாலும் தாழாது). நீ என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்திப் பூமி முழுவதும் இஷ்டப்படி திரிவாயாக. உனக்கு என்னிடத்

தில் மாறாதபக்தி ஏற்கனவே உண்டாயிருக்கின்றது. (உனக்கு நான் அனுக்ரஹஞ் செய்கின்றேன். நீ அதைப் பற்றிச் சிந்திக்கவேண்டியதில்லை.) க்ஷத்ரியவர்ணத்திற்குரிய தர்மங்களை அனுஷ்டிக்கமுயன்று உலகங்களைப் பாதுகாக்கைக்கு உபயோகப்படாத வேட்டை முதலிய வீண்வ்யாபாரங்களால் ஜந்துக்களை வதித்தனை. ஆகையால் நீ என்னையே அவலம்பமாகப் பற்றி என்னிடத்தில் மாறாத பக்தியுடையவனாகித் தவஞ்செய்து அந்தப்பாபத்தைப் போக்குவாயாக. அடுத்த ஜன்மத்தில் நீ ப்ராஹ்மணஸ்ரேஷ்டனாகப் பிறந்து ஸமஸ்தபூதங்களிடத்திலும் நட்புடையவனும் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையுடையவனும் (ஜகத்தையெல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமாகப் பார்க்குந்தன்மையனும்) ஆகி ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்புறத்திலிருக்கின்ற என்னை அடையப்போகின்றனை. ஐம்பத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் யுத்தத்திற்கு வந்த ஜராஸந்தனிடத்தினின்று பயந்தாற்போல் ஓடி ப்ரவர்ஷண பர்வதத்தில்ஒளிந்து கொண்டிருந்து மீண்டு பட்டணம் போதலும், ருக்மிணீ ஸந்தேசமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவனாகிய அந்த முசுகுந்தன் ஸ்ரீக்ருஷ்ணனால் இங்ஙனம் அனுக்ரஹம் செய்யப்பெற்று அம்மஹானுபாவனை ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்துக் குஹையினின்று வெளிப்பட்டான். அம்முசுகுந்தன் மனுஷ்யர்களும் பசுக்களும் செடி கொடிமரங்களும் முன்னிருந்த அளவைக்காட்டிலும் குறைந்து குள்ளமாயிருப்பதைக் கண்டு கலியுகம் வந்திருப்பதை அறிந்து தவஞ்

செய்வதற்காக வடதிசையைக் குறித்துச் சென்றான். ஜிதேந்த்ரியனும் மனமலங்கள் கழியப்பெற்றவனும் நமக்குப் பேறு கைகூடுமோ கூடாதோ என்னும் ஸந்தேஹமற்றவனுமாகிய அந்த முசுகுந்தமன்னவன் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனத்தை நன்றாக நிலைநிறுத்தித் தவஞ் செய்ய வேண்டுமென்னும் ச்ரத்தையுடன் கூடிக் கந்தமாதனபர்வதத்திற்குப் போனான். அங்கு நரநாராயணர்களின இருப்பிடமாகிய பதரிகாச்ரமத்திற்குச் சென்று குளிர் வெய்யில் முதலிய த்வந்த்வங்களையெல்லாம் பொறுத்து மனத்தை அடக்கிக்கொண்டு தன்னைப் பற்றினவர்களின் பந்தத்தைப் போக்குந்தன்மையுடைய பகவானைத் தவத்தினால் ஆராதித்தான். பிறகு ஷாட்குண்ய பூர்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் யவனர்களால் சூழப்பட்ட மதுரைப்புரிக்குத் திரும்பிவந்து அந்த ம்லேச்சஸைன்யங்களையெல்லாம் வதித்து அவர்களுடைய தனத்தையெல்லாம் ஸமுத்ரமத்யத்தில் தான் ஏற்படுத்தின ஜலதுர்க்கமாகிய த்வாரகாபுரிக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தான். ஸ்ரீக்ருஷ்ணனால் தூண்டப்பட்ட மனிதர்கள் அந்தப் பணத்தை எருதுகளின்மேல் ஏற்றிக்கொண்டு போகையில், ஜராஸந்தன் இருபத்து மூன்று அக்ஷௌஹிணி ஸைன்யத்தைக் கூட்டிக்கொண்டு வந்தான். ராஜனே! ராமக்ருஷ்ணர்கள் ஜராஸந்தனுடைய ஸைன்யத்தின வேகத்தையும் உத்ஸாஹத்தையும் கண்டு மானிடவர்களின்செயலை அனுஸரிக்க முயன்று வேகமாக ஓடிப்போனார்கள். அவர்கள் பயமற்றவர்களாயினும் மிகவும் பயந்தவர்கள்போன்று அளவற்றிருக்கிற தனத்தையும் துறந்து தாமரையிதழ்போல் மிகவும் மெதுவான பாதங்களால் பல யோஜனைகள் கடந்து சென்றார்கள். பலிஷ்டனாகிய ஜராஸந்தன் அந்த ராம

க்ருஷ்ணர்கள் அங்ஙனம் ஓடுவதைக் கண்டு ஸர்வேஶ்வரர்களான அந்த ராமக்ருஷ்ணர்களின் ஸ்வரூபகுணங்களின் அளவற்றிருக்கையாகிற ப்ரமாணத்தை அறியாதவனாகையால் பல ரதங்களுடன் கூடி அவர்களைத் தொடர்ந்தோடினான். அந்த ராமக்ருஷ்ணர்கள் வெகுதூரம் ஓடி இளைப்புற்றவர்கள்போன்று மிகவும் உயர்ந்திருக்கின்ற ப்ரவர்ஷணமென்னும் பர்வதத்தின்மேல் ஏறினார்கள். மேகம் என்றும் ஓயாமல் மழை பெய்துகொண்டிருக்கையால் அப்பர்வதம் ப்ரவர்ஷணமென்று யதார்த்தமான பெயருடையது. மன்னவனே! அந்த ஜராஸந்தன் அந்த ராமக்ருஷ்ணர்களின் அடிவைப்புக்களால் ஆங்காங்கு அடையாளஞ் செய்யப்பெற்ற இடங்களைக் கண்டு அந்த அடையாளத்தினால் இவர்கள் ப்ரவர்ஷணகிரியில் மறைந்துகொண்டிருக்கிறார்களென்று தெரிந்துகொண்டு அந்தப் பர்வதத்தைச் சுற்றி முழுவதும் பத்துயோஜனை தூரம்வரையில் கட்டைகளை அடுக்கி அதில் அக்னியை இட்டுக் கொளுத்தினான். அப்பொழுது அந்தராமக்ருஷ்ணர்களிருவரும் அங்ஙனம் தாழ்வரைகளெல்லாம் எரியப் பெற்றதும் பதினொரு யோஜனைகள் உயர்ந்திருப்பதுமாகிய அந்தப்ரவர்ஷண பர்வதத்தினின்று கிளம்பி ஜராஸந்தன் தகைந்துகொண்டிருக்கிற இடத்திற்கு அப்புறத்தில் கீழ்ப்பூமியில் குதித்தார்கள். யாதவஶ்ரேஷ்டர்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் சத்ருவாகிய ஜராஸந்தனுக்கும் அவனைத் தொடர்ந்த மற்றவர்களுக்கும் புலப்படாமல் ஸமுத்ரத்தையே அகழியாகவுடைய தங்கள் பட்டணமாகிய த்வாரகைக்குத் திரும்பி வந்தார்கள். அந்த மாகதனும் ராமக்ருஷ்ணர்கள் கொளுத்தப்பட்டார்களென்று பொய்யாகவே நினைத்து மிகவும் பெரிதான தன் ஸைன்யத்தை அழைத்துக்

கொண்டு மகததேசம் போய்ச் சேர்ந்தான். செல்வப் பெருக்குடைய ஆனர்த்ததேசத்தரசனாகிய ரைவதனென்பவன் ப்ரஹ்மதேவனால் தூண்டப்பட்டுத் தன்புதல்வியாகிய ரேவதியைப் பலராமனுக்குக் கொடுத்தானென்று முன்னமே மொழிந்தேன். குருவம்சத்தை மேன்மைப் படுத்துந்திறமையுடையவனே! மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஸ்வயம்வரத்தில் ஸமஸ்தபூதங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் சிசுபாலனுடைய பக்ஷத்திலுள்ள ஸால்வன் முதலிய அரசர்களையெல்லாம் வென்று கருடன் அம்ருதத்தைப் பறித்துக்கொண்டு வந்தாற்போல் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அம்சமும் பீஷ்மகனுடைய புதல்வியுமாகிய ருக்மிணியைப் பறித்துக் கொண்டுவந்து மணம் புரிந்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்.—ஸ்ரீக்ருஷ்ணன் அழகிய முகமுடையவளும் பீஷ்மகராஜன்புதல்வியுமாகிய ருக்மிணியை ராக்ஷஸ விவாஹத்தினால் மணம் புரிந்தானென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். மஹானுபாவரே! அளவற்ற தேஜஸ்ஸையுடைய ஸ்ரீக்ருஷ்ணன் ஜராஸந்தஸால்வாதிகளைத் தானொருவனே ஜயித்து மீண்டுவந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்க விரும்புகிறேன். ப்ரஹ்மரிஷீ! ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதைகள் புண்யமானவை; செவிக்கின்பமாயிருப்பவை; பாபங்களையெல்லாம் போக்கவல்லவை; என்றும் புதிதுபுதிதாயிருப்பவை. செவியினால் அனுபவிக்கப்படும் வஸ்துக்களால் உண்டாகும் ஸுகத்தின் தாரதம்யத்தை அறிந்தவன் எவன்தான் இத்தகைய ஸ்ரீக்ருஷ்ணகதைகளைக் கேட்டு 'இது போதும்' என்று த்ருப்தி அடைவான்? ரஸமறிந்தவன் எவனும் த்ருப்தி அடையமாட்டான்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:— விதர்ப்பதேசங்களுக்கு அதிபதியான பீஷ்மகனென்னும் மன்னவன் இருந்தான். அவன் பெருங்குணமுடையவன். அவனுக்கு ஐந்து பிள்ளைகளும் அழகிய முகமுடைய ஒருபுதல்வியும் பிறந்தார்கள். பிள்ளைகளில் ருக்மீ யென்பவன் ஜ்யேஷ்டன். ருக்மரதன் ருக்மபாஹு ருக்மகேசன் ருக்மமாலி என்னும் இவர்கள் அவனுக்குப் பின் பிறந்தவர்கள். இவர்களின் உடன் பிறந்தவள் ருக்மிணி யென்பவள். அவள் நல்லொழுக்க முடையவள். அவள் தன் வீட்டிற்கு வரும் ஜனங்களால் பாடப்படுகிற ஸ்ரீக்ருஷ்ணனுடைய ரூபஸௌந்தர்யத்தையும் வீர்ய குணத்தையும் காம்பீர்யம் முதலிய மற்றும் பலகுணப்பெருக்குகளையும் செல்வப்பெருக்குகளையும் கேட்டு அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே தனக்குத் தகுந்த கணவனாக நினைத்தாள். அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணனும் ருக்மிணியின் புத்தி குணத்தையும் ஸாமுத்ரிகலக்ஷணங்கள் அமைந்திருப்பதையும் ஔதார்யத்தையும், வடிவழகையும் நல்லொழுக்கத்தையும் மற்றும் பலகுணங்கள் நிறைந்திருப்பதையும் கேட்டு இவள் தனக்குத் தகுந்த பார்யையென்று நிச்சயித்து அவளை மணம்புரிய மனங்கொண்டான். அவளுடைய பந்துக்கள் அனைவரும் அவளை ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுக்க இஷ்டப்பட்டிருக்கையில், ருக்மீ ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் த்வேஷங்கொண்டு பந்துக்களைத் தடுத்துச் சிசுபாலனுக்கே அவளைக் கொடுக்க நிச்சயித்தான். கரிய கடைக்கண்களுடைய ருக்மிணி தன்ப்ராதாவான ருக்மியின் அபிப்ராயத்தை அறிந்து மிகவும் மனவருத்த முற்றுத் தனக்குள் நிச்சயித்து விஸ்வாஸபாத்ரமாகிய ஒரு அந்தணனை வேகமாக ஸ்ரீக்ருஷ்ணனிடம் அனுப்பினாள். அவ்வந்தணன் த்வாரகைக்குச் சென்று அங்கு த்வாரபாலர்களால் உள்ளே

விடப்பெற்று ஸ்வர்ணமயமான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கின்ற ஆதிபுருஷனாகிய (ஜகத்காரணனாகிய) ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டான். ப்ராஹ்மணகுலத்திற்கு வேண்டியவற்றையெல்லாம் நிறைவேற்றிக்கொடுத்து அவர்களையே தெய்வமாக ஆராதித்துக்கொண்டு வருபவர்களில் சிறந்தவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அவ்வந்தணனைக்கண்டு உடனே தன்னுடைய ஆஸனத்தினின்றும் எழுந்து தன்னைத் தேவதைகள் பூஜிப்பதுபோலத் தான் அவனை உட்காரவைத்துப் பூஜித்தான். வழிநடந்து வந்த இளைப்பெல்லாம் தீரப்பெற்ற அவ்வந்தணனைக் கிட்டித் தான் ஸத்புருஷர்களுக்குக் கதியாகையால் ஸத்புருஷர்கள் இங்ஙனம் ப்ராஹ்மணர்கள் விஷயத்தில் நடக்கவேண்டுமென்று தெரிவிப்பவன்போன்று அவர்பாதத்தைத் தன் கையால் பிடித்துக்கொண்டு மனவூக்கத்துடன் வினவினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ப்ராஹ்மணஶ்ரேஷ்டர்களிலும் ஶ்ரேஷ்டரே! அனாயாஸமாய்க் கிடைத்ததைக் கொண்டு எப்பொழுதும் ஸந்தோஷமுற்ற மனமுடையவராகிய உம்முடைய தர்மம் பெரியோர்களால் புகழ்பட்டு நடந்துவருகின்றதா? ப்ராஹ்மணன் தேஹதாரணத்திற்கு வேண்டிய ஏதேனுமொன்று அனாயாஸமாகக் கிடைக்கப்பெற்றுத் தன்னுடைய தர்மத்தினின்று நழுவாதிருப்பானாயின், அந்நிலைமையே அவனுடைய விருப்பங்களையெல்லாம் கறக்கும். தேவேந்த்ரனாயினும் ஸந்தோஷம் அடையாதிருப்பானாயின், அவன் இஹலோகஸுகங்களையும் அடையமாட்டான். ஒன்றுமில்லாத நித்யதரித்ரனாயினும் ஸந்தோஷமுற்றிருப்பானாயின் ஒரு அங்கத்திலும் தாபமின்றி ஸுகமாகப் படுத்துறங்குவான்

பரமாத்மாவுக்குத் தாஸனென்றும் பரமாத்மா தனக்கு ப்ரபுவென்றும் நினைக்கையாகிற ஆத்மலாபத்தினால் ஸந்தோஷமுற்றிருப்பவர்களும் பரோபகாரஞ் செய்பவர்களும் தேஹாத்மாபிமானமற்றவர்களும் ஜிதேந்த்ரியர்களுமாகிய அந்தணர்களை நான் அடிக்கடி சிரத்தினால் நமஸ்கரிக்கிறேன். அவர்கள் என்னிஷ்டத்தை நிரம்பவும் நடத்துபவர்களாகையால் அவர்களுக்குப் பதிலுபகாரஞ் செய்யமுடியாமல் கேவலம் நமஸ்காரஞ் செய்கின்றேன். ப்ராஹ்மணரே! உங்களுக்கு அரசனிடத்தினின்று க்ஷேமம் கிடைக்கின்றதா? எவனுடைய தேசத்தில் ப்ரஜைகள் நன்கு பாதுகாக்கப்பெற்று ஸுகமாயிருக்கின்றார்களோ, அந்தமன்னவன் எனக்கு மிகவும் அன்பன். நீர் எந்தத்தேசத்தினின்று எந்தப்ரயோஜனத்தை உத்தேசித்து ஸமுத்ரஜலமாகிய துர்க்கத்தைக் கடந்து இவ்விடம் வந்தீரோ, அதெல்லாம் ரஹஸ்யமல்லாதிருக்குமாயின் எங்களுக்குச் சொல்வீராக; நாங்கள் உமக்கு என்ன செய்யவேண்டும்? (எங்களால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் ஏதேனும் உளதாயின் அதை உமது கிங்கரர்களாகிய எங்களுக்கு நியமிப்பீராக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—லீலைக்காக மானிட உருவத்தை ஏற்றுக்கொண்டிருப்பவனும் நிகரற்ற தன்மஹிமையில் நிலைநின்றிருப்பவனும் பரமபதமென்கிற வைகுண்டலோகத்தில் வஸிப்பவனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் இங்ஙனம் வினவப்பெற்ற அவ்வந்தணன் அந்தப் பகவானுடைய கேள்விகளுக்கெல்லாம் மறுமொழி கூறினான்.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—புருஷோத்தமா! நான் ருக்மிணியால் உன்னிடம் அனுப்பப்பட்டேன். அவள்

சொல்லியனுப்பின ஸங்கதியைக் கேட்டு அதற்குமேல் நடத்தவேண்டியதை நடத்துவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அவ்வந்தணன் இங்ஙனம் மொழிந்து ருக்மிணி எழுதின பத்ரிகையைப் பகவானுடைய பாதங்களில் வைத்து அவனை நமஸ்கரித்தான். ஜகத்திற்கெல்லாம் நாதனும் புன்னகையினால் அழகிய கண்களுடையவனும் வேண்டினவற்றையெல்லாம் நிறைவேற்றிக்கொடுக்கையாகிற தர்மத்தில் நிலைநின்ற மனமுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்மனோரதத்தையெல்லாம் வெளியிடுபவன்போன்று ஆவலுடன் அந்தப் பத்ரிகையை எடுத்து வாசித்தான்.

ருக்மிணி சொல்லுகிறாள்:—உலகங்களுக்கெல்லாம் அழகனே! கேட்கிறவர்களின் காதுவழியாய் உள்ளே நுழைந்து ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களையெல்லாம் போக்குகின்ற உன் குணங்களையும் கண்ணுடையவர்களின் கண்களுக்கு ப்ரயோஜனங்களையெல்லாம் கைகூடுவிக்கிற உன் வடிவழகையும் கேள்விப்பட்டு, அச்சுதனே! (பக்தர்களைக் கைவிடாதவனே!) என்மனம் வெட்கமின்றி உன்னிடத்தில் ஆஸக்தமாயிருக்கின்றது.(உன்னுடைய மஹிமை எங்கே? ரூப சீலாதி குணங்கள் எவையும் மில்லாத நான் எங்கே? ஆயினும் என்மனம் அதையெல்லாம் பாராமல் வெட்கமின்றி உன்னையே விரும்புகின்றது.) முகுந்தனே! (போகமோக்ஷங்களைக் கொடுக்க வல்லவனே!)மனுஷ்யர்களில் சிறந்தவனே! எந்தப் பெண் பிள்ளை தான் நற்குலத்தில் பிறந்து நற்குணங்கள் பலவும் அமைந்து நிலைநின்ற மனமுடையவளுமா யிருப்பாளாயின் விவாஹகாலம் நேர்ந்திருக்கும்பொழுது குணங்கள் வடிவழகு நல்லொழுக்கம் கல்வி வயது பணம் மேன்மை இவைகளால் தனக்குத் தகுந்தவனும் மனுஷ்யலோகத்

வனுக வரிக்கமாட்டாள்? ஆகையால் 'குலப்பெண் இப்படி ஸ்வதந்த்ரித்து மேல்விழலாமோ?' என்று என்மேல் தோஷம் சங்கிக்கவேண்டாம்.) ப்ரபூ! ஆகையால் நான் உன்னையே கணவனுக வரித்தேன். ஆத்மாவையும் உனக்கே அர்ப்பணஞ் செய்து விட்டேன். ஸ்ரீக்ருஷ்ணு! நீ இவ்விடம் வந்து என்னை உன் பார்யையாகச் செய்து கொள்வாயாக. தாமரைக்கண்ணனே! ஸிம்ஹத்தின் பலியை நரி தொடுவது போல, வீரனுகிய உன்பாகமான என்னைச் சிசுபாலன் தோடாதிருக்கும்படி சீக்ரம் ப்ரயத்னிப்பாயாக. ஸ்ம்ருதிகளில் விதித்த கர்மங்கள் குளம் கிணறு முதலியன வெட்டுவித்தல் வைதிகமான யாகாதி கர்மங்கள் தானம் புண்யதீர்த்தஸ்நானம் முதலிய நியமம் சாந்த்ராயணம் முதலிய வ்ரதம் தேவபூஜை ப்ராஹ்மணபூஜை குருபூஜை இவை முதலிய தர்மங்களால் மேன்மையுடையவர்களுக்கும் மேலான பகவானை நான் நன்றுக ஆராதித்திருப்பேனுயின், ஸ்ரீக்ருஷ்ணன் நாளைய தினம் வந்து என் கையைப் பிடிப்பானுக. என்னை மணம் புரிவானுக. சிசுபாலன் முதலிய மற்ற எவரும் என்கையைத் தொடாதிருப்பார்களாக. ஒருவராலும் ஜயிக்கப்படாத மஹாவீரனே! நாளைய தினம் விவாஹம் நடக்கப்போகிறதாயிருப்பினும் நீ மறைந்து வந்து ஸேனுபதிகளால் சூழப்பட்டுச் சிசுபாலன் ஜராஸந்தன் முதலியவர்களின் பலத்தை வென்று வீர்யத்தையே பந்தயமாகவுடைய என்னை ராக்ஷஸவிவாஹத்தின்படி பலாத்கரித்துக் கொண்டுபோய் மணம் புரிவாயாக. 'அந்தப் புரத்திற்குள் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற உன்னை உன் பந்துக்களை வதிக்காமல் எப்படி கொண்டுபோவேன்?' என்று சங்கிப்பாயாயின், அவ்விஷயத்தில் உபாயஞ் சொல்லுகிறேன். விவாஹம் நடப்பதற்கு முதனுள் பெரியு

ஆரவாரத்துடன் குலதேவயாத்ரை (குலதெய்வத்தின் ஆலயத்திற்குச் சென்று பூஜை செய்வதற்குப் போய் வருவது) ஒன்றுண்டு. அந்த யாத்ரையில் புதிய மணப் பெண்ணாகிய நான் அம்பிகையைத் தர்சனஞ் செய்ய அம்பிகாலயத்திற்குப் போவேன். அந்த அம்பிகாலயத்தி னின்றே என்னை அநாயாஸமாகக் கொண்டுபோகலாம். தாமரைக் கண்ணனே! உமாபதியாகிய ருத்ரனைப்போல் மற்றுமுள்ள மஹான்களும் தங்கள் அஜ்ஞானம் நீங்கும் பொருட்டு எவனுடைய பாதாரவிந்தங்களின் பராகங்க ளால் ஸ்னானஞ் செய்வதை விரும்புகிறார்களோ, அப்ப டிப்பட்ட மஹானுபாவனாகிய உன்னுடைய அநுக்ரஹத் தை நான் பெறாதுபோவேனாயின், உபவாஸம் முதலிய வ்ரதங்களால் இளைத்திருக்கின்ற ப்ராணன்களைத் துறப் பேன். நூறு ஜன்மங்கள் எடுக்கினும் நான் உனக்கே பார்யையாவேனாக.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—யதுகுலதேவனே! மிகவும் ரஹஸ்யமான இத்தகைய ஸமாசாரங்களை நான் கொண்டுவந்தேன். இவ்விஷயத்தில் என்ன செய்யவேண் டுமோ, அதை ஆலோசித்து உடனே நடத்துவாயாக. ஐம்பத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மிணியைப் பறித்துக் கொண்டுபோதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—யாதவகுமாரனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மிணி சொல்லியனுப்பின ஸமாசாரத் தைக் கேட்டுத் தன்கையினால் அந்த ப்ராஹ்மணனைக் கையில் பிடித்துச் சிரித்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மிகவும் நல்லியற்கையுடைய அந்த ருக்மிணி எப்படி ஸர்வகாலமும் என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவளாயிருக்கிறளோ, அங்ஙனமே நானும் அவளிடத்தில் நிலைநின்ற மனமுடையவனுகி இரவில் நித்ரையுங்கூட நேரப் பெருதிருக்கின்றேன். ருக்மி என்னிடத்தில் த்வேஷத்தினுல் ருக்மிணியை எனக்குக் கொடுத்து விவாஹஞ் செய்வதைத் தடுத்து விட்டானென்பது எனக்குத் தெரியும். அதைப்பற்றியும் நான் உறக்கம் பிடிக்காதிருக்கின்றேன். இப்பொழுது நான் சிசுபாலன் முதலிய அற்பராஜர்களை யுத்தத்தில் ஜயித்துச் சிறிதும் தோஷங்களுக்கிடமாகாமல் ரமணீயமான அங்கங்களுடையவளும் என்னையே முக்யமாகக் கொண்டு எப்பொழுதும் என்னிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவளுமாகிய அந்த ருக்மிணியை அரணிக்கட்டையினின்று அக்னிஜ்வாலையைக் கொண்டு வருவது போலக் கொண்டுவருகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ப்ராஹ்மணனுக்கு இங்ஙனம் மொழிந்து ருக்மிணியின் விவாஹத்திற்கு ஏற்பட்டிருக்கும் நக்ஷத்ரம் இன்னதென்பதைத் தெரிந்து கொண்டு 'தாருக! ரதத்தில் குதிரைகளைப் பூட்டிக்கொண்டு வருவாயாக' என்று ஸாரதியைப் பார்த்து மொழிந்தான். அவனும் சைப்யம் ஸுக்ரீவம் மேகபுஷ்பம் வலாஹகம் என்னும் பெயருடைய நான்கு குதிரைகள் பூட்டின ரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தி அஞ்சலித்துக்கொண்டு முன்னே வந்து நின்றான். ஸ்ரீக்ருஷ்ணன் ப்ராஹ்மணனை ரதத்தில் ஏற்றித் தானும் ஏறிக்கொண்டு குதிரைகள் மிகுந்த வேகமுடையவைகளாகையால் ஒரு ராத்ரியில் ஆனர்த்த தேசத்

தினின்று விதர்ப்பதேசம் போய்ச்சேர்ந்தான். குண்டின புரத்தை ஆள்கின்ற பீஷ்மகமன்னவன் தன் பிள்ளையாகிய ருக்மியிடத்தில் ஸ்னேஹத்தினால் அவனுக்கு உட்பட்டுத் தன்புதல்வியான ருக்மிணியைச் சிசுபாலனுக்குக் கொடுக்கமுயன்று பட்டணத்தை அலங்கரிப்பது பித்ருக்களையும் தேவதைகளையும் பூஜிப்பது முதலிய கார்யங்களை நடத்தினான். அந்தக் குண்டினபுரத்தில் ராஜவீதிகளும் ஸாதாரண மார்க்கங்களும் நாற்சந்திவீதிகளும் நன்கு விளக்கி ஜலந்தெளித்து விசித்ரமான த்வஜங்களாலும் பதாகைகளாலும் தோரணங்களாலும் அலங்காரம் செய்யப்பெற்றிருந்தன. அந்நகரத்தில் வீடுகள் அனைத்தும் அகில்புகை யிடப்பெற்று மிகவும் அழகாயிருந்தன. வீடுகள்தோறும் ஆண்பெண்கள் அனைவரும் நிர்மலமான ஆடைகளை உடுத்திப் பூமாலைகள் சந்தனம் அகில் குங்குமம் முதலிய அங்கராகங்கள் புஷ்பஸரங்கள் ஆபரணங்கள் இவைகளை அணிந்து மிகவும் உத்ஸாஹமுற்றிருந்தார்கள். இத்தகைய ஸ்த்ரீ புருஷர்களாலும் செல்வப்பெருக்குகள் அமைந்தழகிய க்ருஹங்களாலும் அந்நகரம் மிகவும் அழகாயிருந்தது. பீஷ்மகமன்னவன் பித்ருக்களையும் தேவதைகளையும் நன்றாகப் பூஜித்து ப்ராஹ்மணர்களை விதிப்படி புஜிப்பித்து நன்றாக ஆராதித்து அவர்களைக்கொண்டு ருக்மிணியைக் குறித்து ஸ்வஸ்திவாசனம் நடத்தினான். அப்பெண்மணி நன்கு ஸ்னானஞ்செய்து கங்கணபந்தனமாகிற மங்களஞ் செய்யப்பெற்றுப் புதியவைகளான இரண்டு வஸ்த்ரங்களை உடுத்து மேலான ஆபரணங்களை அணிந்து அழகிய பற்களுடன் விளக்கமுற்றிருந்தாள். ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்கள் ஸாமவேதமந்த்ரங்களாலும் ருக்வேத மந்த்ரங்களாலும் யஜுர்வேத மந்த்ரங்களா

லும் அக்கன்னிகைக்கு ரக்ஷை செய்தார்கள். புரோஹி தர் க்ரஹசாந்தியின்பொருட்டு அதர்வவேத மந்த்ரங்க ளால் ஹோமஞ்செய்தார். கார்யகாலங்களில் செய்ய வேண்டியவற்றை அறிந்தவர்களில் சிறந்தவனாகிய அப் பீஷ்மக மன்னவன் பொன் வெள்ளி வஸ்த்ரம் இவைகளை யும் வெல்லங்கலந்த எள்ளையும் பசுக்களையும் ப்ராஹ்மணர் களுக்குக் கொடுத்தான். இங்ஙனம் ருக்மிணிக்குச் செய் தாற்போலவே சேதிதேசங்களுக்கு ப்ரபுவாகிய தம கோஷமன்னவன் தன்பிள்ளையான சிசுபாலனுக்கு மந்த் ரங்களை அறிந்த ப்ராஹ்மணர்களைக் கொண்டு மங்கள கார்யங்களை யெல்லாம் நடத்தினான். அப்பால் அம்மன்ன வன் மதத்தைப் பெருக்குகின்ற யானைகளின் கூட்டங் களோடும் பொற்சங்கிலி முதலிய பொன்னலங்காரங்கள் செய்யப்பெற்ற ரதங்களோடும் அளவிறந்த காலாட்க ளோடும் குதிரைகளோடுங் கூடின ஸைன்யங்களால் சூழப்பட்டுக் குண்டினபுரம் போய்ச் சேர்ந்தான். விதர்ப் பதேசராஜனாகிய பீஷ்மகன் அந்தச் சேதிராஜனை எதிர் கொண்டு நன்றாகப் பூஜித்து மனக்களிப்புடன் அவனுக் காகத் தனியே ஏற்படுத்தப்பட்ட க்ருஹத்தில் ப்ரவேசிப் பித்தான். க்ருஷ்ணராமர்களை த்வேஷிப்பவர்களும் சிசு பாலனுடைய பக்ஷத்தை அனுஸரிப்பவர்களுமாகிய ஸால் வன் ஜராஸந்தன் விதூரதன் இவர்களும் பௌண்ட்ர கன் முதலிய மற்றும் பலவாயிர மன்னவர்களும் 'ஸ்ரீக் ருஷ்ணன், பலராமன் முதலிய யாதவர்களால் சூழப்பட்டு வந்து ருக்மிணியைப் பறித்துக்கொண்டு போவானாயின் நாமெல்லோரும் சேர்ந்து அவனுடன் யுத்தஞ்செய்ய வேண்டும்' என்று மனத்தில் நிச்சயித்துக்கொண்டு வெகுமுயற்சியுடன் சிசுபாலனுக்கு அக்கன்னிகையைக் கொடுப்பிக்கும்பொருட்டு அவ்விடம் வந்தார்கள். மற்றும்

பலராஜர்களும் அளவற்ற ஸைன்யங்களோடும் யானை குதிரை தேர் முதலிய பல வாஹனங்களோடும் கூடி அவ்விடம் வந்தார்கள். மிகுந்த பலமுடைய பலராமன் சத்ரு பக்ஷத்தில் சேர்ந்த மன்னவர்கள் இங்ஙனம் பெரிய முயற்சியுடன் வருவதைக்கேட்டுக் கன்னிகையைப் பறித்துக்கொண்டு வருவதற்காக ஸ்ரீக்ருஷ்ணன் தனியே போயிருப்பதையும் அறிந்து 'அவ்விடத்தில் நிச்சயமாய்க் கலஹம் நடக்கும்' என்று சங்கித்து ப்ராதாவிடத்தில் மிகுதியும் ஸ்னேஹமுடையவனாகையால் யானை குதிரை தேர் காலாட்கள் நிறைந்த பெரிய ஸைன்யத்துடன் கூடி வேகமாகக் குண்டினபுரிக்குப் போனான். ஸ்ரீக்ருஷ்ணனுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற ருக்மிணி தான் அனுப்பின ப்ராஹ்மணன் திரும்பிவரக் காணுமல் இங்ஙனம் சிந்தித்தாள். 'ஆ! என் விவாஹத்திற்கு ஏற்படுத்தியிருக்கிற முஹூர்த்தம் இந்த ராத்ரி கடந்தவுடனே வரப்போகின்றது. நான் மிகவும் மந்தபாக்யமுடையவள். ஸ்ரீக்ருஷ்ணன் இன்னும் வரவில்லை. இதற்குக் காரணம் என்னவோ தெரியவில்லை. என்னுடைய ஸமாசாரங் கொண்டுபோன அந்தணரும் இன்னும் திரும்பிவரவில்லை. ஸ்ரீக்ருஷ்ணன் என்னுடைய தைர்யம் முதலிய கெட்ட நடத்தையைக் கண்டு என் விவாஹத்திற்கு முயற்சியுடன் வருவதை நிறுத்திவிட்டான். இது நிச்சயம். அல்லது ஜகத்ஸ்ருஷ்டிகர்த்தாவான ஸர்வேஶ்வரன் துர்ப்பாக்யமுடைய என் விஷயத்தில் அனுகூலனுயில்லையோ? அல்லது ருத்ரனுடைய பார்யையும் ஹிமவத்பர்வதத்தின் புத்ரியும் நல்லியற்கையுடையவளுமாகிய பார்வதி என்னிடத்தில் விமுகமாயிருக்கின்றுளோ?'' என்று இளம்பருவமுடைய ருக்மிணி ஸ்ரீக்ருஷ்ணனால் பறியுண்ட மனமுடையவளாகி இங்ஙனம்

சிந்தித்துக்கொண்டு இன்னும் கோவிந்தன் வருங்காலம் ஆகவில்லையேயென்று நினைத்துக் கண்ணீர்களால் தடுக்கப்பட்ட கண்களை மூடினாள். மன்னவனே! ஸ்ரீக்ருஷ்ணனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற அந்த ருக்மிணியின் இடத்துடையும் இடக்கையும் இடக்கண்ணும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வரவாகிற ப்ரியத்தைத் அறிவித்துக்கொண்டு துடித்தன. அனந்தரம் முன்பு தான் அனுப்பியிருந்த அவ்வந்தணன் ஸ்ரீக்ருஷ்ணனால் அனுப்பப்பட்டு வந்து அந்தப்புரத்தில் உலாவிக்கொண்டிருக்கின்ற ருக்மிணியைக் கண்டான். நல்லியற்கையுடைய அந்த ராஜபுத்திரி ஸந்தோஷத்தினால் மலர்ந்தமுகமுடையவனும் உத்ஸாஹத்தினால் தடைபடாமல் விரைந்து நடந்து வருகின்றவனுமாகிய அவ்வந்தணனைக் கண்டு தூதலக்ஷணங்களை அறிந்தவளாகையால் அவன் கார்யஸித்தியுடன் வருகிறானென்பதைத் தெரிந்துகொண்டு பரிசுத்தமான புன்னகையுடன் அவ்வந்தணனை வினவினாள். அவன் பலராமனோடு ஸ்ரீக்ருஷ்ணன் வந்திருப்பதையும் அவளைத் தன்னிடம் கொண்டுபோய்ச் சேர்த்துக்கொள்ளுகிறேனென்று மொழிந்த உண்மையான வசனத்தையும் ருக்மிணிக்கு மொழிந்தான். பிறகு ருக்மிணி ஸ்ரீக்ருஷ்ணன் வந்திருக்கிறானென்பதை அறிந்து மனக்களிப்புற்று ப்ராஹ்மணனுக்குப் பரிசு கொடுக்க ப்ரியமும் உரியதுமாகிய ஒரு வஸ்துவையுங் காணாமல் வெறுமனே நமஸ்காரஞ் செய்தாள். தன் புதல்வியின் விவாஹமஹோத்ஸவத்தைப் பார்க்க விரும்பி ராமக்ருஷ்ணர்கள் வந்திருக்கிறார்களென்று கேள்விப்பட்டு பீஷ்மகமன்னவன் பெரியவாத்யகோஷத்துடன் பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களையெல்லாம் எடுத்துக்கொண்டு அம்மஹானுபாவர்களை எதிர்கொண்டான். அப்பால் அந்த பீஷ்மகன்

ராமக்ருஷ்ணர்களுக்கு மதுவர்க்கமும் அழகான வஸ்த்ரங்களும் இஷ்டமான உபஹாரங்களும் கொடுத்து விதிப்படி பூஜித்தான். மிகுந்த மதியுடைய அப்பீஷ்மகமன்னவன் போக்யவஸ்துக்களும் போகத்திற்கு வேண்டிய கருவிகளும் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்று மிகவும் அழகாயிருக்கின்ற ஒரு விடுதியை அந்த ராமக்ருஷ்ணர்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்து அவர்களுடைய ஸைன்யங்களுக்கும் அவர்களுடன் வந்த மற்றவர்களுக்கும் அவர்களுக்கும் உரியபடி அதிதிஸத்காரம் செய்தான். இங்ஙனமே அங்கு வந்திருக்கின்ற மற்ற மன்னவர்களையும் அவரவர்களுடைய வீர்யத்திற்கும் வயது பலம் நடத்தை இவைகளுக்கும் தகுந்தபடி வேண்டிய விருப்பங்களையெல்லாங் கொடுத்துப் பூஜித்தான். விதர்ப்பபட்டணத்தில் வாஸஞ் செய்கிற ஜனங்கள் ஸ்ரீக்ருஷ்ணன் வந்திருப்பதைக் கேட்டு இங்குமங்கும் இருந்து அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தாமரைமுகத்திலுள்ள லாவண்யமாகிற அம்ருதத்தை நேத்ரங்களாகிற அஞ்சலிகளால் பானஞ் செய்தார்கள். மற்றும், அந்தப்பட்டணத்து ஜனங்கள் ப்ரீதியின் மிகுதியால் கட்டுண்டு ஸந்தோஷத்தினாலுண்டான கண்ணீர்களால் வாக்கு தழுதழுக்கப்பெற்று 'ருக்மிணி இந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கே பார்யையாகத் தகுந்தவளன்றி மற்றெவர்க்குந் தகுந்தவளன்று. இவனுக்கு இவள் தகுந்தவளேயன்றி மற்ற எவளும் தகுந்தவளன்று. இந்த ஸ்ரீக்ருஷ்ணனும் அழகான திருமேனியுடையவன். இவனுடைய திருமேனியில் ஒரு தோஷமும் தெரியவில்லை. ஆகையால் இவன் நமது ருக்மிணிக்குத் தகுந்த கணவனே. இவனே தகுந்தவன். இவன் ருக்மிணிக்கே தகுந்தவனன்றி மற்ற எவளுக்கும் தகுந்தவனன்று. நாம் ஏதேனும் சிறிது புண்யம் செய்திருப்போமாயின் அந்தப்

புண்யத்தினால் மூன்று லோகங்களையும் படைக்கின்ற ப்ரஹ்மதேவன் ஸந்தோஷம் அடைந்து ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மிணியைப் பாணிக்ரஹணஞ் செய்யும்படி அனுக்ரஹிப்பானாக' என்று மொழிந்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது ராஜகன்னிகையாகிய அந்த ருக்மிணியும் படர்களால் பாதுகாக்கப்பெற்று அந்தப்புரத்தினின்று அம்பிகாலயத்திற்குச் சென்றாள். அவள் பார்வதியின் பாதபல்லவங்களைத் தர்சனஞ் செய்யவேண்டுமென்று பாதங்களாலேயே நடந்தாள். அவள் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களை நன்கு த்யானஞ்செய்துகொண்டு மௌனவ்ரதத்துடன்கூடித் தாதிமார்களாலும் தோழிகளாலும் சூழப்பட்டு ஆயுதங்களை ஏந்தி முயற்சியுடைய சூரர்களான ராஜபடர்களால் பாதுகாக்கப்பட்டு அம்பிகாலயத்திற்குச் சென்றாள். அப்பொழுது ம்ருதங்கம் சங்கம் பணவம் உடுக்கை இவைகளையும் மற்றும் பலவாத்யங்களையும் பேரிவாத்யங்களையும் முழக்கினார்கள். ப்ராஹ்மணபத்னிகளும் சிறந்த வாரஸ்த்ரீகளும் பூமாலைகளாலும் சந்தனம் குங்குமம் முதலிய கந்தங்களாலும் ஆடையாபரணங்களாலும் நன்றாக அலங்கரித்துக்கொண்டு பலவகை நைவேத்யங்களோடும் பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களோடும் அந்தராஜகன்னிகையைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். பாட்டுப்பாடுகிறவர்களும் வாத்யம் வாசிக்கிறவர்களும் ஸூதர்களும் மாகதர்களும் வந்திகளும் பாட்டுப் பாடுவதும் ஸ்தோத்ரஞ் செய்வதுமாகி மணப்பெண்ணைச் சூழ்ந்து கொண்டு சென்றார்கள். அப்பெண்மணி தேவாலயத்தின் அருகே சென்று தாமரைமலர்போன்ற பாதங்களையும் கரங்களையும் அலம்பிக்கொண்டு ஆசமனஞ் செய்து பரிசுத்தையாகி மனவூக்கத்துடன் அம்பிகாலயத்திற்குள் நுழைந்தாள்

வயது சென்றவர்களும் நடத்தவேண்டும் க்ரமத்தை அறிந்தவர்களுமாகிய ப்ராஹ்மணஸ்த்ரீகள், பாலையாகிய அந்தக் கன்னிகையைக் கொண்டு ருத்ரபத்னியும் ருத்ர னோடு கூடித் திகழ்கின்றவளுமாகிய பார்வதிக்கு நமஸ் காரஞ் செய்வித்தார்கள். அந்த ருக்மிணி ப்ராஹ்மண பத்னிகளால் பார்வதியின் முன்னே நிறுத்தப்பட்டு 'அம் பிகே! கணேசன் முதலிய ஸந்தானங்களோடு கூடியவ ளும் மங்களஸ்வரூபையுமாகிய உன்னை அடிக்கடி நமஸ் காரஞ் செய்கிறேன். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ் ணன் எனக்குப் பதியாகவேண்டும். அவன் அதை அனு மோதனஞ் செய்வானாக. இங்ஙனம் நீ எனக்கு அருள் புரியவேண்டும்' என்னும் வேண்டுகோளுடன் தேவதேவ னுடைய பத்னியாகிய பார்வதியையும் தேவதேவனும் பரிசுத்தனுமாகிய ருத்ரனையும் ஜலம் கந்தம் அக்ஷதை தூபம் வஸ்த்ரம் மாலை விடுதிப்புஷ்பம் ஆபரணம் இவை களாலும் பலவகை நைவேத்யங்களாலும் பலிகளாலும் கொடிவிளக்குகளாலும் நன்றாகப் பூஜித்தாள். மற்றும், அவள் அந்த ஜலம் முதலியவைகளாலும் உப்படை தாம் பூலம் மங்களஸூத்ரம் பழங்கள் கரும்புத்தடி இவைக ளாலும் ஸுமங்கலிகளான ப்ராஹ்மணஸ்த்ரீகளையும் நன் றாகப் பூஜித்தாள். அனந்தரம் அந்த ப்ராஹ்மணபத்னி கள் அம்பிகையின் நிர்மால்யமாகிய புஷ்பாதிகளை அந்த ருக்மிணிக்குக் கொடுத்து ஆசீர்வாதங்களைச் செய்தார் கள். மணப்பெண்ணாகிய அந்த ருக்மிணியும் அந்தப்ராஹ் மணபத்னிகளுக்கும் அம்பிகைக்கும் நமஸ்காரஞ் செய்து புஷ்பம் முதலிய நிர்மால்யத்தைப் பெற்றுக்கொண்டாள். அப்பால் அப்பெண்மணி மௌனவ்ரதத்தை முடித்து ரத்னங்கள் இழைத்த மோதிரங்களால் திகழ்கின்ற

ஸகியின் கையைத் தன்கையினால் பிடித்துக்கொண்டு அம்பிகையின் ஆலயத்தினின்று புறப்பட்டாள். அந்த ருக்மிணி அனைவர்க்கும் ஆச்சர்யத்தை விளைக்கின்ற தேவமாயையே ஒரு வடிவங் கொண்டாற்போல் மிகவும் அற்புதமான அழகுடையவளாயிருந்தாள். வீரர்களை மதிமயங்கச் செய்கின்றவளும் சிறுத்தழகிய இடையுடையவளும் குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட முகமுடையவளும் கன்னித்தனம் கழியப்பெறாதவளும் நிதம்பத்தில் ரத்னங்கள் இழைத்த அரைநாண்மாலை அணிந்தவளும் யௌவனவயதின் ஆரம்பமாகையால் எழுகின்ற கொங்கையுடையவளும் முன்னெற்றிமயிர்கள் படுகையால் சஞ்சலமான கண்களுடையவளும் பரிசுத்தமான புன்னகை அமைந்தவளும் கொவ்வைக்கனிவாயின் ஒளிகளால் சிவந்திருப்பவைகளும் குந்தமொட்டுபோன்றவைகளுமான பற்களுடையவளும் அவ்யக்தமதுரமாய் ஒலிப்பவைகளும் மிக்க ஒளியுடன் திகழ்கின்றவைகளுமாகிய சிலம்பு தண்டைகளின் சோபையால் அழகாயிருக்கின்ற பாதங்களால் ஸஞ்சரிக்கின்றவளும் கலஹம்ஸம்போல் நடப்பவளுமாகிய அப்பெண்மணியைக் கண்டு ஸ்வயம்வரத்திற்காக வந்த பெரும்புகழுடைய மன்னவர்கள் அனைவரும் அவளைக் கண்டமாத்ரத்தில் காமவிகாரம் உண்டாகப்பெற்று வருந்தி மோஹித்தார்கள். மோஹித்தமை மாத்ரமே அன்று. யானைகளிலும் ரதங்களிலும் குதிரைகளிலும் ஏறிக்கொண்டிருக்கிற அம்மன்னவர்கள் அம்பிகாலயத்திற்குப்போய் வருகையாகிற யாத்ரையின் வ்யாஜத்தினால் ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தன்னுடைய லாவண்யத்தை அர்ப்பணஞ் செய்கின்ற அப்பெண்மணியைக் கண்டு அவளுடைய கம்பீரமான புன்னகையினாலும் வெட்கம் வழியப்பெற்ற கண்ணோக்கத்தினாலும்

மனம் பறியுண்டு மோஹித்து ஆயுதங்களைத் துறந்து பூமியில் விழுந்தார்கள். அந்த ருக்மிணி ஸ்ரீக்ருஷ்ணனுடைய வரவை எதிர்பார்த்துத் தாமரைமொட்டுக்கள் போன்ற தன் பாதங்களை மெல்ல மெல்ல எடுத்து இடக் கைவிரல்களால் முன்னெற்றிமயிர்களை ஒதுக்கிக் கடைக் கண்ணுல் வெட்கத்துடன் மன்னவர்களை கண்டாள். அப்பொழுதே அவ்விடத்தில் ஸ்ரீக்ருஷ்ணனையும் கண்டாள். அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணன தன்ரதத்தில் ஏற விரும்புகின்ற அந்த ராஜபுத்ரியைச் சிசுபாலன் முதலியசத்ருக்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் அவர்களைப் பொருள் செய்யாமல் கூட்டங்கூட்டமாய் வந்திருக்கின்ற ராஜர்களையெல்லாம் அவமதித்துக் கருடத்வஜமுடைய ரதத்தில் ஏற்றிக்கொண்டு பலராமனை முன்னிட்டு, ஸிம்ஹம் நரிகளிடையினின்று தன்பாகத்தை எடுத்துக்கொண்டு மெல்லமெல்லப் போவதுபோல் பயமின்றி மெல்லமெல்லப் போனுன். துரஹங்காரமுடைய ஜராஸந்தன் முதலிய சத்ருக்கள் தங்கள்புகழை பாழ்செய்வதாகிய அந்தப் பரிபவத்தைப் பொறுக்கமுடியாமல் 'நங்கீர்த்தியைச் சுடவேண்டும். ஏனென்றுல், ஸிம்ஹங்களின் பாகத்தைச் செந்நாய்கள் பறித்துக்கொண்டுபோவது போல் வில்லாளிகளாகிய நமது யெரத்தைக் கோபர்கள் பறித்துக் கொண்டுபோனுர்களே. (இதைவிட நமக்கு வேறு பரிபவம் என்ன வேண்டும்?)' என்று பரிதபித்தார்கள். ஐம்பத்துமூன்ருவது அத்யாயம் முற்றிற்று.

---



2510 ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மிணிதேவியை ரதத்திலேற்றிக் கொண்டு போதல்.

ஸ்ரீக்ருஷ்ணன் தன்மேல் எதிர்த்து வந்த சத்ருக்களை வென்று ருக்மியை விரூபஞ் செய்து பட்டணஞ் சென்று ருக்மிணியை மணம்புரிதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அம்மன்னவர்கள் அனைவரும் இங்ஙனம் மொழிந்து பரிகபித்துக் கோபாவேசமுற்றுக் கவசந் தரித்து வில்லையும் ஏந்தித் தங்கள் தங்கள் ஸைன்யங்களால் சூழப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்தார்கள். மன்னவனே! அப்பொழுது யாதவஸேனாபதிகள் அங்ஙனம் சத்ருக்கள் எதிர்த்து வருவதைக் கண்டு தங்கள் தனுஸுக்களில் நாணை ஏற்றி ஒலிப்பித்து அவர்களை எதிர்த்துநின்றார்கள். குதிரையின்மேல் ஏறிச் சண்டைசெய்வதிலும் யானையின் கழுத்தில் இருந்து சண்டைசெய்வதிலும் தேர்மேல் இருந்து சண்டை செய்வதிலும் ஸமர்த்தர்களான சத்ருக்கள், மேகங்கள் பர்வதங்களின்மேல் ஜலங்களைப் பெய்வதுபோல யாதவஸைன்யங்களின்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தார்கள். அப்பொழுது அழகிய இடையுடைய ருக்மிணி தன்பர்த்தாவின் ஸைன்யம்முழுவதும் சத்ருக்களின் பாணங்களாகிற விடாமழைகளால் மூடப்பட்டிருப்பதைக் கண்டு பயத்தினால் கண்கள் நடுங்கப்பெற்று வெட்கத்துடன் அவனுடைய முகத்தை நோக்கினாள். அப்பொழுது மஹாநுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ருக்மிணியைப் பார்த்துச் சிரித்து 'அழகிய கண்களுடையவளே! நீ பயப்படவேண்டாம். இப்பொழுதே உன் ஸேனையிலுள்ளவர்களால் இந்தச் சத்ரு ஸைன்யம் முழுவதும் அழியப்போகின்றது!" என்று மொழிந்தான். வீரர்களாகிய கதன்பலராமன் முதலிய யாதவர்கள் அந்தச் சிசுபாலன் முதலிய சத்ருக்களுடைய அத்தகைய பராக்ரமத்தைப் பொறுக்கமாமல் நாராசங்களாலும்

சபாணங்களால் குதிரைமேலும் யானைமேலும் ரதத்தின் மேலும் ஏறிச் சண்டை செய்கின்ற அவர்களை அடித்தார்கள். அப்பொழுது ரதிகர்களின் தலைகளும் குதிரை வீரர்களின் தலைகளும் யானை வீரர்களின் தலைகளும் குண்டலம் கிரீடம் பாகை இவற்றுடன் கோடிகோடியாக அறுந்து பூமியில்விழுந்தன. மற்றும் அப்பொழுது கத்திகதை தனுஸ்ஸு இவற்றோடுகூடிய கைகளும் அடிபருத்து நுனிசிறுத்து அழகாயிருக்கின்ற துடைகளும் புஜங்களும் கால்களும் குதிரை கோவேறுகழுதை யானை ஒட்டகம் கழுதை மனிதர் இவற்றின் தலைகளும் கோடிகோடியாக அறுந்து விழுந்தன. ஜராஸந்தன் முதலிய அம்மன்னவர்கள் இங்ஙனம் ஜயத்தை விரும்புகின்ற யாதவர்களால் தங்கள் ஸைன்யக்கூட்டமெல்லாம் வதிக்கப்பெற்று யுத்தத்தினின்று திரும்பி ஓடிப்போனார்கள். அப்பால் அம்மன்னவர்கள் அனைவரும் பார்யையைப் பறிகொடுத்தவன்போல வருத்தமுற்று ஒளி மயங்கி உத்ஸாஹமற்று முகம் வாடி நிற்கின்ற சிசுபாலனைக் கிட்டி இங்ஙனம் மொழிந்தார்கள்.

மன்னவர்கள் சொல்லுகிறார்கள்:—ஓ புருஷஶ்ரேஷ்டனே! மனவருத்தத்தைத் துறப்பாயாக ப்ராணிகளிடத்தில் ஸுகமாவது துக்கமாவது நிலைநின்றிருக்காது. ராஜனே! அவை போவதும் வருவதுமாயிருப்பவை. மரத்தினால் இயற்றப்பட்ட பிரதிமை ஆட்டக்காரனுடைய இஷ்டப்படி ஆடுவதுபோல், இவ்வுலகத்திலுள்ள ப்ராணிகள் அனைவரும் ஈஶ்வரனுக்கு உட்பட்டு ஸுகதுக்கங்களை விளைக்கவல்ல கார்யங்களைச் செய்கின்றார்கள். ஸுகத்தையாவது துக்கத்தையாவது நாம் ஸ்வதந்த்ரித்துப் பெற முடியாது, நாம் ஸுகத்தையே விரும்பி முயற்சி செய்யினும் ஈஶ்வரனுடைய இச்சையின்படி

ஸுகதுக்கங்கள் இரண்டையும் பெறுகின்றோம். ஆகை யால் அவ்விஷயத்தில் நம்மால் என்ன செய்ய முடியும்?

ஜராஸந்தன் சொல்லுகிறான்:—(சேதிராஜனே! இவ் விஷயத்தில் நீ என்னையே நிதர்சனமாகப் பார்க்கலாம்) நான் இருபத்து மூன்று அக்ஷௌஹிணி ஸைன்யங்களு டன் பதினெட்டுத் தடவைகள் யுத்தஞ்செய்து அத்தனை தடவைகளிலும் தோல்வி அடைந்தேன். ஒருதடவை யுத்தத்தில் மாத்ரம் நான் ஜயித்தேன். ஆயினும் நான் 'ஜகத்தெல்லாம் தெய்வத்தோடு கூடிய காலத்தினால் தூரத்தப்பட்டிருக்கிறது' என்பதை அறிந்து ஒருகாலும் சோகிப்பதுமில்லை; களிப்பது மில்லை. ஆகையால் இப் பொழுதும் நாம் அனைவரும் வீரக்கூட்டங்களை நடத்துந் திறமையுள்ள மஹாவீரர்களின் கூட்டங்களை அடக்கியா ளுந் திறமையுடையவர்களாயினும் அற்ப பலமுடையவர்க ளும் க்ருஷ்ணனால் பாதுகாக்கப்பட்டவர்களுமாகிய யாத வர்களால் தோற்பிக்கப் பட்டோம். (இது காலஸ்வரூப னாகிய ஈஸ்வரனுடைய செயலே யன்றி வேறன்று). இப் பொழுது நம்முடைய சத்ருக்கள் தங்களுக்குக் காலம் அனுகூலமாயிருக்கப்பெற்று நம்மை ஜயித்தார்கள். நாமும் நமக்குக் காலம் அனுகூலமாய் வரும்பொழுது சத் ருக்களை ஜயிப்போமன்றி ஜயிக்காது போகமாட்டோம்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—சிசுபாலன் இங்ஙனம் நண் பர்களால் போதிக்கப்பட்டுத் தன்னைத் தொடர்ந்துவந்த வர்களுடன் பட்டணம் போய்ச் சேர்ந்தான். அடிபட்ட வர்போக மிகுந்திருக்கின்ற ஜராஸந்தன் முதலிய மன்ன வர்களும் தங்கள் தங்கள் பட்டணம் போய்ச் சேர்ந்தார் கள். க்ருஷ்ணனுக்கு த்வேஷியாகிய ருக்மியோவென் றால் தன்னுடன் பிறந்தவளாகிய ருக்மிணியின் ராக்ஷஸ

விவாஹத்தைப் பொறுக்கமுடியாமல் அக்ஷௌஹிணீ ஸைன்யத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து சென்றான். ருக்மி பெருங் கோபமுற்றுக் கவசம் அணிந்து வில்லுடன் கூடி ஸமஸ்த ராஜர்களும் கேட்டுக்கொண்டிருக்கையில் இங்ஙனம் ப்ரதிஜ்ஞை செய்தான். 'நான் யுத்தத்தில் ஸ்ரீக்ருஷ்ணனைக் கொல்லாமலும் ருக்மிணியைத் திருப்பிக்கொண்டு வராமலும் குண்டினபுரத்திற்குள் நுழைகிறதில்லை. உங்களிடையில் நான் இதை உண்மையாகச் சொல்லுகிறேன்' என்று மொழிந்து த்வரையுடன் ரதத்தில் ஏறிக்கொண்டு ஸாரதியைப் பார்த்து 'க்ருஷ்ணன் எவ்விடத்தில் இருக்கிறானோ அவ்விடத்திற்குக் குதிரைகளை விரைவுடன் ஓட்டுவாயாக. எனக்கு அவனோடு யுத்தம் நடக்கவேண்டும். மிகவும் துர்ப்புத்தியாகிய அந்த இடைப்பையனுடைய வீரமதத்தை (நானே வீரனென்னும் கொழுப்பை)ப் போக்கிவிடுகிறேன். அவன் என்பகினியைப் பலாத்காரமாக எடுத்துக்கொண்டு போனானல்லவா' என்று மொழிந்தான். அவன் ஸர்வேச்வரனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஜ்ஞானசக்திபலாதிகள் அளவற்றவையென்பதை அறியாத கெடுமதியனாகையால் இங்ஙனம் பிதற்றி ஸ்ரீக்ருஷ்ணனை 'நில் நில்' என்று மொழிந்துகொண்டே ஒரு ரதத்துடன் அவனைப் பின்றொடர்ந்தோடினான். அவன் ஸ்ரீக்ருஷ்ணனைக் கிட்டித் தனுஸ்ஸைப் பலமுள்ளவளவும் நன்றாக இழுத்து அந்த ஸ்ரீக்ருஷ்ணனை மூன்று பாணங்களால் மார்பில் அடித்து 'அட! திருடா! யாதவர்களின் குலத்தைக் கெடுக்க வந்த பாபிஷ்டனே! என்னெதிரில் ஒருக்ஷணகாலம் நிற்பாயாக. காக்கை ஹவிஸ்ஸைக் கொண்டுபோவதுபோல என்னுடன்பிறந்தவளைத் திருடிக்கொண்டு எங்குப்போகின்றனை. மந்தபுத்தியுடையவனே! தனியே நின்று சண்டை,

செய்யமுடியாமையால் கூட்டங் கூடிச் சண்டைசெய்பவ ளுகிய உன்கொழுப்பைப் போக்கிவிடுகிறேன். என்பா ணங்களால் அடியுண்டு பூமியில் விழுவதற்கு முன்னமே கன்னிகையை விடுவாயாக' என்ருன். ஸ்ரீக்ருஷ்ணன் புன்னகை செய்துகொண்டே ருக்மியின் தனுஸ்ஸை அறுத்து ஆறு பாணங்களால் அவனையும் எட்டு பாணங்களால் நான்கு குதிரைகளையும் இரண்டு பாணங் களால் ஸாரதியையும் மூன்று பாணங்களால் த்வஜத்தை யும் அடித்தான். அந்த ருக்மியும் வேறுதனுஸ்ஸை எடுத்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை ஐந்துபாணங்களால் அடித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் அந்த பாணங்களின் நுனி களால் அடிக்கப்பட்டு அந்த தனுஸ்ஸையும் அறுத்தான. மீளவும் அவன் வேருெரு தனுஸ்ஸை எடுக்க அழி விறந்த ஸ்ரீக்ருஷ்ணன் அதையும் அறுத்தான். அவன இரும்புத்தடி பட்டயம் சூலம் கேடயம் தந்தி சக்தி ஈட்டி இவை முதலிய எந்தெந்த ஆயுதத்தை எடுத்தா ஞே அதை யெல்லாம் அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அறுத்துக் கொண்டிருந்தான். அப்பால் ருக்மி ரதத்தினின்று கத்தி கேடயங்களை எடுத்துக்கொண்டு குதித்து, விட்டில் அக்னியை எதிர்ப்பதுபோல ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த் தோடினுன். ஸ்ரீக்ருஷ்ணன் அங்ஙனம் தன்னை எதிர்த்து வருகின்ற அந்த ருக்மியின் கையிலிருக்கிற கத்தி கேட யங்களை எள்ளளவு துண்டங்களாகத் துண்டித்து அவ னைக் கொல்லுவதற்காகக் கத்தியை எடுத்தான். ருக் மிணி ஸ்ரீக்ருஷ்ணன் தன்ப்ராதாவை வதிப்பதற்காக முயன்றிருப்பதைக் கண்டு பயத்தினுல் தழதழத்துப் பர்த் தாவின் பாதங்களில் விழுந்து நல்லியற்கையுடையவளா கையால் மன இரக்கத்துடன் மொழிந்தாள

ருக்மிணி சொல்லுகிருள் :—யோகேஶ்வரனே! (உன் சக்திகளுக்கு எல்லை இல்லை. நீ யோகபரிசுத்தமான மனத்தினுல் அறியத் தகுந்தவன். உன் ஸ்வரூபஸ்வபாவாதிகளைத் தேஹாபிமானியாகிய இவன் எப்படி அறிவான்?) உன் ஸ்வரூபஸ்வபாவாதிகள் அளவற்றவை. நீ தேவர்களுக்கும் தேவன். நீ ஜகத்தைப் பாதுகாப்பதற்காக அவதரித்திருக்கின்றனை. மங்களஸ்வபாவனே! மஹாபுஜனே! நீ என் ப்ராதாவை வதிக்கலாகாது. (ஆரம்பித்த விவாஹரூபமான கார்யம் முடியாதிருக்கையில் இடையில் என் ப்ராதாவை வதிப்பது யுக்தமன்றல்லவா?) கத்தியுங் கையுமாயிருக்கின்ற உன்னுடைய முகைக் கண்டு ஸந்தோஷம் அடைகிறேன். நீ இவன் விஷயத்தில் இரங்குவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர் :—மிகுதியும் பயத்தினுல் உடம்பெல்லாம் நடுங்கப்பெற்றுச் சோகத்தினுல் முகம் உலர்ந்து துக்கத்தினுல் கண்டம் தடைபட்டுத் தழதழப்பினுல் பொன்மாலை நழுவப்பெற்றிருக்கின்ற அந்த ருக்மிணியால் பாதங்களைப் பிடித்துக்கொண்டு வேண்டப்பெற்ற பகவான் மனஇரக்கமுடையவனுகையால் ருக்மியின் வதத்தினின்று மீண்டான். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் கெடுநடத்தையுடைய அந்த ருக்மியை அவனுடைய வஸ்த்ரத்தினுல் கட்டிக்கொண்டு வந்து அதே கத்தியினுல் அவனுடைய மீசை தாடிகளையும் தலை மயிர்களையும் விட்டு விட்டுச் சுரைத்து அவனை விரூபமாக்கினுன். அவ்வளவில் வீரர்களான யாதவர்கள் யானைகள் தாமரையோடையை அழிப்பதுபோலக் கொழுத்திருக்கின்ற சத்ருஸைன்யத்தை அழித்து விட்டார்கள். அந்த யாதவர்கள் சத்ருஸைன்யத்தை வென்று ஸ்ரீக்ருஷ்ணனிடம் வந்து ருக்மியைக் கண்டார்கள். மஹானுபாவனும் மன

இரக்கமுடையவனுமாகிய பலராமன் அங்ஙனம் விரூபஞ் செய்யப் பெற்று முடிந்தாற்போலிருக்கிற ருக்மியைக் கண்டு அவனைக் கட்டினின்று விடுவித்து ஸ்ரீக்ருஷ்ண னைக் குறித்து மொழிந்தான்.

பலராமன் சொல்லுகிறான்:—க்ருஷ்ண! நீ நமக் குத் தகாதகார்யம் செய்தனை. இது நிந்தைக்கிடமான கார்யம். (பந்துவை வதிக்கலாகாதல்லவா? பந்துவை வதிக்கவில்லையேயென்கிறாயோ?) பந்துவை வதிக்கையா வது—தலைமயிர்களையும் மீசைதாடிகளையும் க்ஷௌரத்து விரூபஞ் செய்கையும் மற்றும் எவ்விதத்திலாயினும் விரூபஞ்செய்கையுமே. (ருக்மிணியைக் குறித்துச் சொல் லுகிறான்) நல்லியற்கையுடையவளே! ப்ராதாவை விரூபஞ் செய்தோமென்னுஞ் சிந்தையால் நீ எங்கள்மேல் அஸூ யைப் படவேண்டியதில்லை. ஸுகத்தையாவது துக்கத் தையாவது நமக்குப் பிறன் விளைக்கிறானென்பதில்லை. புருஷன், தான் செய்த புண்யபாபகர்மங்களுக்குப் பல னாக ஸுக துக்கங்களை அனுபவிக்கிறானன்றி வேறில்லை. (மீளவும் ஸ்ரீக்ருஷ்ணனைக்குறித்துச் சொல்லுகிறான்:—) பந்துவே! பந்துவாயிருப்பவன் வதிப்பதற்குரிய தோ ஷஞ் செய்திருப்பினும், அவன் வதிக்கத்தகுந்தவனல் லன். அவனை வெறுமனே விட்டுவிடவேண்டும். அவன் வதஞ்செய்வதற்குரிய தன்தோஷத்தினால் தானே முடிந் திருக்கையில் அவனை மீளவும் எதுக்காக வதிக்கவேண் டும்? (மீளவும் ருக்மிணியைக் குறித்துச் சொல்லு கிறான்.—)ப்ராதாவும் ப்ராதாவை வதிக்கவேண்டுமென்று ப்ரஹ்மதேவன் க்ஷத்ரியர்களுக்கு மிகவும் கொடிய தர்மத்தை ஏற்படுத்தினான். இதுவே அவர்களுக்கு மே லான தர்மம். (ஆகையால் எங்கள்மேல் அபராதம் ஒன்

றும் இல்லை) (மீளவும் ஸ்ரீக்ருஷ்ணனைக் குறித்துச் சொல்லுகிறான்.) துரஹங்காரமுடைய ஜனங்கள் செல்வப்பெருக்கினால் கொழுத்து விவேகமற்று ராஜ்யம் பூமி பணம் செல்வம் நாமே வீரர்களென்னும் அபிமானம் பராக்ரமம் ஆகிய இவற்றிற்காகவும் மற்றுஞ் சிலகாரணத்திற்காகவும் பந்துக்களை அவமதிக்கிறார்கள். (நமக்கு இது யுக்தமன்று). (மீளவும் ருக்மிணியைக் குறித்துச் சொல்லுகிறான்.) தம்மை ஸ்வதந்த்ரர்களாக நினைப்பவர்களும் தேஹத்தையே ஆத்மாவாக நினைப்பவர்களுமாகிய மூடர்களைப்போல் நீ ஸர்வகாலமும் நண்பர்களுக்கு நன்மையையும் சத்ருக்களுக்குத் தீமையையும் நினைக்கின்றனையாகையால் அந்த உன்புத்தி ஸமஸ்த பூதங்கள் விஷயத்திலும் விஷமமாயிருக்கின்றது (ஒருவாறுமில்லை.) தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து நண்பனென்றும் சத்ருவென்றும் உதாஸீனனென்றும் நினைக்கைக்கிடமான இம்மதிமயக்கம் ப்ராணிகளுக்குப் பகவானுடைய மாயையினால் விளைக்கப்படுகின்றது. ஸமஸ்தப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகிய பரமபுருஷன் ஒருவனே. அவன் காஷ்டங்களில் அக்னிபோல் ப்ராணிகளிடத்தில் மறைந்திருக்கின்றான். ஆகாயம் எங்கும் நிறைந்திருப்பினும் அவ்வவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாதிருப்பதுபோல அப்பரமபுருஷனும் ப்ராணிகளின் தோஷங்கள் தீண்டப்பெறாமல் பரிசுத்தமாயிருக்கின்றான். இங்ஙனம் ஜகத்தெல்லாம் ஒருவனாகிய பரமபுருஷனுக்குச் சரீரமாகையால் ஒரு சரீரத்திலுள்ள கை கால் முதலிய அவயவங்களுக்குள் ஒன்றில் ப்ரீதியும் ஒன்றில் த்வேஷமும் கூடாததுபோலப் பரமபுஷனுடைய சரீரமாகிய ஜகத்திற்குள் சத்ருவென்றும் மித்ரனென்றும் பேதபுத்தி கூடாது. ஜகத்தெல்லாம் பரமாத்மாவுக்குச்

சரீரமென்கிற இவ்வுண்மையை அறியாத மூடர்கள் ஜகத்தைச் சத்ருவென்றும் மித்ரனென்றும் பலவாறு நினைக்கிறார்கள். (தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஜீவனென்பவன் யாவன்? அவன் எத்தகையன்? தேஹம் எத்தகையது? தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவுக்கு ஸுகதுக்கானுபவம் எப்படி உண்டாகின்றது? என்றால், சொல்லுகிறேன்). தேஹமாவது ப்ருதிவி முதலிய பஞ்ச பூதங்கள் இந்த்ரியங்கள் கந்தம் முதலிய பஞ்சபூதங்ககளின் குணங்கள் ஆகிய இவையெல்லாம் ஒன்றுசேர்ந்த ஒருவகைப்பொருளாம். அது ஆதியந்தங்களுடையது. (பிறவியும் சாவுமுடையது). ஆத்மாவோவென்றால் ஜ்ஞானஸ்வரூபன்; என்றும் அழிவில்லாதவன். அத்தேஹம் அவித்யையினால் ஆத்மாவிடத்தில் உண்டாகி அவ்வாத்மாவை ஜன்மஜராமரணாதி துக்கங்களை அனுபவிக்கும்படி செய்கின்றது. தேஹம் தன்னுடைய ஸம்பந்தமாத்ரத்தினால் ஜீவாத்மாவுக்கு ஜன்மஜராமரணாதி ரூபமான ஸம்ஸாரத்தை விளைக்குமாயின் பரமாத்மாவுக்கும் அதை விளைக்குமல்லவாவென்று சங்கிக்கவேண்டாம்). நல்லியற்கையுடையவளே! ஜீவனுக்கு தேஹஸம்பந்தமும் தேஹவியோகமும் உண்டாவதுபோலப் பரமாத்மாவுக்கு அவை உண்டாகிறதில்லை; ஏனென்றால் அத்தேஹத்தின் உத்பத்தியும் அதன் ஸம்பந்தவியோகங்களும் பரமாத்மாவின் ஸங்கல்பத்தைத் தொடர்ந்திருப்பவை. ஆகையால் அத்தேஹம் அவனுக்குப் பந்தத்தை விளைக்க வல்லதன்று. ஸூர்யன் தன் வெளிச்சத்தினால் சக்ஷுரிந்த்ரியத்திற்கு உதவி செய்து கறுமை வெளுமை முதலிய நிறங்களை ப்ரகாசஞ் செய்கின்றான். ஆயினும் வெகுதூரத்திலிருக்கின்ற அந்தஸூர்யனுக்கு அவ்விந்த்ரியத்தோடாவது

அக்நிறங்களோடாவது என்ன ஸம்பந்தம் இருக்கின்றது? பரமாத்மா தேஹத்திற்குள்ளிருப்பினும் அது அவனுக்கு உட்பட்டதாகையால் எவ்வித தோஷத்தையும் விளைக்கவல்லதன்று. ஜன்மம்முதலிய விகாரங்கள் தேஹத்திற்கேயன்றி ஆத்மாவுக்கு அவை எப்பொழுதும் கிடையாது. வளர்தல் தேய்தல் முதலிய விகாரங்கள் சந்த்ரனுடைய கலைகளுக்கேயன்றிச் சந்த்ரனுக்குக் கிடையாதல்லவா? சந்த்ரகலைகளின் நாசத்தை அமாவாஸ்யையென்றும் சந்த்ரக்ஷயமென்றும் சொல்லுவதுபோல ஆத்மாவுக்கு தேஹவியோகத்தையே மரணமென்று சொல்லுகிறார்கள். ஸ்வப்னங் காண்கிறவன் தன்னையும் ஸ்வப்னத்திற்கு முன்னம் இல்லாத வஸ்துக்களையும் அவற்றின் போகங்களையும் இவை ஶாஶ்வதமென்னும் புத்தியுடன் அநுபவிப்பதுபோல, ஜீவன் சப்தாதி விஷயங்களைச் சாஶ்வதமென்னும் புத்தியுடன் எதுவரையில் அநுபவித்துக்கொண்டிருப்பானோ அதுவரையில் ஜன்மஜராமரணாதிரூபமான ஸம்ஸாரத்தை அநுபவித்துக்கொண்டிருப்பான். இவை நஶ்வரங்களென்று தெரிந்துகொண்டவன் இதினின்று விடுபடுவான். பரிசுத்தமான புன்னகையுடையவளே! உண்மை இதுவாகையால் மனத்தை உலர்த்துவதும் மயக்குவதும் அஜ்ஞானத்தினால் விளைவதுமாகிய சோகத்தைத் தத்வஜ்ஞானத்தினால் போக்கி ஸுகித்திருப்பாயாக. (நண்பனென்றும் சத்ருவென்றும் பேதபுத்தி அஜ்ஞானத்தினால் உண்டாகின்றது. ஜகத்தெல்லாம் பரமாத்மாவின் சரீரமென்று பாவிக்கையாகிற தத்வஜ்ஞானத்தினால் அதை அறுத்து ஜ்ஞானாநந்த ஸ்வரூபனான ஆத்மாவின் உண்மையை ஆராய்வதில் ஊற்றிருப்பாயாக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— லக்ஷணங்கள் அமைந்து அழகாயிருக்கின்ற அவயவங்களையுடைய அந்த ருக்மிணி இங்ஙனம் பலராமனால் அறிவிக்கப்பெற்று மனவருத்தத்தைத் துறந்து தத்வஜ்ஞானத்தினால் மனத்தை ஸமாதானப்படுத்திக்கொண்டாள். ருக்மியோவென்றால் சத்ருக்களால் பலமும் தேஜஸ்ஸும் பாழாகி ப்ராணன்கள்மாத்ரமே மிகுந்திருக்கும்படி விடப்பட்டுத் தன்மனோரதம் வீணாகப்பெற்றுத் தன்னை விரூபஞ்செய்ததை நினைத்துக்கொண்டே ஊருக்குப் போகாமல் தான் வாஸஞ்செய்வதற்காகப் போஜகடமென்னும் பெயருடைய பெரிய பட்டணத்தை நிர்மித்தான். துர்ப்புத்தியுடைய அந்த ருக்மி 'க்ருஷ்ணனைக் கொன்று தங்கையாகிய ருக்மிணியை மீட்டுக்கொண்டு போகாமல் குண்டினபுரிக்குள் நுழைகிறதில்லை' என்று ப்ரதிஜ்ஞை செய்து கோபத்துடன் போஜகடமென்கிற அந்தப்பட்டணத்தில் வஸித்திருந்தான்.

---

## ருக்மிணி விவாஹம்.

யாதவகுலத்தை மேன்மைப்படுத்துந்தன்மையனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் ராஜர்களையெல்லாம் வென்று பீஷ்மகனுடைய புதல்வியாகிய ருக்மிணியைத் தன்பட்டணத்திற்குக் கொண்டுபோய் விதிப்படி விவாஹஞ்செய்துகொண்டான். மன்னவனே! அந்த நகரத்திலுள்ள ஜனங்கள் அனைவரும் யாதவர்களுக்கு நாதனாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் என்றும் மாறாத மிகுந்த மனோபாவமுடையவர்களாகையால் அப்பொழுது அந்த விவாஹதினங்கள் முழுமையும் அவர்களுக்கு மஹோத்ஸவமாயிருந்தன. ஆண் பெண்கள் அனைவரும் மிகவும் ஸந்தோஷம் அடைந்து அழுக்

கெடுத்து நிர்மலமாயிருக்கின்ற ரத்னகுண்டலங்களை அணிந்து விசித்ரமான வஸ்த்ரங்களைத் தரித்திருக்கின்ற மணப் பெண்பிள்ளைகளுக்கு உபஹாரங்களைக் கொண்டுவந்தார்கள். அப்பொழுது அந்நகரம் யாதவர்களால் உயரவெடுத்து நாட்டப்பட்ட இந்த்ரத்வஜங்களாலும் விசித்ரமான பூமாலைகளாலும் அத்தகைய வஸ்த்ரங்களாலும் ரத்னமயமான தோரணங்களாலும் வீட்டு வாசல்கள் தோறும் அமைக்கப்பட்ட பொரி மாந்தளிர் புஷ்பம் முதலிய மங்களவஸ்துக்களாலும் பூர்ண கும்பங்களாலும் அகிற்புகைகளாலும் தீபங்களாலும் விளக்கமுற்றிருந்தது. விவாஹத்திற்காக அழைக்கப்பெற்று வந்திருக்கின்ற மிகவும் அன்பிற்கிடமான மஹாராஜர்களின் மத்தகஜங்களுடைய மதஜலங்களால் வீதிகள் முழுவதும் நனைந்திருந்தன. மற்றும் வீட்டுவாசற்களில் வாழைமரங்களும் பாக்குமரங்களும் கட்டப்பட்டு அந்நகரம் அழகாயிருந்தது. அப்பொழுது ஆவலின் மிகுதியால் வீதிகளில் நாற்புறத்திலும் விரைந்தோடுகின்ற பந்துக்களினிடையில் கௌரவர்களும் ஸ்ருஞ்சயர்களும் கேகயர்களும் விதர்ப்பர்களும் யாதவர்களும் குந்திகளும் ஒருவரோடொருவர் கலந்து ஸந்தோஷம் அடைந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மிணியைப் பறித்துக் கொண்டுவந்த வ்ருத்தாந்தத்தை ஆங்காங்கு ஜனங்கள் பாடுவதைக் கேட்டு ராஜர்களும் ராஜகன்னிகைகளும் மிகவும் வியப்படைந்தார்கள். ராஜனே! த்வாரகையில் உள்ளவர்கள் அனைவரும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரமாகிய ருக்மிணியுடன் சேர்ந்திருப்பதைக் கண்டு மஹாநந்தம் அடைந்தார்கள். ஐம்பத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

ப்ரத்யும்னன் பிறத்தலும், அவனைச் சம்பராஸுரன் கொண்டுபோதலும், அவன் சம்பராஸுரனைக் கொன்று தன்பார்யையாகிய ரதிதேவியுடன் த்வாரகைக்குத் திரும்பி வருதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—வாஸுதேவனுடைய அம்சமாகிய மன்மதன் முன்பு ருத்ரனுடைய கோபத்தினால் கொளுத்தப் பட்டானல்லவா. அவன் மீளவும் தேஹம் பெறுதற்காக அந்த வாஸுதேவனுடைய சரீரத்தை அடைந்திருந்தான். அந்த மன்மதனே ஸ்ரீக்ருஷ்ணனுடைய வீர்யத்தினால் ருக்மிணியிடத்தில் பிறந்தான். அவன் ப்ரத்யும்னனென்று ப்ரஸித்திபெற்றிருந்தான். எல்லாவிதத்திலும் தந்தையைக்காட்டிலும் சிறிதும் குறையாதிருந்தான. மன்மதனுக்குச் சத்ருவும் காமரூபியுமாகிய சம்பராஸுரன் நாரதர்மூலமாய் அந்த ப்ரத்யும்னன் தனக்குச் சத்ருவென்பதை அறிந்து பிறந்து பத்து நாள் கழிவதற்கு முன்னமே அக்குழந்தையைக் கொண்டுபோய் ஸமுத்ரத்தில் பொகட்டுத் தன்க்ருஹத்திற்குப் போனான். பலமுள்ள ஒருமத்ஸ்யம் அக்குழந்தையை விழுங்கிற்று. அப்பால் ஒருகாலத்தில் சம்படவர்கள் வந்து பெரியவலையை விரித்து அந்த மத்ஸ்யத்தையும் மற்றும் பலமத்ஸ்யங்களையும் பிடித்தார்கள். சம்படவர்கள் அந்த மத்ஸ்யத்தைக்கொண்டுபோய்ச் சம்பராஸுரனுக்கு உபஹாரமாகக் கொடுத்தார்கள். சமையற்காரர்கள் அந்த மத்ஸ்யத்தைப் பாகசாலைக்குள் கொண்டுபோய்க் கத்தியினால் சேதிக்க, அம்மத்ஸ்யத்தின் உதரத்தில் அற்புதமான ஓர் பாலனைக் கண்டு மாயாவதிக்குத் தெரிவித்தார்கள். அவள் அந்தப் பாலகனைக் கண்டு 'இப்பாலகன் யாவனோ? தெரியவில்லையே. இவன் என்பர்த்தாவைப்போன்றிருக்கிறான். அல்லது அவன்தானோ இவன்?'

என்று மனத்தில் சங்கித்துக்கொண்டிருக்கையில் நாரத மஹர்ஷி அவ்விடம் வந்து அப்பாலகனுடைய உண்மை யையும் அவனுடைய பிறவியையும் அவன் மத்ஸ்யத் தின் வயிற்றில் புகுந்த விதத்தையும் ஆகிய இவையெல் லாவற்றையும் அவளுக்குச் சொன்னார். அவள் மன்மத னுடைய பத்னி; ரதிதேவியென்னும் பெயருடையவள். அவள் ருத்ரனால் தஹிக்கப்பட்ட தன் கணவனுடைய தேஹோத்பத்தியை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். சம்பராஸுரன் அவளைப் பலாத்காரமாகக் கொண்டு வந்து சமையற்காரர்களுக்குச் சமையலில் உதவியா யிருக்கும்படி பாகசாலையில் நியமித்திருந்தான். அவள் அந்தப்பாலகனை நாரதர்மூலமாய்க் காமதேவனை ன்று தெரிந்துகொண்டு அவனிடத்தில் ஸ்னேஹம் செய்து வந்தாள். க்ருஷ்ணனுடைய குமாரனாகிய அந்த ப்ரத்யும்னன் ஸ்வல்பகாலத்திலேயே யௌவன வயது நேரப்பெற்றுத் தன்னைப்பார்க்கும் மடந்தையர் களனைவர்க்கும் காமமோஹத்தை விளைத்தான். மன்ன வனே! அந்த ரதிதேவி தாமரையிதழ்போல் மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட கண்களுடையவனும் திரண்டு ருண்டு நீண்ட புஜதண்டங்களுடையவனும் மனுஷ்ய லோகத்தில் இணையெதிரில்லாத அழகனும் தன் கணவனு மாகிய அந்த ப்ரத்யும்னனை வெட்கம் அமைந்த புன்ன கையுடன் புருவங்களை நெரித்து ப்ரீதியினால் காமக்கருத் தை வெளியிடுகின்ற லீலாவிலாஸங்களுடன் பார்த்துக் கொண்டு பணிந்து வந்தாள். ஸ்ரீக்ருஷ்ணனுடைய குமாரனும் மஹானுபாவனுமாகிய ப்ரத்யும்னன் அந்த ரதிதேவியைக்குறித்துத் 'தாயே! உன்மதி விபரீதமாயி ருக்கின்றது. ஏனென்றால், புதல்வனிடத்தில் தாயிருக்க வேண்டும் க்ரமத்தைக் கடந்து நீ காமக்கலவியில் மன

விருப்பமுடைய மடந்தை காதலனிடத்தில் நடக்குமாறு நடக்கின்றனையே?" என்றான். அதைக் கேட்டு ரதிதேவி மொழிந்தாள்.

ரதி சொல்லுகிறாள்:—நீ நாராயணாவதாரமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய புதல்வன். சம்பரனால் ஸ்ரீக்ருஷ்ண க்ருஹத்தினின்று கொண்டுவரப்பட்டனை. நான் உன்னுடைய பத்னி; ரதிதேவி. ப்ரபூ! நீ காமதேவன். இந்தச் சம்பராஸுரன் உனக்குச் சத்ரு. இவன் வெல்ல முடியாதவன். இவனை எவரும் எதிர்க்கவல்லரல்லர். இவன் பலமாயைகளை அறிந்தவன். நீ மோஹனம் முதலிய மாயைகளைக் கொண்டு இவனை வதிப்பாயாக. உன் தாயாகிய ருக்மிணி தன் புதல்வனைக் காணாமல் குட்டியைக் காணாத மான்பேடுபோலவும் தன்கன்றைக் காணாத பசுபோலவும் பிள்ளையினிடத்தில் ஸ்னேஹத்தினால் வ்யாகுலமுற்று மனக்களிப்பின்றி வருந்துகின்றாள். ஆகையால் சீக்ரம் சத்ருவைக் கொன்று தாயிடம் போய்ச் சேருவாயாக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—மாயாவதியென்னும் ரதிதேவி இங்ஙனம் மொழிந்து மஹானுபாவனாகிய அந்த ப்ரத்யும்னனுக்குச் சத்ருவின் மாயையை அழிக்கவல்ல மோஹனம் முதலிய மஹாமாயாதிரூபமான வித்யையைக் கொடுத்தாள். அந்தப்ரத்யும்னனும் சம்பரனிடம்சென்று பொறுக்கமுடியாத வசவுகளால் அவனைத் திரஸ்கரித்துச் சண்டையை மூட்டி அவனை யுத்தத்திற்கு வரும்படி அழைத்தான். அச்சம்பரன் துர்ப்பாஷணங்களால் திரஸ்கரிக்கப்பட்டுக் காலால் உதைக்கப்பட்ட ஸர்ப்பம்போல் மிகவும் கோபமுற்றுக் கண்கள் சிவக்கப்பெற்றுக் கையில் கதையை ஏந்திக்கொண்டு புறப்பட்டான். அவ்வஸுரன்

பலமுள்ளவரையில் கதையைச் சுழற்றி ப்ரத்யும்னன்மேல் எறிந்து இடி இடித்தாற்போல் கடோரமான பெரியகோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்தான். ப்ரத்யும்னன் ஆகாயத்தில் வருகின்ற அந்தச் சம்பரனுடைய கதையைத் தன் கதையால் தடுத்துக் கோபத்துடன் தானும் ஸிம்ஹநாதஞ் செய்து தன் கதையை அவன் மேல் ப்ரயோகித்தான். அச்சம்பராஸுரன் மயனால் உபதேசிக்கப்பட்ட அஸுரமாயையைக் கொண்டு ஆகாயத்தில் இருந்து ப்ரத்யும்னன்மேல் கற்களை மழைபெய்வதுபோல் பெய்தான். மஹாபலனாகிய ப்ரத்யும்னன் கல்மழையினால் பீடிக்கப்பட்டு ஸத்வகுணத்தின் பரிணாமமாயிருப்பதும் அஸுரமாயைகளையெல்லாம் அழிப்பதுமாகிய மஹாவித்யையென்னும் மாயையை ப்ரயோகித்தான். அப்பால் மீளவும் அவ்வஸுரன் குஹ்யகர், கந்தர்வர், பிசாசர், உரகர், ராக்ஷஸர் ஆகிய இவர்களைச் சேர்ந்த பற்பல மாயைகளை ப்ரயோகித்தான். ப்ரத்யும்னன் அந்த மாயைகளையெல்லாம் அழித்து விட்டான். அப்பால் ப்ரத்யும்னன் கூரான கத்தியை ஏந்தி மாயைகளெல்லாம் முடிந்தமையால் மேல் ஒன்றுஞ்செய்ய முடியாதிருப்பவனும் சிவந்த மீசை தாடிகளுடையவனுமாகிய அந்தச் சம்பராஸுரனுடைய சரீரத்தினின்று கிரீடத்தோடும் குண்டலங்களோடுங் கூடிய சிரத்தை அறுத்துத் தள்ளினான். அப்பால் அந்த ப்ரத்யும்னன் தேவதைகளால் துதி செய்து பூமழை பொழியப்பெற்று ஆகாயத்தில் ஸஞ்சரிக்குந்தன்மையுடைய தன்பார்யையாகிய ரதிதேவியால் ஆகாயவழியாகப் பட்டணங் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டான். ராஜனே! அந்த ப்ரத்யும்னன் மின்னலோடு கூடின மேகம்போல் பார்யையுடன் ஆகாயத்தினின்று இறங்கி மடந்தையர்மணிகளால் சூழப்

பட்ட மேலான அந்தப் புரத்திற்குள் நுழைந்தான். கார்கொண்டமேகம்போல் கறுத்த நிறமுடையவனும் பொன்னிறமுள்ள பட்டுவஸ்த்ரந்தரித்தவனும் முழந் தாள்வரையில் நீண்டு திரண்டுருண்ட பாஹுதண்டங் களும் சிவந்த கண்களும் அழகிய புன்னகையும் அந்த கைய முகமும் அமைந்து கறுத்துச் சுருண்ட முன் னெற்றி மயிர்களால் அலங்கரிக்கப்பட்ட தாமரைமலர் போன்ற முகமுடையவனுமாகிய அந்த ப்ரத்யும்னனைக் கண்டு அந்தப்புரத்துமடந்தையர்கள் அனைவரும் ஸ்ரீக் ருஷ்ணனென்று நினைத்து வெட்கமுற்று ஆங்காங்கு மறைந்து கொண்டார்கள். அனந்தரம் அம்மடந்தையர் கள் ஸ்ரீவத்ஸம் முதலியன இல்லாமையாகிற சிறிது வேறுபாட்டைக் கண்டு 'இவன் ஸ்ரீக்ருஷ்ணன் அன்று' என்று மெல்ல மெல்ல நிச்சயித்துக் கொண்டு மனக்க ளிப்புற்றுப் பரிசுத்தமான புன்னகையுடையவர்களாகிப் பெண்மணியோடு கூடின அந்த ப்ரத்யும்னனைக் கிட்டி ஞர்கள். அப்பால் இனிதாகப் பேசுந்தன்மையுடையவ ளும் கரியகடைக்கண்களுடையவளுமாகிய ருக்மிணி அவனைக்கண்டு ஸ்னேஹத்தினால் ஸ்தனங்களில் பால் பெருகப்பெற்றுக் காணாதுபோன தன்புதல்வனை நினை த்துக்கொண்டாள். மற்றும், அவள் தனக்குள் 'புருஷ ஸ்ரேஷ்டனாகிய இவன் யாவனோ? தாமரைமலர்போன்ற கண்களையுடைய இவன் யாருடையவனோ? எவள் இவனை வயிற்றில தரித்திருந்தாளோ? இவனுக்கு இப்பெண்ம ணி எவ்விடத்தில் கிடைத்தாளோ? என்புதல்வன் ப்ரஸவ க்ருஹத்தினின்று பறியுண்டு காணாது போனானே; அவன் தானோ இவன்? அவன் எங்கேனும் பிழைத்திருப்பா னாயின் இவனோடொத்த வயதும் உருவமும் உடையவனா யிருப்பான். இவன் ஆகாரம் அவயவங்கள் கடை குரல்

சிரிப்பு நோக்கம் இவைகளால் ஸ்ரீக்ருஷ்ணனோடொத்திருக்கின்றான். இத்தன்மை இவனுக்கு எப்படி நேர்ந்ததோ? எந்த மஹானுபாவன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அம்சமாகி என்கர்ப்பத்தில் சிசுவாயிருந்தானோ, அவனே இவன். இது நிச்சயம். இவனிடத்தில் எனக்கு ப்ரீதி அதிகமாயிருக்கின்றது. என்னுடைய இடப்புஜமும் துடிக்கின்றது' என்று சிந்தித்தாள். இங்ஙனம் ருக்மிணி சிந்தித்துக்கொண்டிருக்கையில் உத்தமச்லோகனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தேவகீவஸுதேவர்களோடு அவ்விடம் வந்தான். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரத்யும்னனைச்சேர்ந்த வ்ருத்தாந்தங்களையெல்லாம் அறிந்தவனாயினும் தான் பேசாதிருந்தான். அப்பொழுது நாரதர் அவ்விடம் வந்து சம்பரன் கொண்டுபோனது முதலிய வ்ருத்தாந்தங்களையெல்லாம் சொன்னார். ஸ்ரீக்ருஷ்ணனுடைய அந்தப்புரத்திலுள்ள மாதர்கள் அனைவரும் அந்த அற்புதமான வ்ருத்தாந்தத்தை நாரதர் மொழியக் கேட்டுப் பல ஆண்டுகளாய்க் காணாது போய் மீண்டு வந்திருக்கின்ற அந்த ப்ரத்யும்னனைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்தார்கள். தேவகீவஸுதேவர்களும் ஸ்ரீக்ருஷ்ணராமர்களும் மற்றுமுள்ள மடந்தையர்களும் ருக்மிணியும் அந்தத் தம்பதிகளை அணைத்துக் களிப்புற்றார்கள். த்வாரகையிலுள்ள ஜனங்கள் அனைவரும் காணாது போன ப்ரத்யும்னன் திரும்பிவந்ததைக் கேட்டு 'மரணம் அடைந்த பாலகன் மீளவும் இவ்விடம் வந்தான். இது பெரிய ஆநந்தம். இது நம்முடைய பாக்யமே' என்று மொழிந்தார்கள். ப்ரத்யும்னன் தன் தந்தையாகிய ஸ்ரீக்ருஷ்ணனை நிகர்த்த உருவமும் ஸௌந்தர்யமும் சோபையும் நடை முதலிய மற்றவையுமுடையவனாயிருந்தானாகையால் அவனுடைய தாய்மார்களாகிய

ஸ்ரீக்ருஷ்ணபத்னிகள் ஏகாந்தத்தில் அவனைக் கண்டு ஸ்ரீக்ருஷ்ணனென்னும் ப்ரமத்தினால் மனவிருப்பத்துடன் பணிந்தார்களென்பது அற்புதமன்று. நினைத்தமாத்ரத்தில் மனத்தைக் கலக்குந்தன்மையுடைய மன்மதன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமேனியின் ப்ரதிபிம்பம்போல அவனை நிகர்த்த புதல்வனாகப் பிறந்திருக்கையில் அவனைக் கண்டு மதி மயங்குவது அற்புதமோ? தாய்மார்களின் கதை இதுவாயின், மற்ற மடந்தையர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஐம்பத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்யமந்தகமணியின் உபாக்யானமும், ஜாம்பவதீ ஸத்யபாமைகளின் விவாஹமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸத்ராஜிதன் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் அபராதப்பட்டானாகையால் அதைத் தீர்த்துக்கொள்ளும்பொருட்டுத் தன்புதல்வியாகிய ஸத்யபாமையையும் ஸ்யமந்தகமென்னும் மணியையும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தானே முயன்று கொடுத்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ரஹ்மரிஷீ! ஸத்ராஜிதன் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு என்ன அபராதஞ் செய்தான்? அவனுக்கு ஸ்யமந்தகமணி எங்கிருந்து கிடைத்தது? அவன் எந்தக்காரணத்தினால் தன்புதல்வியை ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுத்தான்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸத்ராஜிதனென்று ஒரு மன்னவன் இருந்தான். அவன் ஸூர்யனிடத்தில் மிகுந்த பக்தியுடையவனாயிருந்தான். ஸூர்யன் அவனுடைய பக்திக்கு ஸந்தோஷம் அடைந்து ப்ரீதியுடன் அவனு

க்கு ஸ்யமந்தகமென்னும் மணியைக் கொடுத்தான். ராஜனே! அந்த ஸத்ராஜிதன் அம்மணியைக் கழுத்தில் தரித்து ஸூர்யன்போல் விளக்கமுற்று மணியின் தேஜஸ்ஸினால் சரீரம் தெரியாமல் மறைந்து த்வாரகைக்குள் நுழைந்தான். பட்டணத்து ஜனங்கள் அவனைக் கண்டு தூரத்திலேயே அவனுடைய தேஜஸ்ஸினால் கண்கள் பறியுண்டு இவன் ஸூர்யனே யென்று நினைத்துப் பாசகைகளால் விளையாடிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனிடம் வந்து மொழிந்தார்கள்.

ஜனங்கள் சொல்லுகிறார்கள்:—நாராயணா! சங்க சக்ரகதாதர! தாமோதர! தாமரைக்கண்ணா! யதுகுல குமார! நீ ஸமஸ்தலோகங்களுக்கும் ஆதாரன்; ஸர்வாந்தராத்மா; ஸர்வரக்ஷகன்; ஸமஸ்தலோகங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துபவன். நீ உலகங்களைப் படைக்கும்பொழுது முதலில் ஜலத்தைப் படைத்து அதன்மேல் சயனித்துக்கொண்டிருந்தனையாகையால் நாராயணனென்று பெயர் பெற்றனை. நீ உன் பக்தர்களின் விரோதிகளை அழிப்பதற்காகச் சங்கு சக்கரம் கதை ஆகிய இவ்வாயுதங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்றனை. நீ தாமரையிதழ்போன்ற கண்களையுடைய பரமபுருஷன். அத்தகைய நீ யாதவகுலத்தில் வந்தவதரித்து நந்தகோபக்ருஹத்தில் வளர்ந்து யசோதையால் கட்டுண்டு தாமோதரனென்று பெயர்பெற்றனை. பசுக்களை மேய்த்தனையாகையால் கோவிந்தனென்று பெயர் பெற்றனை. உலகங்களுக்கெல்லாம் நாதனே! உஷ்ணமான கிரணங்களையுடைய ஸூர்யன் தன் கிரணஸமூஹத்தினால் மனுஷ்யர்களின் கண்களைப் பறித்துக்கொண்டு உன்னைப் பார்க்கவிரும்பி இதோ வருகின்றான். தேவஶ்ரேஷ்டர்கள் மூன்று லோகங்களிலும் உன்னுடைய மார்க்கத்தைத்

தேடிக்கொண்டிருக்கிருர்கள். ப்ரபூ! ஆகையால் இப்பொழுது நீ யதுகுலத்தில் யாதவனுய் மறைந்திருப்பதை அறிந்து ஸூர்யன் உன்னைப் பார்க்க வருகின்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—வருகிறவன் இன்னவனென்று தெரிந்து கொள்ளாமல் ப்ரமிக்கின்ற அந்த ஜனங்களின் வசனத்தைக் கேட்டுத் தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் சிரித்து அவர்களைக் குறித்து மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—இவன் தேவனாகிய ஸூர்யனல்லன். இவன் ஸத்ராஜிதன். இவனுக்கு இப்படிப்பட்ட ஒளி ஏதென்றால், சொல்லுகிறேன். கேளுங்கள். ஸ்யமந்தகமென்னும் மணியின் தேஜஸ்ஸினால் இவன் இங்ஙனம் ஜ்வலித்துக்கொண்டு வருகின்றான். இதுவேயன்றி வேறில்லை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸூர்யனிடத்தினின்று மணியைப் பெற்ற ஸத்ராஜிதன் பாக்யமுடையவனாகி உத்ஸவத்திற்குரிய மங்களங்கள் செய்யப்பெற்ற தன் க்ருஹத்திற்குள் நுழைந்து தேவாலயத்தில் ப்ராஹ்மணர்களைக் கொண்டு அந்த மணியை ஸ்தாபிதஞ் செய்தான். மன்னவனே! அந்த மணி தினந்தோறும் எட்டு ஸ்வர்ணபாரங்களை விளைத்துக்கொண்டிருந்தது. அந்த மணி எந்த ராஜ்யத்தில் பூஜிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்த ராஜ்யத்தில் துர்ப்பிக்ஷமும் அகாலமரணமும் அமங்களங்களும் ஸர்வவிதமான மனவருத்தங்களும் வ்யாதிகளும் மற்றும் பல துக்கஹேதுக்களும் திருடர்களும் ஒருகாலும் உண்டாகமாட்டா. ஒருகால் ஸ்ரீக்ருஷ்ணன் உக்ரஸேனனுக்காக அந்த மணியை வேண்டுகையில், ஸத்ராஜிதன் பணத்தாசையால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேண்டுகோளைத் தடுக்கவேண்டி வருகிறதேயென்பதை

ஆலோசிக்காமல் கொடுக்காமலே யிருந்துவிட்டான். இப்படியிருக்கையில் ஒருகால் பேரொளியுடைய அந்த மணியை அவனுடைய ப்ராதாவாகிய ப்ரஸேனனென்பவன் கழுத்தில் தரித்துக் குதிரையின்மேல் ஏறி வனத்தில் வேட்டைக்காகத் திரிந்தான். அப்பொழுது ஒரு ஸிம்ஹம் குதிரையையும் ப்ரஸேனனையும் கொன்று மணியை எடுத்துக்கொண்டு பர்வதத்தில் ப்ரவேசிக்கக் கரடிகளுக்கு ராஜனாகிய ஜாம்பவான் மணியை விரும்பி அந்த ஸிம்ஹத்தைக் கொன்றான். அந்த ஜாம்பவானும் தன் வாஸஸ்தானமாகிய குஹைக்குள் சென்று அந்த மணியைத் தன்குமாரனுக்கு விளையாட்டுக் கருவியாகக் கொடுத்துவைத்தான். ஸத்ராஜிதன் [1]ப்ராதா வாக்காமையால் பரிதபித்து 'என் ப்ராதா கழுத்தில் மணியைத் தரித்து வனத்திற்குச் சென்றான். அங்குப் பெரும்பாலும் அவன் ஸ்ரீக்ருஷ்ணனால் மணிக்காகக் கொல்லப்பட்டிருப்பான். இது நிச்சயம்' என்றான். அதைக் கேட்டு ஜனங்கள் ஒருவர்க்கொருவர் காதோடு ஏகாந்தமாக இப்படியாமேயென்று பேசிக்கொண்டார்கள். ஸ்ரீக்ருஷ்ணபகவானும் க்ரமமாக அந்த வசனத்தைக் கேட்டுத் தன்னிடத்தில் பூசப்பட்ட பழியைப் போக்கிக்கொள்ள விரும்பிப் பட்டணத்து ஜனங்களுடன் ப்ரஸேனன் போனவழியைத் தொடர்ந்து சென்றான். அவர்கள் அங்கு வனத்தில் ஸிம்ஹத்தினால் அடியுண்ட ப்ரஸேனனையும் குதிரையையுங் கண்டு அப்புறம் மலையின்மேல் ஏறி அங்கு ஜாம்பவானால் அடிக்கப்பட்ட ஸிம்ஹத்தையுங் கண்டார்கள். பிறகு கரடிகளுக்கு ராஜனாகிய ஜாம்பவானுடைய குஹைக்குச் சென்று அங்கு த்வாரத்தில் பட்டணத்து ஜனங்களை நிறுத்திப் பேரிருள் மூடப்பெற்றுப் பயங்கரமாயிருக்

1. உடன் பிறந்தவன்.

கின்ற அந்தக் குஹைக்குள் ஸ்ரீக்ருஷ்ணன் தானொருவன் மாத்ரமே நுழைந்தான். அந்தக் குஹைக்குள் ஸ்ரீக்ருஷ்ணன் குழந்தைக்கு விளையாட்டுக்கருவியாக ஏற்படுத்தி வைக்கப் பட்டிருக்கிற மேலான மணியைக் கண்டு அதைப் பறித்துக்கொண்டுபோக மனத்தில் நிச்சயித்துக் கொண்டு அந்தக் குழந்தையின் அருகாமையில் நின்றிருந்தான. என்றும் காணாத புதிய புருஷனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் வந்திருப்பதைக் கண்டு குழந்தையின் மாற்றாந்தாய் பயந்து முறையிட்டாள். பலிஷ்டர்களில் சிறந்த ஜாம்பவான் அதைக் கேட்டுக் கோபமுற்று விரைந்தோடி வந்தான். அவன் பகவானுடைய மஹிமையை அறியாமல் அவனைக் கேவலம ப்ராக்ருதபுருஷனாக நினைத்துக் கோபித்துத் தன்ஸ்வாமியாகிய அந்தப் பகவானோடு யுத்தஞ் செய்தான். மாம்ஸத்திற்காக இரண்டு பருந்துகள் சண்டை செய்வதுபோல, ஒருவரை யொருவர் ஜயிக்கவிரும்புகிற அவ்விருவரும் ஆயுதங்களாலும் கற்களாலும் மரங்களாலும் கைகளாலும் ஒருவரை யொருவர் அடித்து மிகவுங் கோரமாக [1]த்வந்த்வயுத்தஞ் செய்தார்கள். வஜ்ராயுதத்தின் அடிபோல் கடோரமாயிருக்கின்ற முஷ்டிகளால் ஒருவரோடொருவர் சண்டை செய்கின்ற அவ்விருவர்க்கும் அந்த த்வந்த்வயுத்தம் பகலுமிரவும் ஓயாமல் இருபத்தெட்டு நாட்கள் நடந்தது. அப்பால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய இடிபோன்ற முட்டியடிகளால் அங்கங்களும் மிகவும் உறுதியுள்ள ஸந்திபந்தங்களும் முறிந்து தளர்ந்து பலம் க்ஷீணித்து உடம்பெல்லாம் புழுங்கவும் பெற்று 'ஒருகாலும் என் பலம் க்ஷீணித்ததில்லை. ஆ! இப்பொழுது செத்தாற்போலாய்விட்டேன் இதென்ன!' என்று மிகவும் வியப்புற்று அப்பால் தனக்

1. இருவர் கலந்து செய்யும் சண்டை.

குள் விசாரித்து நிச்சயித்துக்கொண்டு அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து மொழிந்தான்.

ஜாம்பவான் சொல்லுகிறான்:—நீ ஸமஸ்தபூதங்களின் ப்ராணன் [1]ஓஜஸ்ஸு ஸஹஸ்ஸு பலம் இவற்றிற்கு நிர்வாஹகன்; ஜகத்காரணனை புராண புருஷன். நீ சேதனுசேதனரூபமான இவ்வுலகமாய் விரியுந்தன்மையன். உன் திறமை அளவற்றது. நீ ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தி, ஸர்வாந்தராத்மா. நீ மஹாவிஷ்ணு. இத்தகைய உன்னுடைய உண்மையை நான் அறிந்துகொண்டேன். உலகங்களைப் படைக்கின்ற மஹத்து முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள தத்வங்களையெல்லாம் நீயே படைக்கின்றனை. ஸ்ருஷ்டிக்கு விஷயமான அந்த மஹத்து முதலிய தத்வங்களுக்கு உபாதானகாரணமும் நீயே. (நீயே மஹத்து முதலிய தத்வங்களாய் விரிந்தனை.) எல்லாவற்றையும் தங்களுக்கு வசப்படுத்திக்கொண்டு நடக்குந் திறமையுள்ளவர்களையும் தன்வசப்படுத்திக்கொள்கின்ற காலமும் நீயே. ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாகித் தரித்துக்கொண்டிருப்பவனும் நீயே. நீ சேதனுசேதனங்களில் உட்புகுந்து நியமித்துக்கொண்டிருப்பினும் அவற்றின் தோஷங்கள் எவையும் தன்மேல் தீண்டப்பெறுமல் பரிசுத்தனுயிருப்பவன். எவன் சிறிது கோபித்துக் கடைக்கண்ணேக்குஞ் செய்கையில் ஸமுத்ரம் முதலிகளும் திமிங்கிலங்களும் கலங்கப்பெற்று வழிகொடுத்ததோ, எவன் தன்புகழ் நிரம்புவதற்காக ஸமுத்ரத்தில் அணைகட்டினனே, எவன் லங்கையை நீறுசெய்தானே, எவனுடைய பாணங்களால் அடியுண்டு ராவணனுடைய

1. ஓஜஸ்ஸு - ப்ரவ்ருத்திஸாமர்த்யம், அதாவது - முயற்சியின் திறமை. ஸஹஸ்ஸு - வேகம், பலம் - தாரணஸாமர்த்யம் - தரிக்குந்திறமை.

தலைகள் பூமியில் விழுந்தனவே, அப்பட்டிப்பட்ட பரம புருஷன் நீயேயென்று தெரிந்துகொண்டேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஜ்ஞானசக்த்யாதி குணங்கள் நிறைந்த மஹானுபாவனும் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாது காக்குந்தன்மையனும் தேவகியின்புதல்வனும் தாமரைக்கண்ணனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் அறிய வேண்டியவைகளில் முக்யனாகிய தன்னை உள்ளபடி அறிந்த ருக்ஷராஜனாகிய ஜாம்பவானை மங்களமான தன்ஹஸ்தத்தினால் தடவிக்கொடுத்து மிகுந்த மன இரக்கத்துடன் தன்பக்தனாகிய அவனைக் குறித்து மேக கர்ஜனம்போல் கம்பீரமான குரலுடன் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:— ருக்ஷராஜனே! நான் மணிக்காக இந்தக்குஹைக்கு வந்தேன். எனக்கு இந்த மணிநிமித்தமாக விணபவாதம் நேர்ந்திருக்கின்றது. நான் இந்த மணியைக் கொண்டு அதைப் போக்க விரும்புகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவானால் இங்ஙனம் மொழியப்பெற்ற அந்த ஜாம்பவான் ஜாமபவதியென்னும் தன்புதல்வியை அந்த மணியுடன் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு உபஹாரமாகக் கொடுத்தான். பக்தவத்ஸலனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கன்யாரத்னத்தினாலும் ரத்னஶ்ரேஷ்டமான ஸ்யமந்தகமணியாலும் மற்றும் பல மேலான ரத்னங்களாலும் பூஜிக்கப்பட்டு அந்த ஜாம்பவானுக்கு மீளவும் இந்த ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதலின்றி மஹாநந்தத்தை அனுபவிக்கையாகிற மேலான மோக்ஷத்தைக் கொடுத்தான். பட்டணத்து ஜனங்கள் குஹையின் த்வாரத்தில் பன்னிரண்டுதினங்கள் எதிர்பார்த்தும் ஸ்ரீக்ருஷ்ணன் திரும்பிவரக் காணாமல் வருந்திப் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். தேவகியும் ருக்மிணியும் வஸுதேவ

னும் நண்பர்களும் பந்துக்களும் குகைக்குள் நுழைந்த ஸ்ரீக்ருஷ்ணன் வெளிப்படவில்லையென்பதைக் கேட்டுச் சோகித்தார்கள். அங்ஙனம் துக்கித்திருக்கின்ற த்வாரகையிலுள்ளவர்கள் அனைவரும் ஸத்ராஜிதனைச் சபித்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனைப் பெறுதற்காக மஹாமாயையென்னும் துர்க்கையைப் பணிந்தார்கள். அவர்கள் துர்க்காதேவியைப் பணிந்து 'நீங்கள் சீக்ரத்தில் ஸ்ரீக்ருஷ்ணனைக் காண்பீர்கள்' என்று ஆசீர்வாதங்கள் செய்யப்பெற்றிருக்கையில், ஸ்ரீக்ருஷ்ணன் மணியைக்கொண்டு வருகையாகிற தன்ப்ரயோஜனம் கைகூடப்பெற்று ஜாம்பவதியென்னும் பார்யையுடன் அவர்களை மனக்களிப்புறச்செய்துகொண்டு வந்து தோன்றினான். உலகத்தில் பந்துக்கள் மரணம் அடைந்தவன் மீண்டு பிழைத்து வரப்பெறுவதுபோல, ஸ்ரீக்ருஷ்ணன் பார்யையுடன் கூடிக் கழுத்தில் மணியை அணிந்து வந்து சேரக்கண்ட த்வாரகையிலுள்ளவர்கள் அனைவரும் மஹோத்ஸவம் உண்டாகப் பெற்றார்கள். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஸத்ராஜிதனை வரவழைத்துச் சபையில் ராஜனாகிய உக்ரஸேனனுடைய ஸந்நிதானத்தில் மணி கிடைத்த விதத்தை மொழிந்து அவனிடம் அந்த மணியைக் கொடுத்துவிட்டான். அந்த ஸத்ராஜிதனும் மணியை வாங்கிக்கொண்டு மிகவும் வெட்கமுற்றுத் தலையை வணக்கி ஸ்ரீக்ருஷ்ணன் மணியை வேண்டினதற்குக் கொடாமையும் அவன்மேல் வீண்பழி சுமத்தினதுமாகிய தான் செய்த பாபத்தினால் பரிதபித்துக்கொண்டே தன்க்ருஹத்திற்குப் போனான். அவன் அந்தத் தன்பாபத்தையே சிந்தித்துப் பலிஷ்டனாகிய பகவானோடு விரோதம் நேர்ந்ததைப்பற்றி வியாகுலமுற்று 'என்னுடைய அபராதத்தை எப்படி போக்கிக்கொள்வேன்? ஸ்ரீக்ருஷ்ணன் என்

னிடத்தில் எப்படி அருள்புரிவான்? என்ன கார்யஞ் செய்தால் எனக்கு க்ஷேமம் உண்டாகும்? எப்படி செய்தால் ஜனங்கள் என்னைப் பழியாதிருப்பார்கள்? மேல் வரும் நன்மைதீமைகளைப்பற்றி ஆலோசனையற்றவனும் மந்த புத்தியனும் கேவலம் பணத்தில் பேராசை யுற்றவனுமாகிய என்னைச் சுடவேண்டும். ஸ்த்ரீகளில் சிறந்த என் புதல்வியையும் இந்த ஸ்யமந்தகரத்நத்தையும் ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுத்து விடுகிறேன். இது தான் நல்ல உபாயம். இல்லாத பக்ஷத்தில் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மனத்தில் ஸமாதானம் உண்டாகாது' என்று புத்தியில் ஆலோசித்து நிச்சயித்து மங்களஸ்வபாவமுடையவளும் பேரழகியுமாகிய தன்புதல்வியையும் ரத்னத்தையும் தானே கொண்டுபோய் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஸமர்ப்பித்தான். பலமன்னவர்களால் வேண்டப்பெற்றவளும் ஒழுக்கம் அழகு மேன்மை முதலிய குணங்கள் நிறைந்தவளுமாகிய அந்த ஸத்யபாமையை ஸ்ரீக்ருஷ்ணன் விதிப்படி விவாஹஞ் செய்துகொண்டான். அவன் மணியைக் கொடுக்க வந்த ஸத்ராஜிதனைப் பார்த்து 'மன்னவனே! ஸத்ராஜித! மணியை வாங்கிக்கொள்ள மாட்டேன். அது தேவபக்தனாகிய உனக்கே இருக்கட்டும். அதனால் விளைகிற துர்ப்பிக்ஷசாந்தி முதலிய பயன்களெல்லாம் எங்களைச் சேர்ந்தவைகளே (மற்றும், பிள்ளையில்லாத உனக்கு வரும் பணமெல்லாம் எங்களுடையதே) என்று மொழிந்து விட்டான். ஐம்பத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

(சததன்வன் ஸத்ராஜிதனைக் கொன்று மணியைக் கொண்டுபோய் அக்ரூரனிடம் வைத்துப் பயந்தோட ஸ்ரீக்ருஷ்ணன் அவனைத் தொடர்ந்து வதித்தும் அவனிடத்தில் மணியைக் காணாமல் அக்ரூரனிடம் இருப்பதைக் கண்டுபிடித்து அவனை வரவழைத்து மணியைப் பந்துக்களுக்குக் காட்டி அதை அவனுக்கே கொடுத்தனுப்புதல்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்களும் குந்தியும் அரக்குமாளிகையில் தஹிக்கப்பட்டார்களென்று கேள்விப்பட்டு அவர்கள் ஸுரங்கவழியால் தப்பித்துக்கொண்டார்களென்கிற உண்மையை அறிந்தவனாயினும் ஒன்றுமறியாதவன் போல் தங்கள் குலத்தில் ஏற்பட்ட வழக்கத்தின்படி நடத்தமுயன்று பலராமனுடன் குருதேசத்திற்குச் சென்றான். அந்த ராமக்ருஷ்ணர்கள் தங்களோடொத்த மனவருத்தமுடையவர்களாகிய பீஷ்மர் க்ருபர் விதுரர் காந்தாரி த்ரோணாசார்யர் இவர்களைக் கிட்டி 'ஆ! என்ன கஷ்டம் நேர்ந்தது!' என்று உபசாரவார்த்தைகளால் ஸமாதானப்படுத்தினார்கள். ராஜனே! அப்பொழுது அக்ரூரனும் க்ருதவர்மனும் 'இதுவே ஸமயம்' என்று தெரிந்துகொண்டு சததன்வனைப் பார்த்து மொழிந்தார்கள்.

அக்ரூர க்ருதவர்மர்கள் சொல்லுகிறார்கள்:—நீ இப்பொழுது ஸத்ராஜிதனிடத்தினின்று ஏன் மணியைப் பிடுங்கிக்கொள்ளலாகாது. இந்த ஸத்ராஜிதன் நமக்குத் தன்புதல்வியைக் கொடுக்கிறேனென்று சொல்லி நம்மை அனாதரித்து ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுத்தானல்லவா? ஆனால் பிழைத்திருக்கும்வரையில் மணியை எப்படி

கொடுப்பானென்கிருயோ? அவன் தன்ப்ராதாவை ஏன் பின் செல்லமாட்டான். (ஸிம்ஹம் அவன்ப்ராதாவைக் கொன்றாற்போல் நீ அவனைக் கொன்று ஏன் மணியைப் பெறலாகாது?)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சததன்வன் அக்ரூரக்ருதவர்மர்களால் மதி கலங்கும்படி போதிக்கப்பெற்று மிகவும் பாபிஷ்டனும் ஆயுள் க்ஷீணிக்கப் பெற்றவனுமாகையால் மணியிடத்தில் பேராசைகொண்டு, படுத்துறங்குகின்ற ஸத்ராஜிதனை வதித்தான். ஸ்த்ரீகள் அநாதைகள்போலக் கூக்குரலிட்டுப் புலம்பிக் கொண்டிருக்கையில் பசுக்களை ஹிம்ஸிப்பவன் பசுவைக் கொல்லுவது போல அவன் ஸத்ராஜிதனைக் கொன்று மணியை எடுத்துக் கொண்டு போனான். அப்பொழுது ஸத்யபாமையும் தந்தை மாண்டதைக் கண்டு சோகமுற்று இடையிடையில் மூர்ச்சை அடைந்து 'அப்ப! அப்ப! ஐயோ நான் பாழானேன்' என்று புலம்பினாள். அப்பால் அந்த ஸத்யபாமை மரணம் அடைந்த தன்தந்தையை எண்ணெய்க்கடாஹத்தில் வைத்து ஹஸ்தினபுரத்திற்குச் சென்று அங்கு முன்னமே இந்தச்செய்தியை அறிந்தும் அறியாதவன்போன்றிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தன் தந்தையைச் சததன்வன்கொன்ற கதையைச் சொன்னாள். ராஜனே! ஸர்வேஶ்வரர்களாகிய ராமக்ருஷ்ணர்கள் அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு மானிடர்களின் நிலைமையை அனுஸரித்துச் சோகத்தினால் கண்ணுங் கண்ணீருமாகி 'ஆ! நமக்குப் பெரிய ஆபத்து நேர்ந்ததே!' என்று புலம்பினார்கள். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் ஸத்யபாமையோடும் தமையனோடும் ஹஸ்தினபுரத்தினின்று புறப்பட்டு த்வாரகைக்கு வந்து சததன்வனைக்

கொன்று மணியைப் பறிக்கத் தொடங்கினான். அந்தச் சததன்வனும் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய முயற்சியைக் கேள்விப்பட்டுப் பயந்து ப்ராணன்களைப் பாதுகாத்துக் கொள்ள விரும்பி க்ருதவர்மனைத் தனக்கு ஸஹாயமாயிருக்கும்படி வேண்டினான். அவன் சததன்வனைக் குறித்து மொழிந்தான்.

க்ருதவர்மன் சொல்லுகிறான்:—ஜகதீஸ்வரர்களாகிய ராமக்ருஷ்ணர்களுக்கு நான் ப்ரதிகூலஞ் செய்யமாட்டேன். எவன் தான் அவர்களுக்கு அபராதஞ் செய்து க்ஷேமம் பெறுவான்? கம்ஸன் இந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் த்வேஷத்தினாலல்லவோ தானும் தன்னைச் சேர்ந்தவர்களுமாகச் சேர்ந்து ராஜ்யஸம்பத்தையும் ப்ராணன்களையும் இழந்தான்? ஜராஸந்தன் இவனை எதிர்த்துப் பதினேழுதடவைகள் யுத்தத்தில் தோல்வி அடைந்து சரீரமாத்ரமே மிகப்பெற்றுப் போனானல்லவா? (ஆகையால் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு விரோதமாக உனக்கு ஸஹாயஞ் செய்யமாட்டேன்).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் க்ருதவர்மனால் திரஸ்கரிக்கப்பட்ட சததன்வன் அக்ரூரனைத் தனக்கு ஸஹாயமாயிருக்கும்படி வேண்டினான். அவனும் சததன்வனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

அக்ரூரன் சொல்லுகிறான்:—ஜகதீஸ்வரர்களான ராமக்ருஷ்ணர்களின் பலத்தை அறிந்தவன் எவன் தான் அவர்களோடு விரோதித்துக் கொள்வான்? அவன் பிறவி முதலிய விகாரங்களற்றவன். அவன் விளையாட்டிற்காக இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் படைப்பதும் காப்பதும் அழிப்பதுமாயிருக்கின்றான். ஜனங்கள் அவனுடைய மாயையினால் மோஹித்து அவனுடைய ஜகத்ஸ்ருஷ்டி

முதலிய லீலையை அறிகிறதில்லை. இவன் ஏழுவயதுள்ள பாலனயிருக்கும்பொழுது சிறுவன நாய்க்குடையைப் பிடுங்கிக் கையில் ஏந்திக்கொண்டிருப்பதுபோலக் கோவர்த்தனபர்வதத்தை ஒற்றைக்கையினல் பிடுங்கி அவலீலையாக ஏந்திக்கொண்டிருந்தான். ஷாட்குண்ய பூர்ணனும் அமானுஷமான செயல்களை யுடையவனும் அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவனும் ஜகத்காரணனும் ஸ்வரூபத்தினலும் ஸ்வபாவத்தினலும் விகாரமற்றவனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நாம் நமஸ்காரஞ் செய்யவேண்டுமேயன்றி மற்றொன்றும் செய்யமுடியாது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அக்ரூரனலும் இங்ஙனம் திரஸ்கரிக்கப்பட்ட அந்தச் சததன்வன ஸ்யமந்தகமஹாமணியை அக்ரூரனிடம் வைத்து, ஒருதினத்தில் நூறு யோஜனை தூரம் நடக்க வல்ல குதிரையினமேல் ஏறிக்கொண்டு நூறுயோஜனை தூரத்திற்கு அப்புறத்திலுள்ள தேசம் போய்ச் சேர்ந்தான. ராஜனே! அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ண ராமர்கள் கருடக்கொடியுடைய ரதத்தினமேல் ஏறிக்கொண்டு மிகுந்த வேகமுடைய குதிரைகளால் வழியைக் கடந்து தங்கள் குருவாகிய ஸத்ராஜித்தனுக்கு த்ரோஹஞ் செய்த சததன்வனைத் தொடர்ந்து சென்றார்கள். சததன்வன் நூறுயோஜனைக்குமேல் போக முடியாமையால் மிதிலைப்புரியின உபவனத்தில் ஓய்ந்து விழுந்த தன் குதிரையைத் துறந்து பயந்து பாதங்களாலேயே நடந்தோடினன. இங்ஙனம் ஓடுகின்ற அந்தச் சததன்வனை ஸ்ரீக்ருஷ்ணனும் கோபத்தினல் தொடர்ந்தோடினன். கேவலம் பாதங்களால் நடந்தோடுகின்ற அவனைத் தானும் பாதங்களால் நடந்து தொடர்கின்ற ஸ்ரீக்ருஷ்ணன் கூரிய நுனியுடைய சக்ரத்தினல்

அவன் தலையை அறுத்து அவனுடைய அரைத்துணி மேல்துணிகளில் மணியைத் தேடினான். அக்ரூரனிடத்தில் மணி இருக்கிறதென்று தெரியுமாயினும் பலராமனுடைய வசனத்தை ஏற்றுக்கொண்டு அங்ஙனம் அறியாதவன்போல் தேடினான். ஸ்ரீக்ருஷ்ணன் தேடியும் மணி அகப்படாமல் தமையனிடம் வந்து 'சததன்வனை வீணுக்கு வதித்தோமன்றி அவனிடத்தில் மணி அகப்படவில்லை' என்றான். பலராமனும் அதைக் கேட்டுச் 'சததன்வன் நிச்சயமாய் மணியை வேறொரு புருஷனிடத்தில் வைத்திருக்கிறான். ஆகையால் பட்டணத்திற்குச் சென்று அதைத் தேடுவாயாக. நான் எனக்கு மிகவும் நண்பனாகிய வைதேஹராஜனைப் பார்க்க விரும்புகிறேன்' என்று மொழிந்து, ராஜனே! மிதிலைக்குச் சென்றான். மிதிலைக்கு நாதனாகிய வைதேஹன் அந்தப் பலராமனைக் கண்டு விரைவுடன் எழுந்து மனக்களிப்புற்றுப் பூஜிக்கத்தகுந்தவனாகிய அப்பலராமனைப் பூஜைக்குரிய வஸ்துக்களால் விதிப்படி பூஜித்தான். ப்ரபுவாகிய பலராமன் மிதிலையில் சில வர்ஷங்கள் வஸித்திருந்தான். அப்பொழுது த்ருதராஷ்ட்ரனுடைய பிள்ளையாகிய துர்யோதனன் மிதிலைக்கு வந்து மஹானுபாவனாகிய ஜனக மன்னவனால் வெகுமதிக்கப்பெற்றுப் பலராமனிடத்தில் கதாயுத்தத்தை அப்யஸித்தான். ஸமர்த்தனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் த்வாரகைக்குச் சென்று அன்பிற்கிடமான பார்யையாகிய ஸத்யபாமைக்கு ப்ரியஞ்செய்ய விரும்பிச் சததன்வனைக் கொன்றதையும் தேடிப்பார்த்தும் அவனிடத்தில் மணி அகப்படாததையும் அவளுக்குச் சொன்னான். அப்பால் அந்தப் பகவான் நண்பர்களோடு கூடிச் சததன்வனால் வதிக்கப்பட்ட பந்துவாகிய (மாமனாகிய) ஸத்ராஜிதனுக்குப் பரலோகத்து நன்மைக்கு ஹேதுவா

கச் செய்யவேண்டிய கார்யங்களை யெல்லாம் செய்வித்தான். அக்ரூரனும் க்ருதவர்மனும் சததன்வனுடைய வதத்தைக் கேள்விப்பட்டுச் சததன்வனை மணியைப் பறிக்கும்படி தூண்டினவர்களாகையால் நமக்கு என்ன வருமோவென்று பயந்து த்வாரகையினின்று புறப்பட்டுப்போனார்கள். 'அக்ரூரன் வெளிப்பட்டுப் போகையில் த்வாரகையிலுள்ள ஜனங்களுக்குச் சரீரவியாதிகளும் மனோவியாதிகளுமாகிய ஆத்யாத்மிகதாபங்களும் ஆதிதைவிக ஆதிபௌதிகதாபங்களும் அடிக்கடி உண்டாய்க் கொண்டிருந்தன. ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணன் அக்ரூரனை வரவழைத்தான்' என்று சில ரிஷிகள் சொல்லுகிறார்கள். அவர்கள் முன்பு சொல்லப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையை மறந்தார்கள்போலும். அந்த ஸ்ரீக்ருஷ்ணனை மனத்தில் த்யானஞ்செய்கிற முனிவர்கள் எங்கு வஸிக்கின்றார்களோ, அவ்விடத்தில் எவ்வகைக் கெடுதிகளும் உண்டாகிறதில்லையாயின், அம்முனிவர்களுக்கும் ஆதாரனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் நேரே வஸித்திருக்குமிடத்தில் ஜனங்களுக்கு ஆத்யாத்மிகம் முதலிய தாபங்கள் உண்டாயினவென்பது எங்ஙனம் பொருந்தும்? 'முன்பு காசிதேசத்தில் பர்ஜன்யன் மழை பெய்யாதிருக்கையில் அந்தத் தேசாதிபதியான மன்னவன் அவ்விடம் வந்த ஶ்வபல்கனுக்குக் காந்தினியென்னும் தன்புதல்வியைக் கொடுத்தான். அப்பால் அத்தேசத்தில் பர்ஜன்யன் மழைபெய்தான். அவனுடைய பிள்ளையாகிய அக்ரூரன் அவனோடொத்த மஹிமையுடையவன். அவன் எங்கெங்கு வாஸஞ் செய்கிறானோ அவ்வவ்விடங்களில் மழை பெய்கின்றது. அங்கு வியாதிகளாவது அகாலமரணங்களாவது உண்டாகிறதில்லை. என்று பெரியோர்கள் மொழிவதைக் கேட்டு ஸ்ரீக்ருஷ்ணன் அக்ரூரனை வர

வழைத்தானென்று சிலர் சொல்லுகிறார்கள். இது வாஸ்தவமே. ஆயினும் அக்ரூரன் இருப்பது மாத்ரமே மழை பெய்வதற்கும் கெடுதிகள் உண்டாகாமைக்கும் காரணமன்று. மணி இருப்பதும் அதற்குக் காரணமாகவேண்டும். இங்ஙனம் அக்ரூரன் தேசாந்தரம் போயிருக்கையில், ஸ்ரீக்ருஷ்ணன் தூதர்களை அனுப்பி அவனை வரவழைத்துப் பூஜித்து யோகக்ஷேமங்கள் விசாரித்து மனத்திற்கினிய கதைகளைச் சொல்லி அறிஞர்களின் மனக்கருத்தையும் அறிந்தவனாகையால் புன்னகை செய்துகொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—தானபதீ! சததன்வன் செல்வப்பெருக்குடைய ஸ்யமந்தக மணியை உன்னிடத்தில் வைத்தான். அது இப்பொழுது உன்னிடத்தில் இருக்கின்றது. இது எனக்கு முன்னமே தெரியும். ஸத்ராஜிதனுக்குப் பிள்ளை இல்லையாகையால் அவனுடைய பெண்வயிற்றில் பிறந்த பேரன்மார்கள் அவனுக்கு எள்ளுஞ் ஜலமும் பிண்டமும் கொடுத்துக் கடனைத் தீர்த்து மிகுந்த பணத்தை யெல்லாம் எடுத்துக் கொள்ளவேண்டியவர்கள். ஆயினும் அந்த மணி உன்னிடத்திலேயே இருக்கட்டும். அது மற்றவர்களால் தரிக்கமுடியாது. நீ நல்லொழுக்கமுடையவனாகையால் உன்னிடத்தில்தான் இருக்கவேண்டும். ஆனால் தமையனாகிய பலராமன் மணியை நான் ஒளித்துவிட்டேனென்று நினைக்கிறான். நான் எவ்வளவு சொல்லினும் மணிவிஷயத்தில் என்னை நன்றாக நம்பமாட்டேனென்கிறான். மஹாபாகனே! ஆகையால் உன்னிடத்திலிருக்கின்ற மணியைக் காட்டிப் பந்துக்களுக்கு என்னிடத்தி லுள்ள ஸந்தேஹம் தெளியும்படி செய்வாயாக. இப்

பொழுது உனக்கு ஸ்வர்ணமயமான வேதிகளுடன்கூடின யாகங்கள் பலவும் ஓயாமல் நடக்கின்றன வல்லவா? (அது மணியின் மஹிமையே. ஆகையால் என்னிடத்தில் மணி இல்லையென்று சொல்லாமல் அதை எடுத்துக் காண்பிப்பாயாக.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் நல்வார்த்தைகளால் மனத்தில் உறுத்தும்படி உரைக்கப்பட்ட அக்ரூரன் வஸ்த்ரத்தில் மறைக்கப்பட்டிருப்பதும் ஸூர்யனோடொத்த ஒளியுடையதுமாகிய ஸ்யமந்தகமணியை எடுத்து ஸ்ரீக்ருஷ்ணனிடம் கொடுத்தான். ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ஸ்யமந்தகமணியை வாங்கிப் பந்துக்களுக்குக் காட்டித்தன்மேல் வந்த பழியைப் போக்கித் தன் கையால் மீளவும் அந்த மணியை அக்ரூரனுக்கே திருப்பிக்கொடுத்துவிட்டான். இந்த ஸ்யமந்தகமணியின் உபாக்யானம் ஷாட்குண்யபூர்ணனும் ஸர்வேஶ்வரனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் வீரச்செயலை உட்கொண்டிருக்கின்றது. (அவனுடைய மஹிமை இதில் நன்கு வெளியாகின்றது). இது, சொல்லுகிறவர்கள் கேட்கிறவர்கள் நினைக்கிறவர்கள் ஆகிய இம்மூவர்களுடைய பாபத்தையும் போக்கும்; ஸமஸ்தமங்களங்களையும் விளைக்கும். இத்தகைய இந்த உபாக்யானத்தைக் கேட்கிறவன் சொல்லுகிறவன் நினைக்கிறவன் ஆகிய மூவரும் அபகீர்த்தியையும் பாபத்தையும் போக்கி மோக்ஷத்திற்கு ஹேதுவான சாந்தியைப் பெறுவார்கள். ஐம்பத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீக்ருஷ்ணன் காளிந்தி முதலிய ஐந்து பேர்களை மணம் புரிதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஒருகால் ஸ்ரீக்ருஷ்ணன், (பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் தஹிக்கப்பட்டார்

களென்று கேள்விப்பட்டிருந்தும் த்ருபதனுடைய க்ருஹத்தில் எல்லோர்க்கும் தென்பட்டார்களாகையால் அது பொய்யென்றும் அவர்கள் க்ஷேமமாயிருக்கிறார்களென்றும் தெரிந்து கொண்டு) அப்பாண்டவர்களைப் பார்ப்பதற்காக ஸாத்யகி முதலிய யாதவர்களால் சூழப்பட்டு இந்த்ரப்ரஸ்தத்திற்குப் போனான். ப்ருதையென்கிற குந்தியின் பிள்ளைகளும் வீரர்களுமாகிய அப்பாண்டவர்கள் ஸர்வேஸ்வரனும் போகமோக்ஷங்களைக் கொடுப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வரக்கண்டு இந்த்ரியங்கள் போய் வந்த முக்யப்ராணனை எதிர்கொள்வதுபோல எல்லோரும் எழுந்து அவனை எதிர்கொண்டார்கள். அந்தப் பாண்டவர்கள் ப்ரீதியுடன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை ஆலிங்கனஞ் செய்து அவனுடைய அங்கத்தின் ஸ்பர்சத்தினால் பாபங்களெல்லாம் தொலையப்பெற்று அநுராகம நிறைந்த புன்னகையோடு கூடின அவன் முகத்தைக் கண்டு ஸந்தோஷம் அடைந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் யுதிஷ்டிரனுக்கும் பீமனுக்கும் பாதவந்தனஞ் செய்து அர்ஜுனனை ஆலிங்கனஞ் செய்து நகுலஸஹதேவர்களால் வந்தனஞ் செய்யப்பெற்றுச் சிறந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கையில் புதிதாக மணம்புரிந்தவளும் நிந்தைக்கிடமாகாதவளுமாகிய த்ரௌபதி சிறிது வெட்கத்துடன் மெல்லமெல்ல வந்து ஸ்ரீக்ருஷ்ணனுக்கு வந்தனஞ் செய்தாள். அங்ஙனமே ஸாத்யகியும் பார்த்தர்களால் வெகுமதித்து வந்தனஞ்செய்யப்பெற்று ஆஸனத்தில் உட்கார்ந்தான். கூட வந்த மற்ற யாதவர்களும் அங்ஙனமே பார்த்தர்களால் பூஜிக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணனைச் சுற்றி உட்கார்ந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் ப்ருதையிடஞ் சென்று வந்தனஞ் செய்து ஸ்னேஹத்தின் மிகுதியால் கண்ணுங் கண்ணீருமாயிருக்கின்ற அவளால்

ஆலிங்கனஞ் செய்து பந்துக்களின் க்ஷேமமும் நன்கு விசாரிக்கப் பெற்றுத் தந்தையின் உடன்பிறந்தவளும் நாட்டுப்பெண்ணோடு கூடியவளுமாகிய அவளைத் தானும் க்ஷேமம் விசாரித்தான். அந்த ப்ருதை ப்ரேமத்தின் மிகுதியால் தழதழத்துக் கண்டம் தடைபடப்பெற்று நீர் நிறைந்த கண்களுடன் தனக்கு நேர்ந்த பலவகைவரு த்தங்களையும் நினைத்துக்கொண்டு தன்காட்சி மாத் ரத்தினால் வருத்தங்களையெல்லாந் தீர்க்கவல்லனாகிய, அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து மொழிந்தாள்.

ப்ருதை சொல்லுகிறாள்:—ஸ்ரீக்ருஷ்ணா! நீ பந்துக்க ளாகிய எங்களை நினைத்து எப்பொழுது என்ப்ராதாவா கிய அக்ரூரனை எங்களிடம் அனுப்பினையோ, அப் பொழுதே எங்களுக்கு க்ஷேமம் உண்டாயிற்று. அப் பொழுதே நாங்கள் உன்னால் நாதனுடையவர்களாகச் செய்யப்பட்டோம். ஜகத்திற்கெல்லாம் நண்பனும் அந்த ராத்மாவுமாகிய உனக்குத் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பேதபுத்தி கிடையாது. ஆயினும் உன்னை நினைக்கின்ற உன்பக்தர்களுடைய ஹ்ருதயத்தில் இருந் துகொண்டு ஸர்வகாலமும் அவர்களுடைய வருத்தங் களைப் போக்குகின்றனை.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—ஜகதீச! நாங்கள் என்ன புண்யஞ் செய்தோமோ? எனக்குத் தெரியவில்லை. ஏனென்றால், யோகேஸ்வரர்களுக்குங்கூடக் காணமுடி யாத நீ சப்தாதிவிஷயங்களில் ஆழ்ந்த கெடுமனமுடைய எங்களுக்குப் புலப்பட்டனையல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் மொழிகின்ற யுதிஷ்டிரமன்னவனால் வேண்டப்பெற்று (மிகவும் அழகியதான தன்னுருவத்தினால்) இந்த்ரப்ரஸ்

தத்திலுள்ளவர்களின் நேத்ரங்களுக்கு மஹாநந்தத்தை விளைத்துக்கொண்டு மழைக்காலம் நான்கு மாதங்களும் ஸுகமாக அவ்விடத்தில் வஸித்திருந்தான். அப்பொழுது ஒருகால் சத்ருவீரர்களை அழிக்குந்தன்மையுள்ள அர்ஜுனன் வானரத்வஜமுடைய ரதத்தில் ஏறிக்கொண்டு காண்டீவமென்னும் தனுஸ்ஸையும் அக்ஷயமான பாணங்கள் அமைந்த அம்பறாத்தூணிகளையும் எடுத்துக்கொண்டு கவசம் பூண்டு ஸ்ரீக்ருஷ்ணனுடன் கூடி விளையாட விரும்பி ஸர்ப்பங்களும் யானைகளும் துஷ்டஜந்துக்களும் மிருகங்களும் நிறைந்து ஜனஸஞ்சாரமற்றதுமாகிய வனத்திற்குள் நுழைந்தான். அவ்வர்ஜுனன் அங்குக் கூருள்ள பாணங்களால் புலிகளையும் பன்றிகளையும் கிடாக்களையும் சரபம் கவயம் கட்கம் என்னும் மிருகங்களையும் ஸாதாரணமான மான்களையும் முயல்களையும் முள்ளம்பன்றிகளையும் அடித்தான். அப்பொழுது பர்வம் நேர்ந்திருந்தமையால் அக்காலத்தில் செய்யவேண்டிய வைதிகச்செயலை நிறைவேற்றும்பொருட்டு அவற்றில் பரிசுத்தமான ம்ருகங்களை ராஜனாகிய யுதிஷ்டிரனிடம் பணியாளர்கள் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அப்பால் பசிதாஹங்களால் இளைப்புற்ற அர்ஜுனன் யமுனாநதிக்குச் சென்றான். மஹாரதிகர்களான க்ருஷ்ணார்ஜுனர்களிருவரும் அங்கு ஸ்நானஞ்செய்து நிர்மலமான அந்த யமுனையின் ஜலத்தைப் பருகி அவ்விடத்தில் உலாவிக்கொண்டிருப்பவளும் அழகிய கண்களுடையவளுமாகிய ஒரு கன்னிகையைக் கண்டார்கள். அர்ஜுனன் தன் ஸ்னேஹிதனாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் அனுப்பப்பட்டுச் சிறந்த நிதம்பமுடையவளும் அழகிய பற்களும் அழகிய முகமும் அமைந்த மடந்தையர்களில் சிறந்தவளுமாகிய அந்தக் கன்னிகையிடம் சென்று வினவினான்.

அர்ஜுனன் சொல்லுகிறான்:-பெண்ணே! நீ யாவள்? யாருடையவள்? அழகிய இடையின் பின்புற முடைய வளே! நீ எங்கிருந்து இவ்விடம் வந்தனை? நீ இவ்விடத்தில் என்ன செய்ய விரும்புகின்றனை? பெண்ணே! நல்லியற்கையுடையவளே! கணவனை விரும்புங் கன்னிகை போல எனக்குத் தோற்றுகின்றனை. இதை எனக்குச் சொல்வாயாக.

காளிந்தி சொல்லுகிறாள்:—நான் தேவதைகளில் சேர்ந்த ஸூர்யனுடைய புதல்வி. நான் வரிக்கத்தகுந்தவனும் வரங்களைக்கொடுப்பவனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவைக் கணவனாகப் பெற விரும்பிப் பெரிய தவம் புரிந்திருக்கின்றேன். வீரனே! ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகிய அம்மஹாவிஷ்ணுவைத் தவிர மற்றவனைப் பதியாக வரிக்கமாட்டேன். அநாதர்களுக்கு ஆதாரனும் போக மோக்ஷங்களைக் கொடுப்பவனும், ஷாட்குண்யபூர்ணனுமாகிய அம்மஹாவிஷ்ணு என்விஷயத்தில் ஸந்தோஷம் அடைவானாக (எனக்கு அருள்புரிவானாக.) நான் காளிந்தியென்று பெயர் பெற்றவள். என்தந்தை எனக்கு இந்த யமுனாஜலத்தில் வாஸஞ்செய்ய க்ருஹத்தை நிர்மித்துக் கொடுத்திருக்கிறான். நான் தன்பக்தர்களைக் கைவிடாத மஹானுபாவனாகிய அம்மஹாவிஷ்ணுவின் காட்சி கிடைக்கும் வரையில் இங்கு வஸித்திருப்பேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—அதைக் கேட்ட அவ்வர்ஜுனனும் ஸ்ரீக்ருஷ்ணனிடம் வந்து அதை அப்படியே மொழிய அதை முதலிலேயே அறிந்த அம்மஹானுபாவனும் அப்பெண்மணியை ரதத்தில் ஏற்றிக்கொண்டு தர்மபுத்ரனிடம் வந்தான். ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்களால் வேண்டப்பெற்று விஸ்வகர்மாவைக் கொண்டு மிகவும் அற்புதமாயிருப்பதும் அழகியதுமான ஒருநகரத்

தைச செய்வித்தான். பந்துக்களுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி அவ்விடத்தில் வஸித்துக்கொண்டிருக்கிற அந்த ஸ்ரீக்ருஷ்ணன் காண்டவமென்னும் அரண்யத்தை அக்னிகளுக்குக் கொடுக்கவிரும்பி அர்ஜுனனுக்கு ஸாரதியாயிருந்தான். மன்னவனே! அவ்வக்னி காண்டவவனத்தினால் த்ருப்தி அடைந்து அர்ஜுனனுக்குத் தனுஸ்ஸையும் வெளுத்த குதிரைகளையும் ரதத்தையும் அக்ஷயமான அம்புறாத் தூணிகளையும் ஆயுதம் பிடித்தவர்கள் அனைவராலும் பிளக்கமுடியாத அபேத்யகவசத்தையும் கொடுத்தான். அப்பொழுது அக்னியிடத்தினின்று விடுவிக்கப்பட்ட மயனென்னும் அஸுரன் தன்ஸ்னேஹிதனாகிய அவ்வர்ஜுனனுக்கு அற்புதமான ஒரு ஸபையை உடஹாரமாகக் கொடுத்தான். துர்யோதனன் அச்சபையில்தான் ஜலத்தைத் தரையென்றும் தரையை ஜலமென்றும் ப்ரமித்தான். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜுனனால் அனுமதி கொடுக்கப்பெற்று நண்பர்களாலும் அனுமோதனஞ் செய்யப்பெற்று ஸாத்யகி முதலிய யாதவர்களால் சூழப்பட்டு மீண்டு த்வாரகைக்கு வந்தான். அப்பால் பரமமங்களனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஞாயர் திங்கள் முதலிய க்ரஹங்களின் பலமுடையதும் மிகவும் புண்யமான ருதுவும் நக்ஷத்ரமும் அமைந்து மேன்மையுடையதுமாகிய நல்ல முஹூர்த்தத்தில் த்வாரகையிலுள்ள தன் ப்ரஜைகளுக்கு மஹானந்தத்தை விளைத்துக்கொண்டு காளிந்தியை மணம்புரிந்தான். விந்தனென்றும அனுவிந்தனென்றும் பெயருடைய அவந்தி மன்னவர்கள் துர்யோதனனுக்கு உட்பட்டு ஸ்வயம்வரத்தில் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனவிருப்பமுடைய தன்பகினியைத் தடுத்தார்கள். ராஜனே! ஸ்ரீக்ருஷ்ணன் தனது தந்தையின் உடன்பிறந்தவளாகிய ராஜாதிதேவியின புதல்வியும் மித்ரவிந்தை

யென்னும் பெயருடையவளுமாகிய அப்பெண்மணியைப் பல ராஜாக்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் பலாத்காரமாகப் பறித்துக்கொண்டு போனான். கோஸலதேசத்தில் நக்னஜித்தென்னும் பெயருடைய மிகவும் தர்மிஷ்டனாகிய ஒரு மன்னவன் இருந்தான். அவனுக்கு ஸத்யையென்னும் பெயருடைய ஒருபுதல்வி இருந்தாள். அவள் மிகுந்த ஒளியுடையவள். மன்னவனே! அவள் நாக்னஜிதியென்றும் வழங்கி வந்தாள். (அம்மன்னவன் அப்பெண்மணியை மணம் புரிவதற்குப் பந்தயமாக ஏழு வ்ருஷப எருதுகளை வெல்லவேண்டுமென்று ஏற்படுத்தியிருந்தான்). அவை மிகவும் துஷ்டத்தனமுடையவை. அவை வீரர்களின் நாற்றத்தையுங்கூடப் பொறுக்கமாட்டா; ஒருவராலும் வெல்ல முடியாதவை; கூரானகொம்புடையவை. மன்னவர்கள் அனைவரும் அந்த வ்ருஷபங்களை வெல்லாமல் அவளை மணம் புரிய முடியாதிருந்தார்கள். யாதவர்களுக்கு ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் வ்ருஷபங்களை வென்றவனுக்குத்தான் அப்பெண்மணி கிடைப்பாளென்பதைக் கேள்விப்பட்டுப் பெரிய ஸைன்யத்தினால் சூழப்பட்டுக் கோஸலதேசத்தின் முக்யபட்டணமாகிய அயோத்யைக்குச் சென்றான். கோஸலதேசாதிபதியாகிய அந்த நக்னஜித்துமன்னவன் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்கொண்டு ஆஸனம் அளித்து மேலான பூஜையினால் பூஜித்து அவனால் தானும் அபிநந்தனஞ் செய்யப்பெற்று இங்ஙனம் மொழிந்தான். அம்மன்னவனுடைய கன்னிகையாகிய ஸத்யையும் தன்மனத்திற்கினிய வரனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு நாதனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வந்திருப்பதைக் கண்டு 'இவனே எனக்குக் கணவனாவானாக. நான்உண்மையில் வ்ரதங்களை அநுஷ்டித்திருப்பேனாயின், என் விருப்பம் விக்னமின்றி நிறை

வேறும்படிக்குக் கடவுள் அருள்புரிவானாக' என்று விரு ப்பமுற்றிருந்தாள். அம்மன்னவன் நன்கு பூஜிக்கப்பட்ட அந்தப் பகவானைக் குறித்து இங்ஙனம் மொழிந் தான்.

மன்னவன் சொல்லுகிறான்:—ஓ நாராயணனே! ஜகத்திற்கெல்லாம் நாதனே! ஆத்மாநந்தத்தினால் நிறை வாளனாயிருக்கின்ற உனக்கு மிகவும் அற்பனாகிய நான் என்ன செய்யப்போகிறேனோ? நான் உனக்கு எவ்வித ப்ரிய த்தையுஞ் செய்ய வல்லனல்லேன். நான் உனக்குக் கிங் கரன். ஆகையால் என்னை ஏவிக் கார்யங்கொள்வாயாக. ப்ரஹ்மதேவனும் ருத்ரனும் மற்றுமுள்ள லோகபாலர் களும் ஸ்ரீமஹாலக்ஷ்மியும் எவனுடைய பாதாரவிந்தங் களின் பராகத்தைச் சிரத்தினால் தரிக்கின்றார்களோ, எவன் தான் ஏற்படுத்தின தாமமர்யாதைகளை அவை அழியுங்காலத்தில் காக்கும் பொருட்டு லீலையினால் திரு வுருவங்களை ஏற்றுக்கொள்கிறானோ, அப்படிபட்ட ஸர் வேஶ்வரனாகிய நீ என்னால் என்ன பணிவிடை கொண்டு ஸந்தோஷம் அடைவாய்? நிறைவாளனாகிய உனக்கு ஒரு வராலும் ஒன்றும் ஆகவேண்டியது இல்லையாகையால் எதைச் செய்து நான் உனக்கு ஸந்தோஷத்தை விளைப் பேன்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருகுலத்தைக் களிக்கச் செய்யுங்குமாரனே! கோஸல மன்னவன அளித்த ஆஸ னத்தில் வீற்றிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் மேககர் ஜனம்போல் கம்பீரமான குரலுடன் அம்மன்னவனைக் குறித்துப் புன்னகையுடன் இங்ஙனம் மொழிந்தான்

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ராஜனே! தனக்கு ஏற்பட்ட தர்மத்தில் மனவூக்கமுற்றிருக்கின்ற க்ஷத்ரி யன் யாசிப்பது நிந்தைக்கிடமாயிருக்கும். ஆயினும்

உன்னுடைய ஸ்னேஹத்தை விரும்பி உன்கன்னிகையை நான் வேண்டுகிறேன். நாங்கள் பணம் முதலிய பந்தயங்கொடுப்பவர்களல்லோம்.

மன்னவன் சொல்லுகிறான்:— நாதனே! என்கன்னிகைக்கு இனிய வரன் உன்னைக் காட்டிலும் மேற்பட்டவன் எவன் இருக்கின்றான்? நீ ஸமஸ்தகுணங்களுக்கும் முக்யமான ஆதாரமாயிருப்பவன். உன்னுடைய மார்பில் ஸ்ரீமஹாலக்ஷ்மி ஸர்வகாலமும் விடாமல் வஸித்துக் கொண்டிருக்கிறாள். ஆகையால் உன்னைக்காட்டிலும் மேற்பட்ட வரன் எவனுமே இல்லை. ஸாத்வதஸ்ரேஷ்டனே! நான் என்கன்னிகைக்குத் தகுந்த வரன் கிடைக்க வேண்டுமென்று விரும்பி வரர்களாக வரும்மன்னவர்களின் வீர்யத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு (இந்த வ்ருஷபங்களை எவன் வெல்லுகிறானோ அவனே என்புதல்வியை மணம் புரியவேண்டுமென்று) ஒரு ஏற்பாடு வைத்துக் கொண்டேன். வீரனே! இந்த ஏழு வ்ருஷபஎருதுகளும் அதக்கப்படாதவை; எவர்க்கும் அணுகமுடியாதவை. பலராஜகுமாரர்கள் வந்து இந்த வ்ருஷபங்களால் அங்கங்களெல்லாம் முறிக்கப் பெற்றுத் தோல்வியடைந்து போனார்கள். எவன் இந்தவ்ருஷபங்களை அடக்குகிறானோ, அவனுக்கே இக்கன்னிகை. ஆகையால் இந்த வ்ருஷபங்களை நீ அடக்குவாயாயின், நீயே என்புதல்விக்கு இஷ்டமான வரன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸமர்த்தனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் அம்மன்னவனுடைய ஏற்பாட்டைக் கேட்டு அரையில் உத்தரீயத்தை இழுத்துக் கட்டிக் கொண்டு தன்னை ஏழுபேர்களாகச் செய்து அந்த ஏழு எருதுகளையும் அவலீலையாகவே அடக்கினான். ஸ்ரீக்ருஷ்ணன் அவற்றின் தந்தங்களை முறித்துப் பலம் ஒடுங்கப்

பெற்ற அந்த ஏழு வ்ருஷபங்களையும் கயிறுகளால் கட்டிச் சிறுவன் மரத்தில் செய்த வ்ருஷபங்களைக் கட்டியிழுப்பதுபோல இழுத்தான். அப்பால் அந்த நக்னஜித்து மன்னவன் மிகவும் ஸந்தோஷம் அடைந்து வியப்புற்றுத் தன்புதல்வியை ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுத்தான். திறமையுள்ள அந்த ஸ்ரீக்ருஷ்ணனும் தனக்குத் தகுதியாகிய அப்பெண்மணியை விதிப்படி அங்கீகரித்தான். ராஜபத்னிகள் தங்கள் புதல்விக்கு ஸ்ரீக்ருஷ்ணனைப் பதியாகப் பெற்று மிகவும் ஆநந்தம் அடைந்தார்கள். அப்பொழுது பெரிய உத்ஸவம் உண்டாயிற்று. சங்கம் பேரி ஆனகம் முதலிய வாத்யங்கள் முழங்கின. கீதங்களோடு மற்றும் பல வாத்யங்களும் முழங்கின. ப்ராஹ்மணர்கள் ஓயாமல் ஆசீர்வாதகோஷங்களைச் செய்தார்கள். ஆண்களும் பெண்களும் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து சிறந்த ஆடைகளையும் பூமாலைகளையும் அணிந்திருந்தார்கள். நக்னஜித்து மன்னவன் தன் புதல்விக்குப் பரிசிலாகப் பதினாயிரம் பசுக்களையும் கழுத்தில் பொன்னலங்காரம் அணிந்து சிறந்த ஆடைகளை உடுத்தித் திகழ்கின்றவர்களும் யௌவனப்பருவமுடையவர்களுமாகிய மூவாயிரந் தாஸிகளையும் ஒன்பதினாயிரம் யானைகளையும் யானையைக்காட்டிலும் நூறுமடங்கு அதிகமான ரதங்களையும் ரதத்தைக்காட்டிலும் நூறுமடங்கு அதிகமான குதிரைகளையும் குதிரையைக்காட்டிலும் நூறுமடங்கு அதிகமான காலாட்களையும் கொடுத்தான். அந்தக் கோஸலதேசத்தரசன் ஸ்னேஹத்தினால் மனம் உருகப்பெற்றுப் பெரிய ஸைன்யத்தினால் சூழப்பட்ட தன்புதல்வியும் ஸ்ரீக்ருஷ்ணனுமாகிய தம்பதிகளை ரதத்தில் ஏற்றி அனுப்பினான். யாதவர்களாலும் வ்ருஷப எருதுகளாலும் முன்பு பலதடவைகளில் வீர்

யம் அழியப்பெற்ற பல மன்னவர்களும் ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் நாக்னஜிதியை மணம்புரிந்து ஊருக்குப் போகிறானென்று கேள்விப்பட்டுக் கன்னிகையைக் கொண்டு போகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனை வழியில் தடுத்தார்கள். காண்டீவமென்னும் தனுஸ்ஸையுடைய அர்ஜுனன் அப்பொழுது தன்பந்துவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் முதலியவர்களுக்கு ப்ரியஞ்செய்ய முயன்று பாணங்களை நிரைநிரையாகத் தொடுத்து விடுகின்ற அம்மன்னவர்களை, ஸிம்ஹம் அற்பம்ருகங்களைத் துரத்துவதுபோலத் துரத்தினான். மஹானுபாவனும் யாதவஶ்ரேஷ்டனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கோஸலன் பரிசிலாகக் கொடுத்த ஸைன்யம் முதலியவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டு த்வாரகையில் சேர்ந்து நாக்னஜிதியுடன் க்ரீடித்துக்கொண்டு ஸுகமாயிருந்தான். கோஸலதேசத்தரசனுக்குத் தன் தந்தையின் உடன்பிறந்தவளாகிய ஶ்ருதகீர்த்தியிடத்தில் பத்ரையென்று ஒருபுதல்வி பிறந்திருந்தாள். அவளை அவளுடைய உடன் பிறந்தவர்களாகிய ஸந்தர்த்தனன் முதலியவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுக்க, அவனும் அவளை மணம் புரிந்தான். மத்ரதேசத்தரசனுக்கு லக்ஷ்மணையென்று ஒருபுதல்வி இருந்தாள். அவள் ஸாமுத்ரிகலக்ஷணங்களெல்லாம் அமைந்தவள். முன்பு கருடன் அம்ருதத்தைப் பறித்துக்கொண்டு வந்தாற்போல் ஸ்ரீக்ருஷ்ணன் அவளை ஸ்வயம்வரத்தில் பறித்துக்கொண்டுவந்தான். ஸ்ரீக்ருஷ்ணனுக்கு இத்தகைய மற்றும் பலவாயிரம்பார்யைகளும் இருந்தார்கள். அவர்கள் நரகாஸுரனைக் கொன்று அவனுடைய அந்தப்புரத்தினின்று ஸ்ரீக்ருஷ்ணனால் கொண்டுவரப்பட்டவர்கள். ஐம்பத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

## நரகாஸுரவதவ்ருத்தாந்தம்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—எவன் உலகத்திலுள்ள ராஜர்களையெல்லாம் வென்று அந்தந்த ராஜகன்னிகைகளைப் பறித்துக் கொண்டு வந்தானோ, அப்படிப்பட்ட நரகாஸுரனை ஸ்ரீக்ருஷ்ணன் எப்படி வதித்தான்? சார்ங்கமென்னும் வில்லைத் தரித்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பராக்ரமத்தை வெளியிடுவதாகிய இந்த நரகாஸுரவதத்தை எனக்கு விவரித்துச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நரகாஸுரன் வருணனுடைய சத்ரத்தையும் (அஸாதாரணமான குடையையும்) இந்த்ரனுடைய மாதாவாகிய அதிதியின் குண்டலங்களையும் மேருபர்வதத்திலுள்ள மணிபர்வதமென்கிற இந்த்ரனுடைய ஸ்தானவிசேஷத்தையும் பறித்துக் கொண்டு போனான். (இந்த்ரன் லோகபாலர்களில் முக்யனாகையால் வருணனுக்கு நேர்ந்த பரிபவத்தையும் தன்னுடையதாகவே நினைத்தான்). இங்ஙனம் பௌமனென்னும் நரகனால் பரிபவிக்கப்பட்ட தேவேந்த்ரன் த்வாரகைக்கு வந்து அங்கு ஸத்யபாமையின் க்ருஹத்தில் இருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனுக்குப் பௌமன் செய்த சேஷ்டையை விண்ணப்பஞ் செய்தான். ஸ்ரீக்ருஷ்ணனும் பார்யையாகிய ஸத்யபாமையுடன் கருடன்மேல் ஏறிக்கொண்டு கிரிதுர்க்கங்களாலும் சஸ்த்ரதுர்க்கங்களாலும் ஜலதுர்க்கம் அக்னிதுர்க்கம் வாயுதுர்க்கம் ஆகிய மற்றும் பல துர்க்கங்களாலும் நுழையமுடியாதிருப்பதும் பயங்கரமாயிருப்பவைகளும் உறுதியுள்ளவைகளுமாகிய அனேகமாயிரம் முரபாசங்களால் நாற்புறத்திலும் சூழப்பட்டிருப்பதுமாகிய ப்ராக்ஜ்யோதிஷபுரத்திற்குப் போனான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் கிரிதுர்க்

கங்களைக் கதையினாலும் சஸ்த்ரதுர்க்கங்களைப் பாணங்களாலும் பிளந்தான். அக்னிதுர்க்கம் ஜலதுர்க்கம் வாயுதுர்க்கம் இவைகளைச் சக்ரத்தினால் அழித்தான். முரபாசங்களைக் கத்தியினால் சேதித்தான். மனஉறுதியுடைய முரன் முதலிய வீரர்களின் ஹ்ருதயங்களையும் யந்த்ரங்களையும் சங்கநாதத்தினால் பிளந்தான். கதையைத் தரித்திருக்கின்ற அந்தப் பகவான் பெரிய கதையை விடுத்து அப்பட்டணத்தின்கோட்டையைப் பிளந்தான். ஜலத்தில்படுத்து உறங்கிக்கொண்டிருந்த ஐந்தலையுடைய முரனென்னும் அஸுரன் ப்ரளயகாலத்திலுண்டாகும் இடிபோல் பயங்கரமாயிருக்கிற பாஞ்சஜன்யத்தின் த்வனியைக் கேட்டு ஜலத்தினின்று எழுந்திருந்தான். ப்ரளயகாலத்துஸூர்யனோடொத்த ஒளியுடையவனும் பொறுக்க முடியாதவனும் கண்ணெடுத்துப் பார்க்க முடியாதவனுமாகிய அந்த முராஸுரன் த்ரிசூலத்தை ஏந்திக்கொண்டு ஐந்து முகங்களால் மூன்று லோகங்களையும் விழுங்குபவன்போன்று ஸர்ப்பம் கருடனை எதிர்ப்பதுபோலக் கருடவாஹனனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்து வந்தான். அவ்வஸுரன் த்ரிசூலத்தைப் பலமுள்ளவளவும் சுழற்றிக் கருடன்மேல் எறிந்து ஐந்து முகங்களாலும் ஸிம்ஹநாதஞ் செய்தான். பெரிதாயிருக்கின்ற அந்த ஸிம்ஹநாதம் பூலோகத்தையும் அந்தரிக்ஷலோகத்தையும் அந்த லோகத்திற்குமேலுள்ள ஆகாசத்தையும் ஸமஸ்த திசைகளையும் ப்ராணிகளின் காதுரந்த்ரங்களையும் நிறைத்து ப்ரஹ்மாண்டம் முழுவதும் நிரம்பி விட்டது. ஸ்ரீக்ருஷ்ணன் கருடன் மேல் வருகின்ற அந்த த்ரிசூலத்தைப் பலத்தினால் இரண்டு பாணங்களை விடுத்து மூன்று துண்டங்களாகச் சேதித்தான்; அந்த முரனையும் முகங்களில் பாணங்

களால் அடித்தான். அந்த முரனும் கோபமுற்று ஸ்ரீக்ருஷ்ணன்மேல் கதையை ப்ரயோகித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் தன்மேல் வருகின்ற அந்தக் கதையைத் தன்கதையால் ஆயிரந்துண்டங்களாகும்படி துண்டித்து விடுகையில், அவ்வஸுரன் புஜங்களை உயரத் தூக்கிக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ணன்மேல் எதிர்த்துவந்தான். ஸ்ரீக்ருஷ்ணனும் அங்ஙனம் தன்னை எதிர்த்து வருகின்ற அம்முராஸுரனுடைய தலைகளைச் சக்ராயுதத்தினால் அறுத்து விட்டான். தலையறுப்புண்ட அவ்வஸுரன் ப்ராணன்களை இழந்து இந்த்ரன் ப்ரயோகித்த வஜ்ராயுதத்தினால் சிகரங்கள் அறுப்புண்ட பர்வதம்போல ஜலத்தில் விழுந்தான். அந்த முரனுக்கு ஏழு பிள்ளைகள். அவர்கள் தாம்ரன், அந்தரிக்ஷன், ப்ரவணன், விபாவஸு, வஸு, நபஸ்வான், அருணன் என்னும் பெயருடையவர்கள். அவர்கள் தந்தையின் வதத்திற்கு வருந்தி அதற்கு ப்ரதீகாரஞ் செய்ய விரும்பிக் கோபாவேசமுற்றுப் பௌமனால் அனுப்பப்பட்டு ஆயுதங்களை ஏந்திப் பீடனென்னும் ஸேனாபதியை முன்னிட்டுக் கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். வீரர்களாகிய அந்தத் தாம்ரன் முதலியவர்கள் வந்து கோபத்தினால் ஸ்ரீக்ருஷ்ணன்மேல் பாணங்களையும் கத்திகளையும் கதைகளையும் சக்திகளையும் இரும்புத்தடிகளையும் சூலங்களையும் ப்ரயோகித்தார்கள். வீணாகாத வீர்யமுடைய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த பாணம் முதலிய ஆயுதங்களின் ஸமூஹத்தைத் தன்பாணங்களால் எள்ளளவு துண்டங்களாகத் துண்டித்து விட்டான். பீடனை முன்னிட்டுக் கொண்டுவந்த தாம்ரன் முதலிய அந்த முரபுத்ரர்களையும் தலை துடை புஜம் கால் தேஹம் இவை அறுப்புண்டவர்களாகச் செய்து யமன்வீட்டிற்கு

அனுப்பினன். அங்ஙனம் தன்னுடைய ஸேனாபதிகள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய சக்ராயுதத்தினாலும் பாணங்களாலும் முடிக்கப்பட்டுத் தள்ளுண்டிருக்கக் கண்டு நரகாஸுரன் மதம் பெருகப்பெற்றவைகளும் ஸமுத்ரத்தினிடைத் தீவுகளில் உண்டானவைகளுமாகிய யானைகளுடன் கூடி ஒருவராலும் எதிர்க்க முடியாதவனாகிப் புறப்பட்டான். அவன் ஸூர்யன்மேல் மின்னலோடு கூடிய மேகம் இருப்பதுபோலப் பார்வையுடன் கருடன்மேல் வீற்றிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு அவன்மேல் சதக்னியென்னும் சக்தியாயுதத்தை ப்ரயோகித்தான். அவனுடன் வந்த மற்ற வீரர்களும் தந்தம் ஆயுதங்களை ஒரேதடவையில் அந்த ஸ்ரீக்ருஷ்ணன்மேல் ப்ரயோகித்தார்கள். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த க்ஷணமே விசித்ரமான இறகுகள் கட்டப்பெற்ற கூருள்ள பாணங்களால் அந்த வீரர்களின் புஜங்களையும் துடைகளையும் தலைகளையும் கால்களையும் சரீரங்களையும் அறுத்துக் குதிரைகளையும் யானைகளையும் முடித்து அந்நரகனுடைய ஸைன்யத்தையெல்லாம் பாழ் செய்தான். குருகுலாலங்காரனே! சிறகுகளால் யானைகளை வதிக்கின்ற கருடன்மேல் வீற்றிருக்கின்ற பகவான் அந்த வீரர்கள் ப்ரயோகித்த ஆயுதங்கள் தன்மேல் வருவதற்கு முன்னமே அந்த ஸைன்யத்தையெல்லாம் வதித்து அப்பால் அந்த ஆயுதங்களை ஒவ்வொன்றையும் மும்மூன்று பாணங்களால் அறுத்துத்தள்ளினன். யானைகள் அனைத்தும் கருடனால் மூக்காலும் இறகுகளாலும் நகங்களாலும் ஹிம்ஸிக்கப்பட்டு வருந்திப் பட்டணத்திற்கே திரும்பிப்போயின. பிறகு நரகனொருவன்மாத்ரமே யுத்தபூமியில் இருந்து யுத்தஞ்செய்தான். அந்த நரகன் தன்பலமெல்லாம் கருடனால் பீடிக்கப்பட்டு வருந்தி ஓடுவதைக்கண்டு வஜ்ரா

யுதத்தையும் தடுத்த மிகுந்த உருதியுள்ள சக்தியாயுதத்தினால் அந்தக் கருடனை அடித்தான். கருடன் அந்தச் சக்தியினால் அடிக்கப்பட்டுப் பூமாலையால் அடிக்கப்பட்ட யானைபோலச் சிறிதும் சலிக்காதிருந்தான். நரகன் தன் முயற்சி வீணானதைக் கண்டு ஸ்ரீக்ருஷ்ணனை அடிக்கச் சூலாயுதத்தை எடுத்தான். அந்த நரகன் அச்சூலத்தை ப்ரயோகிப்பதற்கு முன்னமே கத்தியின் நுனிபோன்ற நுனியுடைய சக்ராயுதத்தினால் யானையின்மேலிருக்கின்ற அவ்வஸுரனுடைய தலையை அறுத்தான். குண்டலங்களோடு கூடியதும் அழகிய கிரீடத்தினால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய அந்நரகனுடைய சிரஸ்ஸு ஜ்வலித்துக்கொண்டு பூமியில் விழுந்தது. அதைக் கண்டு நரகனைச் சேர்ந்தவர்கள் 'ஆ! ஆ!' என்று முறையிட்டார்கள். ரிஷிகள் நல்லது நல்லதென்றார்கள். தேவதைகள் ஸ்ரீக்ருஷ்ணன்மேல் புஷ்பங்களை இறைத்து அவனைத் துதித்தார்கள். அப்பால் நரகனுடைய மாதாவாகிய பூமிதேவி உருக்கியழுக்கெடுத்த பொன்னில் இழைக்கப்பட்ட ரத்னங்களால் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற குண்டலங்களையும் வைஜயந்தியென்னும் வனமாலையையும் வருணனுடைய குடையையும் மஹாமணியையும் கொண்டு வந்து ஸ்ரீக்ருஷ்ணனிடம் கொடுத்தாள். ராஜனே! அப்பூமிதேவி தேவர்க்குந் தேவராயிருக்கத்தகுந்த மேன்மையுடைய ப்ரஹ்மாதிகளால் பூஜிக்கப்பட்டவனும் ஜகதீஸ்வரனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனை வணங்கிக் கைகளைக் குவித்துக்கொண்டு பக்தியினால் வணக்கமுற்ற மதியுடன் ஸ்தோத்ரஞ்செய்தாள்.

பூமிதேவி சொல்லுகிறாள்:— தேவதேவர்களான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் நியாமகனே! சங்கசக்ரகதாதரனே! (சங்கம் சக்ரம் கதை என்னும் ஆயுதங்களை

அணிந்திருப்பவனே!) உனக்கு நமஸ்காரம். பரமாத்மனே! பக்தர்களின் விருப்பங்களுக்குத் தகுந்தபடி திருவுருவங்களை ஏற்றுக்கொள்கின்ற உனக்கு நமஸ்காரம். தாமரையுந்தியனாகிய உனக்கு நமஸ்காரம். தாமரை மலர்மாலை அணிந்த உனக்கு நமஸ்காரம். தாமரைக் கண்ணனாகிய உனக்கு நமஸ்காரம். தாமரைப்பாதங்களையுடைய உனக்கு நமஸ்காரம். ஷாட்குண்யபூர்ணனும் ஆதிகாரணனும் வஸுதேவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தும் மனு முதலிய புருஷர்களிடத்தில் ஆவேசித்தும் ஸமஸ்தஜகத்திற்கும் அந்தர்யாமியாயிருந்தும் ஜகத்தைப் பாதுகாப்பவனும் ப்ரளயதசையில் தனியனாகி ஜ்ஞானாநந்தமயனான தன்னைத் தானே அனுபவித்துக் கொண்டு மஹாநந்தபூர்ணனுமாகிய உனக்கு நமஸ்காரம். இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் நீயே படைத்தனை. ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸூக்ஷ்மசேதனாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருந்த நீ ஸ்தூலசேதனாசேதனரூபமான இந்த ப்ரபஞ்சமாக விரிந்தனை. (இந்த ப்ரபஞ்சத்திற்கு உபாதான காரணம் நீயே. நிமித்தகாரணமும் நீயே). ஆயினும் அந்த ப்ரபஞ்சத்தின் பிறவி முதலிய விகாரங்கள் எவையும் தீண்டப்பெறாமல் நீ பரிசுத்தனாயிருப்பவன். பிறவி முதலிய விகாரங்களெல்லாம் உன் சரீரங்களாகிய சேதனாசேதனங்களைச் சேர்ந்தவைகளேயன்றி உனக்குக் கிடையா. நீ அளவற்ற சக்திகளுடையவன். அந்தச் சக்திகள் உனக்கே அஸாதாரணங்களன்றி அவை மற்றெவர்க்கும் கிடையா. நீ ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவற்றவன். அத்தன்மை எப்படி உன்னொருவனுக்கே அஸாதாரணமோ, அப்படியே உன்சக்தி முதலியவைகளும் உனக்கே அஸாதாரணமாயிருப்பவை. மேன்மையும் தாழ்மையுமான பல

வகைச் சரீரங்களையுடைய ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! அசேதனத்திற்குள் புகுந்து அதைத் தரித்துக்கொண்டிருப்பவனே! பரமாத்மனே! உனக்கு நமஸ்காரம். ப்ரபூ! நீ ஸ்ருஷ்டிக்க விரும்பி ரஜோகுணத்தை அதிகமாக ஏற்றுக்கொள்கின்றனை (ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்ற நான்முகனென்னும் தேஹத்தில் ப்ரவேசித்து பரபஞ்சத்தின் ஸ்ருஷ்டியை நடத்துகின்றனை.) ப்ரபஞ்சத்தை ஸம்ஹரிக்கும்பொருட்டுத் தமோகுணத்தை முக்யமாக ஏற்றுக்கொள்கின்றனை (தமோகுணம் தலையெடுக்கப்பெற்ற ருத்ரன் அக்னி முதலியவர்களைச் சரீரமாகக்கொண்டு ப்ரபஞ்சத்தின் ஸம்ஹாரத்தை நடத்துகின்றனை.) ஜகத்பதீ! ப்ரபஞ்சத்தைப் பாதுகாக்கும்பொருட்டு ஸத்வகுணத்தை முக்யமாக ஏற்றுக்கொள்கின்றனை. (ஸத்வகுணம் தலையெடுக்கப்பெற்ற மனு முதலியவர்களைச் சரீரமாகக் கொண்டு ப்ரபஞ்சத்தைப் பாதுகாக்கின்றனை.) ஜீவாத்மாக்களைச் சரீரமாகக் கொண்டு அவர் மூலமாய் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்துவதுபோலவே ஸ்திதியையும் நடத்துகிறாயென்பதில்லை. ஜீவாத்மாக்களைச் சரீரமாகக் கொண்டு மறைந்திருக்கையின்றித் தானே சுத்த ஸத்வமயமான திருவுருவங்களைக் கொண்டு ஸ்திதியை நேரிலும் நடத்துகின்றனை. காலம் ப்ரக்ருதி புருஷன் இவையெல்லாம் நீயே. (நீ இவற்றைச் சரீரமாகக்கொண்டு இவையெல்லாம் நீயே யென்னும்படி அமைந்திருக்கின்றனை.) நீ இவற்றைக்காட்டிலும் வேறுபட்டு விலக்ஷணமாயிருக்கின்றனை. பூமியாகிய நான், ஜலம், அக்னி முதலிய தேஜஸ்ஸு, வாயு, ஆகாசம், தன்மாத்ரங்கள், இந்த்ரியங்களின் அதிஷ்டான தேவதைகள், மனம், ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்கள், மஹத்து, அஹங்காரம், ஜீவன்

ஆகிய ஜங்கம ஸ்தாவர ரூபமான ஜகத்து முழுவதும் ப்ரக்ருதிபுருஷகாலங்களைச் சரீரமாகவுடையவனும் இணையெதிரில்லாதவனுமாகிய உன்னிடத்திலேயே இருக்கின்றது. (மண்ணில் குடம் இருப்பதுபோல இந்த ஜகத்தெல்லாம் உன்னிடத்தில் இருக்கின்றது. ஆகையால் மண்ணே குடமாயிருப்பதுபோல இந்த ஜகத்தெல்லாம் நீயே.) பகவனே! இந்தப் பூமி முதலியவற்றை ஸ்வதந்த்ர வஸ்துக்களென்று நினைப்பது ப்ரமமே. மற்றும், இவை தேஹங்களாகப் பரிணமித்து ஜீவனென்னும் அபிமானத்தை விளைக்கின்றனவாகையால் ப்ரமமென்று கூறப்படுகின்றன. நாதனே! இவன் பகதத்தனென்னும் பெயருடையவன்; அந்த நரகாஸுரனுடைய புதல்வன். தன்னையே சரணம் அடைந்தவர்களின் வருத்தங்களைப் போக்குந்தன்மையனே! இவன் பயந்து உன்பாதாரவிந்தங்களைச் சரணம் அடைந்தான். இவனைப் பாதுகாப்பாயாக. ஸமஸ்த அசுபங்களையும் போக்கவல்ல உன் தாமரைக்கையை இவன் தலைமேல் வைப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பக்தியுடன் வணக்கமுற்றிருக்கின்ற பூமிதேவியால் இனிய உரைகளை மொழிந்து இங்ஙனம் பூஜிக்கப்பட்ட ஸ்ரீக்ருஷ்ண பகவான் அவனுக்கு அபயங்கொடுத்து ஸமஸ்த ஸம்ருத்திகளும் அமைந்திருக்கப்பெற்ற பௌமனுடைய க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தான். அங்கு நரகாஸுரன் அரசர்களிடத்தினின்று பராக்ரமித்துக் கொண்டுவந்த பதினாறாயிரம் பெண்மணிகளைக் கண்டான். அப்பெண்மணிகள் விரும்பி வரிக்கத்தகுந்த குணமுடையவர்களில் சிறந்தவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அவ்விடம் வந்திருக்கக் கண்டு மோஹித்து 'நம்முடைய பாக்யம் இவனை நமக்கு ப்ரியமுள்ள கணவனாகக் கொண்டு வந்து விட்டது' என்று நினைத்து



MAHAMAHOPADHYAYA
Dr. U. V. S. IYER LIBRARY

மனத்தினால் அவனையே தங்களுக்குக் கணவனாக வரித்தார்கள். அம்மடந்தையர்கள் அனைவரும் 'இந்த ஸ்ரீக்ருஷ்ணன் எனக்குப் பதியாவானாக. கடவுள் அதை அனுமோதனஞ் செய்வாராக' என்னும் பெரிய விருப்பத்துடன் தனித்தனியே ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனங்கொண்டார்கள். ஸ்ரீக்ருஷ்ணன அவர்களுக்கு ஸ்னானஞ் செய்வித்து அழுக்கின்றி நிர்மலமாயிருக்கின்ற ஆடை ஆபரணம் முதலியவைகளால் அலங்காரமும் செய்வித்துச் சிவிகைகளில் ஏற்றி த்வாரகைக்கு அனுப்பினான். விலையுயர்ந்த ரதங்களையும், அளவற்ற பொக்கசத்தையும் நான்கு தந்தங்கள் அமைந்து மிகுந்த பலமுடையவைகளும் ஐராவதமென்னும் திக்கஜத்தின் வம்சத்தில் பிறந்தவைகளும் வெண்மை நிறமுடையவைகளுமாகிய அறுபத்து நான்கு யானைகளையும் த்வாரகைக்கு அனுப்பினான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பார்யையுடன் ஸ்வர்க்கத்திற்குச் சென்று குண்டலங்களை அதிதியிடம் கொடுத்துத் தேவேந்த்ரனாலும் பெருமையுள்ள இந்த்ராணியாலும் பூஜிக்கப்பட்டான். அப்பால் தன்பார்யையினால் தூண்டப்பட்டுப் பாரிஜாத வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக் கருடன்மேல் வைத்துக்கொண்டு புறப்படுகையில் அதைக் கொண்டுபோகலாகாதென்று தடுத்து யுத்தத்திற்கு வந்த இந்த்ரன் முதலிய தேவதைகளை வென்று பாரிஜாத வ்ருக்ஷத்தைப் பட்டணங் கொண்டு சேர்த்தான். அந்தப் பாரிஜாத வ்ருக்ஷம் ஸத்யபாமையின் க்ருஹத்தினுடைய உத்யானவனத்தில் வைக்கப்பட்டு அவ்வனத்திற்கு மிகவும் சோபையை விளைத்துக்கொண்டிருந்தது. அதன் பரிமளத்தையும் மகரந்தத்தையும் விரும்பி ஸ்வர்க்கத்தினின்று வண்டுகள் அதைத் தொடர்ந்து வந்தன. இந்த்ரன் நமஸ்காரஞ்செய்து ஸ்ரீக்ருஷ்ணனைத் தான் வெல்ல

முடியாமையால் அதற்கு ஸ்ரீக்ருஷ்ணன் வல்லனென்று அவனிடம் வந்து அவனுடைய பாதாரவிந்தங்களைத் தன் கிரீடங்களால் ஸ்பர்சித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்து நரகாஸுரனைக் கொன்று அவன் பறித்துக் கொண்டு போன குண்டலம் முதலியவைகளைத் திருப்பிக் கொடுக்கும்படி வேண்டினான். ஸ்ரீக்ருஷ்ணனும் அவன் வேண்டினபடி கார்யங்களை நிறைவேற்றிக்கொடுத்து ஸ்வர்க்கத்தில் முளைத்திருக்கும் பூண்டுகளாகிய கல்பகச் செடிகளில் ஒன்றைப் பிடுங்கிக்கொண்டு வருகையில், தேவேந்த்ரன் தன்கார்யத்தை நிறைவேற்றிக் கொடுத்ததையும் பாராமல் அதைக் கொண்டு போகலாகாதென்று அவனோடு யுத்தஞ் செய்யவந்தான். ஆ! தேவதைகளின் அஹங்காரத்தையும் அவர்களுடைய பணக் கொழுப்பையும் என்னென்று சொல்லுவேன்? அவற்றைச் சுடவேண்டும். விகாரங்களற்றவனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அப்பால் ஒரே முஹூர்த்தத்தில் அந்தப் பெண்மணிகள் எத்தனைபேர்களோ அத்தனை க்ருஹங்களில் அத்தனை உருவங்களை ஏற்றுக்கொண்டு அந்தப் பதினாறுயிரம் பெண்மணிகளையும் விதிப்படி விவாஹஞ் செய்து கொண்டான். பிறகு நெஞ்சிலும் நினைக்கமுடியாத செயல்களையும் நிறைவேற்றுந் திறமையுடைய அப்பகவான் தான் மானிட உருவம் பூண்டும் தனக்கு அஸாதாரணமான மஹிமையைக் கைவிடாமல் நிறைவாளனாகவேயிருந்தானாயினும் ஸமஸ்த ஸம்ருத்திகளும் நிறைந்திருக்கையால் இணையெதிரில்லாதவைகளான அம்மடந்தையர்களின் மாளிகைகளில் ஒரு நொடியும் பிரியாதிருந்து, ப்ராக்ருதஜனம்போல் க்ருஹஸ்தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு அழகியர்களான அப்பெண்மணிகளுடன் விளையாடலுற்றிருக்

தான். பக்தர்களின் மனத்தைத் தொடர்ந்து நடக்குந் தன்மையனும் அளவற்றமஹிமைகளுடையவனும் இணையெதிரில்லாதவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன் பார்யைகளிடத்தில் அவரவர் விரும்பினபடி உருவங்களை ஏற்றுக்கொண்டிருந்தமை என்ன அற்புதம்? அவனுடைய பெருமைக்கு இது ஒரு அற்புதமன்று. யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இப்பொழுதும் தன் பக்தர்களுக்கு உள்ளேயும் வெளியிலும் நாற்புறத்திலும் நூறாகவும் ஆயிரமாகவும் தோற்றுகிறான். அப்பெண்மணிகள் ப்ரஹ்மாதிகளாலும் அறியமுடியாத மஹிமையுடைய ஸ்ரீக்ருஷ்ணனைக் கணவனாகப் பெற்று இடைவீடின்றி வளர்ந்துவருகின்ற ஆநந்தமுடையவர்களாகி அநுராகம் அமைந்த புன்னகையோடு கூடின கண்ணோக்கத்தை முன்னிட்டுக் கொண்டிருக்கின்ற புதியகலவிகளில் பரிஹாஸ வசனங்களைப் பேசிக்கொண்டு இடையிடையில் வெட்கத்தை அடைந்தார்கள். அம்மாதரசிகள் தாங்கள் நினைத்தபடி நடக்க ஸித்தமாயிருக்கின்ற அநேகமாயிரந் தாஸிகளையுடையவர்களாயினும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்கொள்வது, சிறந்த ஆஸனம் அளிப்பது, பாதங்களை விளக்குவது, தாம்பூலங்கொடுப்பது, பாதங்களைப் பிடிப்பது முதலிய உபசாரங்களால் ஶ்ரமந்தீர்ப்பது, சாமரம் வீசுவது, கந்தம்பூசுவது, பூமாலை சூட்டுவது, தலைவாரி முடிப்பது, படுக்கை அமைப்பது, உபஹாரங்களைக் கொடுப்பது இவை முதலியவைகளால் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தாங்களே நேரில் பணிவிடை செய்தார்கள். ஐம்பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

❧ ருக்மிணிக்கும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் ப்ரணயகலஹம். ❧

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஒருகால் ருக்மிணி ஜகத்குருவும் தன்படுக்கையில் ஸுகமாக வீற்றிருப்பவனும் தன்பதியுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைத் தன்ஸகிகளுடன் சாமரம் வீசி உபசாரஞ் செய்து கொண்டிருந்தாள். எவன் ஜீவாத்மாக்கள் தன்னை ஆராதித்து உஜ்ஜீவிக்கும் பொருட்டு அதற்குரிய கரணகளேபராதிகளைக் கொடுக்கையாகிற ஸ்ருஷ்டியை நடத்துகிறான்; எவன் ஜன்மஜராமரணாதிரூபமான ஸம்ஸாரத்தில் விழுந்தலைகிற ஜீவாத்மாக்களுக்கு ப்ரளயமென்னும் வ்யாஜத்தினால் இளைப்பாறுதலை விளைக்கிறான்; எவன் ஸம்ஸாரதசையிலும் அந்த ஜீவாத்மாக்களுக்கு அனிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைக் கொடுத்துக் காக்கிறான்; எவனுக்கு இந்த ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் கேவலம் விளையாடலாயிருக்கின்றன; அப்படிப்பட்ட ஸர்வேஸ்வரன் பிறவியற்றவனாயினும் தான் ஏற்படுத்தின தர்மமர்யாதைகளை நிலைநிறுத்தும் பொருட்டுத் தன்ஸங்கல்பத்தினால் யதுகுலத்தில் பிறந்தான். இங்ஙனம் ஜகத்திற்கு வேண்டிய ஹிதங்களை நடத்துகிறானகையால் அவனே ஜகத்குரு. அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணன் சிறந்த சயனத்தில் ஸுகமாக வீற்றிருக்கையில் பீஷ்மகனுடைய புதல்வியான ருக்மிணி அவனுக்குச் சாமரம் வீசிக்கொண்டிருந்தாள். அந்தப்படுக்கையறை திகழ்கின்ற முத்துச்சரங்கள் தொங்கவிடப்பெற்ற மேல்கட்டினாலும் ரத்னமயமான தீபங்களாலும் விளக்கமுற்றிருந்தது. மற்றும் வண்டினங்கள் ஒலித்துக்கொண்டிருக்கிற திவ்யமான மல்லிப்பூமாலைகள் தொங்கவிட்டிருந்தன. உதயராகத்தினால் சிவந்திருக்கின்ற சந்த்ரகிரணங்கள் சாளரத்தின் ரந்த்ரங்களால் நுழைந்து நிறைந்திருந்தன. உத்யானவனத்தில் வைத்து வளர்க்கப்

பட்ட பாரிஜாதவ்ருக்ஷங்களின் வனத்தினின்று புஷ்பங்களின் வாஸனையை ஏந்திக்கொண்டு வருகின்ற மந்த மாருதத்தினாலும் சாளரத்தின் ரந்த்ரத்தினால் வெளிவருகின்ற அகிற்புகைகளாலும் அத்தப் படுக்கையறை மிகவும் அழகாயிருந்தது. இத்தகைய படுக்கையறையில் பால்நுரையை நிகர்த்து வெளுத்திருக்கின்ற மஞ்சத்தின்மேல் அமைக்கப்பட்ட மேலான மெத்தென்ன பஞ்ச சயனத்தின்மேல் ஸுகமாக உட்கார்ந்திருக்கின்ற ஜகதீச்வரனை தன்கணவனை ருக்மிணி உபாஸித்துக் கொண்டிருந்தாள். மிகுந்த ஒளியுடைய அம்மடந்தையர் மணியான ருக்மிணி மணிக்காம்புடைய சாமரத்தைத் தன் ஸகியின் கையினின்று வாங்கி அதனால் ஸர்வேச்வரனை ஸ்ரீக்ருஷ்ணனை வீசிக்கொண்டு அவனைப் பணிந்திருந்தாள். அந்த ருக்மிணி ஸ்ரீக்ருஷ்ணனுடைய அருகாமையில் ரத்னமயமான சிலம்புதண்டைகளால் சப்தஞ் செய்துகொண்டு மோதிரங்களையும் வளைகளையும் அணிந்த ஹஸ்தத்தின் நுனியில் சாமரத்தை ஏந்தி வஸ்த்ரத்தின் நுனியால் மறைக்கப்பட்ட கொங்கைகளின் மேலுள்ள குங்குமக் குழம்பினால் சிவந்திருக்கின்ற முத்துமாலையின் ஒளியினாலும் நிதம்பங்களில் தரிக்கப்பட்ட மேலான அரைஞாண் மாலையாலும் விளக்கமுற்றிருந்தாள். மானிட உருவம் பூண்ட மஹாலக்ஷ்மியும் அவதாரங்கள் தோறும் தன்னை பொழிய வேறு கணவனற்றவளும் வேறு கதியற்றவளும் லீலையினால் மானிட உருவம் பூண்ட தனக்கு அனுரூபையும் முன்னெற்றிமயிர்களாலும் குண்டலங்களாலும் பதக்கங்களை அணிந்த கண்டத்தினாலும் விளக்கமுற்று முகத்தில் திகழ்கின்ற அம்ருதம் போன்ற புன்னகையுடையவளுமாகிய அந்த ருக்மிணியைப் பார்த்து ஸ்ரீக்ருஷ்ணன் ஸந்தோஷமுற்றும் புன்னகை செய்துகொண்டு இங்ஙனம் மொழிந்தான்

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ராஜபுத்ரி! லோக பாலர்களின் ஐஶ்வர்யம்போன்ற ஐஶ்வர்யமுடையவர்களும் மிகுந்த ப்ரபாவமுடையவர்களும் (போக்ய வஸ்துக்கள் போகத்திற்கு வேண்டிய கருவிகள் முதலிய ஸம்ருத்திகள் அமைந்தவர்களும்) செல்வப்பெருக்குடையவர்களும் ரூபம் ஔதார்யம் (தானசீலம்) பலம் இவைகளால் மேன்மையுற்றவர்களுமாகிய பல மன்னவர்கள் உன்னை விரும்பினார்கள். உன் ப்ராதாவும் உன் தந்தையும் உன்னை அவர்களுக்கே கொடுத்தார்கள். அவர்கள் உன்னை மேல்விழுந்து விரும்பி விவாஹத்திற்காக உங்கள் பட்டணத்திற்கு வந்து காத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் காமாவேசத்தினால் கொடிய மதமுடையவர்கள்; உனக்குத் தகுந்தவர்கள். அத்தகைய சிசுபாலன் முதலிய மன்னவர்களை நீ ஏன் வரிக்கவில்லை? அம்மன்னவர்களைத் துறந்து உனக்குத் தகுதியல்லாத என்னை ஏன் வரித்தனை? அழகிய புருவங்களுடையவளே! நானோ வென்றால் ஜராஸந்தன் முதலிய ராஜாக்களிடத்தினின்று பயந்தவன்; அதைப் பற்றியே ஸமுத்ரத்தைச் சரணம் அடைந்திருக்கின்றேன். (ஸமுத்ரத்தினிடையிலுள்ள தீவை இருப்பிடமாகக் கொண்டிருக்கின்றேன்.) மிகுந்த பலமுடைய ஜராஸந்தாதிகளோடு த்வேஷத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறேன். நான் பெரும்பாலும் ராஜஸிம்ஹாஸனத்தைத் துறந்திருப்பவன். (இத்தகையனான என்னை நீ ஏன் வரித்தனை? மற்றும் என் வழி இன்னதென்று ஒருவர்க்கும் ஸ்பஷ்டமாகத் தெரியாது. (இவன் வஸுதேவனுடைய பிள்ளையாகையால் க்ஷத்ரியனா? அல்லது நந்தனுடைய பிள்ளையாகையால் மூன்றாவது வர்ணத்தில் பிறந்தவனாவென்று என்னைப்பற்றி எல்லோரும் ஸந்தேஹிக்கவேண்டியதா

யிருக்குமே யன்றி, இவன் இன்ன ஜாதியில் பிறந்தவ னென்று ஸ்பஷ்டமாக ஒருவருக்கும் நிச்சயிக்கமுடி யாது.) நான் லோகத்திற்கிணங்காத வழியைப்பற்றி நடப்பவன். (லோகமர்யாதையைக் கடந்தவன்). அழகிய புருவங்களுடையவளே! இத்தகைய என்னைப்போன்ற புருஷர்களின் பதவியைத் தொடர்ந்த உன்னைப்போன்ற மடந்தையர்கள் பெரும்பாலும் வருந்துவார்கள். (நற் குலத்தில் பிறந்த உன்னைப் போன்ற பெண்மணிகள் குல கோத்ரம் தெரியாதவனும் துர்மார்க்கனும் வஞ்சகனு மாகிய என்னைப் போன்றவனைத் தொடர்வது வருத்தத் திற்கிடமாகும்). மற்றும், நான் ஒன்றுமில்லாதவன்; (ஏழை). என்னைப் போன்ற ஒன்றுமில்லாத ஏழையர்க ளுக்கே நான் அன்பனுயிருப்பவன. அழகிய இடை யுடையவளே! அதைப்பற்றியே பணக்காரர்கள் பெரும் பாலும் என்னைப் பணிகிறதில்லை. (குரூபனுயினும் பணக்காரனே பெண்டிர்களுக்கு இஷ்டனுவான். நானோ வென்றால், ஏழையன்; உன்னைப் போன்றவளால் வரிக் கத்தகுந்தவனல்லேன்). பணம் பிறவி ஐஸ்வர்யம் அழகு ஆகிய இவையெல்லாம் எவர்களுக்கு ஒருவரோ டொருவர்க்கு ஒத்திருக்கின்றனவோ, அவர்களுக்கே விவாஹமும் [1]மைத்ரியும் பொருந்துமன்றி, உத்தமர்க ளுக்கும் அதமர்களுக்கும் அவை பொருந்தமாட்டா. விதர்ப்பதேசத்தரசன் மகளே! நீ நன்ருக ஆலோசிக் குந் திறமை யற்றவளாகையால் இதை ஆராய்ந்தறியா மல் வரிக்கத்தகுந்த நற்குணங்களற்றவனும் பிச்சைக் காரர்களால் வீணுகப் புகழப்பட்டவனுமாகிய என்னை வரித்தனை. ஆகையால் நீ இப்பொழுதாயினும் உனக் குத் தகுதியான ஒரு க்ஷத்ரியஸ்ரேஷ்டனைப் பணிவாயா

1 மைத்ரி-ஸ்னேஹம்

யின், இஹலோகத்திலும் பரலோகத்திலும் நல்ல விருப்பங்களை அனுபவிப்பாய் அழகிய இடையுடையவளே! சிசுபாலன் ஸால்வன் ஜராஸந்தன் தந்தவக்த்ரன் முதலிய மன்னவர்களும் உன்தமையனாகிய ருக்மியும் என்மேல் த்வேஷிக்கிறார்கள். துஷ்டர்களின் தேஜஸ்ஸைப் போக்குந் தன்மையுடைய நான் வீர்யமதத்தினால் கண் தெரியாதிருப்பவர்களும் கர்வமுற்றவர்களுமாகிய அந்தச் சிசுபாலன் முதலிய மன்னவர்களின் கர்வத்தை அடக்கும் பொருட்டு உன்னைக் கொண்டு வந்தேனன்றி வேறில்லை. ஆகையால் நீ இப்பொழுது உன்னிஷ்டப்படி உனக்குத் தகுந்த மேலான மன்னவனைப் பணிந்து இஹ பரலோகஸுகங்களை அனுபவிப்பாயாக. மற்றும், நான் மனையிலும் மனைவியிடத்திலும் விருப்பமின்றி உதாஸீனமாயிருப்பவன். ஸ்த்ரீ ஸம்போகஸுகம் புத்ர ஸுகம் பணம் இவைகளில் விருப்ப முடையவனல்லேன். ஆத்மானுபவம் கைகூடப்பெற்றிருக்கையால் எதிலும் விருப்பமற்றவன். ஸ்வயம் ப்ரகாசமான ஆத்மஸ்வரூபத்தின் தோற்றத்தினால் ப்ராக்ருத சேஷ்டைகள் எவையும் தீண்டப்பெறாதவன். (புருஷன் இல்லறவாழ்க்கையில் உதாஸீனமாயாவது காமமற்றவனாயாவது இருப்பானாயின் ஸ்த்ரீகளுக்கு அது பொறுக்க முடியாது. ஆகையால் நீ இத்தகையனான என்னைத் தெரியாமல் வரித்தனை; இப்பொழுதாயினும் வேறொரு மன்னவனைப் பணிந்து வாழ்வாயாக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்னை எப்பொழுதும் பிரியாதிருக்கையால் அவனுக்குத் தான் மிகவும் அன்பளென்று நினைத்துக் கர்வமுற்றிருக்கின்ற ருக்மிணியைக் குறித்து அவளுடைய கர்வத்தைப் போக்கும்பொருட்டு இன்னம்

மொழிந்து பேசாதிருந்தான். மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவும் தனக்கு அன்பனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் மொழிகையில், ருக்மிணி தான் என்றும் கேளாத அந்த அப்ரியமான வார்த்தையைக் கேட்டுப் பயந்து மனத்தில் நடுக்கம் உண்டாகப் பெற்றுக் கண்ணுங் கண்ணீருமாகி அபாரமான சிந்தையில் ஆழ்ந்தனள். அந்த ருக்மிணி, நகங்களால் சிவந்த ஒளியுடையதும் அழகியதுமான பாதத்தினால் பூமியைக் கீறுவதும் மெய்கரைந்து வருகையால் கலங்கியிருக்கின்ற கண்ணீர்களால் சந்தனம் பூசப்பெற்ற கொங்கைகளை நனைப்பதுமாகித் துக்கத்தின் மிகுதியால் வாயைத் திறந்து பேசமுடியாமல் தலையைக் கவிழ்ந்து நின்றிருந்தாள். அப்ரியமான வார்த்தையைக் கேட்ட மஹாதுக்கத்தினாலும் நம்மைக் கைவிடுவானோ என்னவோவென்கிற பயத்தினாலும் சோகத்தினாலும் மதி மழுங்கப்பெற்ற அந்த ருக்மிணியின் ஹஸ்தத்தினின்று வளைகள் நழுவின. அவள் கையில் தரித்திருந்த சாமரமும் அதினின்று நழுவிப் பூமியில் விழுந்தது. தழதழுத்த மதியுடைய அவளுடைய தேஹமும் மோஹத்தை அடைந்து தலைமயிர்கள் அவிழ்ந்து விரியப் பெற்று நிற்கமுடியாமல் காற்றில் அடிபட்ட வாழைமரம்போல் பூமியில் விழுந்தது. மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பரிஹாஸத்தின் திறமையை அறியாத அன்ப நாயகியின் ப்ரேம பாசத்தைக் கண்டு மனஇரக்கமுற்றுப் பயந்தவன் போல உடனே நடுங்கினான். சதுர்ப்புஜனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் மஞ்சத்தினின்று வேகமாக இறங்கி அந்த ருக்மிணியை எடுத்துத் தலைமயிர்களை முடிந்து தாமரை மலர்போன்ற ஹஸ்தத்தினால் அவளுடைய முகத்தைத் துடைத்தான். அப்பரமன் நீர்த்துளிகள் பெருகப் பெற்ற

கண்களையும் சோகநீர்களால் நனைந்த கொங்கைகளையும் துடைத்துப் புஜங்களால் அணைத்து நல்வார்த்தைகள் பேசத் தெரிந்தவனும் ஸத்புருஷர்களுக்குக் கதியுமாகிய அப்பகவான் பரிஹாஸத்தின் ப்ரௌடியை (மிடுக்கை) அறியாமையால் ப்ரமித்த மனமுடையவளும் அங்ஙனம் பரிஹாஸஞ் செய்யத்தகாதவளும் தன்னையொழிய வேறொரு விஷயம் அறியாதவளும் மனஇரக்கத்திற் கிடமாயிருப்பவளும் நல்லியற்கையுடையவளுமாகிய அந்த ருக்மிணியை மன இரக்கத்துடன் நல்வார்த்தைகளால் ஸமாதானப் படுத்தினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான் :— விதர்ப்பராஜன் புதல்வி! என்மேல் அஸூயைப் படவேண்டாம். நீ என்னையே பரமகதியாகப் பற்றி யிருப்பவளென்பது எனக்குத் தெரியும். அழகிய அங்கமுடையவளே ! ஆயினும் உன் வார்த்தையைக் கேட்க விரும்பியும் ப்ரணய கோபத்தினால் உதடு துடிக்கப்பெற்றுக் கோபத்தினால் கண்டஸ்தலத்தில் பரவுகின்ற நோக்கத்தினால் சிவந்த கடைக்கண்களுடையதும் அழகிய புருவ நெரிப்புக்கள் அமைந்திருப்பதுமாகிய உன்முகத்தைப் பார்க்க விரும்பியும் நான் இங்ஙனம் பரிஹாஸஞ் செய்தேனன்றி வேறில்லை. பயப்படுந்தன்மையுடையவளே ! கோபமுடையவளே ! காதலியுடன் ப்ரணயகலஹங்களால் பொழுது போக்குகையே க்ருஹஸ்தர்களுக்கு இல்லறவாழ்க்கையில் விளையும் மேலான லாபமல்லவா? (ஆகையால் 'கலஹத்தில் என்ன குதூஹலம்? என்ன ஸுகம் ?' என்று சங்கிக்க வேண்டாம்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே ! அந்த ருக்மிணி இங்ஙனம் பகவானால் நன்கு ஸமாதானஞ் சொல்

லப் பெற்று அவன் சொன்னதெல்லாம் பரிஹாஸமென்று தெரிந்துகொண்டு நம்மை இவன் கைவிடுவானோ என்னவோ வென்கிற பயத்தைத் துறந்தாள். பரத வம்சாலங்காரனே! அவள் வெட்கமும் சிரிப்பும் அமைந்து ஸ்னேஹமும் நிறைந்து அழகியதுமான கடைக்கண்ணோக்கத்தினால் புருஷஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டே அவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தாள்.

ருக்மிணி சொல்லுகிறாள்:—தாமரைக் கண்ணனே நான் உனக்குத் தகுந்தவளன்றென்று நீ மொழிந்தனை. இது இப்படிதான். (நீ மொழிந்தது வாஸ்தவமே.) நீ ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் அளவற்றவன் மற்றும், ஷாட்குண்ய பூர்ணனும் மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவும் தனக்கு அஸாதாரணமான நித்யவிபூதியில் களிப்புற்றிருப்பவனுமாகிய நீ எங்கே? உன் மனோபாவத்தைத் தொடர்ந்து உனக்குப் பாரதந்த்ரையாயிருப்பவளும் எனக்குள்ள இத்தன்மையை அறியாதவர்களால் உபாஸிக்கப்பட்ட பாதங்களுடையவளுமாகிய நான் எங்கே? (தெரிந்தவர்கள் என்னை ஸ்வதந்த்ரையென்று உபாஸிக்க மாட்டார்கள்; உனக்குப் பாரதந்த்ரையாக நினைத்து என்னை உனக்குப் புருஷகாரமாகக் கொண்டு என்னோடு கூடிய உன்னையே உபாஸிப்பார்கள். ஆகையால் நான் உனக்குத் தகாதவளென்பது வாஸ்தவமே) மூன்று லோகங்களையும் உட்படுத்திக்கொள்ள வல்ல பெரிய அடிவைப்புக்களை யுடையவனே! ராஜர்களிடத்தினின்று பயந்துதான் ஸமுத்ரத்தினிடையில் சயனித்துக்கொண்டிருக்கின்றனை. இது உண்மையே. (மூன்று அடிகளால் உலகங்களை யெல்லாம் அளந்துகொண்ட மஹானுபாவனாகிய நீ ராஜர்களிடத்தினின்று பயந்து ஸமுத்

ரத்தைச் சரணம் அடைந்தனே யென்றால் இதை எவன் நம்புவான்?) ஆனால் ஸமுத்ரத்தில் வாஸஞ் செய்வது ஏதுக்காக வென்றால், என் தந்தையாகிய க்ஷீரஸமுத்ரத்தினிடத்தில் ப்ரீதியுடையவனாகையால் அதை வெளியிடும் பொருட்டு அதைப் போன்ற ஸமுத்ரமாகிய லவண ஸமுத்ரத்தில் வாஸஞ் செய்கின்றனேயன்றி வேறொன்று மில்லை. நீ எனக்கு மிகவும் அன்பிற்கிடமானவன். ஆகையால் என்னிடத்திலும் உனக்கு ப்ரீதி அளவற்றிருக்கின்றது. அந்த ப்ரீதியின் மிகுதியால் என்னைச் சேர்ந்தவர்களிடத்திலும் நீ ப்ரீதியுடையவனாயிருக்கின்றனே. பலிஷ்டர்களோடு விரோதம் ஏற்றுக்கொண்டிருக்கிறேனென்றனே. அது விபரீதமே. இந்த்ரியங்களை வெல்ல முடியாமல் சப்தாதி விஷயங்களில் கால் தாழ்ந்த மூடர்கள் உன்னை ஓயாமல் த்வேஷிக்கிறார்களென்பதை இப்படி மாற்றிச் சொல்லுகின்றனே. நான் ராஜாஸனத்தைத் துறந்திருப்பவனென்று மொழிந்தனே. அது உண்மையே. ஏனென்றால், உன்னுடைய ப்ருத்யர்களே ஸிம்ஹாஸனத்தில் ஏறுவது பெரிய நரகத்திற்கிடமென்று அதைத் துச்சமாக நினைத்துத் துறக்கின்றார்கள். உபய விபூதி நாதனாகிய நீ ஸிம்ஹாஸனத்தைத் துறந்திருக்கிறாயென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? என்னுடைய ஜாதி முதலியவை இன்னவை யென்று ஸ்பஷ்டமாகத் தெரியாவென்று மொழிந்தனே. அதுவும் உண்மையே. உன்பாதாரவிந்தங்களின் மகரந்தத்தைப் பருகி மனக்களிப்புற்றிருக்கின்ற முனிவர்களுக்குங்கூட உன்னுடைய உண்மை ஸ்பஷ்டமாகத் தெரியாது. பசுக்களைப்போல ஆஹாரம் நித்ரை பயம் மைதுனம் இவற்றைத் தவிர மற்றொன்றையும் அறியாத மூடர்களுக்கு உன்னுடைய உண்மை வருந்தியும் அறிய முடியாதென்பதைப் பற்றிச்

சொல்லவேண்டுமோ? நான் லோகமர்யாதையைக் கடந் தவனென்றனை. அதுவும் உண்மையே. ஏனென்றால், உன்னை எவர் பணிகிறார்களோ அவர்களுடைய நடத் தையுங்கூட அலௌகிகமா யிருக்கின்றது. ஸர்வேச் வரனும் மஹானுபாவனுமாகிய உன் நடத்தை அலௌ கிகமென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? நான் ஒன்றுமில்லாதவ னென்றனை; அது வாஸ்தவமே. உனக் குக் கிடைக்கக் கூடாதது எதுவுமே இல்லை யல்ல வா? ப்ராணிகளிடத்தில் பூஜையைப் பெற்றுப் புசிக் கின்ற (பூஜிக்கத் தகுந்தவர்களான) ப்ரஹ்மாதி தேவ தைகளுங்கூட உனக்குப் பூஜையை அளிக்கின்றார்களென் றால், ஸர்வேச்வரனாகிய உனக்கு ஒன்றுமில்லாமையாகிற ஏழ்மை எப்படி அமையும்? ஒன்றுமில்லாத ஏழையர் களுக்கே நான் அன்பனாயிருப்பவனென்றனை; அதுவும் ஸத்யமே. உன்னையொழிய மற்றொன்றையும் உடையவரல் லாத நாரதர்முதலிய மஹரிஷிகளுக்கு நீ அன்பனாயிருக் கின்றனை. அவர்களும் உனக்கு மிகவும் அன்பர்களாயிருக் கிறார்கள். தனம் குலம் முதலியவைகளால் நிறைந்தவர்க ளென்று தம்மைத் தாமே அபிமானித்து விவேகமற்றி ருக்கும் மூடர்கள் இந்த்ரியங்களின் த்ருப்தியை விரும்பி அதற்காக முயன்று காலஸ்வரூபனாகி ஆயுளைப்பறிக் கின்ற ஸர்வேச்வரனாகிய உன்னை அறிகிறதில்லை. ஆகை யால் பணம் முதலியவைகளால் நிறைந்தவர்கள் என் னைப் பெரும்பாலும் பணிகிறதில்லை யென்று நீ மொழிந் ததும் உண்மையே. ஆசைப்படத்தகுந்த ஸமஸ்த புரு ஷார்த்தங்களும் நீயே. அவரவர் விரும்பும் பலன்களும் நீயே. (தவங்களால் ஸாதிக்கப்படுகிற இஷ்டமான பல னும் நீயே. அனைவர்க்கும் மிகவும் இஷ்டமான பலன் ஸுகமே. நீயோவென்றால் எல்லையில்லாத மஹாநந்த

ஸ்வரூபன். தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற நான்கு வகைப் புருஷார்த்தங்களையும் நிறைவேற்றிக்கொடுப்பவனும் மஹாநந்தஸ்வரூபனுமாகிய உனக்கு அற்ப ஸுகங்களைக் கொடுப்பவைகளான பணம் முதலியவற்றால் தம்மை நிறைவாளரென்று அபிமானித்துக்கொண்டிருக்கிற மற்றவர்கள் எங்ஙனம் இணையாவார்கள்? நல்லமதியுடையவர்கள் உனக்குப் பணிவிடை செய்ய விரும்பி மற்றவைகளையெல்லாம் துறக்கிறார்கள். அவர்கள் உனக்குத் தாழ்ந்தவர்களாயினும் அவர்களுக்கும் உனக்கும் சேர்த்தி உரியதேயாம். ப்ரபுவுக்கும் ப்ருத்யனுக்கும் தாரதம்யம் இருக்கிலும் அவர்களுக்குச் சேர்த்தி உரியதன்றென்று எவன் சொல்லுவான்? ஆகையால் உனக்குப் பணிவிடை செய்ய விரும்புகின்ற எனக்கும் உனக்கும் நேர்ந்த இந்த ஸம்பந்தம் மிகவும் உரியதேயாம். ஆணும் பெண்ணுமாய்க் கலக்குங் கலவியில் விருப்பமுற்று அதனால் விளையும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கின்ற ஆண்பெண்களுக்கு ஒருவரோடொருவர்க்கு நேரும் ஸம்பந்தம் உரியதன்றேயன்றி ப்ரபுவும் பணிக்காரியுமாகிய நம்மிருவர்க்கும் நேர்ந்திருக்கிற ஸம்பந்தம் புகழத்தகுந்ததேயாம். நீ ஸமஸ்தபூதங்களிடத்திலும் நட்புடையவர்களாகி எதற்கும் த்ரோஹஞ் செய்யாதிருக்கின்ற முனிவர்களால் புகழப்பட்ட மஹிமையுடையவன். நீ ஸமஸ்தலோகங்களுக்கும அந்தராத்மாவாயிருப்பவன்; வேண்டினவர்களுக்குத் தன்னையுங் கொடுப்பவன். அந்த முனிவர்கள் இத்தகையனான உன்னைப் புகழ்வது தாங்கள் ஸத்தை பெறுதற்கேயன்றி வேறொரு ப்ரயோஜனத்திற்காக வன்று. ஆகையால் 'பிச்சைக்காரர்களால் வீணாக நான் புகழப்பட்டவன்' என்று நீ மொழிந்தது உண்மையே. ஸமஸ்த பூதங்களுக்

ரும் த்ரோஹஞ் செய்யாமல் நட்புடையர்களாயிருக்கை யாகிற பிச்சையை வேண்டுகிறவர்களே நீ சொன்னபிச்சைக்காரர்கள். இத்தகையனான உன்னை அறிந்து உன்னுடைய புருவநெரிப்பினால் தூண்டப்பட்ட காலத்தின் வேகத்தினால் தங்கள் மனோரதங்களெல்லாம் த்வம்ஸமாகப்பெற்ற ப்ரம்ஹன் இந்த்ரன் முதலிய தேவதைகளையும் துறந்து உன்னை நான் வரித்தேன். ப்ரஹ்மாதிகளைத் துறந்த நான் அற்பர்களான சிசுபாலாதிகளைத் துறந்தமையைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? இது நான் நன்றாக விசாரித்துச் செய்த கார்யமேயன்றி விசாரிக்காமல் செய்த கார்யமன்று. நாதா! நீ சார்ங்கமென்னும் தனுஸ்ஸின் சப்தத்தினால் ஜராஸந்தன் சிசுபாலன் முதலிய ராஜர்களை ஓடத்துரத்தி ஸிம்ஹம் மற்ற ம்ருகங்களைத் துரத்தித் தன்பாகத்தைப் பறிப்பதுபோல நீ என்னைப் பறித்துக்கொண்டு வந்தனை. இப்படியிருக்க, நான் அந்த ராஜர்களிடத்தினின்று பயந்து ஸமுத்ரத்தைச் சரணம் அடைந்தேனென்று நீ சொன்ன வார்த்தை அறியாத மூடர்களை வஞ்சிப்பதற்கேயன்றி உண்மையன்று. உன் பதவியைத் தொடர்ந்த அங்கன் ப்ருது பரதன் யயாதி கயன் முதலிய ராஜஸ்ரேஷ்டர்கள் உனக்குப் பணிவிடை செய்ய விரும்பித் தங்களையொழிய வேறொரு அரசு நடையாடாமல் தாங்களே தனியரசாக அனுபவித்து வந்த ராஜ்யத்தைத் துறந்து வனத்திற்குச் சென்றார்கள். அவர்கள் என்ன வருத்தம் அடைந்தார்கள்? இங்கேயே உன்னை அனுபவிக்கையாகிற ஸுகத்தை அடைந்து கடைசியில் உன்னுடைய ஸாரூப்யத்தையும் பெற்றார்கள். ஆகையால் என்பதவியைத் தொடர்ந்தவர்கள் பெரும்பாலும் வருந்துவார்களென்று நீ மொழிந்தது உண்மையன்று. தன்னுடைய நன்மை தீமைகளை

ஆராய்ந்தறியுந்திறமையுடைய பெண்பிள்ளை எவள்? தான கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமாயிருக்கின்ற உன்னுடைய பாதாரவிந்தங்களின் [1] கந்தத்தை அனுதரித்து மரணம் அடையுந்தன்மையனும் எப்பொழுதும் பெரும்பயமுடையவனுமாகிய மற்றொரு புருஷனை அடைவாள்? உன்பாதாரவிந்தங்களின் கந்தத்தை மோருவதே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் சிறந்த புருஷார்த்தம். அது ஸமஸ்தவிதமான செல்வப் பெருக்குகளுக்கும் விளைநிலமாயிருக்கும். பெரியோர்கள் அதையே எப்பொழுதும் மோந்து கொண்டிருப்பார்கள். இத்தகைய உன்பாதாரவிந்தங்களின் பரிமளத்தைத் துறந்து நான் மற்றொருவனை எப்படி வரிப்பேன்? ஆகையால் அத்தகையனும எனக்கு அனுரூபனும் உலகங்களுக்கெல்லாம் நாதனும் அவற்றிற்கு அந்தராத்மாவாயிருப்பவனும் இஹத்திலும் பரத்திலும் விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்றவனுமாகிய உன்னையே நான் பணிகிறேன. நீ அவதரிக்கும்பொழுதெல்லாம் உன்னுடன் பிறந்து உன்னைப் பிரியாமல் உனனோடு கூடவே ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற எனக்குப் பாபத்திற்கிடமான ஸம்ஸாரத்தினின்று கரையேற்றுபவனும் தனனைப் பணிகிறவர்களை அனுஸரிக்குந் தனமையனுமாகிய உன்னுடைய பாதாரவிந்தங்களே சரணமாயிருக்கும்படி அருள்புரிவாயாக. தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாதவனே! சத்ருக்களை அழிப்பவனே! நீயும் ருத்ரன ப்ரஹ்மன முதலிய தேவதேவர்களின ஸபைகளில் பாடப்பட்ட உன்கதைகளும் எவளுடைய செவியில் படவில்லையோ அத்தகையபாக்யமற்றவளுக்கு, ஸ்த்ரீகளின் பெருதனம் தலையெடுத்த வீடுகளில் கழுதைகளைப்போ

1. கந்தம்-வாஸனை.

லப் பாரம் வஹிப்பவர்களும் எருதுகளைப்போல ஓயாமல் உழைப்பவர்களும் நாய்கள்போல அவமதிக்கப்பட்டு வீட்டைக்காக்கும்பொருட்டு த்வாரங்களில் இருப்பவர்களும் பூனைகள்போல மன இரக்கத்திற்கிடமாகிப் பாதத்தினால் உதைக்கப்பெற்றும் அடிக்கடி விடாமல் தொடர்ந்திருப்பவர்களும் பணிக்காரர்களுமாகிய நீ சொன்ன மன்னவர்கள் கணவர்கள் ஆவார்களாக். எவள் உன்னுடைய பாதாரவிந்தங்களின் மகரந்தத்தை என்றும் மோந்தறியாளோ, அவள் மதிமயங்கித் தோல் மீசை தாடி ரோமம் நகங்கள் கேசங்கள் இவைகளால் மறைக்கப்பட்டு உள்ளே மாம்ஸம் எலும்பு ரக்தம் புழு அமேத்யம் கபம் வாதம் பித்தம் இவையுடையதுமான சரீரமுடையவனும் ஜீவச்சவம்போன்றவனுமாகிய புருஷாதமனை 'இவன் எனக்கு அன்புள்ள காதலன்' என்று மதித்துப் பணிகின்றாள். தாமரைக்கண்ணனே! தன்னைத்தானே அனுபவிக்கையால் நிறைவாளனாகி எல்லாவற்றிலும் உதாஸீனனும் என்னிடத்தில் காதலனுக்குக் காதலியிடத்திலுள்ள கண்ணோக்கம்போன்ற விலக்ஷணமான கண்ணோக்கமற்றவனுமாகிய உன்னுடைய பாதாரவிந்தங்களில் எனக்கு அனுராகம் என்றும் உண்டாயிருக்குமாக. நீ இந்த ப்ரபஞ்சத்தின் ஸம்ருத்திக்காக ரஜோகுணத்தை அதிகமாக ஏற்றுக்கொண்டு என்னைப் பார்க்கின்றனையே; அதுவே எனக்கு நீ செய்யும் பேரருள். (நீ இல்லறவாழ்க்கையில் உதாஸீனனென்பதும் ப்ராக்ருதர்களைப்போல் காமுகனன்றென்பதும் உண்மையே. ஆயினும் நான் பாதாரவிந்தங்களில் ப்ரீதியை மாத்ரமே வேண்டுகிறேனன்றி அதற்கு மேல் மற்றொன்றையும் நான் விரும்பவில்லை. கேட்போர் இது நிச்சயமென்று நினைக்கும்படி நீ இப்படி

என்னைக் கடோரமாகப் பேசினும், உனக்கு என்னி டத்தில் கருணை மாறாது. விசித்ரமான ப்ரபஞ்சத்தைப் படைத்து அதை நான் கண்டு அனுமோதனஞ் செய்யும் பொருட்டு நீ என்னைப்பார்க்கின்றனையே; அதுவே எனக் கு நீ செய்யும் பெரிய கருணையாம்.) மதுஸூதனா! 'உனக் குத்தகுந்த காதலனைக்கண்டு வரிப்பாயாக' என்றது முத லாக நீ மொழிந்ததெல்லாம் உண்மையே. ஏனென்றால், உலகத்தில் மணப்பெண்களுக்குத் தன்னை மேல்விழுந்து வரிப்பவனிடத்தில் ப்ரீதியில்லாமல் வேறொருவனிடத் தில் ப்ரீதி உண்டாயிருப்பது உண்டு. காசிராஜன் புதல்வி யாகிய அம்பையென்பவள் ஸால்வனிடத்தில் ப்ரீதியுற் றிருந்தாளல்லவா? விவாஹமானபின்பும் பரபுருஷனைப் புணர விரும்பும் [1] வனிதையினுடைய மனம் புதிய புதிய புருஷனையே தேடிக்கொண்டு செல்லும். புத்தியுடைய வன் அத்தகைய மடந்தையைத் தன்னிடம் வைத்துக் கொண்டு போஷிக்கலாகாது. அப்படி போஷித்துக் கொண்டுவருவானாயின் இஹபரலோகஸுகங்கள் இரண் டினின்றும் நழுவுவான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—நல்லியற்கையுடைய வளே! ராஜபுத்ரீ! இந்த உன்வார்த்தையைக் கேட்க விரும்பியே நான் உன்னை இங்ஙனம் பரிஹாஸஞ் செய் தேனன்றி வேறில்லை. நான் சொன்னதை அனுஸரித்து நீ ஏதேது மொழிந்தனையோ, அதெல்லாம் உண்மையே. என கருத்தையெல்லாம் நீ நன்றாகத் தொகுத்து மொ ழிந்தனை. வெகுமதிக்கத்தகுந்த மனவுயர்த்தியுடைய வளே! என்னைப் பிரியாதிருப்பதற்காக வேறு விருப் பங்களெல்லாம் இல்லாதிருக்கும்படி எவ்வெந்த மனோர

1. வனிதை-ஸ்த்ரீ

தங்களை விரும்புகின்றனையோ, அவையெல்லாம் என்னி டத்தில் மாறாத பக்தியுடைய உனக்கு என்றும் ஸித்த மாகவே யிருக்கின்றன. மங்களஸ்வபாவமுடையவளே! (உனக்கு அவ்விஷயத்தில் ஒரு குறையும் இல்லை. அவற் றை நீ விரும்ப வேண்டியதுமில்லை; நான் கொடுக்கவே ண்டியதுமில்லை) தோஷமற்றவளே! ஸ்த்ரீகளுக்குக் கண வனிடத்தில் எவ்வளவு ப்ரேமம் இருக்கவேண்டுமோ அவ்வளவு ப்ரேமமும் உனக்குப் பூர்ணமாயிருக்கிற தென்பதையும், உன்னுடைய பதிவ்ரத்யத்தையும் கண் டேன். உன்னை நான் இத்தகைய வாக்யங்களால் சலிக் கும்படி செய்யப் பார்க்கினும் உன்புத்தி என்னிடத்தி னின்று சிறிதும் சலிக்கவில்லை. எவர்கள் க்ஷுத்ரமனோ ரதங்களால் மனங்கலங்கப்பெற்று மோக்ஷங்கொடுக்கும் ப்ரபுவாகிய என்னை ஆணும்பெண்ணுமாய்க் கலந்தனுப விக்கும் ஸம்போகஸுகத்தை விரும்பித் தவத்தினா லும் வ்ரதானுஷ்டானத்தினாலும் உபாஸிக்கிறார்களோ, அவர்கள் என்னுடைய மாயையினால் மோஹிக்கப்பட்ட வர்கள். எவர்கள் மோக்ஷமாகிற பெருஞ்செல்வத்தை யும் மற்ற செல்வங்களையும் கொடுக்கவல்ல என்னைத் தவம் முதலியவற்றால் அருள்புரிவித்து என்னிடத்தி னின்று மோக்ஷம் தவிர மற்ற செல்வங்களைப்பெற விரும் புகிறார்களோ, அவர்கள் மந்தபாக்யர்களே. ஏனென் றால், அவர்கள் விரும்பும் விஷயங்கள் அற்பஸுகங்களா கையால் நரகத்திலும் கிடைக்கக்கூடியவைகளே. ஆகை யால் நன்றென்று தோற்றுகிற தம்பதிகளின் ஸங்கமம் (ஆண்பெண்களின் கலவி) நரகமே. ஆகையால் அதை என்னிடத்தினின்று பெற விரும்புகிறவர்கள் பாக்யஹீ னர்களே. 'மனையாளே! நீ என்னிடத்தில் ஸம்ஸாரத்தி னின்று விடுவிக்கும்படியான அனுவ்ருத்தி (பணிவிடை)

செய்தனே. இத்தகைய அனுவ்ருத்தி துஷ்டஜனங்க ளால் வருத்தியும் செய்யமுடியாது. துரபிப்ராயமுடைய வனும் இந்த்ரியங்களின் த்ருப்தியில் ஊக்கமுடைய வனும் வஞ்சனத்தில் கண்வைத்தவனுமாகிய மடீக்கைதக் கோவென்றால் எவ்வளவு வருத்தியும் செய்யமுடியாது. சிறந்த மனவுயர்த்தியுடையவளே! உன்னைப்போன்ற அன்புள்ள மனைவியை நான் எந்த க்ருஹத்திலும் காண வில்லை. நீ உன் விவாஹ ஸமயத்தில் உன்னை மணம் புரி வதற்காக வந்திருக்கின்ற பெருப்பெரிய மன்னவர்களை யெல்லாம் பொருள் செய்யாமல் உன்னுடைய நற்கதை களைக் கேட்டிருக்கின்ற எனக்கு ரஹஸ்ய ஸமாசாரத் தைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்குரிய அந்தணனை அனுப்பினையல்லவா? மற்றும், நான் யுத்தத்தில் உன் ப்ராதாவை ஜயித்து அவனை விரூபஞ்செய்ததையும் அநிருத்தனுடைய விவாஹமஹோத்ஸவத்தின்பொழுது [1]அக்ஷகோஷ்டி நடந்துகொண்டிருக்கும் ஸமயத்தில் அந்த ருக்மியைக் கொன்றதையும் கண்டு நீ என் னுடைய விரஹத்திற்குப் பயந்து அந்த வருத்தங்களை யெல்லாம் பொறுத்துக்கொண்டிருந்தனையன்றி ஒன்றும் பேசவில்லை. இத்தகைய உன்குண ஸமூஹத்தினால் நான் உனக்குத் தோற்றேன். நீ என்னைப் பெறுதற்காகத் 'தாம ரைக்கண்ணனே! உன்னுடைய அருள் பெறேனாயின் ப்ராணன்களை இழப்பேன். நூறு ஜன்மங்கள் பெறினும் உனக்கே நான் வாழ்க்கைப்படவேண்டும்' என்று ஸமா சாரத்தை விவரித்துச் சொல்லித் தூதனை அனுப்பினை யே, அப்பொழுது நான் வருதற்குச் சிறிது விலம்பஞ் செய்கையில் நீ இந்த ஜகத்தையெல்லாம் சூன்யமாக

---

1. பாசகையாட்டம் நடக்குங் கோஷ்டி.

நினைத்து மற்றொருவனுக்குத் தகாத இந்தச் சரீரத்தை நான் துறக்க விரும்புகிறேனென்று நிச்சயித்திருந்தனை யே, அதற்கு நான் உன்னிடத்தில் வெறுமனே ஸந்தோஷப்படுகிறேனன்றி என்னால் அதற்கு எவ்விதத்திலும் ப்ரதி செய்ய முடியாது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் மனுஷ்ய லோகத்தை அனுஸரித்து நடக்க முயன்றிருக்கையால் இங்ஙனம் ஸரஸபரிஹாஸகோஷ்டிகளை நடத்திக்கொண்டு ஆத்மானுபவத்தினால் நிறைவாளனாயினும் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரமாகிய ருக்மிணியுடன் ஸர்வகாலமும் க்ரீடித்துக்கொண்டிருந்தான். அறுபதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணனுடைய புத்ர பௌத்ர பரம்பரையும், அநிருத்த விவாஹமும், ருக்மியின் வதமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பார்யைகளில் ஒவ்வொருத்தியும் பப்பத்து பிள்ளைகளைப் பெற்றாள் அப்புதல்வர்கள் தங்களுடைய உருவம் குணம் முதலியவற்றின் ஸம்ருத்தியால் தங்கள் தந்தையாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக்காட்டிலும் சிறிதும் குறையாதிருந்தார்கள். அந்த ராஜபுத்ரிகள் ஸ்ரீக்ருஷ்ணன் தங்கள் க்ருஹத்தை எப்பொழுதும் விடாமல் அவ்விடத்திலேயே நிலையாயிருப்பதைக் கண்டு அந்தப் பகவானுடைய உண்மையை அறியாமல் ஒவ்வொருத்தியும் தன்னை அவனுக்கு மிகவும் அன்பிற்கிடமாக நினைத்துக்கொண்டாள். அம்மாதரசிகள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகிய தாமரைமலர்போன்ற முகமும் நீண்ட புஜதண்டங்களும் நீண்டு மலர்ந்த

களும் ப்ரீதியோடும் சிரிப்போடுங்கூடிய கண்ணோக்கங்க ளும் அழகிய உரைகளும் ஆகிய இவைகளால் மதிமயங் கினர்களேயன்றித் தங்கள்விலாஸங்களால் சிறைவாள னாகிய அவனுடைய மனத்தைப் பறித்து வசப்படுத்திக் கொள்ள வல்லராகவில்லை. அந்தப் பதினாயிரம் பத்னி களும் புன்னகையோடு கூடின கடைக்கண்ணோக்கத் தினால் கருத்தை வெளியிடுவதும் மனத்தைப் பறிக்குந் தன்மையதுமாகிய வளைந்த புருவநெரிப்பினால் அனுப்பப் பட்ட ஸுரதவ்ருத்தாந்தங்களாகிற மந்த்ரங்களில் ஸமர்த்தங்களான மன்மத பாணங்களாலும் காமசாஸ் த்ரங்களில் ப்ரஸித்தங்களான மற்றும் பலவகைக்கருவி களாலும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய மனத்தைக் கலக்க வல்ல ராகவில்லை. ப்ரஹ்மாதிகளுங்கூட எவனுடைய உண் மையை அறிய வல்லரல்லரோ, அத்தகையனும் ஸ்ரீமஹா லக்ஷ்மிக்கு வல்லபனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனை அம் மடந்தையர்கள் கணவனாகப் பெற்று ஸர்வகாலமும் வளர்ந்து வருகின்ற ஸந்தோஷமுடையவர்களாகி அனு ராகமும் புன்னகையும் அமைந்த கண்ணோக்கங்களா லும் புதுப்புதிய ஸம்போக ஸுகங்களாலும் மேன் மேலும் பேராவலுற்று அவனைப் பணிந்து வந்தார்க ளன்றி அவனுடைய மனத்தை வசப்படுத்தச் சிறிதும் வல்லராகவில்லை. அம்மாதரசிகள் தாங்கள் நினைத்தபடி செய்யவல்ல அளவற்ற தாஸிகளுடையவர்களாயினும் எதிர்கொள்வது சிறந்த ஆஸனம் அளிப்பது பாதங்களை அலம்புவது தாம்பூலங் கொடுப்பது பாதங்களைப் பிடி த்து இளைப்பாறச் செய்வது சாமரம் வீசுவது கந்தம் பூசுவது பூமாலை சூட்டுவது தலைவாரி முடிப்பது படுக்கை அமைப்பது ஸ்நானஞ் செய்விப்பது உபஹா ரங்கொடுப்பது முதலியவைகளால் தாங்களே நேரில்

அவனுக்குப் பணிவிடை செய்தார்கள். பவ்வத்து பிள்ளைகளையுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பார்யை களில் ருக்மிணி முதலியவர் எண்மர் ப்ரதான மஹிஷிக ளென்று முன்பு மொழிந்தேனல்லவா; அவர்களுடைய பிள்ளைகளான ப்ரத்யும்னன் முதலியவர்களைச் சொல்லு கிறேன்; கேட்பாயாக. ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ருக்மிணி யிடத்தில் சாருதேஷ்ணன், ஸுதேஷ்ணன், சாருதே ஹன், ஸுசாரு, சாருகுப்தன், பத்ரசாரு, சாருசந்த் ரன், அதிசாரு, சாருமான் ஆகிய இவ்வொன்பதின் மரும் ப்ரத்யுமனனை முன்னிட்டுக்கொண்டு பிறந்தார் கள். இப்பதின்மரும் ஸ்ரீக்ருஷ்ணனோடொத்து விளங் கினார்கள். பானு, ஸுபானு, ஸ்வர்ப்பானு, ப்ரபானு, பானுமான், சந்த்ரபானு, ப்ருஹத்பானு, அதிபானு, ஸ்ரீபானு, ப்ரதிபானு ஆகிய இப்பதின்மரும் ஸத்ய பாமையின் பிள்ளைகள். ஸாம்பன், ஸுமித்ரன், புரு ஜித்து, சதஜித்து; ஸஹஸ்ரஜித்து, விஜயன், சித்ர கேது, வஸுமான், த்ரவிணன், க்ரது ஆகிய இப் பதின்மரும் ஜாம்பவதியின் பிள்ளைகள். இந்த ஸாம்பன் முதலியவர்கள் பதின்மரும் தந்தையோடொத்தவர்கள். பானுசந்த்ரன், அஸ்வஸேனன், சித்ரகு, வேகவான், வ்ருஷன், ஆமன், சங்கு, வஸு, த்ருதி ஆகிய இப்பதின் மரும் நாக்னஜிதியின் பிள்ளைகள். ஸ்ருதி, கவி, வ்ரு ஷன், வீரன், ஸுபாஹு, பத்ரன், சாந்தி, தர்சன், பூர்ணமாஸன், ஸோமகன் ஆகிய இப்பதின்மரும் காளிந் தியின் பிள்ளைகள். இவர்களில் பத்ரனென்பவனை ஏகல னென்றும் வழங்குவதுண்டு. ப்ரஜங்கன், காத்ரவான், ஸிம்ஹன், பலன், ப்ரபலன், ஊர்த்வகன், மஹாசக்தி: ஸஹன், ஓஜன், அபராஜிதன் ஆகிய இப்பதின்மரும் லக்ஷ்மணையின் பிள்ளைகள் வ்ருகன், அர்க்கன், அனி

லன், க்ருத்ரன், பஹ்வன்னன், அன்னுதன், மஹாசன், பவனன், வஹ்னி, க்ஷுதி ஆகிய இப்பதின்மரும் மித்ரவிந்தையின் பிள்ளைகள். ஸங்க்ராமஜித்து, ப்ருஹத்ஸேனன், சூரன், ப்ரஹரணன், அரிஜித்து, ஜயன், ஸுபத்ரன், வாமன், ஆயு, ஸத்யகன் ஆகிய இப்பதின்மரும் பத்ரையின் பிள்ளைகள். பலராமனுக்கு ரோஹிணியிடத்தில் தீப்திமான், தாம்ரஜித்து முதலியவர்கள் பிறந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனுடைய புதல்வனும் மஹாபலிஷ்டனுமாகிய ப்ரத்யும்னன் ருக்மியின் புதல்வியாகிய ருக்மவதியென்பவளை மணம் புரிந்து போஜகடமென்னும்பட்டணத்தில் வஸித்துக்கொண்டிருக்கையில் அவனுக்கு அந்த ருக்மவதியிடத்தில் அநிருத்தனென்னும் புதல்வன் பிறந்தான். ப்ரத்யும்னன் தவிர ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிள்ளைகளாகிய மற்றவர்களுக்குப் பிள்ளைகளும் பேரன்களும் கோடி கோடியாகப் பிறந்திருந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிள்ளைகளின் தாய்மார்கள் பதினாறாயிரம் பெயர்கள்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ருக்மி தன்சத்ருவாகிய ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பிள்ளைக்குத் தன்புதல்வியை எப்படி கொடுத்தான்? அவன் ஸ்ரீக்ருஷ்ணனால் யுத்தத்தில் பரிபவிக்கப்பட்டு அந்த ஸ்ரீக்ருஷ்ணனை வதிப்பதற்கு [1] ரந்த்ரம் பார்த்துக்கொண்டிருந்தானல்லவா? அறிஞரே! த்வேஷிகளாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மி இவ்விருவர்க்கும் ஒருவரோடொருவர்க்கு விவாஹஸம்பந்தம் எப்படி நேர்ந்தது? இதை எனக்குச் சொல்வீராக. எனக்குத் தெரியாதென்னவேண்டாம். ஏனெனில், உம்மைப்போன்ற யோகிகள் வரப்போகிறதையும் நடந்ததையும் நடந்துகொண்டிருப்

1. ரந்த்ரம்-அதாவது-அவகாசம்.

தையும் இந்த்ரியங்களுக்கு எட்டாததையும் தூரத்தி லிருப்பதையும் மறைந்திருப்பதையும் நன்றாக அறிவார் களல்லவா? ஆகையால் இதை விவரமாக எனக்குச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ருக்மி ஸ்ரீக்ருஷ்ணனால் அவமதிக்கப்பட்டு அந்த வைரத்தை நினைத்துக் கொண்டே இருந்தானென்பது வாஸ்தவமே. ஆயி னும் தன்னுடன்பிறந்தவளாகிய ருக்மிணிக்கு ப்ரிய மஞ் செய்வதற்காகத் தன்புதல்வியைப் [1] பாகினேய னாகிய ப்ரத்யும்னனுக்குக் கொடுத்தான். ஆனால் ருக்மி ப்ரத்யும்னனை அழைத்துத் தன்புதல்வியை அவனுக் குக் கொடுக்கவில்லை. பின்னை எப்படி நடந்ததென் றால், நேரே மன்மதனுடைய அவதாரமாகிய அந்த ப்ரத்யும்னன் ருக்மவதியின் ஸ்வயம்வரத்திற்குத் தா னொருவனாகவே சென்று அங்கு அவளால் ஸ்வயம்வரத் தில் வரிக்கப்பட்டுத் தானும் அவளிடத்தில் அனுராக முடையவனாகையால் தன்னை எதிர்த்துவந்த மன்னவர் களையெல்லாம் யுத்தத்தில் தான் ஏகாகனாகவே ஜயி த்து அவளைப் பறித்துக்கொண்டு போனான். ருக்மி தன்னுடன் பிறந்தவளைப் பார்த்து அவனைத் தடுத்து யுத்தஞ் செய்யாமல் அதற்குச் சம்மதித்திருந்தானாகை யால் அவன் தன்புதல்வியை ப்ரத்யும்னனுக்குக் கொடுத் தானென்று சொன்னோமன்றி வேறில்லை. ராஜனே! ருக்மிணியின் புதல்வியாகிய சாருமதியென்னும் கன்னி கையை க்ருதவர்மாவின்பிள்ளையும் பலிஷ்டனுமாகிய விசாலாக்ஷனென்பவன் மணம் புரிந்தான். மற்றும் ருக்மி ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் த்வேஷம் மாறப்பெறாதிருப்பி னும், 'சத்ருவோடு ஸம்பந்தம் செய்தால் போஜன

1. பகினியின் பிள்ளை - பகினி - உடன் பிறந்தவள்

ப்ரதியோஜனங்கள் நடத்தவேண்டி வரும். சத்ருவின் அன்னத்தைப் புசிப்பதும் சத்ருவுக்கு அன்னமிடுவதும் தர்மமன்று. அதை உலகத்தார்களும் பழிப்பார்கள். ஆகையால் சத்ருவோடு ஸம்பந்தஞ் செய்வது தர்மமன்று' என்று அந்த ஸம்பந்தத்தின் கெடுதியை அறிந்தவனாயினும் தன்பகினியிடத்திலுள்ள ஸ்னேஹமாகிற பாசத்தினால் கட்டுண்டு அவளுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பித் தன்தௌஹித்ரனாகிய அநிருத்தனுக்குத் தன் பேற்றியாகிய ரோசனையென்னும் கன்னிகையைக் கொடுத்தான். ராஜனே! அந்த அநிருத்தனுடைய விவாஹமஹோற்சவத்திற்காக ருக்மிணி பலராமன் ஸ்ரீக்ருஷ்ணன் இவர்களும் ப்ரத்யும்னன் முதலிய மற்றுவர்களும் போஜகடகமென்கிற ருக்மியின் பட்டணத்திற்குச் சென்றார்கள். அந்த விவாஹம் முடிகையில் கொழுத்தவர்களாகிய களிங்கன் முதலிய மன்னவர்கள் ருக்மியைக் குறித்துப்'பலராமனைச் சூதாட்டத்தினால் ஜயிப்பாயாக. ராஜனே! பலராமனுக்குச் சூதாட்டம் தெரியாது. ஆயினும் அவனுக்கு அதில் அளவற்ற மனவிருப்பம். ஆகையால் அவனை. அனாயாஸமாக ஜயித்துவிடலாம்' என்றார்கள். ருக்மியும் அம்மன்னவர்களால் இங்ஙனம் சொல்லப்பட்டுப் பலராமனை அழைத்து அவனோடு சூதாட்டம் ஆடினான். அதில் பலராமன் நூறு ஆயிரம் பதினாயிரம் வீதம் பந்தயங்களை ஜயித்து எடுத்துக் கொண்டான். பிறகு அந்த ராமனை ருக்மி ஜயித்தான். அப்பொழுது களிங்கன் பற்களைக் காட்டிக்கொண்டு உரக்கச் சிரித்தான். பலராமன் அதைப் பொறுக்கவில்லை. அப்பால் ருக்மி லக்ஷம்பொன் பந்தயம் வைத்தான். பலராமன் அதையும் ஜயித்தான். அப்பொழுது ருக்மி வஞ்சனை செய்ய முயன்று நான் ஜயித்தேனென்

ருன், ந்யாயந்தவருமல் நடக்குந் தன்மையாகிற பெருஞ் செல்வமுடைய பலராமன் பர்வத்தில் ஸமுத்ரம்போல் கோபத்தினுல் கலக்கமுற்றுக் கோபத்தின் மிகுதியால் கண்கள் மிகவும் சிவக்கப்பெற்று முன்போலவே லக்ஷம் பொன் வைத்து ஆடினுன். ராமன் தர்மந்தவருமலே அந்த ஆட்டத்திலும் ருக்மியை ஜயித்தான். ருக்மியோ வென்ருல் கபடத்தை ஏற்றுக்கொண்டு 'நான் ஜயித்தேன். இவ்விஷயத்தில் கேள்விக்கு ஸமாதானஞ் சொல்கிறவர்களாகிய களிங்காதிகளும் நான் ஜயித்ததாகவே சொல்லுகிருர்கள். ஆகையால் அவர்களைக் கேட்கலாம்' என்ருன். அப்பால் 'தர்மத்தின்படி பலராமன்தான் பந்தயத்தை ஜயித்தான். ருக்மியோவென்ருல் கபடத்தில் இழிந்து இங்ஙனம் சொல்லுகிருன். ஆகையால் அவன் சொல்லுவது பொய்யே' என்று ஆகாசவாணி சொல்லிற்று. விதர்ப்பராஜகுமாரனுகிய ருக்மி துர்ப்புத்திகளான கலிங்கன் முதலிய மன்னவர்களால் தூண்டப்பட்டு அந்த ஆகாசவாணியை அனுதரித்துக் காலத்தினுல் தூண்டப்பட்டுப் பலராமனைப் பரிஹாஸஞ் செய்துகொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

ருக்மி சொல்லுகிருன்:—நீங்கள் வனத்தில் திரிந்து பசுக்களை மேய்த்துக்கொண்டிருந்தீர்கள். ஆகையால் நீங்கள் சூது சதுரங்கம் முதலியவைகளில் திறமையற்றவர்கள். ராஜர்களன்ருே பாசகைகளாலும் பாணங்களாலும் விளையாடுவார்கள். உங்களைப்போன்றவர்கள் அந்த வழிக்கு வந்தவர்களல்லர். இப்படி இருக்க நீ ஏன் வீணுக்குச் சூதாட்டத்திற்கு வந்தனை? ஆகையால் நீ தோல்வி அடைந்தனை.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—மன்னவனே! ஸபை நடுவில் இங்ஙனம் ருக்மியால் நிந்திக்கப்பட்டவனும் கலிங்

கன் முதலிய ராஜர்களால் பரிஹாஸம் செய்யப்பெற்ற வனுமாகிய பலராமன் மிகவும் கோபமுற்று இரும்புத் தடியை எடுத்துக்கொண்டு அதனால் அவனைக் கொன்றான். கலிங்கராஜன் பற்களைக் காட்டிக்கொண்டு சிறித்தானாகையால் பலராமன் அவனை வேகமாகத் தொடர்ந்து சென்று பத்தாவது அடியில் பிடித்துக்கொண்டு அவனுடைய பற்களை உதிர்த்து விட்டான். மற்ற ராஜர்களும் பலராமனால் இரும்புத்தடியால் பீடிக்கப்பட்டுப் புஜங்களும் துடைகளும் தலைகளும் முறிந்து பயந்து ஓடிப்போனார்கள். ஸ்ரீக்ருஷ்ணனுடைய மைத்துனனாகிய ருக்மி இங்ஙனம் பலராமனால் வதிக்கப்படுகையில் ருக்மிணி ராமக்ருஷ்ணர்களின் ஸ்னேஹத்திற்கு என்ன கெடுதி வருமோவென்று பயந்து நன்றென்றாவது தீதென்றாவது ஒன்றும் பேசாதிருந்தாள். ஸ்ரீக்ருஷ்ணனை அவலம்பமாகவுடைய பலராமன் முதலிய யாதவர்கள் புதிய மணப்பெண்ணுடன் அநிருத்தனை ரதத்தில் ஏற்றிக்கொண்டு ப்ரயோஜனங்களெல்லாம் கைகூடப் பெற்று த்வாரகைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அறுபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

பாணனுடைய புதல்வியாகிய உஷை ஸ்வப்னத்தில் அநிருத்தனைக் கண்டு அவனிடம் மோஹங்கொண்டு தன்ஸகியாகிய சித்ரலேகையால் அவனை வரவழைத்து அவனுடன் கலந்திருக்க, பாணன் அவனைக்கண்டு சிறையில் அடைத்தல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—பாதவஸ்ரேஷ்டனாகிய அநிருத்தன் பாணனுடைய புதல்வியாகிய உஷையென்பவளை மணம்புரிந்தானென்றும், அப்

பொழுது ருத்ரனுக்கும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் கோரமான மஹாயுத்தம் நடந்ததென்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். அதையெல்லாம் எனக்கு நன்றாகச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனாகிய பலி சக்ரவர்த்திக்கு நூறுபிள்ளைகள்; அவர்களில் ஜ்யேஷ்டன் பாணனென்று ப்ரஸித்தனாயிருந்தான். பலிசக்ரவர்த்தி வாமனரூபியான ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குப் பூமண்டலத்தை யெல்லாம் தானஞ் செய்தானென்பது ப்ரஸித்தமே யல்லவா. அத்தகைய பலிசக்ரவர்த்தியின் ஔரஸகுமாரன் பாணனென்பவன். அவன் ஸர்வகாலமும் சிவனைப் பணிவதில் விருப்பமுடையவனாயிருந்தான். அவன் நல்லொழுக்கத்தினால் அனைவர்க்கும் புகழத் தகுந்தவனும் தானசீலனும் மிகுந்த மதியுடையவனும் ஸத்யந்தவறாது நடப்பவனும் ருத்ரனைப் பணிகையாகிற வ்ரதத்தைத் தடையாக நடத்துந்தன்மையனுமாயிருந்தான். முன்பு அவன் அழகியதான சோணிதபுரத்தில் ராஜ்யம் செய்துகொண்டிருந்தான். ருத்ரனுடைய அனுக்ரஹத்தினால் தேவதைகள் அவனுக்குப் பணியாளரைப் போலிருந்தார்கள். ஆயிரம் புஜங்களையுடைய அப்பாணாஸுரன் ருத்ரன்[1] தாண்டவம் செய்யும் பொழுது ஆயிரம் புஜங்களாலும் வாத்யம் வாசித்து அவனைக் களிப்புறச் செய்தான். மஹானுபாவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் ப்ரபுவும் சரணம் அடைந்தவர்களைக் காக்க வல்லவனும் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யமுடையவனுமாகிய ருத்ரன் ஸந்தோஷம் அடைந்து இஷ்டமான வரம் வேண்டும்படி அந்தப் பாணனைத் தூண்டினான். அவனும் 'நீ என்பட்டணத்திற்குக்

1. ஓர்வகை நர்த்தனம்.

காவலனுயிருக்கவேண்டும்' என்று வரம் வேண்டினன். வீர்யத்தினுல் கொடிய மதமுடைய அப்பாணுஸுரன் ஒருகால் பார்ஸ்வத்தில் இருக்கின்ற ருத்ரனுடைய பாதாரவிந்தங்களை இரவியின் ஒளிபோன்ற ஒளியுடைய கிரீடத்தினுல் ஸ்பர்சித்துக்கொண்டு அவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

பாணன் சொல்லுகிருன்:—மஹாதேவனே! நீ உலகங்களுக் கெல்லாம் குருவும் ஈஸ்வரனுமாயிருப்பவன். உன்னை யொழிய மற்ற புருஷர்கள் அனைவரும் விருப்பங்கள் நிறைவேறப் பெருதவர்களே. உன்பாதாரவிந்தங்கள் அவர்களுடைய விருப்பங்களையெல்லாம் கல்பவ்ருக்ஷம்போல் நிறைவேற்றுகின்றன. அத்தகைய மஹானுபாவனுகிய உன்னை நமஸ்கரிக்கின்றேன். தேவனே! நீ எனக்கு ஆயிரம் புஜங்களைக் கொடுத்தனை. அவை எனக்குக் கேவலம் பாரத்தின்பொருட்டே இருக்கின்றன. மூன்று லோகங்களிலும் உன்னைத் தவிர என்னோடெதிர்த்து யுத்தஞ் செய்யத் தகுந்த இணையானவன் எவனும் அகப்படவில்லை. நான் திரம்பவும் தினவெடுக்கப்பெற்ற புஜங்களால் யுத்தஞ் செய்ய விரும்பிப் பர்வதங்களையெல்லாம் சூர்ணஞ் செய்து கொண்டு திக்கஜங்களை எதிர்த்துச் சென்றேன். அவையும் பயந்து ஓடிப்போயின.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—மஹானுபாவனுன ருத்ரன் அதைக்கேட்டுக் கோபமுற்றுப் பாணனைப்பார்த்து 'உன் த்வஜம் எப்பொழுது முறிந்து விழுகின்றதோ, அப்பொழுது, மூடனே! உனக்கு என்னைக்காட்டிலும் மேற்பட்டவனுகிய புருஷோத்தமனேடு உன்கொழுப்பை அழிக்கவல்ல யுத்தம் நேரிடும்' என்றுன் மன்னவனே!

அற்பபுத்தியாகிய அந்தப் பாணன் இங்ஙனம் மொழி யப்பெற்று ஸந்தோஷமுற்று அவன் மொழிந்தபடியே தன் வீர்யத்தை அழிக்கவல்ல த்வஜபங்கம் எப்பொழுது நேருமோ வென்று அதையே எதிர்பார்த்துக்கொண்டு தன்க்ருஹம் போய்ச் சேர்ந்தான். அவனுடைய புதல்வி யாகிய உஷை யென்னும் கன்னிகை தான் என்றும் கா ணாதவனும் கேளாதவனு மாகிய ப்ரத்யும்னகுமாரனை அநிருத்தனை ஸ்வப்னத்தில் கண்டு அவனிடத்தில் மன விருப்ப முற்று அவனை அவ்விடத்தில் காணமல் "என அன்பு நாயகனே! எங்கிருக்கின்றனை?" என்று மொ ழிந்துகொண்டே ஸ்வப்னந்தெளிந்து ஸகிகளினிடை யில் தழுதழுத்து மிகவும் வெட்கமுற்றுப் படுக்கையினி ன்று எழுந்தாள். பாணனுக்குக் கும்பாண்டனென்னும் பெயருடைய ஒரு மந்திரி இருந்தான். அவனுக்குச் சித்ர லேகையென்னும் புதல்வி இருந்தாள். அவள் உஷை க்கு மிகவும் அன்பிற்கிடமான ஸகி. அவள் அத்தகைய உஷையைக் கண்டு குதூஹலத்துடன் இங்ஙனம வின வினள்

ஸகி சொல்லுகிறாள்:—அழகிய புருவங்களுடைய வளே! உனமனோரதம் எததகையது; (நீ விரும்புகிற வன யாவன்? எந்தகையன்?) உனக்கு இன்னம் விவா ஹம் நடக்கவில்லை. உன்னை மணம் புரிகிறவன இன்னவ னென்றும் தெரியவில்லை. (இப்படி இருக்க நீ இங்ஙனம எவனைத் தேடுகின்றனையோ, தெரியவில்லை. அதைச் சொல்வாயாக).

உஷை சொல்லுகிறாள்:—ஸகி! நான் ஸ்வப்னத் தில் ஒரு மனுஷ்யனைக் கண்டேன. அவன் கறுத்த நிறமுடையவனும் தாமரையிதழ்போன்ற கண்களுடை

யவனும் பொன்னிறமான வஸ்த்ரந்தரித்தவனும் திரண்டுருண்டு நீண்ட புஜதண்டங்கள் அமைந்தவனும் மடந்தையர்களின் மனத்திற்கினியனுமாயிருந்தான். அவன் தன்னுடைய செவ்வாயின் மதுவை எனக்குப் பானம் செய்வித்து விருப்பமுற்றிருக்கின்ற என்னைத் துயரமாகிற ஸமுத்ரத்தில் விழத்தள்ளி எங்கோ போயினன். என்மனத்திற்கினியனாகிய அம்மஹானுபாவனை நான் தேடுகின்றேன்.

சித்ரலேகை சொல்லுகிறாள்:— உன்மனவருத்தத்தை நான் போக்கிவிடுகிறேன். நீ எவனை ஸ்வப்னத்தில் கண்டனையோ அவனை இம்மூன்று லோகங்களுக்குள் இன்னவனென்று நிச்சயித்துச் சொல்லுவாயாயின், நான் கொண்டு வந்து விடுகிறேன். ஆகையால் உன் மனத்தைப் பறித்தவன் எவனோ அவனை நிச்சயித்துச் சொல்லுவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— சித்ரலேகை இங்ஙனம் மொழிந்து தேவர் கந்தர்வர் ஸித்தர் சாரணர் பன்னகர் தைத்யர் வித்யாதரர் யக்ஷர் மனுஷ்யர் ஆகிய இவர்களெல்லோரையும் சித்ரத்தில் எழுதிக்காட்டினாள். அவள் மனுஷ்யர்களில் வ்ருஷ்ணிகளையும் வ்ருஷ்ணிகளில் சூரனையும் வஸுதேவனையும் ராமக்ருஷ்ணர்களையும் ப்ரத்யும்னனையும் எழுதினாள். உஷை அவர்களில் ப்ரத்யும்னனைக் கண்டு வெட்கமுற்றாள். பிறகு சித்ரலேகை அநிருத்தனை எழுதுகையில் உஷை அவனைக் கண்டு தலைவணக்கமுற்று நின்றாள். மன்னவனே! அவள் புன்னகை செய்துகொண்டு 'இவனே இவனே' என்றாள். சித்ரலேகை இவள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பேரனாகிய அநிருத்தனை விரும்பினாளென்று நிச்சயித்துத்

தெரிந்துகொண்டு யோகப்ரபாவமுடையவளாகையால் ஆகாசமார்க்கத்தினால் த்வாரகைக்குச் சென்றாள். அங்கு அழகிய படுக்கையில் படுத்துறங்குகின்ற அநிருத்தனை யோகமஹிமையினால் எடுத்துக்கொண்டு மீண்டு சோணிதபுரத்திற்கு வந்து தன்ஸகியின் அனபனாகிய அப்புருஷனை அவளுக்குக் காட்டினாள். அந்த உஷையும் மிகவும் அழகியனான அவ்வநிருத்தனைக் கண்டு ஸந்தோஷத்தினால் முகம் மலரப்பெற்று வேறுபுருஷர்களால் காணவுமுடியாத தன்க்ருஹத்தில் அவனுடன் ஸுகமாக விளையாடிக்கொண்டிருந்தாள். அவ்வநிருத்தன் அவளால் தன் அந்தப்புரத்தில் மறைத்து வைத்துச் சிறந்த வஸ்த்ரம் பூமாலை கந்தம் தூபம் தீபம் ஆஸனம் முதலியவைகளாலும் பானம் போஜனம் பக்ஷ்யம் இவைகளாலும் இனிய உரைகளாலும் சுஶ்ரூஷையாலும் பூஜிக்கப்பட்டு நாள்தோறும் ஸ்னேஹம் வளரப்பெற்ற அவ்வுஷையால் இந்த்ரியங்கள் பறியுண்டு பல நாட்கள் கடந்தும் அதை அறியாதிருந்தான். அந்தப்புரத்துக் காவலர்கள் யதுகுலத்து வீரனாகிய அநிருத்தனால் அங்ஙனம் அனுபவிக்கப்பட்டுக் கன்னித்தன்மையாகிற விரதம் அழியப்பெற்றிருக்கின்ற அந்த உஷையைக் கண்டு மறைக்கமுடியாத சிற்சில காரணங்களால் இவள் புருஷனால் தூஷிக்கப்பட்டவளென்று தெரிந்து கொண்டார்கள். அந்தப் படர்கள் மன்னவனிடம் சென்று 'ராஜனே! கன்னித்தன்மையிலிருக்கின்ற உன் புதல்வி குலத்தைக் கெடுக்கவல்ல நடத்தையிலிருப்பதாக எங்களுக்குத் தெரியவருகின்றது. ப்ரபூ! நாங்கள் அந்தப்புரத்தில் எங்கும் அசையாதிருந்து அவளைப் பாதுகாத்துக்கொண்டிருக்கிறோம். புருஷர்கள் எவரும் அவளைக் கண்ணெடுத்துப் பார்க்கவுங்கூட

இடமில்லை. ஆயினும் அவளுக்குக் கெடு கடத்தை எப்படி நேர்ந்ததோ தெரியவில்லை' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்பால் பாணன் தன்புதல்வியின் கெடுகடத்தையைக் கேட்டு மனவருத்தமுற்று விரைவுடன் கன்னிகையின் அந்தப்புரத்திற்குச் சென்று யதுஶ்ரேஷ்டனும் மன்மதனுடைய அவதாரமாகிய ப்ரத்யும்னனுடைய புதல்வனும் ஜகத்திற்கெல்லாம் இணையில்லாத தனியழகனும் கறுத்த நிறமுடையவனும் பீதாம்பரம் உடுத்திருப்பவனும் தாமரையிதழ் போன்ற அழகிய கண்களும் திரண்டுருண்டு நீண்ட புஜதண்டங்களும் விளங்கப்பெற்றுக் குண்டலங்களின் காந்தியாலும் முன்னெற்றி மயிர்களின் ஒளியாலும் புன்னகை அமைந்த கண்ணோக்கத்தினாலும் அலங்கரிக்கப்பட்ட முகமுடையவனுமாகிய அநிருத்தனைக் கண்டான். அவன் அப்பொழுது அந்த உஷையின் ஆலிங்கனத்தினால் அவளுடைய கொங்கைகளின குங்குமக்குழம்பு படியப்பெற்றதும் வஸந்தகாலத்து மல்லிப் புஷ்பங்களால் தொடுக்கப்பட்டதுமாகிய மாலையை மார்பில் அணிந்து மிக்க மங்கள ஸ்வரூபையும் அனபிற்கிடமுமாகிய அக்காதலியுடன் அவளுக்கெதிரில் உட்கார்ந்து பாசகைகளை ஆடிக்கொண்டிருந்தான். பாணன் அத்தகையனான அவ்வநிருத்தனைக் கண்டு மிகவும் வியப்புற்றான். மதுவம்சத்தில் பிறந்தவனாகிய அவ்வநிருத்தன் ஆயுதம் ஏந்திக்கொண்டிருக்கிற படர்களால் சூழப்பட்டிருக்கின்ற அந்தப் பாணனைக் கண்டு யமன்போன்று அவர்களை வதிக்கவிரும்பி அங்கு அருகாமையிலிருந்த இரும்புத்தடியை எடுத்துக்கொண்டு தன்னைப் பிடிக்க முயன்று சுற்றிலும் சுழன்று வருகின்றவர்களும் ஆயுதமேந்தினவர்களுமாகிய அவர்களைக் கொழுப்புடைய

பன்றி நாய்களைக் கொல்வதுபோலக் கொன்றான். அவர்கள் அவனால் அடிக்கப்பட்டுத் தலைகளும் துடைகளும் புஜங்களும் முறியப்பெற்று அந்தப்புரத்தினின்று வெளிப்பட்டு ஓடிப்போனார்கள். பலிஷ்டனாகிய பாணன் தன்ஸைன்யத்தை வதிக்கின்ற அவ்வநிருத்தனைக் கோபமுற்று நாகபாசங்களால் பந்தனஞ் செய்தான். உஷை அநிருத்தன் கட்டுண்டதைக் கேட்டுச் சோகத்தினாலும் துக்கத்தினாலும் தழதழத்துக் கண்ணும் கண்ணீருமாய்க் கதறினாள். அறுபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் யாதவஸைன்யத்துடன் சென்று பாணனோடு யுத்தஞ்செய்கையில் ருத்ரன் ஸஹாயமாக வந்து தோல்வியடைந்து ஜ்வரத்தை ப்ரயோகிக்க ஸ்ரீக்ருஷ்ணன் அதைத்தடுக்க அந்த ஜ்வரமும் ருத்ரனும் ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்தோத்ரம் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பாரதனே! அநிருத்தனுடைய பந்துக்கள் அவனைக் காணாமல் வருந்திக்கொண்டிருக்கையில் வர்ஷாகாலமாகிய நான்கு மாதங்கள் கடந்தன. அவனுடைய பந்துக்களாகிய அந்த வ்ருஷ்ணிகள் நாரதர்மூலமாய் அவன் காணாது போன வ்ருத்தாந்தத்தின் விவரத்தையும் அவன் சத்ருக்களை வதித்தது முதலிய வ்ருத்தாந்தத்தையும் பாணனால் கட்டுண்டிருப்பதையும் கேள்விப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணனால் பாதுகாக்கப்பட்டுச் சோணிதபுரத்திற்குப் போனார்கள். ப்ரத்யும்னன் யுயுதானன் கதன் ஸாம்பன் ஸாரணன் நந்தன் உபநந்தன் பத்ரன் ஆகிய இவர்கள் ராமக்ருஷ்ணர்

களைத் தொடர்ந்து பன்னிரண்டு அக்ஷௌஹிணி ஸைன்யத்துடன் சென்று பாணனுடைய நகரமாகிய சோணிதபுரத்தைச் சுற்றிலும் சூழ்ந்து எல்லாத்திசைகளிலும் தகைந்தார்கள். அவர்கள் பட்டணத்து உத்யானங்களையும் கோட்டைகளையும் கோட்டைமேல்கட்டடங்களையும் கோபுரங்களையும் முறித்துப் பாழ் செய்வதைக் கண்டு பாணன் கோபமுற்றுத் தானும் அவர்களைப் போலவே பன்னிரண்டு அக்ஷௌஹிணிஸைன்யத்துடன்கூடிப் புறப்பட்டான். அப்பொழுது ருத்ரன் பாணனுக்கு உதவிசெய்யும்பொருட்டுத் தன்புதல்வனாகிய ஸுப்ரஹ்மண்யனோடுகூடி ப்ரமதகணங்களால் சூழப்பட்டு நந்தியென்னும் வ்ருஷபத்தின்மேல் ஏறிக்கொண்டு வந்து ராமக்ருஷ்ணர்களோடு யுத்தஞ்செய்தான். ஸ்ரீக்ருஷ்ணன் ருத்ரன் இவர்களுக்கும் ப்ரதயும்னன் ஸுப்ரஹ்மண்யன் இவர்களுக்கும் மிகவும் துமுலமான யுத்தம் நடந்தது. கும்பாண்டன் கூபகர்ணன் இவ்விருவர் பலராமனோடும், ஸாம்பன் பாணபுத்ரனோடும் ஸாத்யகி பாணனோடும் யுத்தஞ்செய்தார்கள். அந்த யுத்தம் மிகவும் அற்புதமாகிக் காண்போர்களுக்கும் கேட்போர்களுக்கும் மயிர்க்கூச்சலை விளைக்கக்கூடியதாயிருந்தது. ப்ரஹ்மதேவன் முதலிய தேவஸ்ரேஷ்டர்களும் முனிவர்களும் ஸித்தர் சாரணர் கந்தர்வர் அப்ஸரமடந்தையர் யக்ஷர் ஆகிய இவர்களும் விமானங்களில் ஏறிக்கொண்டு யுத்தம் பார்க்க வந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் ருத்ரனைத் தொடர்ந்து வந்த பூதர் ப்ரேதர் குஹ்யகர் டாகினிகள் யாதுதானர் யக்ஷர் ராக்ஷஸர் விநாயகர் பூதங்கள் மாத்ருதேவதைகள் பிசாசர் கூச்மாண்டகணங்கள் ப்ரஹ்மராக்ஷஸர் ஆகிய இக்கூட்டங்களையெல்லாம் தன்னுடைய சார்ங்கமென்னும் தனுஸ்ஸினின்று புறப்

படுகின்ற கூரிய நுனியுள்ள பாணங்களால் பறந்தோடத் துரத்தினான். பினகமென்னும் தனுஸ்ஸை ஏந்தின ருத்ரன் ஸ்ரீக்ருஷ்ணன்மேல் நானாவிதமான அஸ்த்ரங்களை ப்ரயோகித்தான். சார்ங்கவிற்கையனாகிய அப்பரமன் வியப்பின்றி அவற்றையெல்லாம் உரிய பதிலஸ்த்ரங்களால் தடுத்துவிட்டான். அம்மஹானுபாவன் ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு ப்ரஹ்மாஸ்த்ரத்தையும் வாயவ்யாஸ்த்திற்குப் பர்வதாஸ்த்ரத்தையும் ஆக்னேயாஸ்த்ரத்திற்குப் பர்ஜன்யாஸ்த்ரத்தையும் பாசுபதாஸ்த்ரத்திற்கு நாராயணாஸ்த்ரத்தையும் ப்ரயோகித்தான். மற்றும், அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ருத்ரனை ஜ்ரும்பணாஸ்த்ரத்தினால் கொட்டாவி விட்டு உறக்கம் தலையெடுத்து மதிமயங்கும்படி செய்து பாணனுடைய ஸைன்யத்தைக் கத்தி கதை பாணம் இவைகளால் அடித்தான். ஸுப்ரஹ்மண்யன் ப்ரத்யும்னனுடைய பாணஸமூஹங்களால் நாற்புறத்திலும் பீடிக்கப்பட்டு அவயவங்களினின்று ரக்தத்தைப் பெருக்கிக்கொண்டு மயில்வாஹனத்துடன் யுத்தபூமியினின்று புறப்பட்டுப் போனான். கும்பாண்டன் கூபகர்ணன் இவ்விருவரும் பலராமனுடைய உலக்கையினால் அடியுண்டு பூமியில் விழுந்தார்கள். அவனுடைய ஸைன்யங்களெல்லாம் நாதன் மாண்டமையால் பயந்து நாற்புறத்திலும் பறந்தோடின. பாணன் தன்ஸைன்யமெல்லாம் நாற்புறத்திலும் சிதறியோடுவதைக்கண்டு மிகவும் கோபாவேசமுற்று ஸாத்யகியைத் துறந்து ரதத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்துச் சென்றான். யுத்தத்தில் கொடிய மதமுடைய பாணன் ஒரேதடவையில் ஐந்நூறு தனுஸ்ஸுக்களையும் இழுத்து வளைத்து நாணேற்றிட்டு ஒவ்வொன்றிலும் இரண்டு பாணங்களைத் தொடுத்து விடுத்தான். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஒரேதடவை

யில் அந்தத் தனுஸ்ஸுக்களை யெல்லாம் அறுத்து ஸாரதியையும் ரதத்தையும் குதிரைகளையும் அடித்துச் சங்கநாதஞ் செய்தான். அந்தப் பாணனுடைய தாயாகிய கோடரையென்பவள் தன்பிள்ளையின் ப்ராணன்களைப் பாதுகாக்கவிரும்பி அரையில் ஆடையின்றித் தலைமயிர்களை விரித்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனுக்கு எதிரில் வந்து நின்றாள். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் அரையில் ஆடையின்றி அம்மணமாயிருக்கின்ற அந்தக் கோடரையைப் பார்க்கப் பொறாமல் முகத்தைக் குறுக்கே திருப்பிக்கொண்டான். ரதம் முறிந்து தனுஸ்ஸுக்களும் அறுந்து வருத்தமுற்றிருக்கின்ற பாணன் அந்த ஸமயம் பார்த்துப் பட்டணத்திற்குள் நுழைந்தான். பூதகணங்களெல்லாம் ஓடிப்போகையில், ருத்ரன் பயங்கரமான உருவமும் மூன்று தலைகளும் மூன்று பாதங்களும் உடைய பயங்கரமான ஜ்வரத்தை ப்ரயோகித்தான். அந்த ஜ்வரம் பத்துத்திசைகளையும் தஹித்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணன்மேல் எதிர்த்து வந்து சார்ங்கவிற்கையனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய முன்னே நின்றது. அப்பால் தேவதேவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ஜ்வரத்தைக் கண்டு வைஷ்ணவமான சீதஜ்வரத்தை ப்ரயோகித்தான். மாஹேஸ்வரஜ்வரம் வைஷ்ணவஜ்வரம் ஆகிய அவ்விரண்டு ஜ்வரங்களும் ஒன்றோடொன்று யுத்தஞ் செய்தன. அப்பால் மாஹேஸ்வரஜ்வரம் வைஷ்ணவஜ்வரத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டு ரோதனஞ் செய்தது. அந்த மாஹேஸ்வரஜ்வரம் பயந்து மற்ற எவ்விடத்திலும் அபயம் நேரப்பெறாமல் சரணம் பெற விரும்பிக் கைகளைக் குவித்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்தோத்ரஞ் செய்தது.

ஜ்வரம் சொல்லுகிறது:—ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களுக்குக் காரணனும் வேதமாகிற ப்ரமாணத்தினால் அறியப்படுகிறவனுமாகிய உன்னை நான் சரணம் அடைகின்றேன். வேதாந்தங்களில் எது பரப்ரஹ்மமென்று கூறப்படுகிறதோ, அத்தகைய பர வஸ்து நீயே. உனக்குப் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் எவையும் கிடையா. நீ மேன்மையுடைய ப்ரஹ்மாதிகளுக்கும் நியாமகன்; அனைவர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவன். நீ அவயவங்களின்றிக் கேவலஜ்ஞானைகதங்களே வடிவமாயிருக்கப் பெற்றவன்; அளவற்ற சக்திகளுடையவன். காலம் தைவம் கர்மம் ஜீவன் அந்தந்த வஸ்துக்களின் ஸ்வபாவம் ப்ருதிவி முதலிய பஞ்ச பூதங்கள் ப்ராக்ருதி ப்ராணன் புத்தி அவஸ்தை தேவ மனுஷ்யாதி சரீரம் கார்யகாரணங்களின் பரம்பரை ஆகிய இவையெல்லாம் உன்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞானத்திற்கு அதீனமாயிருப்பவை. நீ இவற்றின் ப்ரகாரங்களின்றி விலக்ஷணமாயிருப்பவன். அத்தகைய உன்னை நான் சரணம் அடைகின்றேன். லீலையாகிற காரணத்தினால் உன்னிடத்தில் பொருந்துகின்ற பற்பல பிறவிகளால் தேவதைகளையும் ஸத்புருஷர்களையும் தர்மமர்யாதைகளையும் காக்கின்றனை. மற்றும், தப்புவழியில் இழிந்து ஸத்புருஷர்களுக்கு ஹிம்ஸை செய்கின்ற துஷ்டர்களை அழிக்கின்றனை. உன்பிறவிகளெல்லாம் பூமியின் பாரமாகிய துஷ்டர்களை அழிப்பதற்காகவே. நீ இப்பொழுது அவதரித்திருப்பதும் பூமியின் பாரத்தை நீக்கும்பொருட்டே. முதலில் சாந்தமாயிருப்பினும் கடைசியில் உக்ரமாகிப் பொறுக்கமுடியாததும் உன்தேஜஸ்ஸினால் உதவிசெய்யப்பெற்றதுமாகிய ஜ்வரத்தினால் நான் தஹிக்கப்பட்டு வருந்துகிறேன் ஆகையால் சர



2603 ஸ்ரீக்ருஷ்ணன் பாணாஸுரனுடைய கரங்களைச் சேதித்தல்.

ணம் அடைந்திருக்கின்ற என்னைப் பாதுகாப்பாயாக. ப்ராணிகள் வருத்துமுற்று வேறொருரக்ஷகன் கிடைப்பனோ என்னும் ஆசை தொடரப்பெற்று எதுவரையில் உன்பாதங்களைப் பணியாதிருப்பார்களோ, அதுவரையிலுமே அவர்களுக்கு அவ்வருத்தம் தொடர்ந்து வருமன்றி உன்னைப் பணிய முயன்றவர்களுக்கு அது நேராது. (ஆகையால் உன்னைச்சரணம் அடைந்த நான் இன்னம் வருந்துவது யுக்தமோ?) என்னைக் காப்பாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—த்ரிசிரனே! (மூன்று தலைகளையுடைய சைவஜ்வரமே!) உனக்கு நான் அருள் புரிந்தேன். உனக்கு என்ஜ்வரத்தினிடத்தினின்று பயம் நீங்குமாக. எவன் நம்முடைய இந்த ஸம்வாதத்தை நினைக்கிறானோ அவனுக்கு உனனிடத்தினின்று பயம் உண்டாகாதிருக்குமாக. (அவனை நீ வருத்திப் பயப்படுத்தலாகாது).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— மாஹேஸ்வரஜ்வரம் இங்ஙனம் பகவானால் மொழியப் பெற்றுத் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந்தன்மையனான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரஞ் செய்து மீண்டு போயிற்று. பாணனோவென்றால் மீளவும் யுத்தஞ் செய்ய முயன்று ரதத்தில் ஏறிக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்து வந்தான். மன்னவனே! அப்பால் ஆயிரம் புஜங்களால் பல ஆயுதங்களைத் தரித்திருக்கின்ற பாணாஸுரன் கோபமுற்றுச் சக்ராயுதந்தரித்த ஸ்ரீக்ருஷ்ணன் மேல் இரும்புத்தடியை எறிந்தான். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வ்ருக்ஷத்தின் கிளைகளைச் சேதிப்பதுபோல, அஸ்த்ரங்களை ஓயாமல் ப்ரயோகிக்கின்ற அந்தப் பாணனுடைய புஜங்களைச் சக்ராயுதத்தினால்

சேதித்தான். இங்ஙனம் பாணனுடைய புஜங்கள் சேதிக்கப்படுகையில், மஹானுபாவனும் பக்தர்களி டத்தில் மன இரக்கமுடையவனுமாகிய ருத்ரன் ஸ்ரீ க்ருஷ்ணனிடம் வந்து மேல்வருமாறு கூறினன்.

ருத்ரன் சொல்லுகிறுன்:—வேதாந்தங்களில் மறைக் கப்பட்டிருக்கின்ற பரப்ரஹ்மம் நீயே. நீ ஜ்ஞானஸ்வரூ பன்; ஸ்வயம்ப்ரகாசன். யோகாப்யாஸத்தினுல் பரிசுத் தமான மனமுடைய பெரியோர்கள் உன்னை அறிவார்க ளன்றி மற்றவர் அறியமாட்டார்கள். நீ ஆகாயம்போல் எவ்வகை விகாரங்களும் தீண்டப்பெருதவன். ஆகாசம் உன்னுடைய நாபி. அக்னி உன்முகம். ஜலம் உன்னுடைய ரேதஸ்ஸு. த்யுலோகம் உன்சிரஸ்ஸு. திசைகள் உன் காது. பூமி உன்பாதம். சந்த்ரன் உன்மனம்; ஸூர்யன் உன்னுடைய நேத்ரம். நான் உன்னுடைய அஹங்காரம். ஸமுத்ரம் உன்வயிறு. இந்த்ராதிகள் உன்புஜங்கள். ஓஷதிகள் உன்ரோமங்கள். மேகங்கள் உன் கேசங்கள். ப்ரஹ்மதேவன் உன்புத்தி. ப்ரஜாபதி உன்னுடைய ஆண் குறி. தர்மம் உன்ஹ்ருதயம். இங்ஙனம் நீ உலகங்களால் ஏற்பட்ட அவயவங்களையுடையவன். நீயே புருஷன். எங்கும் தடைபடாத ஒளியுடையவனே! தர்மத்தைப் பாதுகாப்பதற்காகவும் உலகத்தின் க்ஷேமத்திற்காக வும் நீ இங்ஙனம் அவதரித்திருக்கின்றனே. லோக பாலர்களாகிய நாங்கள் அனைவரும் உன்னுல் படைத் துப் பாதுகாக்கப்பட்டு ஏழு உலகங்களையும் பாது காத்துவருகின்றேம். இந்த உலகங்களுக்கு நீயே காரணன். நீ இந்த உலகங்களைப் படைப்பதற்கு முன்பு நாமரூபவிபாகங்களுக்கிடமல்லாத ஸூக்ஷ்மசே தனுசேதனங்களைச் சரீரமாகக் கொண்டு ஒருவனேயா யிருந்தனை. ஜகத்திற்கு உபாதானகாரணனுன பரமபுரு

ஷன் நீயே. உன்னை உபாதானகாரணமாகக் கொண்டு வேறொருவன் உலகங்களைப் படைக்கிறானென்பது இல்லை. நீயே உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாயிருந்து உலகங்களைப் படைக்கின்றனை யன்றி உன்னையொழிய வேறொரு நிமித்தகாரணன் இல்லை. (ஜ்ஞானசக்யாதி குணங்களையுடைய நீ நிமித்தகாரணமாயிருந்து ஸூக்ஷ்மசேதநாசேதநங்களைச் சரீரமாகவுடைய உன்னையே உபாதானகாரணமாகக் கொண்டு ஸ்தூல சேதநாசேதனரூபமான இந்த உலகங்களைப் படைக்கின்றனை. நீ ஜ்ஞானஸ்வரூபன்; ஸ்வயம்ப்ரகாசன்; ஜாகரஸ்வப்னஸுஷுப்திகளென்கிற மூன்று அவஸ்தைகளின் ஸம்பந்த மற்றவன். ஆகையால் ப்ரக்ருதி ஜீவன் இவ்விரண்டைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். ஆகையால் நீயே அனைத்திற்கும் காரணன். உனக்கு வேறொரு காரணம் கிடையாது. நீயே ஸர்வேஶ்வரன். ஒரேவஸ்துவுக்கு உபாதானகாரணமாயிருக்கை நிமித்தகாரணமாயிருக்கை ஆகிய இவ்விரண்டுதன்மைகளும் சேரமாட்டா. ஆயினும் உன்குணங்கள்போல் உன்னை விட்டுப்பிரியாதிருக்கின்ற ப்ரக்ருதி புருஷாதிகளுக்குத் தேவத்வம் மனுஷ்யத்வம் முதலிய ஆகாரங்கள் ஸித்திக்கும்பொருட்டுத் தன்ஸங்கல்பத்தினால் அந்த ப்ரக்ருதிபுருஷர்களின் ஸ்வரூபம் மாறுதல் ஸ்வபாவம் மாறுதல் ஆகிய விகாரங்களுக்குத் தகுந்தபடி அவற்றிற்கு அந்தராத்மாவாகவும் நாம ரூபங்களுக்கு நிர்வாஹகனாகவும் இருக்கின்றனையென்று வேதாந்த வாக்யங்களாகிற ப்ரமாணங்களால் அறியப்படுகின்றனை (உன்னிடத்தில் பொருந்தாத்தன்மைகளும் பொருந்துகின்றனவென்று வேதாந்தங்கள் கூறுகின்றனவாகையால் இவை எப்படி ஓரிடத்தில் சேருமென்று ஸங்

தேஹிக்க இடம் இல்லை. இந்த்ரியங்களுக்கு எட்டாத விஷயத்தில் சப்தப்ரமாணம் எப்படி சொல்லுகிற தோ அப்படியே ஒப்புக்கொள்ளவேண்டுமல்லவா?) அளவற்ற மஹிமையுடையவனே! ஸூர்யன் மேகாதிக ளால் தன்ஸ்வரூபஸ்வபாவங்கள் மறைக்கப்படாதவனாகி அந்த மேகாதிகளையும் அவற்றால் மறைக்கப்பட்ட மற்ற உருவங்களையும் நன்று விளங்கச் செய்வது போல நீயும் ஸத்வாதிகுணமயமான ப்ரக்ருதியினால் தன்ஸ்வரூப ஸ்வபாவங்கள் மறைக்கப்படாதவனாகி ப்ரக்ருதியையும் அதன் கார்யங்களையும் அவற்றின் குணங்களையும் விளங் கச்செய்கின்றனை. நீ ஸ்வயம்ப்ரகாசன். ப்ராணிகள் அனைவரும் உன்மாயையினால் மதிமயங்கி மகன் மனைவி மனை முதலியவற்றில் மனவிருப்பமுற்றுத் துயரமாகிற ஸமுத்ரத்தில் மிதப்பதும் முழுகுவதுமாயிருக்கின்றார் கள். அளவற்ற அருளுடைய உன்னால் கொடுக்கப்பட்ட தும் உன்னுடைய ஆராதனத்திற்கே உரியதும் உன் மாயையைக் கடப்பதற்கு ஸாதனமுமாயிருக்கின்ற இந்த மனுஷ்யதேஹத்தைப் பெற்றும் எவன் உன்பா தங்களைப் பணியாதிருக்கிறானோ, அவன் ஆத்மவஞ்சக னல்லவா? (அவன் தன்னுடைய தோஷத்தினால் தான் துக்கிக்கிறானகையால் அதில் உன்னுடைய தோஷம் ஒன்றும் இல்லை). எவன் தான் மரணம் அடையுந்தன் மையனாகித் தனக்கு அந்தராத்மாவும் அன்பனும் ஈஸ்வரனுமாகிய உன்னைப் பணியாமல் துறந்து உனக்கு நேர்விபரீதங்களான சப்தாதிவிஷயங்களில் விருப்ப முற்று அவை நேரப்பெறாமல் வருந்துகிறானோ, அவன் விஷமென்னும்புத்தியால் அம்ருதத்தைத் துறந்து அம்ருதமென்று விஷத்தைக் கைப்பற்றுகிறான் (அவன் பெரியோர்களால் மிகவும் சோகிக்கத் தகுந்

தவன்). ருத்ரனென்று பெயர் பெற்ற நானும் ப்ரஹ்மதேவனும் தேவதைகளும் தூயமனத்தரான முனிவர்களும் அந்தராத்மாவும் மிகுந்த நண்பனும் ஈஸ்வரனுமாகிய உன்னையே ஸர்வப்ரகாரத்தாலும் சரணம் அடைந்திருக்கின்றோம். தேவனே! அத்தகைய குணங்கள் அமைந்தவனும் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணனும் வைஷம்யமற்றவனும் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தீண்டப்பெறாதவனும் தன்னைப் பணிந்தவர்களுக்கும்[1] அந்தன்மையை விளைப்பவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பனும் ஸ்வதந்த்ரனும் தன்னைப்போன்ற வேறு வஸ்துவும் தனக்கு மேற்பட்ட வஸ்துவும் இல்லாதவனும் ஜகத்ஸ்வரூபனும் எங்களுக்கு அவலம்பமாயிருப்பவனும் தனக்குத் தானே ஆதாரனுமாகிய உன்னை நாங்கள் இஹபரலோகபோகங்களுக்காகவும் மோக்ஷத்திற்காகவும் பணிகின்றோம். இந்தப் பாணன் [illegible]னாகிய எனக்குப் பக்தன்; அன்பிற்கிடமானவன். என்னையே தொடர்ந்திருப்பவன். தேவனே! இந்தப் பாணனுக்கு நான் அபயம் கொடுத்திருக்கிறேன். அதை நீ நிறைவேற்ற வேண்டும். இதுவே நீ செய்யவேண்டிய அனுக்ரஹம். நீ ப்ரஹ்லாதனுக்கு உன்வம்சத்தில் பிறந்தவனை நான் வதிக்கிறதில்லையென்று அருள்புரிந்தனையல்லவா? அதைத் தொடர்ந்து இவனைக் காப்பாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மஹானுபாவனே! நீ என்ன மொழிந்தனையோ அதை அப்படியே செய்கிறேன். உனக்கு எது ப்ரியமோ அது எனக்கும் ப்ரியமே. நீ எதைச் செய்யவேண்டுமென்று நிச்சயித்திருக்கின்

1. அந்தப் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தீண்டப் பெறாதிருக்குந் தன்மையை.

றனேயோ, அதை நான் நல்லதென்று அனுமோதனஞ் செய்தேன். உன்வம்சத்தில் பிறந்தவனை நான் வதிக்கிற தில்லையென்று நான் ப்ரஹ்லாதனுக்கு வரங்கொடுத் திருக்கிறேனாகையால் பலியின் புத்ரனாகிய இந்தப் பாணாஸுரன் எனக்கும் வதிக்கத்தகுந்தவனல்லன். இவனுடைய கொழுப்பை அடக்கும்பொருட்டுப் புஜங்களைச் சேதித்தேன். பூமியின் பாரத்தை நீக்கும்பொருட்டு அளவற்றதாகிய இவனுடைய ஸைன்யத்தையும் பாழ்செய்தேன். இவனுக்கு நான்கு புஜங்களை மிகுத்தி விட்டேன். இவன் இந்தப் புஜங்களோடு ஜராமரணங்களற்றிருப்பான். மற்றும், உன் ப்ருத்யர்களில் முக்யனாகிய இவன் எவ்விதத்திலும் பயமற்றிருப்பான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்தப்பாணாஸுரன் இங்ஙனம் அபயம் பெற்று ஸ்ரீக்ருஷ்ணனைச் சிரத்தினால் வணங்கிப் பட்டணஞ் சென்று அநிருத்தனையும் அவன் பார்யையாகிய தன்புதல்வியையும் ரதத்தில் ஏற்றிக் கொண்டுவந்தான். அழகிய ஆடைகளை உடுத்துச் சிறந்த ஆபரணங்களை அணிந்து அக்ஷௌஹிணிஸைன்யத்தினால் சூழப்பட்டுக் காதலியுடன் திகழ்கின்ற அநிருத்தனை முன்னிட்டுக்கொண்டு ருத்ரனால் அபிநந்தனஞ் செய்யப்பெற்றுப் பாணாஸுரன் பின்றொடர்ந்து வந்தான். இங்ஙனம் பாணாஸுரன் கொண்டுவந்து சேர்த்த அநிருத்தனுடன் கூடி ஸ்ரீக்ருஷ்ணன் சங்கம் கனகத்தம்பட்டை துந்துபி முதலிய வாத்யகோஷங்களுடன் பட்டணத்து ஜனங்களும் நண்பர்களும் ப்ராஹ்மணர்களும் எதிர்கொண்டுவரப்பெற்றுத் தோரணங்களோடு கூடிய த்வஜங்களால் அலங்காரஞ் செய்து ராஜமார்க்கங்களும் நாற்சந்திவீதிகளும் ஜலம் தெளித்து விளக்கப்பெற்றிருப்பதுமாகிய த்வாரகாபுரிக்குச் சென்றான்

எவன் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ருத்ரனேடு நடந்த இந்த வ்ருத்தாந்தத்தையும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய விஜயத்தையும் காலையில் எழுந்து நினைக்கிருனே அவனுக்கு எங்கும் எப்பொழுதும் பராஜயம் உண்டாகாது. அறுபத்து மூன்ருவது அத்யாயம் முற்றிற்று.

---

நருகோபாக்யானம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—ராஜனே! ஒருகால் ஸாம்பன் ப்ரத்யும்னன் சாருபானு கதன் முதலிய யதுகுமாரர்கள் விளையாடுவதற்காக உபவனத்திற்குச் சென்றுர்கள். அவர்கள் அவ்விடத்தில் வெகுநேரம் விளையாடித் தண்ணீர்தாஹம் உண்டாகப்பெற்று ஜலத்தைத் தேடிக்கொண்டு திரியும்பொழுது ஓரிடத்தில் ஜலமில்லாத கிணற்றில் இருப்பதும் பெரியதும் அற்புதமுமாகிய ஓணுனென்னும் ஒரு ஜந்துவைக் கண்டார்கள். அந்த யாதவகுமாரர்கள் பர்வதம்போன்ற ஓணுனைக் கண்டு மனத்தில் வியப்புற்று மனஇரக்கத்துடன் அதை எடுக்க ப்ரயத்னஞ் செய்தார்கள். கிணற்றில் விழுந்திருக்கின்ற அவ்வோணுனை அப்பாலகர்கள் தோல்கயிறுகளாலும் நூல்கயிறுகளாலும் கட்டி மேலெடுக்க முயன்றும் வல்லமையற்று ஆவலுடன் அந்த வ்ருத்தாந்தத்தை ஸ்ரீக்ருஷ்ணனுக்குச் சொன்னூர்கள். தாமரைக் கண்ணனும் ஷாட்குண்யபூர்ணனும் உலகங்களைப் பாதுகாப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அவ்விடம் போய்ப் பார்த்து அதை அவலீலையாகவே இடக்கையினுல் எடுத்தான். அங்ஙனம் எடுக்கப்பட்ட அவ்வோணுன் உத்தமஸ்லோகனுகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய கரம் பட்டமாத்ரத்தில் தன்னுடைய அந்த ஓணுனுருவத்தைத் துறந்து உருக்கியபூ

கெடுத்த பொன்போன்ற அழகிய நிறத்துடன் அற்புதமான ஆபரணங்களும் ஆடைகளும் பூமாலையும் அணிந்து விளங்குகின்ற ஒரு தேவனாகத் தோற்றினான். ஸ்ரீக்ருஷ்ணன் அவனுக்கு அந்த ஜன்மம் வந்ததற்குக் காரணம் இன்னதென்பதை அறிந்தவனாயினும் அதை ஜனங்களுக்கு வெளியிட விரும்பி வினவினான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—மிகுந்தபாக்யமுடையவனே! சிறந்த உருவமுடைய நீ யாவன்? நாங்கள் உன்னைத் தேவஸ்ரேஷ்டனென்று நிச்சயமாய் நினைக்கின்றோம். நீ இத்தகைய நிஹீனஜன்மம் பெறுதற்கு உரியவனல்லை. மிகுந்தமங்களஸ்வரூபனே! நீ எந்தக்கர்மத்தினால் இத்தசையை அடைந்தனை? எங்களுக்குச் சொல்லக்கூடுமென்று நீ நினைப்பாயாயின் உன்னைப்பற்றி அறியவிரும்புகிற எங்களுக்கு இதையெல்லாம் விசதமாகச் சொல்வாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—காண்போர் மனம் களிக்கும்படி மிகவும் அழகான உருவமுடைய ஸ்ரீக்ருஷ்ணனால் இங்ஙனம் வினவப்பெற்ற மானிடஜாதியாகிய அம்மன்னவன் ஸூர்யனோடொத்த ஒளியுடைய கிரீடத்துடன் வணங்கி இங்ஙனம் மொழிந்தான்.

ந்ருகன் சொல்லுகிறான்:— நான் ந்ருகனென்னும் பெயருடைய ராஜஸ்ரேஷ்டன்; இக்ஷ்வாகுவின் புதல்வன். ப்ரபூ! தானகுணத்தைப் புகழும்பொழுது பெரும்பாலும் நான் உன்காதை ஸ்பர்சித்திருப்பேன். நாதனே! நீ ஸமஸ்தப்ராணிகளுடைய புத்தியையும் ஸாக்ஷாத்கரிப்பவன். உன்னறிவு காலத்தினால் அழிகிறதில்லை. ஆகையால் உனக்கு எதுதான் தெரியாது? ஆயினும் உன்னுடைய ஆஜ்ஞையினால் சொல்லுகிறேன்

பூமியில் எவ்வளவு மணல்களோ, ஆகாயத்தில் எவ்வளவு நக்ஷத்ரங்களோ, மழைத்தாரைகள் எவ்வளவோ, அவ்வளவு பசுக்களைத் தானஞ் செய்தேன். அபாரமாகப் பால் கறப்பவைகளும் யௌவனவயதுடையவைகளும் அழகிய உருவமும் நல்லியற்கையும் மற்றும் பல குணங்களும் அமைந்து பொன்னிறமுடையவைகளும் கொம்புகளில் பொன்னலங்காரமும் குளம்புகளில் வெள்ளியலங்காரமும் செய்யப்பெற்று ந்யாயத்தினால் ஸம்பாதிக்கப்பட்டவைகளும் கன்றோடு கூடியவைகளும் வெண்பட்டும் பூமாலையும் பல ஆபரணங்களும் இடப்பெற்றுத் திகழ்கின்றவைகளுமாகிய பசுக்களைக் கொடுத்தேன். நற்குணங்களும் நல்லொழுக்கமும் அமைந்து வருந்துகின்ற குடும்பமுடையவர்களும் வ்ரதங்களை உண்மையாக அனுஷ்டிப்பவர்களும் தவம் சாஸ்த்ரஜ்ஞானம் இவை அமைந்து வேதமோதி யுணர்ந்தவர்களும் யௌவனவயதுடையவர்களுமாகிய ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்களுக்குக் கொடுத்தேன். பசு பூமி ஸ்வர்ணம் வீடு குதிரை யானை தாஸிகளோடுகூடின கன்னிகைகள் எள்ளு வெள்ளி படுக்கை வஸ்த்ரம் ரத்னம் வீட்டிற்கு வேண்டிய கருவிகள் தேர் இவைகளையும் கொடுத்தேன். யாகங்களையும் செய்தேன். குளம் கிணறுவெட்டுவித்தல் முதலிய ஸ்மார்த்தகர்மங்களையும் நடத்தினேன். இப்படியிருக்கையில், ஒரு ப்ராஹ்மணஸ்ரேஷ்டனுடைய பசு தவறி என் பசுமந்தையில் கலந்து போய்விட்டது. நான் இதை முன்னமே ஒருவருக்குக் கொடுத்தோமென்பதை அறியாமல் அதை மற்றொரு ப்ராஹ்மணனுக்குக் கொடுத்தேன். அதை அவன் கொண்டுபோகையில் அந்தப் பசுவுக்குடைய அந்தணன் 'இது என்னுடையது' என்றான். என்னிடத்தினின்று வாங்கிக்கொண்டு போன

மற்றொருவன் 'இது என்னுடையது. எனக்கு ந்ருகன் கொடுத்தான்' என்றான். அந்த ப்ராஹ்மணர்கள் இருவரும் ஒருவரோடொருவர் விவாதப்பட்டுக்கொண்டு தத்தம் கார்யத்தை நிறைவேற்றிக்கொள்ள முயன்று என்னிடம் வந்து 'நீயே கொடுத்தனை. நீயே அதை மீளவும் அபஹரித்துக்கொள்கின்றனை' என்று சொன்னார்கள். அதைக் கேட்டு எனக்கும் ப்ரமம் உண்டாயிற்று. அப்பொழுது தர்மஸங்கடத்தை அடைந்த நான் 'அந்தணர்களே! மிகவும் சிறப்புடைய லக்ஷம் பசுக்களைக் கொடுக்கின்றேன். இந்தப் பசுவை எனக்குக் கொடுப்பீர்களாக. நான் உங்களுக்குக் கிங்கரன். அறியாமல் இங்ஙனம் செய்து விட்டேன். ஆகையால் என்னிடத்தில் அநுக்ரஹம் செய்வீர்களாக. பாபதோஷத்தினால் அசுசியான நரகத்தில் விழுகின்ற என்னை இந்த வருத்தத்தினின்று கரையேற்றுவீர்களாக' என்று நல்வார்த்தைகளைச் சொல்லி வேண்டினேன். அவர்களில் பசுவுக்குடையவராகிய ஒருவர் 'ராஜனே! நீ கொடுத்த இந்தப் பசுவையே கொண்டு போவேனன்றி வேறு லக்ஷம் பசுக்களைக் கொடுக்கினும் பெற்றுக் கொள்ளமாட்டேன்' என்று சொல்லிப் போய்விட்டார். பிற்பாடு என்னிடத்தில் அந்தப் பசுவை வாங்கிக்கொண்ட மற்றொருவரும் 'நீ சொன்ன லக்ஷம் பசுக்களுக்கு மேல் பதினாயிரம் பசுக்களைக் கொடுக்கினும் இந்தப் பசுவை விட்டு அவற்றைப் பெற்றுக்கொள்ளமாட்டேன்' என்று சொல்லி அதைத் துறந்துவிட்டுப் போனார். பரமனே! அப்பால் உன்னுடைய ஸங்கல்பத்தின்படி சில காலம் செல்ல நான் மரணம் அடைந்து, தேவனே! தெய்வச் செயலால் யமவிடம் கொண்டு போகப்பெற்றேனோ அதை உன்னெதிரில் சொல்லுகிறேன் தேவர்களுக்

கும் தேவனே! உலகங்களுக்கெல்லாம் நாதனே! நான் மரணம் அடைகையில் இதற்குமுன் என்னிடத்தில் பாபமில்லாமையால் என்னைக் கொண்டுபோக இடமில்லாதிருந்த யமபடர்கள் இச்சமயம்பார்த்து என்னை யமனிடம் கொண்டுபோனார்கள். அந்த யமன் என்னைப் பார்த்து 'மன்னவனே! நீ முன்பு பாபத்தின் பலனை அனுபவிக்கிறாயா! அல்லது புண்யத்தின் பலனை அனுபவிக்கிறாயா! நீ செய்த தானதர்மத்தின்பலன் ஸமீபித்துவந்து விளங்குகின்றது. எனக்கு அதன் எல்லையே தெரியவில்லை. (உன்னுடைய புண்யபலன் அபாரமாயிருக்கின்றது)' என்றான். நான் அதைக்கேட்டுப் பாபத்தின் பலனை முன்னம் அனுபவிக்கிறேன்' என்றேன். யமனும் அதற்கு 'ஆயின் நரகத்தில் விழுவாய்' என்றான். ப்ரபூ! அப்பொழுதே நான் விழத்தொடங்கி என்னை ஓணானாயிருக்கக் கண்டேன். கேசவனே! ப்ராஹ்மணகுலத்திற்கு வேண்டிய நன்மைகள் செய்பவனும் தானத்தில் புகழ்பெற்றவனும் உன்னுடைய தாஸனும் உன் காட்சியை விரும்புகின்றவனுமாகிய எனக்கு இப்பொழுதுங்கூட முன்ஜன்மத்தின் நினைவு மறையவில்லை. ப்ரபூ! நான் எவனைக் காணவேணுமென்று நெடுநாளாய் விரும்பிக்கொண்டிருப்பினும் காணப்பெறாதிருந்தேனோ, அப்படிப்பட்ட நீ எப்படி என்கண்ணுக்குப் புலப்பட்டனை. நீ பரமாத்மன். (கட்கண்ணுக்குத் தோற்றுபவனல்லை). மற்றும், நீ யோகீஶ்வரர்களால் உபநிஷத்துக்களாகிற கண்ணால் நிர்மலமான ஹ்ருதயத்தில் சிந்திக்கத்தகுந்தவனேயன்றி அவர்களுடைய கண்களுக்குங்கூடத் தோற்றமாட்டாய். இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கு எட்டாதவனே! எவனுக்கு ஸம்ஸாரபந்தம் அழியுங்காலம் அமைந்திருக்குமோ, அவன் அளவற்ற ஸம்ஸாரதுக்கங்களால்

மதிமயங்கியிருப்பினும் அவனுடைய ஹ்ருதயத்திற்குச் சாந்தியை விளைந்து அதில் நீ தோற்றுந்தன்மையன். தேவர்களுக்குந்தேவனே! ஜகந்நாதனே! பூமியைப் பாதுகாப்பதற்காக அவதரித்தவனே! பசுக்களை மேய்த்துக் கோவிந்தனென்று பட்டாபிஷேகஞ் செய்யப்பெற்றவனே! புருஷோத்தம! நாராயணு! இந்த்ரியங்களுக்கு நியாமகனே! புண்யச்லோகனே! பக்தர்களை என்றும் கைவிடாதவனே! எவ்வித விகாரங்களும் தீண்டப்பெறுதவனே! ஸ்ரீக்ருஷ்ணு! ப்ரபூ! ஸ்வர்க்கலோகத்திற்குப் போக முயன்றிருக்கின்ற எனக்கு அனுமதி கொடுப்பாயாக. நான் எங்கே இருப்பினும் என்மனம் உன்பாதாரவிந்தங்களில் வைக்கமுற்றிருக்கும்படி அனுக்ரஹஞ் செய்வாயாக. எல்லாப் பொருள்களையும் சரீரமாகவுடையவனுகையால் எல்லாம் தானேயாயிருப்பவனே! ஸ்வரூபத்தினும் குணங்களாலும் அளவற்றவனும் எல்லையில்லாத சக்திகளுடையவனும் ஜகத்திற்கு க்ஷேமம் விளைப்பவனும் வஸுதேவ குமாரனுய்த் தோன்றி வாஸுதேவனென்று பெயர் பெற்றவனும் யோகங்களுக்கு நிர்வாஹகனுமாகிய உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—அம்மன்னவன் இங்ஙனம் மொழிந்து அந்த ஸ்ரீக்ருஷ்ணனை ப்ரதக்ஷிணஞ் செய்து தன்கிரீடத்தினுல் அவனுடைய பாதங்களை ஸ்பர்சித்து அவனுல் விடை கொடுக்கப்பெற்று ஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்கையில் சிறந்தவிமானத்தில் ஏறிக்கொண்டான். ப்ராஹ்மணகுலத்தையே தெய்வமாகவுடையவனும் தர்மத்தில் நிலைநின்ற மதியுடையவனும் ஷாட்குண்யபூர்ணனும் தேவகியின் குமாரனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் க்ஷத்ரியர்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டுத் தன்பரிஜனங்களைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறுன்:— அக்னியைப் போன்ற மஹாதேஜிஷ்டனும் ப்ராஹ்மணனுடைய ஸொத்தைச் சிறிதாயினும் புசிப்பானுயின் அது அவனுக்கு வருந்தியும் ஜரிப்பித்துக்கொள்ள முடியாது. தங்களை ப்ரபுக்களென்று அபிமானித்துக்கொண்டிருக்கிற மன்னவர்களுக்கு அது ஜரிக்காதென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? நான் ஹாலாஹலவிஷத்தையுங்கூட விஷமென்று நினைக்கவில்லை. அது ஔஷதம் முதலியவைகளால் தடைசெய்ய முடியும். ப்ராஹ்மணர்களின் ஸொத்தே விஷமென்று கூறப்பட்டது. இந்த விஷத்திற்கு இப்புவியில் எவ்விதத்திலும் தடை செய்ய முடியாது. விஷம், சாப்பிடுகிறவனைமாத்ரமே ஹிம்ஸிக்கும். அக்னி ஜலத்தினுல் அணைந்து போய்விடும். ப்ராஹ்மணர் ஸொத்தாகிற அரணிக்கட்டையினின்றுண்டான அக்னியோவென்முல் குலத்தை அடியோடு தஹித்துவிடுகின்றது. ப்ராஹ்மணர்ஸொத்தை ஒருவன் தெரியாமல் புசிப்பானுயின் அது புசிக்கிறவன் அவன் பிள்ளை அவன் பேரன் ஆகிய மூன்று புருஷர்களையும் அழிக்கும். தெரிந்தும் பலம் இருக்கிறதென்று ஹடத்தினுல் பறித்துப் புசிப்பானுயின், அது அவனுக்கு முன்புள்ள பத்து புருஷர்களையும் மேல்வரப்போகிற பத்து புருஷர்களையும் அழித்துவிடும். எவர்கள் ப்ராஹ்மணர் ஸொத்தைத் தெரிந்தும் மேல்விழுந்து விரும்புகிறுர்களோ அத்தகைய மன்னவர்கள் ராஜ்யலக்ஷ்மியால் விவேகமற்றுத் தாங்கள் நரகத்தில் விழுவதை ஆலோசிக்கிறதில்லை. ஆகையால் அவர்கள் கேவலம் ஒன்றுமறியாத மூடர்கள். தானசீலர்களும் குடும்பிகளுமாகிய ப்ராஹ்மணர்கள் பணம் பறியுண்டு வருந்துவார்களாயின், அவர்களுடைய கண்ணீர்கள் பூமியில் விழுந்து எத்தனை

னாட்களை நனைக்கின்றனவோ, அத்தனை வர்ஷங்கள் வரையில் அந்த ப்ராஹ்மணர்ஸொத்தைப் பறித்த மன்னவர்களும் அவர்களுடைய வம்சத்தில் பிறந்தவர்களும் எவ்விதத்திலும் தடையின்றிக் கும்பீபாகமென்னும் நரகத்தில் விழுந்து வருந்துவார்கள். தன்னால் கொடுக்கப்பட்டதாயினும் பிறரால் கொடுக்கப்பட்டதாயினும் ப்ராஹ்மணனுடைய ஜீவனத்தை எவன் பறிக்கிருனே, அவன் அறுபதினாயிரம் வர்ஷங்கள் விஷ்டையில் புழுவாய்ப் பிறப்பான். ப்ராஹ்மணர்களின்ஸொத்து எனக்கு எவ்விதத்திலும் நேராதிருக்குமாக. ஏனென்றால், அதை ஆசைப்படுவார்களாயின் அம்மன்னவர்கள் ஆயுள் க்ஷீணித்துத் தோல்வி அடைந்து ராஜ்யத்தினின்று நழுவி வருந்துவார்கள். ஆகையால் நாம் அவ்விஷயத்தில் பயந்திருக்கவேண்டும். 'நீங்கள் என்னுடையவர்களாயிருப்பீர்களாயின், ப்ராஹ்மணன் அபராதம் செய்யினும் அவன்விஷயத்தில் நீங்கள் த்ரோஹம் செய்யவேண்டாம். அவன் அடிக்கினும் பலவாறு வையினும் அவனைத் தினந்தோறும் நமஸ்கரித்துக்கொண்டிருப்பீர்களாக. நான் எப்படி காலந்தோறும் மனவூக்கத்துடன் ப்ராஹ்மணர்களை நமஸ்கரிக்கிறேனே, அங்ஙனமே நீங்களும் நமஸ்கரித்து வருவீர்களாக. எவன் இதற்கு விபரீதமாக நடக்கிருனே, அவன் என்னிடத்தினின்று தண்டனையைப் பெறுவான். இந்த ந்ருகமன்னவன் தெரியாமல் ப்ராஹ்மணனுடைய பசுவைக் கைப்பற்றினும் அது இவனை நரகத்தில் தள்ளிவிட்டதல்லவா? ஆகையால் ப்ராஹ்மணர் ஸொத்தை ஒருவன் தெரியாமல் கைக்கொள்ளினும் அது அவனை நரகத்தில் தள்ளிவிடும். (தெரிந்து பறிப்பானாயின் அவன் நரகத்தில் விழுவதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ ?)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸமஸ்த பூதங்களுக்கும் சுத்தியை விளைப்பவனும் மஹானுபாவனும் போக மோக்ஷங்களைக் கொடுப்பவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன்பரிஜனங்களாகிய த்வாரகாஜனங்களுக்கு இவ்வளவும் மொழிந்து தன்க்ருஹத்திற்குப் போனான். அறுபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

{பலராமன் கோகுலம் போதலும், யமுனாநதியைக் கலப்பையினால் பிடித்திழுத்தலும்.}

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருவம்சத்தரசர்களில் சிறந்தவனே! மஹானுபாவனாகிய பலராமன் பந்துக்களைப் பார்க்க விரும்பி மிகுந்த ஆவலுடன் ரதத்தில் ஏறிக்கொண்டு கோகுலம் போனான். அவன் அவ்விடம் சென்று நெடுநாளாய்ப் பார்க்கவேண்டுமென்னும் பேராவலுற்ற கோபர்களாலும் கோபிகைகளாலும் அணைக்கப்பட்டுத் தாய்த்தந்தைகளை நமஸ்கரித்து அவர்களால் ஆசீர்வாதங்கள் செய்து அபிநந்தனம் செய்யப்பெற்றான். தாய் தந்தைகளாகிய அந்த யசோதை நந்தகோபன் இவர்கள் 'தாசார்ஹனே! உலகங்களை ஆள்பவனே! உன் தம்பியும் நீயுமாய் எங்களை நெடுங்காலம் பாதுகாத்து வருவாயாக' என்று மொழிந்து அவனை மடியில் ஏறிட்டு ப்ரேமத்தினால் அணைத்து ஸந்தோஷத்தினாலுண்டான கண்ணீர்களால் அவனை நனைத்தார்கள். அப்பால் அந்த ராமன் [1] கோபவ்ருத்தர்களையும் விதிப்படி நமஸ்கரித்துச் சிறியவர்களால் நமஸ்காரம் செய்யப் பெற்றுந் தன்னுடைய வயது ஸ்னேஹம் ஸம்பந்தம் இவைகளுக்குத் தகுந்தபடி பரிஹாஸம் செய்வது கையைப் பிடிப்பது

1. இடையர்களில் வயது சென்றவர்களை

ஆலிங்கனம் செய்வது முதலியவைகளால் கோபர்க ளோடு கலந்து உட்கார்ந்தான். அந்தக் கோபர்கள் இளைப்பாறி ஸுகமாக உட்கார்ந்திருக்கின்ற ராமனைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு ப்ரீதியினால் தழதழத்த உரையுடன் பந்துக்களின்க்ஷேமம் விசாரித்துத் தாம ரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் படிந்த மதி யுடையவர்களாகி 'ராமா! நம்பந்துக்கள் அனைவரும் பெண்டிர்களோடும் பிள்ளைகளோடும் க்ஷேமமாயிருக் கிறார்களா? நீங்கள் எங்களை நினைக்கிறீர்களா? பாபிஷ் டனாகிய கம்ஸன் தெய்வாதீனமாய் மாண்டான். இது நமக்குப் பெரிய ஆநந்தம். நம்பந்துக்கள் அனைவரும் பெரியவருத்தத்தினின்று விடுபட்டார்கள். இதுவும் நமக்குப் பெரிய ஆநந்தம். சில சத்ருக்களைக் கொன்று சில சத்ருக்களை வென்று நம் பந்துக்கள் ஜலதுர்க்கமான த்வாரகையை அடைந்து ஸுகமாயிருக்கிறார்களல்லவா? இது நம் பாக்யமே' என்றார்கள். கோபிகைகள் பலரா மனைக் கண்டு களித்து ஆதரவுடன் புன்னகை செய்து கொண்டு 'ஸ்ரீக்ருஷ்ணன் பட்டணத்து மடந்தையர்களு க்கு அன்பனாகி ஸுகமாயிருக்கிறானா? அவன் பந்துக் களையாவது தாய்தந்தைகளையாவது நினைக்கிறானா? திரண்டுருண்டு நீண்ட புஜதண்டங்களையுடைய ஸ்ரீக் ருஷ்ணன் எங்கள் பணிவிடையை நினைக்கிறானா? தாசார் ஹனே! ப்ரபூ! தாய்தந்தைகளையும் ப்ராதாக்கள் கணவர் கள் பிள்ளைகள் பகினிகள் முதலிய துறக்கமுடியாத பந் துக்களையெல்லாம் எவனுக்காக நாங்கள் துறந்தோமோ, அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அப்படிப்பட்ட எங்களை அந்த க்ஷ ணமே துறந்து புறப்பட்டுப்போனான்' ஆகையால் அவன் ஸ்னேஹத்தை வேரோடு அறுத்துவிட்டவன். 'ஆனால் நீங்கள் அவனை ஏன் தடுத்திருக்கலாகாது' என்கிறாயோ?

அப்படிப்பட்ட வார்த்தையை ஒன்றுமறியாத மடந்தையர்கள் எங்ஙனம் நம்பாதிருக்க முடியும்? (நம்பும்படி நல்வார்த்தை சொல்லி வஞ்சித்துப் போனான்.) ஸ்ரீக்ருஷ்ணன் நிலையற்ற மனமுடையவன்; க்ருதக்னன் (பிறர் செய்த உபகாரத்தை நினையாமல் மறப்பவன்.) பட்டணத்து மடந்தையர்களோவென்றால் மிகவும் திறமையுடையவர்கள். அவர்கள் அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய வார்த்தைகளை எங்ஙனம் நம்புகிறார்கள்? ஸ்ரீக்ருஷ்ணன் விசித்ரமான பேச்சுக்களையுடையவன். (அவன் தன் பேச்சின் ஒழுங்கினாலேயே மதிமயங்கும்படி செய்து விடுவான்). எத்தகைய திறமையுடைய மாதரார்களும் அழகிய புன்னகை அமைந்த அவனுடைய கண்ணோக்கத்தினால் மன்மதவிகாரம் தலைக்கொண்டு வருந்தி அவனுடைய வார்த்தைகளை நம்புவார்களேயன்றி நம்பாது போக மாட்டார்கள். இது நிச்சயம். ஓ கோபிகைகளே! அவனுடைய கதையால் நமக்கு என்ன ப்ரயோஜனம்? ஒரு ப்ரயோஜனமும் இல்லை. ஆகையால் வேறு கதைகளைச் சொல்லுங்கள். அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நம்மையொழியக் காலம் செல்லுமாயின், நமக்கும் அப்படியே அவனையொழியக் காலம் செல்லும். (ஆனால் அவனுக்கு ஸுகமாகக் காலம் செல்லும், நமக்குத் துக்கமாகச் செல்லும். இவ்வளவே விசேஷம்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபிகைகள் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய புன்னகையையும் பேச்சையும் அழகிய கண்ணோக்கத்தையும் நடையையும் ப்ரீதியுடன் செய்யும் ஆலிங்கனத்தையும் நினைத்துக் கண்ணீர் பெருக்கினார்கள். பலவகையான நல்வார்த்தைகள் சொல்லி ஸமாதானப் படுத்துவதில் ஸமர்த்தனும்

மஹானுபாவனுமாகிய பலராமன் ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லியனுப்பின மனத்திற்கினிய ஸமாசாரங்களைச் சொல்லி அந்தக் கோபிகைகளை ஸமாதானப்படுத்தினான். மஹானுபாவனாகிய அந்தப் பலராமன் இரவுகளில் கோபிகைகளுக்கு ஸந்தோஷத்தையும் ப்ரேமத்தையும் வளர்த்திக் கொண்டு சித்திரையும் வைகாசியுமாகிய இரண்டு மாதங்கள் அவ்விடத்தில் வஸித்திருந்தான். பூர்ணசந்த்ரனுடைய கிரணங்களால் விளக்கமுற்றிருப்பதும் ஆம்பலோடைகளின் வாஸனையை ஏந்திக் கொண்டு வருகின்ற காற்று வீசப்பெற்றதுமாகிய யமுனைக்கரையிலுள்ள உபவனத்தில் அப்பலராமன் கோபஸ்த்ரீகளின் கூட்டங்களால் சூழப்பட்டு விளையாடிக்கொண்டிருந்தான். அம்ருதத்துடன் உண்டான தேவார்ஹமாகிய வாருணியென்னும் மத்யம் வருணனால் அனுப்பப்பட்டு ஒரு வ்ருக்ஷத்தின் பொந்தினின்று பெருகாநின்றுகொண்டு தன்வாஸனையால் அவ்வனம் முழுவதையும் மணங்கமழச் செய்தது. பலராமன் காற்றினால் கொண்டுவரப்பட்ட அந்த மத்ய தாரையின் மணத்தை மோந்து அவ்விடம் வந்து கோபஸ்த்ரீகளோடு கூட அம்மத்யத்தைப் பானஞ் செய்தான். அவன் கோபஸ்த்ரீகளின் அழகிய கூட்டத்தினிடையில் அவர்களால் பாடப்பட்டுத் தானும் உரக்கப் பாடிக்கொண்டு இந்த்ரனுடைய யானையாகிய ஐராவதம் பெண்யானைக்கூட்டத்தினிடையில் விளையாடுவதுபோல விளையாடினான். ஆகாயத்தில் துந்துபி வாத்யங்கள் முழங்கின. தேவதைகள் ஸந்தோஷமுற்று ராமன்மேல் பூமழை பொழிந்தார்கள். கந்தர்வர்களும் முனிவர்களும் அந்த ராமனுடைய வீர்யங்களை வெளியிடுகிற உரைகளால் அவனை ஸ்தோத்ரஞ்

செய்தார்கள். பலராமன் இங்ஙனம் பாடப்பட்ட வீரச் செயல்களுடையவனாகி மத்யபானத்தினால் மதித்து மதத்தினால் கண்கள் தழதழக்கப்பெற்றுக் கோபஸ்த்ரீகளுடன் வனத்தில் உலாவினான். அம்மஹானுபாவன் பூமாலையைச் சூடி ஒற்றைக்குண்டலம் அணிந்து மதித்து வைஜயந்தியென்னும் மாலையைத் தரித்துப் புழுக்க நீர்த்துளிகளால் அலங்கரிக்கப்பட்டுப் புன்னகை அமைந்து தாமரைமலர் போன்றதுமாகிய திருமுகத்துடன் விளக்கமுற்றிருந்தான். ப்ரபுவாகிய அந்தராமன் ஜலக்ரீடை செய்ய விரும்பி யமுனையை அழைத்தான். 'இவன் மதித்திருக்கிறான்' என்று தனவார்த்தையை அனாதரித்து வாராதிருக்கின்ற அந்நதியின்மேல் பலராமன் கோபமுற்றுக் கலப்பையின் நுனியால் பிடித்திழுத்தான். 'பாவக்கருத்துடையவளே! நான் அழைக்கையில் என்னை அவமதித்து வாராதிருக்கின்றனை. ஆகையால் மனம்போனபடி திரியுந்தன்மையுள்ளாகிய உன்னை என் கலப்பையின் நுனியால் பல்துண்டங்களாகச் செய்கிறேன்' என்று விரட்டினான். இங்ஙனம் பலராமனால் விரட்டப்பட்ட யமுனை பயந்து 'இவன் அப்படியே செய்யவல்லவன்' என்று சங்கித்து அவன் பாதங்களில் வந்துவிழுந்து யாதவகுமாரனாகிய அந்த ராமனைக் குறித்து 'ராம! ராம! நீண்ட புஜதண்டங்களுடையவனே! உன் மஹிமையை நான் அறியேன். அதற்கு எல்லையே கிடையாது. உலகங்களுக்கு நாதனே! இவ்வுலகம் முழுவதும் உன்னுடைய ஆயிரந்தலைகளில் ஒரு தலையினால் தரிக்கப்பட்டிருக்கின்றது. மஹானுபாவனாகிய உன்னுடைய எல்லையில்லாத மஹிமையை அறியாமையால் அபசாரப்பட்டேன். இப்பொழுது நான் உன்னைச் சரணம் அடைந்தேன். அனைத்திற்கும் அந்த

ராத்மாவாயிருப்பவனே! என்னைப் பொறுத்து விடுவாயாக. நீ பக்தவத்ஸலனல்லவா! (பக்தர்களின் தோஷங்களையே குணமாகக் கொள்ளுந்தன்மையனல்லவா? ஆகையால் என்பிழையை நினையாமல் என்னை அருள்வாயாக)' என்று மொழிந்து வேண்டினாள். மஹாநுபாவனாகிய பலராமன் இங்ஙனம் யமுனையால் வேண்டப்பெற்றுப் பொறுத்து முன்போலவே பாயும்படி விட்டுத் தனிமையுள்ள மத்தகஜம் பெண்யானைகளுடன் ஜலத்தில் இறங்குவதுபோலக் கோபஸ்த்ரீகளுடன் அந்த யமுனாஜலத்தில் இறங்கினான். அந்த யமுனாநதி இங்ஙனம் இஷ்டப்படி இறங்கி விளையாடிக் கரையேறின பலராமனுக்கு இரண்டு நீலவஸ்த்ரங்களையும் விலையுயர்ந்த பூஷணங்களையும் சிறந்த ஒளியுடைய மாலையையும் கொடுத்தாள். அவன் அந்த நீலவஸ்த்ரங்களை உடுத்து ஸ்வர்ணமயமான மாலையையும் மற்றும் பல ஆபரணங்களையும் அணிந்து சந்தனம் பூசி நன்கு அலங்கரித்துக்கொண்டு மஹேந்த்ரனுடைய கஜமாகிய ஐராவதம் போல் விளங்கினான். ராஜனே! யமுனை அளவற்ற வீர்யங்களையுடைய பலராமனுடைய வீர்யத்தை வெளியிடுவதாக அவன் கலப்பையினால் இழுத்த மார்க்கத்தினால் பெருகலுற்று இப்பொழுதும் புலப்படுகின்றது. இங்ஙனம் பலராமன் கோகுலத்தில் கோபஸ்த்ரீகளின இனிய விலாஸங்களால் இழுக்கப்பட்ட மனமுடையவனாகி விளையாடிக் கொண்டிருக்கையில் எல்லா இரவுகளும் ஓரிரவுபோலக் கடந்தன. அறுபத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீக்ருஷ்ணன் பௌண்ட்ராகாதிகளை ஸம்ஹரித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பலராமன் நந்தகோகுலம் போகையில் கரூஷதேசாதிபதியாகிய பௌண்ட்ரக மன்னவன் அறிவு கேடனாகி நானே வாஸுதேவனென்று நினைத்து ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தூதனை அனுப்பினான். அவன் 'நீ ஷாட்குண்யபூர்ணனாகிய வாஸுதேவனே; உலகங்களைப் பாதுகாக்கும் பொருட்டு இங்ஙனம் அவதரித்திருக்கின்றனை' என்று அறியாத மூடர்களால் துதித்து உத்ஸாஹ மூட்டப்பெற்றுத் தன்னையே பக்தர்களைக் கைவிடாத மஹானுபாவனான வாஸுதேவனாக நினைத்துக்கொண்டான். சிறுவர்களால் 'நீ மன்னவன்' என்று மன்னவனாக ஏற்படுத்தப்பட்ட ஒரு சிறுவன்போல அறியாத மூடர்களால் நீயே வாஸுதேவனென்று மொழியப்பெற்றுத் தன்னை வாஸுதேவனென்று ப்ரமித்து மதிகெட்டு ஒருவர்க்கும் அறிய முடியாத உண்மையுடைய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு 'நீ வாஸுதேவனல்லை. நானே 'வாஸுதேவன்' என்று இவ்விஷயத்தை அறிவிக்கும்பொருட்டு த்வாரகைக்குத் தூதனை அனுப்பினான். அத்தூதனும் த்வாரகைக்குச் சென்று தாமரைக்கண்ணனும் ப்ரபுவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஸபையில் வீற்றிருக்கக் கண்டு தங்கள் அரசன் சொல்லியனுப்பின செய்தியை மொழிந்தான். 'ப்ராணிகளுக்கு அருள்புரியும்பொருட்டு இப்பூமியில் அவதரித்த வாஸுதேவன் நானொருவனே. மற்றொருவனுமல்லன். நீ பொய்யாகவே வாஸுதேவனென்று பெயரிட்டுக் கொண்டிருக்கின்றனை. ஆகையால் அந்தப்பெயரைத் துறந்து விடுவாயாக. ஸாத்வதனே! நீ என்னுடைய அடையாளங்களை மூடத்தனத்தினால் தரித்துக்கொண்டிருக்கின்றனை. அவற்றைத் துறந்து என்னைச்

சரணம் அடைவாயாக. இல்லையாயின், எனக்கு யுத்தங் கொடுப்பாயாக' என்று அவன் சொல்லிய னுப்பின வசனங்களை அத்தூதன் மொழிந்தான். அப்பொழுது ஸபையிலிருந்த உக்ரஸேனன் முதலியவர்கள் மந்தபுத்தியனாகிய பௌண்ட்ரகனுடைய அப்பிதற்றலைக் கேட்டு உரக்கச் சிரித்துப் பரிஹாஸஞ் செய்தார்கள். அவர்களுடைய பரிஹாஸகதையின் முடிவில் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் 'மூடனே! நீ எந்தெந்த அடையாளங்களை ஏற்றுக்கொண்டனையோ, எவற்றைக் கொண்டு நீ இங்ஙனம் பிதற்றுகின்றனையோ, அவற்றையெல்லாம் விடும்படி செய்கிறேன். அறிவுகெட்ட மூடனே! எந்தவாயினால் நீ இங்ஙனம் பிதற்றுகின்றனையோ, அத்தகைய வாயை மூடிக்கொண்டு மாம்ஸத்தை விரும்புகிற கங்கம் க்ருத்ரம் வளம் முதலிய பக்ஷிகளால் சூழப்பட்டுப் படுக்கப்போகின்றனை. அவ்விடத்தில் நீ நாய் நரி முதலிய ஜந்துக்களுக்குச் சரணமாவாய். (என்னால் அடியுண்டு பூமியில் விழுந்திருக்கின்ற உன்னைச் சீக்ரத்தில் நாய் நரி கழுதை முதலிய ஜந்துக்கள் பிடுங்கித் தின்னப்போகின்றன)' என்று அத்தூதனைக் குறித்து மொழிந்தான். தூதனும் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் மொழிந்த வசவுகளையெல்லாம் அப்படியே தன்ப்ரபுவிடம் கொண்டு போய்ச் சேர்த்தான். ஸ்ரீக்ருஷ்ணனும் ரதத்தில் ஏறிக்கொண்டு காசிக்கு அருகாமையில் வந்து சேர்ந்தான். மஹாரதனான பௌண்ட்ரகனும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய முயற்சியை அறிந்து பல அக்ஷௌஹிணிஸைன்யங்களோடுகூடிப் பட்டணத்தினின்று புறப்பட்டான். அந்தப் பௌண்ட்ரகனுடைய நண்பனாகிய காசிராஜன் அவனைப் பின்புறத்தில் பாதுகாத்துக்

கொண்டு மூன்று அக்ஷௌஹிணிஸைன்யங்களுடன் பின்றொடர்ந்தான். அப்பொழுது சங்கம் சக்தி கதை சார்ங்கம் ஸ்ரீவத்ஸம் இவை முதலியவற்றோடு கூடிக் கௌஸ்துபமணியைத் தரித்து வனமாலையை அணிந்து பொன்னிறமுள்ள பட்டுவஸ்த்ரங்களை உடுத்துக் கருடக்கொடியேற்றி விலையில்லாத மேலான கிரீடத்தையும் திகழ்கின்ற மகரகுண்டலங்களையும் பூண்டு ரதத்தினிடையில் உட்கார்ந்து வருகின்ற பௌண்ட்ரகனை ஸ்ரீக்ருஷ்ணன் கண்டான். தனக்கு இயற்கையில் இல்லாததும் ஸ்ரீக்ருஷ்ணனோடொத்ததுமாகிய வேஷம் பூண்டு, ராமாதிகளின் வேஷம் பூண்டு அரங்கில் புகுந்த கூத்தாடியைப்போன்றிருக்கிற அந்தப் பௌண்ட்ரகனைக் கண்டு ஸ்ரீக்ருஷ்ணன் மிகவும் நகைத்தான். அப்பொழுது சத்ருக்கள் சூலம் கதை பரிகம் சக்தி ப்ராஸம் தோமரம் கட்கம் பட்டஸம் பாணம் முதலிய பற்பல ஆயுதங்களால் ஸ்ரீக்ருஷ்ணனை அடித்தார்கள். ப்ரளயகாலாக்னி ப்ராணிகளையெல்லாம் வருத்தி முடிப்பதுபோல ஸ்ரீக்ருஷ்ணன் யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாட்களும் நிறைந்த பௌண்ட்ரகன் காசிராஜன் ஆகிய இருவருடைய ஸைன்யத்தையும் கதை கட்கம் சக்ரம் பாணம் இவைகளால் வருத்திப் பாழ்செய்தான். சக்ராயுதத்தினாலும் கதை கட்கம் முதலிய மற்ற ஆயுதங்களாலும் கண்டிக்கப்பட்ட தேர் குதிரை யானை காலாள் கழுதை ஒட்டகம் இவை முதலியவைகள் நிறைந்த அந்த யுத்தபூமி சூரர்களுக்கு மிகவும் ஸந்தோஷத்தை விளைப்பதாகி ப்ரளய காலத்தில் ருத்ரனுடைய க்ரீடாஸ்தானம் போல் பயங்கரமாய் விளங்கிற்று. அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் பௌண்ட்ரகனைக் குறித்து, 'ஓ பௌண்

ட்ரகனே! நீ தூதன்மூலமாய்ச் சொன்னபடி அந்த அஸ்த்ரங்களை உன்மேல் விடுகிறேன். அறிவுகெட்டவனே! எனக்கு அஸாதாரணமான நாமத்தை நீ பொய்யாக ஏற்றுக்கொண்டிருக்கின்றனையல்லவா? அதை இப்பொழுது விடும்படி செய்கிறேன். நான் யுத்தத்தை விரும்பாமல் பயந்து போவேனாகில் உன்னைச் சரணம் அடைகின்றேன்' என்று கோபந்தடன் வைத்த கூரான பாணங்களால் அவனை[1] விரதனாக்கி, இந்த்ரன் வஜ்ராயுதத்தினால் பர்வதத்தின் சிகரத்தை அறுப்பதுபோலச் சக்ராயுதத்தினால் அவன் தலையை அறுத்தான். அங்ஙனமே காசிராஜன் தலையைத் தாமரை மொட்டைப்போல் பாணங்களால் அறுத்துக் காசியில் விழும்படி கொண்டு போய்த் தள்ளினான். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் த்வேஷியாகிய பௌண்ட்ரகனையும் அவனுடைய மித்ரனான காசிராஜனையும் கொன்று ஸித்தர்களால் பாடப்பட்ட அம்ருதம்போன்ற இனிய கதைகளுடையவனாகி த்வாரகையில் ப்ரவேசித்தான். அந்தப் பௌண்ட்ரகன் ஓயாமல் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேஷத்தைத் தரித்து அவனை த்யானஞ்செய்கையால் கர்மபந்தங்களெல்லாம் தொலையப்பெற்று அவனோடு ஸாதர்ம்யத்தை அடைந்தான் (முக்தியைப் பெற்றான்). காசியில் ராஜக்ருஹத்தின்வாசலில் குண்டலங்களுடன் விழுந்திருக்கின்ற தலையைக் கண்டு 'இது என்ன? யாருடைய முகம்?' என்று ஜனங்கள் ஸந்தேஹப்பட்டார்கள். அப்பால் காசிராஜனை தங்கள் அரசனுடைய பட்டமஹிஷிகளும் பிள்ளை முதலிய பந்துக்களும் பட்டணத்து ஜனங்களும் தங்கள் அரசன் முடிந்தானாகையால் 'நாத! நாத!' என்று கதறிக்

1. ரதமில்லாதவனாக்கி.

கண்ணீர் பெருக்கினார்கள். அந்தக் காசிராஜனுடைய பிள்ளையாகிய ஸுதக்ஷிணனென்பவன் தந்தையின் உத்தரக்ரியையை முடித்து 'என் தந்தையைக் கொன்றவனைக் கொன்று தந்தையின் கடனைப் போக்குகையாகிற நிஷ்க்ருதியைப் பெறுகிறேன்' என்று தனக்குள் நிச்சயித்துக்கொண்டு உபாத்யாயருடன்கூடி மிகுந்த த்யானயோகத்தினால் ருத்ரனை ஆராதித்தான். அவன் ப்ரஸன்னனாகிய ருத்ரனைக் கண்டு தன் தந்தையைக் கொன்றவனைக் கொல்லுவதற்குரிய உபாயத்தையே வரமாக வேண்டினான். அவனுடைய த்யான யோகத்தினால் ஸந்தோஷம் அடைந்த ருத்ரனும் ஏகாந்தத்தில் 'ஸுதக்ஷிணனே! நீ ப்ராஹ்மணர்களுடன் கூடி நல்ல நிறமையுள்ள ருத்விக்குக்களை முன்னிட்டு அபிசாரஹோமத்தினால் தக்ஷிணாக்னியை ஆராதிப்பாயாக. அந்த அக்னியை ப்ராஹ்மணர்களுக்கு வேண்டியவற்றை நிறைவேற்றிக் கொடுத்து அவர்களிடத்தில் பக்தி செய்யுந் தன்மையுள்ளவர் தவிர மற்ற எவரிடத்திலேனும் ப்ரயோகிப்பாயாயின், அது ப்ரமதகணங்களால் சூழப்பட்டு உன் மனவிருப்பத்தை நிறைவேற்றும்' என்று அவனுக்கு வரங் கொடுத்தான். கெடுமதியனாகிய அந்த ஸுதக்ஷிணன் இங்ஙனம் ருத்ரனால் மொழியப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனுக்கு த்ரோஹஞ்செய்ய முயன்று அங்ஙனம் தக்ஷிணாக்னியை ஆராதித்தான். அப்பால் அவ்வக்னிகுண்டத்தினின்று அக்னிபுருஷன் உருவத்துடன் தோன்றினான். அவன் காய்ச்சின தாம்ரம்போன்ற தலைமயிர்களும் தாடி மீசைகளும் நெருப்புத் துணுக்கைகளைக் கக்குகின்ற கண்களும் அமைந்து கோரைப்பற்களாலும் பயங்கரமான புருவநெரிப்பினாலும் பற்களாலும் கடோரமான முகமுடையவனாகி நாக்கினால் கடைவாய்

களை நக்கிக்கொண்டு அரையில் ஆடையின்றி ஜ்வலிக்கின்ற த்ரிசூலத்தை அசைத்துக்கொண்டு மிகவும் பயங்கரனாயிருந்தான். அவன் பனைமரங்கள்போன்ற பாதங்களால் பூமியை நடுங்கச் செய்பவனாகித் திசைகளையெல்லாம் தஹித்துக் கொண்டு ப்ரமதகணங்களால் சூழப்பட்டு த்வாரகாபுரியை எதிர்த்துச் சென்றான். த்வாரகையிலுள்ளவர்கள் அனைவரும் அங்ஙனம் வருகின்ற அவ்வபிசாராக்னியைக் கண்டு காடு பற்றியெரியும் பொழுது மிருகங்கள் பயப்படுவதுபோலப் பயந்தார்கள்; அவர்கள் பயத்தினால் வருந்தி ஸபையில் பாசகைகளைக் கொண்டு விளையாடுகின்ற மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடம் சென்று 'மூன்று லோகங்களுக்கும் நாதனே! பட்டணத்தைத் தஹிக்கின்ற அக்னியினின்று எங்களைப் பாதுகாப்பாயாக' என்று முறையிட்டார்கள். ரக்ஷணத்தில் ஸமர்த்தனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அங்ஙனம் ஜனங்கள் பயத்தினால் தழதழத்து மொழிவதைக் கேட்டும் தன்னுடையவர்கள் பயப்படுவதைப் பார்த்தும் சிரித்து 'நீங்கள் பயப்படவேண்டாம். நான் பாதுகாக்கின்றேன்' என்று மொழிந்தான். ஸமஸ்தலோகத்தின் உள்ளும் புறமும் உள்ளதை யெல்லாம் ஸாக்ஷாத்கரிப்பவனும் ப்ரபுவுமாகிய அம்மஹானுபாவன் ருத்ரனுடைய வரப்ரஸாதத்தினால் ஏற்பட்ட அபிசார தேவதை யென்று தெரிந்துகொண்டு அதைத் தடுக்கும்பொருட்டுத் தன்பக்கத்தில் இருக்கிற ஸுதர்சனசக்ரத்தை ஆஜ்ஞாபித்தான். ஸ்ரீக்ருஷ்ணனுடைய திவ்யாஸ்த்ரமாகிய அந்த ஸுதர்சனசக்ரம், கோடி ஸூர்யர்களோடொத்ததும் ப்ரளயாக்னியோடொத்த ஒளியுடையதும் ஓயாமல் அமிதமாக ஜ்வலிப்பதும் தன் தேஜஸ்ஸினால் ஆகாசத்தையும் திசைகளையும் த்யாவா பூமிகளையும்

விழுங்குவதுபோல் நிகழ்வதுமாகி அவ்வக்னியைப் பிடித்தது. அந்த அபிசாராக்னி ஸ்ரீக்ருஷ்ணனுடைய தேஜோமயமான ஸுதர்சனசக்ரத்தினால் முகம் முறிந்து தடுக்கப்பட்டுத் திரும்பிக் காசிக்கு வந்து ருத்விக்குக்களோடும் மற்ற ஜனங்களோடும் கூடின அந்த ஸுதக்ஷிணனையே தஹித்து விட்டது. அவன் தன் சத்ருவை அழிக்கும்படி செய்த அபிசாரம் அவனுக்கே பலித்து விட்டது. ஸ்ரீக்ருஷ்ணனுடைய திவ்யாயுதமான அந்த ஸுதர்சனசக்ரமும் அவ்வக்னியோடுகூடவே காசியில் நுழைந்து உப்பரிகைகளும் ஸபைகளும் க்ருஹங்களும் கடைகளும் கோபுரங்களும் மேற்கட்டடங்களும் யானைக் கொட்டாரம் குதிரைக்கொட்டாரம் முதலியவைகளும் கருவூலங்களும் யானைகளும் குதிரைகளும் தேர்களும் அன்னசாலைகளும் அமைந்த அந்தக் காசிப்பட்டணம் முழுவதையும் தஹித்து மீளவும் எத்தகைய செயல்களையும் அனாயாஸமாக முடிக்குந் திறமையுடைய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பார்ஸ்வத்தில்வந்து நின்றது. உத்தமஸ்லோகனை ஸ்ரீக்ருஷ்ணனுடைய பராக்ரமத்தை உட்கொண்டிருக்கிற இந்த உபக்யானத்தை எவன் பிறர்க்குச் சொல்லுகிருனே, எவன் மனவூக்கத்துடன் கேட்கிருனே, அவ்விருவரும் ஸமஸ்த பாபங்களாலும் விடப்பட்டு வாழ்வார்கள். (பெரிய வாழ்வான மோக்ஷத்தைப் பெறுவார்கள்.) அறுபத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

ரைவதகபர்வதத்தில் ஸ்த்ரீகளோடு விளையாடிக்கொண்டிருந்த பலராமன் அங்கு உபரோதஞ் செய்த த்விவிதனென்னும் வானரனைக் கொல்லுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:— அற்புதச் செயல்களுடையவனும் ஆதிசேஷனுடைய அவதாரமும் அபார மஹிமைகளுடையவனும் ஸமர்த்தனுமாகிய பலராமன் இன்னம் ஏதேது செய்தானோ அதை நான் மீளவும் கேட்க விரும்புகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— நரகாஸுரனுக்கு நண்பனாகிய த்விவிதனென்னும் ஒருவானரன் இருந்தான். அவன் ஸுக்ரீவனுடைய மந்த்ரி; மைந்தனுடைய ப்ராதா; மிகுந்த வீர்யமுடையவன். அந்த த்விவிதன் தன்னுடைய நண்பனாகிய நரகாஸுரனுக்கு ப்ரியஞ்செய்ய விரும்பித் தேசங்களெல்லாம் பாழாகும்படி பட்டணங்களையும் க்ராமங்களையும் ஆகரங்களையும் இடைச்சேரிகளையும் நெருப்பை யிட்டுக் கொளுத்திக்கொண்டிருந்தான். மற்றும், அவன் ஒருகால் பர்வதங்களைப் பிடுங்கி அவற்றால் தேசங்களைச் சூர்ணஞ் செய்து கொண்டிருந்தான். சத்ருக்களை அழிக்குந் தன்மையனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய வாஸஸ்தானமாகிய ஆநர்த்த தேசங்களை இங்ஙனம் பர்வதங்களையிட்டு மிகவும் சூர்ணஞ் செய்து கொண்டிருந்தான். பதினாயிரம் யானை பலமுடைய அவ்வானரன் ஒருகால் ஸமுத்ரத்தினிடையில் இருந்துகொண்டு இரண்டு கைகளாலும் அந்த ஸமுத்ர ஜலத்தை வாரியிறைத்து ஸமுத்ரக்கரையிலுள்ள தேசங்களையெல்லாம் வெள்ளத்தில் முழுகும்படி செய்தான். துஷ்ட ஸ்வபாவமுடைய அவ்வானரன் ரிஷிகளில் தலைமையுள்ள மஹர்ஷிகளின் ஆஶ்ரமங்களிலுள்ள வ்ருக்ஷங்களை

முறித்து அவற்றைப் பாழ்செய்து மலமூத்ரங்களை விட்டு யாகாக்னிகளை அசுத்தஞ் செய்தான். குளவி புழுக்களை ரந்த்ரங்களில் வைத்து மூடுவதுபோலத் துர்ப்புத்தியாகிய அந்த த்விவிதன் கொழுத்துப் புருஷர்களையும் ஸ்த்ரீகளையும்பர்வதங்களின் செறிவுகளிலும் குஹைகளிலும் அடைத்துப் பர்வதசிகரங்களால் மூடினான். இங்ஙனம் தேசங்களைப் பீடிப்பதும் குலஸ்த்ரீகளைக்கெடுப்பதுமாயிருக்கின்ற அந்த த்விவிதன் மிகவும் அழகியதான பாட்டைக் கேட்டு ரைவதகபர்வதத்திற்குச் சென்றான். அங்கு உபவனத்தில் தாமரைமலர்மாலை அணிந்து பார்க்கப் பதினாயிரங் கண்கள் வேண்டும்படி மிகவும் அழகான ஸமஸ்த அங்கங்களுடையவனும் ஸ்த்ரீகளின் கூட்டத்தினிடையி லிருப்பவனும் யாதவஶ்ரேஷ்டனுமாகிய பலராமன் மத்யபானஞ் செய்து மதத்தினால் கண்கள் தழதழத்துப் பாடிக்கொண்டு மதித்த யானைபோல் கம்பீரமான உருவத்துடன் திகழ்வுற்றிருக்க அவ்வானரன் கண்டான். துஷ்டனாகிய அவ்வானரன் கிளைமேலேறி மரங்களை அசைத்துக்கொண்டு தான் வந்திருப்பதை அறிவிக்க முயன்று கிலகிலா சப்தம் செய்தான். இயற்கையில் சாபலமுடையவர்களும் பரிஹாஸம் ப்ரியமாயிருக்கப் பெற்றவர்களும் பலராமனுடைய பரிக்ரஹங்களும் யௌவனவயதுடையவர்களுமாகிய மடந்தையர்கள் அந்தக் குரங்கினுடைய துஷ்டத்தனத்தைக் கண்டு சிரித்தார்கள். அவ்வானரன் ராமன் பார்த்துக் கொண்டிருக்கையில் அவனைப் பொருள் செய்யாமல் புருவத்தை நெரிப்பது எதிரே வருவது பற்களைக் காட்டுவது அபானத்தைக் காட்டுவது முதலியவைகளால் அம்மடந்தையர்களை அவமதித்

தான். சத்ருக்களை அடிப்பவர்களில் ஸமர்த்தனாகிய பலராமன் கோபமுற்று அவ்வானரனைக் கல்லால் அடித்தான். அவன் அந்தக் கல்லடி தன்மேல் படாதபடி தப்பித்துக் கொண்டு மத்யகலசத்தை எடுத்துக் கொண்டு துஷ்டனாகையால் பலராமனுக்குக் கோபம் வரும்படி அவனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே அவனை அவமதித்து மத்யகலசத்தை உடைத்து ஸ்த்ரீகளின் வஸ்த்ரங்களை இழுத்து மிகுந்த பலமுடையவனாகையால் கொழுத்து ராமனைப் பொருள் செய்யாமல் பலவாறு அபகாரஞ் செய்தான். பலராமன் அவ்வானரனையும் அவனுடைய துஷ்டத் தனத்தையும் அவன் தேசங்களுக்கு உபத்ரவஞ் செய்ததையும் கண்டு கோபமுற்றுச் சத்ருவாகிய அவ்வானரனை வதிக்க விரும்பி உலக்கையையும் கலப்பையையும் எடுத்துக்கொண்டான். மஹாவீர்யமுடைய த்விவிதனும் கையால் ஒரு ஸால மரத்தைப் பிடுங்கிக்கொண்டு எதிரே வந்து அம்மரத்தினால் பலராமனைத் தலையில் அடித்தான். மஹானுபாவனாகிய பலராமன் பர்வதம்போல் தலைமேல் விழுகின்ற அந்த வ்ருக்ஷத்தை அப்படியே ஏந்திக்கொண்டு ஸுநந்தமென்னும் பெயருடைய தன் ஆயுதமான உலக்கையினால் வானரனை அடித்தான். அவ்வானரன் உலக்கையின் அடியால் மூளை சிதறி ரக்தம் தாரை தாரையாய்ப் பெருகப்பெற்றுக் கைரிகதாது பெருகப் பெற்ற பர்வதம்போன்று அந்த அடியைச் சிறிதும் நினையாமல் மீளவும் வேறொரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக் கொண்டு வந்து தன்பலத்தினால் அதை உதறி இலைகளெல்லாம் உதிரும்படி செய்து மிகுந்த கோபாவேசத்துடன் அதனால் பலராமனை அடித்தான். பலராமன் அந்த வ்ருக்ஷத்தைப் பல துண்டங்களாகும்படி அறுத்

தான்: அப்பால் அவ்வானரன் வேறொரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு அதனால் அடித்தான். பலராமன் அதையும் பல துண்டங்களாக அறுத்தான். இங்ஙனம் மஹானுபாவனாகிய பலராமனோடு யுத்தஞ் செய்கிற அவ்வானரன் தான் கொண்டு வரும் வ்ருக்ஷங்கள் முறிய முறிய மீளவும் மீளவும் நாற்புறங்களினின்றும் வ்ருக்ஷங்களைப் பிடுங்கிக்கொண்டு பொகட்டு அவ்வனத்தில் ஒரு வ்ருக்ஷங்கூட இல்லாதபடி மொட்டையாக்கி விட்டான். அப்பால் அவ்வானரன் கோபாவேசமுற்று அபாரமாகக் கற்களைக் கொண்டுவந்து பலராமன் மேல் மழைபெய்வதுபோல் பெய்தான். உலக்கையை ஆயுதமாகவுடைய பலராமன் அதையெல்லாம் அவலீலையாகச் சூர்ணஞ்செய்து விட்டான். அவ்வானரஸ்ரேஷ்டன் பனைமரங்கள்போன்ற தன்புஜங்களை முஷ்டியாக மடித்து எதிர்த்துவந்து இரண்டுகைகளாலும் பலராமனை மார்பில் அடித்தான். யாதவ ஸ்ரேஷ்டனாகிய பலராமனும் உலக்கையையும் கலப்பையையும் எறிந்து கோபமுற்று அவ்வானரனைக் கழுத்தில் அடித்தான். அவ்வானரன் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு கீழே விழுந்தான். குருஸ்ரேஷ்டனே! வெள்ளத்தில் பெருங்காற்று வீசுகையில் ஓடம் நடுங்குவதுபோல், அவ்வானரன் விழும்பொழுது செடி கொடிமரங்களோடு கூடிய பர்வதம் முழுவதும் நடுங்கிற்று. ஆகாயத்தில் தேவதைகளும் ஸித்தர்களும் சிறப்புடைய முனிவர்களும் பலராமன்மேல் புஷ்பங்களைப் பெய்து 'ஜய விஜயீபவ' என்றும் 'நமோநம:' என்றும் 'நல்லது நல்லது' என்றும் பலவாறு சப்தங்களைச் செய்தார்கள். மஹானுபாவனாகிய பலராமன் இங்ஙனம் உலகங்களுக்கெல்லாம் உபத்ரவஞ் செய்துகொண்டிருந்த த்விவிதனைக் கொன்று

ஜனங்களால் புகழப்பட்டுத் தன் பட்டணமாகிய த்வாரகைக்குச் சென்றான். அறுபத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ குருக்கள் ஸாம்பனைக் கட்டிக் கொண்டு போகையில் பலராமன் அவனை விடுவித்துக்கொண்டு வருதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சத்ருக்களை வெல்லுந் திறமையுடையவனும் ஜாம்பவதியின் புதல்வனுமாகிய ஸாம்பன் துர்யோதனனுடைய பெண்ணாகிய லக்ஷ்மணை யென்பவளை ஸ்வயம்வரத்தில் ஒருவனாகவே பறித்துக்கொண்டு போனான். கௌரவர்கள் கோபமுற்று இப்பயல் துஷ்டன். கன்னிகை விருப்ப மற்றிருக்கையில் நம்மைப் பொருள் செய்யாமல் பலாத்காரமாக அவளைப் பறித்துக்கொண்டு போனானல்லவா? துஷ்டஸ்வபாவமுடைய இந்தப்பயலைத் பிடித்துக் கட்டுங்கள். வ்ருஷ்ணிகள் என்ன செய்யப்போகிறார்கள்? அவர்கள் நம் ப்ரதாபத்தினால் வளர்க்கப்பட்டதும் நம்மால் கொடுக்கப்பட்டதுமாகிய பூமியைப் பெற்று ஜீவித்துக்கொண்டிருப்பவர்களல்லவா? (ஆகையால் அவர்கள் நம்மை என்ன செய்யமுடியும்?) ஒருகால் வ்ருஷ்ணிகள் தங்கள் குமாரன் கட்டுண்டிருப்பதைக் கேட்டு நம்மேல் எதிர்த்து வருவார்களாயின், ப்ராணாயாமம் முதலியவைகளால் அடக்கப்பட்ட இந்த்ரியங்கள்போல நம்மால் கொழுப்படங்கப் பெற்றுச் சாந்தியை அடைவார்கள். மற்றொன்றும் செய்ய வல்லவரல்லர்' என்று தங்களுக்குள் தாங்களே நிச்சயித்துக்கொண்டார்கள். அப்பால் கர்ணன் சலன் பூரி யஜ்ஞகேது துர்யோதனன் ஆகிய இவர்கள்

குருவ்ருத்தர்களான த்ருதராஷ்ட்ரன் முதலியவர்க ளால் அனுமோதனஞ் செய்யப்பெற்று ஸாம்பனைப் பிடித்துக் கட்டத் தொடங்கினார்கள். ஸாம்பன் மஹா ரதர்களான த்ருதராஷ்ட்ரகுமாரர்கள் தன்னைத் தொடர்ந்து வரக்கண்டு அழகிய தனுஸ்ஸை ஏந்திக் கொண்டு தானொருவனே ஸிம்ஹம்போல் யுத்தத்திற்கு ஸித்தமாய் நின்றான். அக்கௌரவர்கள் அந்த ஸாம் பனைப் பிடிக்க விரும்பிக் கர்ணனை முன்னிட்டு நில் நில் லென்று மொழிந்துகொண்டு தனுஸ்ஸுக்களை நாணேற் றிப் பாணங்களை விடுத்து அவனை மறைத்தார்கள். கௌரவஶ்ரேஷ்டனே! அந்த யாதவகுமாரன் குருக்க ளால் அடியுண்டு அளவற்ற மஹிமைகள் அமைந்த பரமபுருஷனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய குமாரனாகையால் தடியாலடியுண்ட ஸர்ப்பம்போல் அந்த அடியைப் பொறாமல் கோபங் கொண்டான். வீரனாகிய அந்த ஸாம்பன் மிகவும் பெரிதான தனுஸ்ஸை நாணேற்றி ஒலிப்பித்து அறுவர்களான கர்ணன் முதலிய அந்த ரதிகர்களனைவரையும் அத்தனை பாணங்களால் தனித் தனியே அடித்தான். அவன் நான்கு குதிரைகளை நான்கு பாணங்களாலும் ஸாரதிகளையும் ரதிகர்களை யும் ஒவ்வொரு பாணங்களாலும் அடித்தான். வில் லாளிகளில் சிறந்த அவ்வீரர்கள் அவன் செய்த அச் செயலைப் புகழ்ந்தார்கள். அவ்வறுவர்களில் நால்வர் நான்கு குதிரைகளையும் ஒருவன் ஸாரதியையும் அடித் தார்கள். மற்றொருவன் தனுஸ்ஸை அறுத்தான். இங் ஙனம் அவ்வறுவர்களும் சேர்ந்து அந்த ஸாம்பனை விர தனாக்கினார்கள். குருக்கள் அங்ஙனம் யுத்தத்தில் வருந்தி அவனை விரதனாகச் செய்து ஜயம்பெற்று அக் குமாரனையும் தங்கள் கன்னிகையையும் திருப்பிக்

கொண்டு ஹஸ்தினபுரம் போய்ச் சேர்ந்தார்கள். ராஜனே! வ்ருஷ்ணிகள் நாரதர் மூலமாய் அதைக் கேள்விப்பட்டுக் கோபமுற்று உக்ரஸேனனால் தூண்டவும் பெற்றுக் குருக்களின்மேல் முயற்சி கொண்டார்கள். பலராமன் கலஹமாகிற அழுக்கைப் போக்குந் தன்மையனாகையால் குருக்களுக்கும் வ்ருஷ்ணிகளுக்கும் கலஹம் நேருவதை விரும்பாமல் கோபமுற்றிருக்கின்ற வ்ருஷ்ணிகளில் முக்யமானவர்களை அழைத்து நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தி அடக்கி ப்ராஹ்மணர்களாலும் யாதவகுல வ்ருத்தர்களாலும் சூழப்பட்டு நக்ஷத்ரங்களால் சூழப்பட்ட சந்த்ரன்போன்று ஸூர்யனோடொத்த ஒளியுடைய ரதத்தின்மேல் ஏறிக் கொண்டு ஹஸ்தினபுரஞ் சென்று பட்டணத்திற்கு வெளியிலுள்ள உபவனத்தில் இறங்கி அவர்களுடைய அபிப்ராயத்தை அறியவிரும்பி உத்தவனை அனுப்பினான். அவன் பட்டணத்திற்குள் சென்று த்ருஷ்ட்ராஷ்ட்ரனையும் பீஷ்மனையும் த்ரோணாசார்யரையும் பாஹ்லிகனையும் துர்யோதனனையும் விதிப்படி வணங்கிப் பலராமன் வந்திருப்பதைச் சொன்னான். அவர்கள் மிகவும் நண்பனாகிய பலராமன் வந்திருப்பதைக் கேட்டு மஹாநந்தம் அடைந்து அவ்வுத்தவனைப் பூஜித்து எல்லோரும் மங்களவஸ்துக்களைக் கைகளில் ஏந்திக்கொண்டு பலராமனை எதிர்கொண்டு சென்றார்கள். அவர்கள் அந்தப் பலராமனை விதிப்படி கிட்டிச்சென்று பசுவையும் அர்க்யத்தையும் அவனுக்கு நிவேதனஞ் செய்தார்கள். அவர்களில் அந்த ராமனுடைய மஹிமையை அறிந்தவர்கள் எவரெவரோ அவர்கள் பூமியில் தலையைச் சாய்த்து அவனை நமஸ்கரித்தார்கள். ஒருவர்க்கொருவர் பந்துக்கள் க்ஷேமமாயிருப்பதை விசாரித்து

ஆரோக்யத்தையும் சுபத்தையும் வினவினபின்பு பலராமன் குருக்களை நோக்கித் தழதழப்பின்றிக் கம்பீரமான மொழியை மொழிந்தான்.

பலராமன் சொல்லுகிறான்:—ராஜாக்களுக்கும் ராஜனும் ப்ரபுவுமாகிய உக்ரஸேனன் உங்களுக்கு எதை ஆஜ்ஞை செய்கிறானே, நீங்கள் அதை மனவூக்கத்துடன் கேட்டுக் காலதாமதஞ் செய்யாமல் நடத்தவேண்டும். நீங்கள் பலராக வந்து மேல்விழுந்து தனியனும் தர்மந்தவறாது யுத்தஞ் செய்பவனுமாகிய ஸாம்பனை அதர்மத்தினால் ஜயித்துக் கட்டிக்கொண்டு போனீர்கள்: அதை நான் பந்துக்களில் ஒருவரோடொருவர்க்கு ஸ்னேஹம் மாறாதிருக்க வேண்டுமென்று விரும்பிப் பொறுக்கின்றேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருக்கள் [1] வீர்யம் ஸௌர்யம் பலம் இவைகளால் தடையின்றிச் செருக்குற்றிருப்பதும் தன் சக்திக்குத் தகுந்ததுமாகிய பலராமனுடைய வசனத்தைக் கேட்டு மிகவும் கோபமுற்று மொழிந்தார்கள்.

குருக்கள் சொல்லுகிறார்கள்:—காலகதி எவர்க்கும் கடக்க முடியாததாகையால் இங்ஙனம் பெரிய ஆச்சர்யம் உண்டாயிற்று. பாதரக்ஷை கிரீடத்தினால் அலங்கரிக்கத்தக்க சிரஸ்ஸின்மேல் ஏற விரும்புகின்றது. (பாதரக்ஷை போன்ற யதுக்கள் கிரீடம் பூண்ட சிரஸ்ஸுபோன்ற எங்களை ஆஜ்ஞாபிக்கிறார்களென்பது மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது). இந்த வ்ருஷ்ணிகள் ப்ருதா விவாஹமாகிற ஸ்த்ரீமூலமான ஸம்பந்தத்தி

1. வீர்யமாவது - யுத்தத்தில் சோர்வில்லாமை. ஸௌர்யமாவது - தன்வீட்டில் நுழைவதுபோல் யுத்தத்தில் நுழைகை. பலமாவது - தரிக்குந்திறமை.

ஞல் பந்துக்களானார்கள். அதனால் சேரப்படுப்பது சேர உட்காருவது சேரப்புசிப்பது முதலியனவும் நேர்ந்தன. நம்மால் கொடுக்கப்பட்ட ராஜாஸனத்தையுடைய இந்த வ்ருஷ்ணிகள் அதனால் நம்மோடொத்திருக்கையாகிற பதவியில் ஏற்றுவிக்கப்பட்டார்கள். நாம் உபேக்ஷித்திருக்கையால் சாமரம் விசிறி சங்கம் வெண்கொற்றக் குடை கிரீடம் ஆஸனம் படுக்கை ஆகிய இவற்றையெல்லாம் இவர்கள் அனுபவிக்கின்றார்கள். யதுக்களுக்குச் சாமரம் முதலிய ராஜசிஹ்னங்களைக் கொடுத்தது போதும். பாம்புக்குப் பால் வார்த்தாற்போல, அவை யெல்லாம் கொடுத்த நமக்கே விபரீதங்களாயின. நம்முடைய அனுக்ரஹத்தினால் வளர்ந்தவர்களாகிய இந்த யாதவர்கள் இப்பொழுது வெட்கமின்றி நம்மையே ஆஜ்ஞாபிக்கிறார்கள். ஆ! இதென்ன ஆச்சர்யம்! இந்த்ரன் தானேயாயினும் பீஷ்மன் த்ரோணன் அர்ஜுனன் முதலிய குருக்கள் ஸம்மதித்துக் கொடாததை எங்ஙனம் உபயோகப்படுத்த வல்லனாவான்? ஸிம்ஹம் பிடித்துக் கொண்டதை ஆடு மீட்டனுபவிக்க வல்லதோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— பிறவியாலும் பந்துக்களின் மிகுதியாலும் செல்வக் கிளர்த்தியாலும் மிகுந்த மதமுடையவர்களும் அஸப்யர்களும் (ஸபைக்குத் தகாதவர்களும்) ஆகிய குருக்கள் இங்ஙனம் பலராமனைக் குறித்துச் சொல்லத் தகாத பருஷவசனங்களைப் பேசிப் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். பற்றினவர்களைக் கைவிடாத பெருந்தன்மையுடைய பலராமன் குருக்களுடைய துஷ்டஸ்வபாவத்தைக்கண்டு அவர்கள் சொன்ன சொல்லத்தகாத பருஷவசனங்களையும் கேட்டுக் கோபத்தினால் சிவந்து பார்க்க முடியாமல் பயங்கரனாகி அடிக்கடி சிரித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

பலராமன் சொல்லுகிறான்:—இந்தக் குருக்கள் பலவகை மதங்களால் கொழுத்துக் கெடுநடத்தையுடையவர்களாயிருக்கிறார்கள். ஆகையால் இவர்கள் சாந்தியை விரும்பமாட்டார்கள். இது நிச்சயம். தப்புவழியில் போகின்ற பசுக்களுக்குத் தடியடிபோலத் துஷ்டஸ்வபாவர்களாகிய இவர்களுக்குத் தண்டனைதான் சாந்தியை விளைக்கவல்லது. ஆ! மிகவும் கோபாவேசமுற்ற யதுக்களையும் கோபித்துக்கொண்ட ஸ்ரீக்ருஷ்ணனையும் மெல்லமெல்ல நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தியடக்கி இந்தக் குருக்களின்சாந்தியை விரும்பி நான் இவ்விடம்வந்தேன். அங்ஙனம் நினைக்கப்பட்டவர்களோவென்றால் மந்தமதிகளும் கலஹத்தில் மிகவிருப்பமுற்றவர்களும் மூர்க்கர்களுமாயிருக்கிறார்கள். ஆகையால் அத்தகைய எண்ணங்கொண்டு வந்த என்னை அவமதித்துத் துராஹங்காரமுடையவர்களாகித் துர்ப்பாஷைகளைப் பேசினார்கள். போஜர்களுக்கும் வ்ருஷ்ணிகளுக்கும் அந்தகர்க்களுக்கும் ஈஸ்வரனாகிய உக்ரஸேனன் ப்ரபுவன்றாமே? இந்த்ரன் முதலிய லோகபாலர்களும் எவனுடைய ஆஜ்ஞையை அனுஸரித்து நடக்கிறார்களோ, அத்தகைய உக்ரஸேனன் ப்ரபுவன்றாமே? எவன் ஸுதர்மையென்னும் தேவேந்த்ரஸபையைக் கொண்டுவந்து அதில் வீற்றிருக்கிறானோ, எவன் ஸ்வர்க்கலோகத்தினின்று கல்பவ்ருக்ஷத்தைக் கொண்டுவந்து அதை அனுபவிக்கிறானோ, அத்தகைய ஸ்ரீக்ருஷ்ணன் ஸிம்ஹாஸனத்திற்கு உரியவனல்லனாமே? ப்ரஹ்மதேவன் முதலிய ஸர்வர்க்கும் ஈஸ்வரியாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மி எவனுடைய பாதாரவிந்தங்களை உபாஸிக்கிறாளோ, ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு நாதனாகிய அத்தகைய ஸ்ரீக்ருஷ்ணன் சாமரம் முதலிய ராஜசிஹ்னங்களுக்கு உரியவனல்லனாமே? எவனுடைய

பாதாரவிந்தங்களின் பராகத்தை ஸமஸ்த லோகபாலர் களும் சிறப்புடைய தங்கள் கிரீடங்களால் தரிக்கின்றார் களோ, கங்காதி புண்யதீர்த்தங்களை ஸேவித்துப் பரி சுத்தர்களான யோகிகளுக்கும் குருபாஸனஞ்செய்த பெரியோர்களுக்கும் அனைவராலும் உபாஸிக்கப்படுகிற கங்காதி புண்யதீர்த்தங்களுக்கும் எவனுடைய பாதார விந்தங்களின் பராகம் பாவனமாயிருக்கின்றதோ, எவ னுடைய அம்சத்தின அம்சங்களாகிய நான் ப்ரஹ்ம தேவன் ருத்ரன் ஸ்ரீமஹாலக்ஷ்மி ஆகிய நாங்களனைவ ரும் அந்தப்பாதாரவிந்தங்களின் பராகத்தைத் தலையால் தரிக்கின்றோமே, அத்தகையனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ராஜாஸனம் எங்கே? (அவனுக்கு ராஜாஸனத்தில் என்ன அதிகாரம் வந்து?) குருக்கள் கொடுத்த பூமியின்கண் டத்தை வ்ருஷ்ணிகள் அனுபவித்து வருகின்றார்களா மே? நாம் பாதரக்ஷையாம். குருக்கள் தாங்கள் தலை யாம். ஐஸ்வர்யமதத்தினால் மதித்தவர்களும் அஹங் காரிகளும் மத்யபானாதிகளால் மதித்தவர்கள்போல விவேகமற்றவர்களுமாகிய இக்குருக்கள் அஸம்பத்த மாகவும் (சேராச்சேர்த்தியாகவும்) க்ரூரமாகவும் மொ ழிந்த மொழிகளைத் தண்டனை செய்யுந்திறமையுடை யவன் எவன்தான் பொறுத்திருப்பான்? மிகவும் கோப முற்றிருக்கின்ற நான் இப்பொழுது பூமியில் கௌரவர் களே இல்லாதபடி செய்து விடுகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:-பலராமன் இங்ஙனம் மொழிந் து கலப்பையை எடுத்துக் கொண்டு மூன்று லோகங்களை யும் தஹிப்பவன்போன்று எழுந்திருந்தான். அவன் ஹஸ்தினாபுரியைக் கலப்பையின் நுனியால் குத்திக்கிளப் பிக் கோபவேகத்தினால் கங்கையில் போட்டு முழுக்கமு யன்று பிடித்திழுத்தான். அந்நகரம் அங்ஙனம் பலரா

மனுல் இழுக்கப்பட்டு ஓடம்போல் சுழன்றுகொண்டு கங்காஜலத்தில் விழுவதைக் கண்டு கௌரவர்கள் பயந்து பிழைக்க விரும்பி லக்ஷ்மணையோடு ஸாம்பனை முன்னிட்டுக்கொண்டு வந்து குடும்பங்களோடுகூட அஞ்சலி செய்து அவனையே சரணம் அடைந்தார்கள்.

குருக்கள் சொல்லுகிறார்கள்:—ஓராமராம! ஸமஸ்த லோகங்களுக்கும் ஆதாரனே! உன்மஹிமையை நாங்கள் அறியோம். ஈஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனே! மூடர்களும் கெடுமதியர்களுமாகிய எங்களுடைய அபராதத்தைப் பொறுத்தருள்வாயாக. இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களுக்கு நீயொருவனே காரணன். உனக்கு நீயே காரணனன்றி வேறொரு காரணம் கிடையாது. ஜகதீசனே! விளையாட விருப்பமுற்ற உனக்கு உலகங்களை விளையாட்டுக் கருவிகளென்று (பொம்மைகளென்று) உன்னுடைய உண்மையை உணர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள். அனந்தனே! ஆயிரந்தலைகளுடையவனே! நீயொருவனே இந்தப் பூமண்டலம் முழுவதையும் உன்தலையில் அவலீலையாகத் தரிக்கின்றனை. ப்ரளயகாலத்தில் இந்த ப்ரபஞ்சத்தை யெல்லாம் உன்னிடத்தில் அடக்கிக்கொண்டு நீயொருவனே மிகுந்து இணை யெதிரின்றிச் சயனிக்கப்போகின்றனை. பூமியைப் பாதுகாப்பதில் ஊக்கமுடையவனே! ஷாட்குண்ய பூர்ணனே! பலராமா! சுத்தஸத்வமயமான உருவத்தைத் தரித்துக் கொண்டிருக்கிற உன்னுடைய கோபம் கேவலம் சிக்ஷைக்காகவே! த்வேஷத்தினாலாவது கௌடில்யத்தினாலாவது கெடுதியை விளைப்பதற்கன்று. ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! (ஸமஸ்த சக்திகளும் அமைந்தவனே! ராகம் த்வேஷம் முதலிய விகாரங்களற்றவனே! (ஸமஸ்தபூதங்களுக்கும் கண்

பனே!) ப்ரபஞ்சத்தை யெல்லாம் படைத்தவனே! உனக்கு நமஸ்காரம். நாங்கள் உன்னைச் சரணம் அடைந்தோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பயந்து நடுக்க முற்றுச் சரணம் அடைந்திருக்கின்ற குருக்களால் அருள்புரிவிக்கப்பெற்ற பலராமன் அவர்களை நோக்கி 'நீங்கள் பயப்படவேண்டாம்' என்று அபயங் கொடுத்தான். பெண்ணிடத்தில் வாத்ஸல்யமுடைய துர்யோதனன் அறுபது வர்ஷங்கள் சென்ற பன்னீராயிரம் யானைகளையும் பன்னிரண்டு பதினாயிரம் குதிரைகளையும் பொன்னலங்காரஞ் செய்யப்பெற்று ஸூர்யன்போல் திகழ்கின்ற ஆறாயிரம் தேர்களையும் கழுத்தில் பொன் பதகங்கள் அணிந்த ஆயிரந்தாஸிகளையும் கொடுத்தான். மஹானுபாவனும் ஸாத்வதஸ்ரேஷ்டனுமாகிய பலராமன் அதையெல்லாம் பெற்றுக்கொண்டு புதல்வனாகிய ஸாம்பனோடும் நாட்டுப்பெண்ணாகிய லக்ஷ்மணையோடும் கூடி நண்பர்களால் அபிநந்தனஞ் செய்யப்பெற்றுத் தன் பட்டணத்திற்குச் சென்றான். அப்பால் அப்பலராமன் தன்பட்டணமாகிய த்வாரகைக்குச் சென்று அனுராகம் நிறைந்த மனமுடைய பந்துக்களாகிய யாதவர்களைக் கிட்டி அவர்களுக்கு ஸபைநடுவில் குருக்கள் விஷயத்தில் தான் என்ன நடத்தினானோ, அந்த வ்ருத்தாந்தத்தை யெல்லாம் சொன்னான். அறுபத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

நாரத முனிவர் வந்து ஸ்ரீக்ருஷ்ணன் தன் பத்னிகளின் க்ருஹங்களில் ஒவ்வொன்றிலும் அமைந்து இல்லற வாழ்க்கையில் ஊன்றியிருப்பதைக் கண்டு வியப்புறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நரகாஸுரன் ஸ்ரீக்ருஷ்ணனால் அடியுண்டு மாண்டதையும் ஸ்ரீக்ருஷ்ணனொருவன் பல மடந்தையர்களை மணம்புரிந்ததையும் கேட்ட நாரதர் அவனைப் பார்க்க விரும்பினார். 'ஸ்ரீக்ருஷ்ணன் ஒருவனே பதினாறாயிரம் ஸ்த்ரீகளை ஒரே சரீரத்துடன் ஒரேகாலத்தில் தனித்தனியே அந்தந்த க்ருஹங்களில் மணம் புரிந்தானென்பது மிகவும் அற்புதம்' என்று அந்தத் தேவர்ஷியாகிய நாரதர் வியப்புற்று அவனைப் பார்க்க விரும்பி த்வாரகாபுரிக்கு வந்தார். அப்புரியிலுள்ள உபவனங்களும் உத்யானவனங்களும் பலவகைப் பறவைகளும் வண்டுகளும் இனமினமாய் ஒலிக்கப்பெற்றிருந்தன. மற்றும், அப்புரியிலுள்ள தடாகங்கள் கருநெய்தல்களும் தாமரைகளும் செங்கழுநீர்களும் ஆம்பல்களும் நெய்தல்களும் மலர்ந்து நிறைந்து ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் உரக்கக்கூவப் பெற்றிருந்தன. அங்கு ஸ்படிகங்களாலும் வெள்ளியாலும் இயற்றப்பட்டவைகளும் சிறந்த மரகதரத்னங்களாலும் ஸ்வர்ணத்தினாலும் மற்றும் பலரத்னங்களாலும் இயற்றின கருவிகள் அமைந்தவைகளுமாகிய ஒன்பது லக்ஷம் மாளிகைகள் அமைந்திருந்தன. தெருக்களும் ஸாதாரணமார்க்கங்களும் நாற்சந்திவீதிகளும் கடைகளும் ஸத்ரங்களும் சாலைகளும் ஸபைகளும் தேவாலயங்களும் தனித்தனியே அமைக்கப்பெற்று அந்நகரம் மிகவும் அழகாயிருந்தது. மற்றும் ராஜவீதிகளும் முற்றங்களும் ஸாதாரணவீதிகளும் வீட்டுவாசற்களும் ஜலம் தெளித்து விளக்கிப் பதாகைகளும் த்வஜங்களும் கட்டி, அவற்றால் வெயில்

தடுக்கப்பெற்று மிகவும் ஸுகமாயிருந்தன. அந்தப் பட்டணத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அந்தப்புரம் ஸமஸ்த ஸம்பத்துக்களும் அமைந்து ஸமஸ்த லோகபாலர்களா லும் புகழப்பெற்று மிகவும் அழகாயிருந்தது. அவ்வந் தப்புரம் த்வஷ்டாவென்னும் விஸ்வகர்மாவினால் தன் திறமைகளையெல்லாம் காட்டி நிர்மிக்கப்பட்டதாகை யால் மிகவும் அற்புதமாயிருந்தது. ஸ்ரீக்ருஷ்ணனு டைய பத்னிகளின் பதினாறாயிரம் மாளிகைகளால் அலங்காரமுற்று மிகவும் பெரிதாயிருந்தது. நாரதர் அவற்றில் ஒரு மாளிகைக்குள் நுழைந்தார். அம்மாளி கை பவழங்களால் இயற்றின ஸ்தம்பங்களும் வை டூர்ய ரத்னமயமான ஸ்தம்பத்தின் மேல்பலகைகளும் இந்த்ரநீலரத்னமயமான சாளரங்களும் மரகதரத்ன மயமான சிறந்த ஸ்தம்பங்களும் விஸ்வகர்மாவினால் நிர்மிக்கப்பட்டவைகளும் முத்துச்சரங்கள் தொங்க விடப்பெற்றவைகளுமாகிய மேல்கட்டுக்களும் தந்தத் தினால் இயற்றிச் சிறந்த ரத்னங்கள் இழைத்த ஆஸனங்களும் அத்தகைய மஞ்சங்களும் அமைந்து கழுத்தில் பொன்பதகங்கள் பூண்டு சிறந்த வஸ்த்ரங் களை உடுத்தின தாஸிகளாலும் சொக்காயும் தலைப் பாகையும் சிறந்த வஸ்த்ரங்களும் ரத்னமயமான குண் டலங்களும் அணிந்த புருஷர்களாலும் அலங்கரிக்கப் பட்டு ரமணீயமாயிருந்தது. அவ்விடத்தில் ரத்ன தீபங்களின் கிரண ஸமூஹத்தினால் இருள் முழுவதும் துரத்தப்பட்டிருந்தது. மற்றும், அங்குக் கொடுங்கை களில் உட்கார்ந்திருக்கின்ற மயில்கள் சாளரங்களின் ரந்த்ரமார்க்கங்களால் வெளிவருகின்ற அகிற்புகையைக் கண்டு நீர்கொண்ட மேகமென்று நினைத்துக் கேகா வென்று சப்தித்துக்கொண்டு நர்த்தனஞ் செய்கின்

றன. நாரதமுனிவர் அத்தகைய மாளிகையில் தன்ஞேடொத்த குணமும் உருவமும் வயதும் அழகிய வேஷமும் உடைய அனேகமாயிரம் தாஸிகளோடு கூடிப் பொற்பிடியிடப்பெற்ற சாமரத்தினால் ஸர்வ காலமும் விசிறிக்கொண்டிருக்கின்ற பார்யையாகிய ருக்மிணியோடு கூடிய ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டார். தர்மத்தை அனுஷ்டிப்பவர்கள் அனைவரிலும் சிறந்தவனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த நாரதரைக் கண்டவுடனே ருக்மிணியின் படுக்கையினின்று விரைவுடன் எழுந்து கிரீடத்தினால் அலங்கரிக்கப்பட்ட சிரஸ்ஸினால் அவருடைய இணைப் பாதங்களை வணங்கிக் கைகூப்பிக்கொண்டு அவரைத் தன்னுடைய ஆஸனத்தில் உட்காரவைத்தான். அப்பகவான் ஸமஸ்த லோகங்களுக்கும் பரமகுருவாயினும் ஸத்புருஷர்களுக்குத் தன்னுடைய ஆசாரத்தினால் தர்மமார்க்கத்தை அறிவித்து அவர்களைப் பாதுகாக்குந் தன்மையனாகையால் அந்நாரதமஹர்ஷியின் ஸ்ரீ பாதங்களை அலம்பி அந்த ஜலங்களைத் தன்சிரஸில் தரித்தான் (ப்ரோக்ஷித்துக்கொண்டான்). அவன் ப்ராஹ்மணகுலத்திற்கு வேண்டியவைகளை நிறைவேற்றிக்கொடுத்து ஆதரிக்குந்தன்மையுடையவர்களில் சிறந்தவனாகையால் அவனுக்கு ப்ரஹ்மண்யதேவனென்னும் திருநாமம் அன்வர்த்தமாயிருக்கும் (பொருளைப் பிரியாதிருக்கும், வாஸ்தவமாயிருக்கும்). மற்றும், அந்நாமம் அவனுக்கே அஸாதாரணமாயிருக்கும். ஆகையால் அவன் செய்தது அவனுக்குத் தகுந்ததே. கங்கைமுதலிய புண்யதீர்த்தமெல்லாம் எவனுடைய பாதாரவிந்தத்தினுடைய ஸம்பந்தத்தினால் பாவனமாயிருக்கின்றனவோ, அத்தகையன் மற்றொருவருடைய ஸம்பந்தத்தினால் பாவனனாக வேண்

டியதில்லை; ஆயினும், அவன் ப்ரஹ்மண்யதேவனுனது பற்றியே அங்ஙனம் செய்தான். நரனுக்கு நண்பனுகிய அந்த நாராயணன் தான் புராணரிஷியாயினும் தேவரிஷியான நாரதரைச் சாஸ்த்ரங்களில் சொன்ன விதியின்படி பூஜித்து அம்ருதத்தைப் பெய்வதும் மிதருமாகிய மொழியுடன் அவரைக் குறித்து 'ப்ரபு! மஹானுபாவராகிய உமக்கு நாங்கள் என்ன செய்யவேண்டும்? உமது இங்கரர்களான எங்களை இஷ்டப்படி நியமித்துக் கார்யங் கொள்வீராக' என்று மொழிந்தான். (அதைக் கேட்டு நாரதர் இங்ஙனம் மொழிந்தார்).

நாரதர் சொல்லுகிறார்:—ப்ரபு! ஸமஸ்தலோகங்களுக்கும் நாதனே! ஸமஸ்த பூதங்களிடத்திலும் உனக்கு நட்பு உண்டாயிருப்பது ஆச்சர்யமன்று. நீ கம்ஸாதிதுஷ்டர்களைத் தண்டிப்பதும் ஆச்சர்யமன்று. பெரும்புகழனே! நீ உலகங்களைத் தரிப்பதற்காகவும் அதைக் காப்பதற்காகவும் மோக்ஷங் கொடுப்பதற்காகவும் இஷ்டப்படி அவதாரங்களைக் கொள்கிறுயென்று நாங்கள் நன்ருக அறிந்திருக்கின்றோம். (ஆகையால் துஷ்டர்களைத் தண்டிப்பதும் சிஷ்டர்களை வெகுமதிப்பதும் உனக்கு யுக்தமே). தன்னையே கதியாகப் பற்றின ஜனங்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதும் ப்ரஹ்மதேவன் முதலிய யோகீஸ்வரர்களாலும் ஹ்ருதயத்தில் நிறுத்திக்கொண்டு த்யானிக்கத் தக்கதும் ஆழ்ந்த அறிவை விளைப்பதும் ஸம்ஸாரமாகிற பாழ்ங்கிணற்றில் விழுந்து வருந்தும்ப்ராணிகளைக் கரையேற்றுமவலம்பமுமாகிய உனது இணைப் பாதங்களைக் கண்டு க்ருதார்த்தனுனேன். இனி அவற்றையே த்யானித்துக் கொண்டு திரியும்படி எனக்கு அருள்புரிவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த நாரதமஹர்ஷி இங்ஙனம் மொழிந்து விடைபெற்றுக் கொண்டு யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனை பகவானுடைய யோக மாயையை அறிய விரும்பி மற்றொரு க்ருஹத்திற்குள் நுழைந்தார். அந்த க்ருஹத்திலும் அன்பிற்கிடமான பார்யையோடும் உத்தவனோடுங்கூடிப் பாசகைகளால் விளையாடுகின்ற ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு அவனால் மிகுந்த பக்தியுடன் எதிர்கொண்டு ஆஸனமளிப்பது முதலிய உபசாரங்களைச் செய்து பூஜிக்கப் பட்டார். மற்றும் அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அறியாதவன்போல் 'நீர் எப்பொழுது வந்தீர்? நிறைவாளர்களல்லாத என்னைப் போன்றவர்களால் நிறைவாளர்களான உங்களுக்குச் செய்யக் கூடியது என்ன இருக்கின்றது? நீங்கள் எதிலும் அபேக்ஷையற்றவர்களாகையால் உங்களுக்கு எங்களால் ஆகக்கூடியது எதுவுமே இல்லை. அந்தணரே! ஆயினும் நீர் எதைப்பற்றி வந்தீரோ அதைச் சொல்வீராக. இந்த எங்கள் ஜன்மத்தைப் பயன் பெறும்படி செய்வீராக' என்று வினவவும் வினவினான். அம்முனிவர் அதைக் கேட்டு வியப்புற்று மௌனமும் பேசாமல் எழுந்து மற்றொரு க்ருஹத்திற்குச் சென்றார். அங்கும் சிசுக்களான புதல்வர்களைச் சீராட்டிக் கொண்டிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டார். மற்றொரு க்ருஹத்தில் ஸ்நானஞ் செய்ய முயன்றிருக்கக் கண்டார். மற்றோரிடத்தில் ஆஹவனீயம் முதலிய யாகாக்னிகளில் ஹோமஞ் செய்வதும், மற்றோரிடத்தில் பஞ்சமஹாயஜ்ஞங்களை அனுஷ்டிப்பதும், மற்றோரிடத்தில் ப்ராஹ்மணர்களைப் புசிப்பிப்பதும், மற்றோரிடத்தில் ப்ராஹ்மணர்கள் புசித்து மிகுந்த அன்னத்தைப் புசிப்பதும், மற்றோரிடத்தில் ஸந்த்யாவந்தனஞ்

செய்வதும், மற்ருேரிடத்தில் ப்ரணவத்தை ஜபிப்ப தும், மற்ருேரிடத்தில் மௌனமாயிருப்பதும், மற்ருே ரிடத்தில் கத்தியையும் கேடயத்தையும் கொண்டு கத் தியைச் சுழற்றும் வழிகளில் திரிவதும், மற்ருேரிடத்தில் குதிரைகளின்மேல் ஏறித்திரிவதும், ஓரிடத்தில் ரதங் களின் மேல் ஏறித்திரிவதும், ஓரிடத்தில் யானைகளின் மேல் ஏறித்திரிவதும், ஓரிடத்தில் படுக்கையில் படுத்து ஸ்துதிபாடகர்களால் துதிக்கப்பெறுவதும், ஓரிடத் தில் உத்தவன் முதலிய மந்திரிகளோடு ஆலோசிப்ப தும், ஓரிடத்தில் சிறந்த விலைமாதுகளுடன் கூடி ஜலக் ரீடை செய்வதும், ஓரிடத்தில் ப்ராஹ்மணஸ்ரேஷ் டர்களுக்கு நன்கு அலங்காரம் செய்யப் பெற்ற பசுக் களைக் கொடுப்பதும், ஓரிடத்தில் இதிஹாஸ புராணங் களையும் மங்களமான மற்றவைகளையும் கேட்பதும், ஓரிடத்தில் அன்பிற்கிடமான பார்யையுடன் சிரிப்பு மூட்டுகிற கதைகளைச் சொல்லிச் சிரிப்பதும், ஓரிடத் தில் தர்மத்தை அனுஷ்டிப்பதும், ஓரிடத்தில் அர்த்த காமங்களைப் பணிவதும், ஓரிடத்தில் ப்க்ருதி புரு ஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனும் இணையற்றவ னும் பரமபுருஷனுமாகிய தன்னை த்யானிப்பதும், ஓரிடத்தில் வேண்டிய விருப்பங்களையும் மற்றுமுள்ள போகங்களையும் கொடுத்துக் குருக்களைப் பூஜித்துச் சுஸ்ருஷை செய்வதும், ஓரிடத்தில் சிலரோடு கலஹஞ் செய்வதும், ஓரிடத்தில் ஸந்தி செய்வதும், ஓரிடத்தில் பலராமனேடுகூடி ஸத்புருஷர்களின் க்ஷேமத்தைச் சிந்திப்பதும், ஓரிடத்தில் தகுந்த காலத்தில் பிள்ளை களுக்கு அவர்கட்குரிய பார்யைகளோடும் பெண்களு க்கு அவர்கட்குரிய கணவர்களோடும் பெரிய விபவத் துடன் சாஸ்த்ரவிதிப்படி விவாஹஞ் செய்விப்பதும்,

ஓரிடத்தில் புதல்விகள் நாட்டுப் பெண்கள் மணவாளர்கள் முதலியவர்களை அவரவர் க்ருஹங்களுக்கு அனுப்புவது அவரவர் க்ருஹங்களினின்று வரவழைப்பது இவைகளால் பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் உலகங்களெல்லாம் வியப்புறும்படி மஹோத்ஸவங்களை நடத்துவதும், ஓரிடத்தில் தக்ஷிணை முதலியவை அமிதமாயிருக்கப் பெற்ற யாகங்களால் தன்னுடைய அம்சங்களான தேவதைகளை ஆராதிப்பதும், ஓரிடத்தில் கிணறு தோட்டம் தேவாலயம் முதலியன ஏற்படுத்துகையாகிற ஸ்மார்த்ததர்மத்தை அனுஷ்டிப்பதும், ஓரிடத்தில் ஸிந்துதேசத்துக் குதிரையின்மேல் ஏறிக்கொண்டு வேட்டையாடச் சென்று யாதவ ப்ரேஷ்டர்களால் சூழப்பட்டுப் பரிசுத்தமான ம்ருகங்களை வதிப்பதும், ஓரிடத்தில் மந்த்ரி முதலியவர்களிடத்திலும் அந்தப் புரத்தில் திரிபவர் முதலியவர்களிடத்திலும் அவரவர்களின் பாவசுத்தியை அறியும்பொருட்டுத் தன்னுருவம் தெரியாமல் மறைந்து மாறுவேஷம் பூண்டு திரிவதுமாயிருக்கின்ற யோகேஸ்வரனான ஸ்ரீக்ருஷ்ணனை நாரதமுனிவர் கண்டார். அப்பால் அம்முனிவர் மானிட உருவம் பூண்ட அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய யோக மாயையின் பெருமையைக் கண்டு சிரித்துக்கொண்டு ஹ்ருஷீகேசனாகிய அம்மஹானுபாவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—யோகேஸ்வரனே! உன்னுடைய யோகமாயை யோகிகளுக்குங் கூட அறிய முடியாததாயினும் உன்பாதாரவிந்தங்களைப் பணிகையின் ப்ரபாவத்தினால் என்மனத்தில் ஸ்பஷ்டமாகத் தோற்றின அந்த யோகமாயையை அறிந்தேன். தேவனே! உலகங்களை யெல்லாம் பாவனஞ் செய்யவல்ல உன்

புகழ்களைப் பாடிக்கொண்டு உன் புகழ் நிறைந்த உலகங்களில் நாற்புறத்திலும் திரியும்படி எனக்கு அனுமதி கொடுப்பாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அந்தணனே! தர்மத்தை இவ்வுலகத்திலுள்ள ஜனங்களுக்கு அறிவிக்கும் பொருட்டு அதை உபதேசஞ் செய்பவனும் அனுஷ்டிப்பவனும் அனுமோதனஞ் செய்பவனுமாகி இம்மானிட உருவத்தை ஏற்றுக்கொண்டிருக்கின்றேன். பிள்ளாய்! ஸர்வேஸ்வரனுங்கூட ப்ராக்ருதனைப்போல இப்படி ஸாம்ஸாரிக வ்யாபாரங்களில் இழிந்தானேயென்று வருந்த வேண்டாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—க்ருஹஸ்தர்களுக்கு விதிக்கப்பட்ட நல்லறங்களை இங்ஙனம் அனுஷ்டித்துக் கொண்டு ஓரேகாலத்தில் அனேக தேஹங்களில் ஒருவாறாகவே ஆத்மாவாய் அமைந்திருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனை நாரதமுனிவர் கண்டார். அந் நாரதமுனிவர் அளவற்ற கல்யாணகுணங்களையுடைய ஸ்ரீ க்ருஷ்ணனுடைய ஆச்சர்ய சக்தியின் வைபவத்தை ஆவலுடன் அடிக்கடி கண்டு வியப்புற்றார். அந்நாரதர் இங்ஙனம் அர்த்தம் காமம் தர்மம் இவைகளில் மிகவும் ஸ்ரத்தையோடு கூடின மனமுடைய ஸ்ரீக்ருஷ்ணனால் பூஜிக்கப்பட்டு ஸந்தோஷம் அடைந்து அவனை நினைத்துக்கொண்டு சென்றார். தான் ஸர்வேஸ்வரனான நாராயணனாயிருந்தும் ஸமஸ்த லோகங்களின் க்ஷேமத்திற்காகத் திவ்ய மங்களவிக்ரஹத்தை ஏற்றுக்கொண்டு மனுஷ்யபதவியை அனுஸரித்துக் குணம் முதலியவைகளால் சிறந்த பதினாறாயிரம் பெண்மணிகளின் வெட்கமும் நட்பும் அமைந்த கண்ணோக்கங்களால் பணியப்பெற்று க்ரீடித்துக்கொண்டிருந்தான். இந்த ப்ரபஞ்சத்தின் ஸம்

ஹார ஸ்ருஷ்டி ஸ்திதிகளுக்குக் காரணனாகிய பரமபுருஷன் இவ்வுலகத்தில் அவதரித்து மற்றொருவர்க்கும் செய்யமுடியாத எந்தெந்த செயல்களைச் செய்தானோ அவற்றைப் பாடுகிறவனுக்கும் கேட்கிறவனுக்கும் அதை அனுமோதனஞ் செய்பவனுக்கும் மோக்ஷங்கொடுப்பவனாகிய அந்தப் பகவானிடத்தில் பக்தி உண்டாகும். அறுபத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

(ஸ்ரீ க்ருஷ்ணனுடைய தினசர்யையும், அவன் ஸபையிலிருக்கும்பொழுது ஜராஸந்தனால் தகையப்பட்ட ராஜர்களிடத்தினின்று தூதன் வருதலும், நாரதாகமனமும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவனே! மேல் பகவானுடைய தின சர்யையைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. விடியற்காலம் ஸமீபித்திருக்கையில் பற்பல உருவங்கொண்ட ஸ்ரீ க்ருஷ்ணனாகிற கணவர்களால் கழுத்தில் அணைக்கப் பட்ட அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பத்னிகள் மேல் வருகிற விரஹத்தை நினைத்து வருந்திக் கூவுகின்ற கோழிகளைச் சபித்தார்கள். மந்தார வனத்தினின்று வீசுகின்ற காற்றுக்களால் உறக்கம் தொலையப்பெற்ற வண்டுகள் பாடிக்கொண்டிருக்கையில் மற்றும் பல பறவைகள் ஸ்துதிபாடகர்கள்போல் ஸ்ரீக்ருஷ்ணனை எழுப்பின. அன்பிற்கிடமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய மார்பை அடைந்திருக்கின்ற ருக்மிணி முதலிய மடந்தையர்கள் அந்த விடியற்கால முஹூர்த்தம் மிக்க மங்களமாயினும் அன்பனுடைய ஆலிங்கனத்தி

ற்கு[1] விகடனத்தை விளைக்கையால் அதைப் பொறுக்க முடியாதிருந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் ப்ராஹ்மமுஹூர்த்தத்தில் எழுந்து சுத்த ஜலத்தை ஆசமனஞ் செய்து தெளிந்த இந்த்ரியங்களுடையவனாகி ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனும் இணையெதிரில்லாதவனும ஸ்வயம்ப்ரகாசனும் தனக்குச் சரீரமாகாத வஸ்து எதுவுமே இல்லாதவனும் ஜாதி முதலிய ஏற்பாடுகளற்றனும் தன்னிடத்தில் தான் விகார மற்றிருக்கையாகிற நிலைமையினால் புண்ய பாபங்களாகிற கல்மஷங்கள் என்றும் தீண்டப்பெறுதவனும் பரப்ரஹ்மமென்னும் பெயருடையவனும் இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமாயிருக்கையாகிற சக்தியினால் வெளியிடப்பட்ட ஆனந்தமயமான ஸ்வரூப முடையவனுமாகிய தன்னை த்யானித்தான். அனந்தரம் ஸத்புருஷர்களில் ஸ்ரேஷ்டனாகிய பகவான் ஜலத்தில் ஸ்னானஞ் செய்து வஸ்த்ரங்களை உடுத்து ஸந்த்யாவந்தனம் முதலிய க்ரியாகலாபத்தைச் செய்து அக்னியில் ஹோமம் செய்து மௌனவ்ரதத்துடன் காயத்ரீஜபம் செய்தான். அப்பால் உயர்கின்ற ஸூர்யனைப் பூஜித்துத் தன்னுடைய அம்சங்களான தேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்ப்பணஞ் செய்து குலவ்ருத்தர்களான அந்தணர்களை ஸ்ரத்தையுடன் ஆராதித்துப் பொன்கொப்பியிடப் பெற்றவைகளும் ஸாதுக்களும் முத்துமாலைகள் இடப்பெற்றவைகளும் மிகுந்த பாலுடையவைகளும் முதலீற்றுயிருப்பவைகளும் நல்ல கன்றுடையவைகளும் நல்ல வஸ்த்ரத்தினால் அலங்கரிக்கப்பட்டவைகளும் குளம்புகளில் வெள்ளி யலங்காரம் செய்யப்பெற்றவைகளுமாகிய பசுக்களை வெண்பட்டு மான்

1. கடனம்—சேர்த்தி. அதில்லாமை—விகடனம்.

தோல் எள்ளு இவற்றுடன் நன்கு அலங்காரம் செய்யப் பெற்ற அந்தணர்களுக்குப்[1] பத்மம் பத்மமாகக் கொடுத் தான். அப்பகவான் இங்ஙனம் தினந்தோறும் நடத்திவந் தான். மற்றும் அப்பரமன், பசுக்களையும் ப்ராஹ்மணர்க ளையும் தேவதைகளையும் குலவ்ருத்தர்களையும் குருக்களை யும் தன் விபூதிகளான ஸமஸ்தபூதங்களையும் நமஸ்க ரித்து மங்களத்ரவ்யங்களை ஸ்பர்சித்தான். அனந்தரம் மனுஷ்யலோகத்திற்கெல்லாம் அலங்காரமான தன்னைத் தனக்கு அஸாதாரணமான பீதாம்பரம் கௌஸ்துபம் முதலிய ஆடையாபரணங்களாலும் திவ்யமான பூமாலை களாலும் அத்தகைய அங்கராகங்களாலும் அலங்க ரித்துக்கொண்டான். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத் ரர்களென்கிற ஸமஸ்த வர்ணத்தவர்களுக்கும் அந்தப் புரத்து ஜனங்களுக்கும் அவரவர்க்கு வேண்டிய விருப் பங்களைக் கொடுப்பித்து மந்த்ரி முதலியவர்களையும் அவர்க்கு வேண்டிய விருப்பங்களைக் கொடுத்து ஸந்தோ ஷப்படுத்தித் தானும் ஸந்தோஷம் அடைந்தான். அவன் எதிரில் உட்கார்ந்திருக்கின்ற அந்தணர்களுக்குப் பூமாலை தாம்பூலம் அங்கராகம் இவை கொடுப்பித்து நெய் கண்ணாடி பசு எருது ப்ராஹ்மணர் தேவதை இவை களைத் தர்சனஞ் செய்து அப்பால் தான் நண்பர்களை யும் மந்த்ரி முதலியவர்களையும் பார்யைகளையும் அவர வர்க்கு உரியபடி அனுஸரித்தான். அவ்வளவில் ஸா ரதி, ஸுக்ரீவம் முதலிய குதிரைகள் பூட்டப் பெற்று மிகவும் அற்புதமாயிருக்கின்ற ரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தி நமஸ்கரித்து முன்னே நின்றான். அப் பால் அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் ஸாத்யகி உத்தவன்

1. பத்மமென்பது ஒரு பெரிய கணக்கு.

இவர்களுடன்கூடித் தன்கையினால் ஸாரதியின் கையைப் பிடித்துக்கொண்டு ஸூர்யன் உதய பர்வதத்தின்மேல் ஏறுவதுபோல ரதத்தில் ஏறிக்கொண்டான். அவன் அந்தப்புரத்திலுள்ள மடந்தையர்களின் வெட்கமும் ப்ரீதியும் அமைந்த கண்ணோக்கங்களால் பார்க்கப்பட்டு மந்தஹாஸஞ்செய்து அவர்கள் மனத்தைப் பறிப்பவனாகி அவர்களால் வருந்திவிடப் பெற்று வெளிக்கிளம்பினான். அவன் ஸமஸ்தவ்ருஷ்ணிகளாலும் சூழப்பட்டு, எங்கு நுழைந்தவர்களுக்கு ஊர்மிகளெனப்படுகிற பசி தாஹம் முதலிய ஆறு விகாரங்கள் உண்டாகிறதில்லையோ, அத்தகைய ஸுதர்மையென்னும் ஸபையில் ப்ரவேசித்தான். யாதவஸ்ரேஷ்டனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அங்குச் சிறிய ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து மனுஷ்யர்களில் சிறந்தயாதவர்களால் சூழப்பட்டு ஆகாயத்தில் நக்ஷத்ரங்களோடு கூடிய சந்த்ரன்போல் தன்னொளியால் திசைகளையெல்லாம் விளங்கச் செய்துகொண்டு ப்ரகாசித்தான். மன்னவனே! அந்த ஸபையில் ஹாஸ்யஞ்செய்பவர்கள் ரஸமுள்ள பலவகையான ஹாஸ்யங்களால் ஸ்ரீக்ருஷ்ணனை ஆராதித்தார்கள். நாட்யாசார்யர்களும் நர்த்தகிகளும் தத்தங் கூட்டங்களோடு கூடித் தாண்டவங்களால் ஸ்ரீக்ருஷ்ணனைப் பணிந்தார்கள். மற்றும் மத்தளம் வீணை தவல் வேணு தாளம் சங்கம் இவற்றின் சப்தங்களோடு ஆடல் பாடல்களை நடத்தினார்கள். புராணாதிகள் படிக்கிற ஸூதர்களும் வம்சாவளி படிக்கிற மாகதர்களும் ஸ்துதி பாடகர்களான வந்திகளும் அவனைத் துதித்தார்கள். வேதங்களை ஓதி யுணர்ந்து உபதேசிக்குந் திறமையுடைய அங்குள்ள சில அந்தணர்கள் உட்கார்ந்து பரிசுத்தமான புகழுடைய பூர்வராஜர்களின் கதைகளை

மொழிந்தார்கள். இங்ஙனமே தினந்தோறும் நடந்து கொண்டுவந்தது. இப்படியிருக்கையில் ஒரு நாள் ஸ்ரீக்ருஷ்ணன் ஸபையில் வீற்றிருக்கும்பொழுது ஒருநாளும் புலப்படாத ஒரு புருஷன் அவ்விடம் வந்து த்வாரபாலர்களால் பகவானுக்கு விண்ணப்பஞ் செய்யப்பெற்று அவனுடைய அநுமதியால் உள்ளே ப்ரவேசிக்கப்பட்டான். அவன் பரம்புருஷனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரஞ் செய்து அஞ்சலி செய்துகொண்டு ராஜர்களுக்கு ஜராஸந்தனுடைய தகைவினாலுண்டான துக்கத்தை அறிவித்தான். அந்த ஜராஸந்தன் திக்விஜயம் செய்யும்பொழுது அவனுக்கு எவரெவர் வணங்கி வரவில்லையோ, இருபதினாயிரங் கணக்குடைய அம்மன்னவர்களையெல்லாம் அவன் கிரிவ்ரஜமென்னும் துர்க்கத்தில் பலாத்காரமாகத் தகைந்து வைத்திருந்தான்.

மன்னவர்கள் சொல்லுகிறார்கள்:—ஸ்ரீக்ருஷ்ண! ஸ்ரீக்ருஷ்ணா! அளவிடக்கூடாத ஸ்வரூபமுடையவனே! உன்னைச் சரணமடைந்தவர்களின் பயத்தை அழிப்பவனே! ஸம்ஸாரத்தினின்று பயந்து அதினின்று மீளுவதற்கு மற்றொரு உபாயத்தையும் அறியாத நாங்கள் உன்னைச் சரணம் அடைகின்றோம். இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் சப்தாதிவிஷய ஸுகங்களை விரும்பி அவற்றைப் பெறுதற்காகப் பற்பல கர்மங்களில் இழிந்து பாஞ்சராத்ரம் முதலியவற்றின் மூலமாய் உன்னால் உபதேசிக்கப்பட்டதும் நன்மையை நிறைவேற்றிக் கொடுப்பதும் தங்களுக்கு அனுரூபமுமாகிய உன்னுடைய ஆராதனரூபமான கர்மத்தில் எதுவரையில் ஊக்கமற்றிருக்கிறார்களோ, அதுவரையில் அவர்களுக்கு வ்யாதிமுதலிய வருத்தங்களை விளைவித்து ஜீவிக்கவேண்டுமென்னும் விருப்பத்தை உடனே வலிவுடன் அறுத்துவிடுகின்றனை. ப்ரா

ணிகளின் க்ஷேமத்தில் ஏமாற்றமின்றி இமை கொட்டா திருக்கிற அத்தகைய உனக்கு நமஸ்காரம். ஜகதீச னே! ஆதிகாரணனான நீ ஸத்புருஷர்களைக் காக்கும் பொருட்டும் துஷ்டர்களை நிக்ரஹிக்கும்பொருட்டும் உன்னுடைய அம்சமான பலராமனுடன் இவ்வுலகில் அவதரித்தனை. துஷ்டர்களை நிக்ரஹிக்காமல் சிஷ் டர்களைக் காக்கமுடியாமையால் அதுவும் சிஷ்டபரி பாலனத்திற்காகவே யாகையால் நீ ஹிதத்தையே செய் பவனென்பதில் ஸந்தேஹமில்லை. துஷ்டர்களை நிக்ர ஹிப்பதும் அவர்களுக்குக் கடைசியில் ஹிதமாகவே முடிகிறதாகையால் அதுவும் ஹிதமே. ஆனால் ஒருவன் துக்கிப்பானேனென்றால்; ஒருவன் உன்னுடைய ஆஜ்ஞை யைக் கடந்து பிறரை வருத்துகையால் அவர்கள் வருந் துகிறார்களோ? அல்லது அவனவன் தன்னுடைய பாப கர்மத்தின் பலனான துக்கத்தை அனுபவிக்கிறானோ? இன்னதென்று நாங்கள் நிச்சயித்தறியோம். (அவர வர் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸுகதுக்கங்களைக் கொடுக்கின்றனையாகையால் உனக்குப் பக்ஷபாதமாவது மனஇரக்கமில்லாமையாவது கிடையாது). ப்ரபூ! ராஜர்களுக்கு ராஜ்யபோகத்தினாலுண்டாகும் ஸுகம் ஸ்வப்னத்தில் அனுபவிக்கும் ஸுகத்தோடொத்தது. அது கர்மாதீனமாய் விளையும் ஸுகமல்லவா? (ஆகை யால் ஜராஸந்தனால் கட்டுண்பதற்கு முன்பு ராஜ்யத்தி லிருக்கும் பொழுதுங்கூட ஸுகமென்பது கிடையாது). மங்களமான ராஜசரீரம் பெற்றமை ஸுகமல்லவா? என் றால், அதில் ஸுகமில்லை. ஸர்வகாலமும் சத்ருக்களி டத்தினின்று பயம் நேரக்கூடியதும் சவம்போன்றது மாகிய இச்சரீரமாகிற பாரத்தைச் சுமந்து கொண்டிருக் கிறோம். பிணத்தைச் சுமக்குகிறவர்களுக்கு அது

ஸுகமாயிருக்குமோ? அங்ஙனமே இதுவும் ஸுக மன்று. ஜகதீசனே! உன்னுடைய அனுக்ரஹத்தினால் எதிலும் விருப்பமில்லாத யோகிகளுக்கு நேரக்கூடிய உன்னை அனுபவிக்கையாகிற மஹாநந்தத்தைத் துறந்து உன்மாயையால் மதிமயங்கி மனஇரக்கத்திற்கிட மாகி இவ்வுலகில் வருந்துகிறோம். வணங்கினவர்களின் சோகத்தைப் போக்கவல்ல பாதங்களையுடையவனே! இப்பொழுது கட்டுண்டிருக்கிற எங்களை மகதராஜனென்னும் பெயருடைய கர்மபாசத்தினின்று விடுவிப்பாயாக. பதினாயிரம் யானைகளின் பலமுடைய இவனொருவனே ராஜர்களாகிய எங்களனைவரையும் ஸிம்ஹம் ஆடுகளைத் தகைவதுபோல் தன் க்ருஹத்தில் தகைந்திருக்கிறான். ஆகையால் அவனிடத்தினின்று நாங்களே எங்களை விடுவித்துக்கொள்ள வல்லமையற்றிருக்கிறோம். சக்ராயுதந் தரித்தவனே! இவன் உன்னோடு பதினெட்டுதடவைகள் யுத்தஞ்செய்து பதினேழுதடவைகள் உன்னால் தோற்பிக்கப்பட்டானல்லவா. அவன் பிறகு அளவற்ற வீர்யமுடையவனாயினும் மனுஷ்யசேஷ்டையை அனுஸரித்திருக்கிற உன்னை ஒருதடவை ஜயித்துக் கொழுப்புற்று உன் ப்ரஜைகளாகிய எங்களைப் பீடிக்கிறான். (தூதன் சொல்லுகிறான்); மகதராஜனால் தகையப்பட்ட மன்னவர்கள் உன் காட்சியை விரும்பி இங்ஙனம் உன்பாத மூலத்தைச் சரணம் அடைந்தார்கள். மன இரக்கத்திற்கிடமான அம்மன்னவர்களுக்கு ஸுகத்தை விளைப்பாயாக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—ராஜதூதன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் பொன்னிறமுள்ள ஜடாபாரந்தரித்தவரும் மிகுந்த ஒளியுடையவரும் தேவரிஷியுமாகிய நாரதர் அன்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய

அற்புத சரித்ரங்களையும் பிறவியையும் பாடிக்கொண்டு அந்தப் பாட்டினினிமையால் அந்த ஸ்ரீ க்ருஷ்ணனையும் ஸபையிலுள்ள ஜனங்களையும் உருகின மனமுடையவர்களாகச் செய்துகொண்டும் மற்றவர்களை மனக்களிப்புறச் செய்துகொண்டும் ஸூர்யன்போல அவ்விடம் வந்து தோன்றினர். ஸமஸ்தலோகங்களுக்கும் ப்ரபுக்களான ப்ரஹ்மாதிகளையும் அடக்கியாள்பவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அம்மஹர்ஷியைக் கண்டு ஸபிகர்களோடும் தன்னைத் தொடர்ந்தவர்களோடும் ஸந்தோஷமுற்று ஆஸனத்தினின்று எழுந்து தலையை வணக்கி வந்தனஞ்செய்தான். ஸ்ரீக்ருஷ்ணன் அம்முனிவரை விதிப்படி பூஜித்து ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கின்ற அன்னவரைத் தன் ஸத்யத்தையினால் ஸந்தோஷப்படுத்திக்கொண்டு இனிய உரைகளுடன் இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீ க்ருஷ்ணன் சொல்லுகிறான்:—மஹர்ஷீ! இப்பொழுது மூன்றுலோகங்களும் எவ்விதத்திலும் பயமில்லாதிருக்கின்றனவா? உலகங்களையெல்லாம் சுற்றுகின்ற உம்மால் எங்களுக்குப் பெரியலாபம் உண்டாகின்றது. ஸமஸ்தலோக வ்ருத்தாந்தங்களும் எங்களுக்கு உம்மால் தெரிகின்றனவல்லவா? ஈஶ்வரனால் படைக்கப்பட்ட உலகங்களில் உமக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை. ஆகையால் பாண்டவர்கள் என்ன செய்ய நினைத்திருக்கிறார்களென்பதைப்பற்றி உம்மை வினவுகிறேன்; அதைச் சொல்வீராக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—ப்ரபூ! அளவற்ற மஹிமைகளுடையவனே! ஜ்ஞானசக்த்யாதி குணங்களோடு கூடவே நீ ஸமஸ்த பூதங்களிலும் அந்தராத்மாவாயிருக்கின்றனை. அந்தராத்மாவாயிருப்பினும் பஸ்மத்தி

ஞல் மறைக்கப்பட்ட ஒளியுடைய அக்னிபோல ஒருவர்க்கும் புலப்படுகிறதில்லை. ஆகையால் உனக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை. பாண்டவர்களின் நினைவு உனக்குத் தெரியாததன்று. நீ ப்ரபஞ்சங்களையெல்லாம் படைத்த விஸ்வகர்த்தாவான ப்ரஹ்மதேவனையும் மதிமயங்கும்படி செய்பவன். உன்மாயை பெரும்பாலும் கடக்கமுடியாதது. அத்தகைய உன்மாயையை நான் பலகாலும் கண்டிருக்கிறேன். 'பாண்டவர்கள் என்னசெய்ய நினைக்கிருர்கள்?' என்று என்னை வினவினதும் மாயையே. என்னை ஏமாற்றுவதற்காக இங்ஙனம் வினவுகின்றனையன்றி உண்மையில் உனக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை. நீ அந்தப்புரத்தில் பலக்ருஹங்களிலும் ஒருவாருன உருவத்துடன் பல செயல்களைச் செய்துகொண்டு ஒரே ஸமயத்தில் புலப்பட்டு உன் யோகமாயையைக் காட்டினாற்போல் இதுவும் ஒரு மாயையே. ஆகையால் நீ இங்ஙனம் வினவுவது எனக்கு அற்புதமன்று. தன் ஸங்கல்பத்தினுல் இவ்வுலகங்களையெல்லாம் படைத்து அவற்றிற்கு அந்தராத்மாவாகி நியமித்துக்கொண்டிருக்கிற உன்னுடைய அபிப்ராயத்தை உன்னுல் படைக்கப்பட்டு நியமிக்கப்படுகிற இவ்வுலகத்திலுள்ளவன் எவன்தான் நன்றாக அறிய வல்லனுவான்? ஆகையால் உன்னுடைய அபிப்ராயத்தை என்னுல் நிச்சயித்தறிய முடியாது. உன்னுடைய அஸாதாரண ஸ்வபாவத்தினுல் எல்லாவற்றிலும் விலக்ஷணமான ஸ்வரூபமுடைய உனக்கு நமஸ்காரம். (உனக்கு வெறுமனே நமஸ்காரம் செய்ய வேண்டுமேயன்றி உன்னபிப்ராயத்தை நிச்சயிக்க வல்லனல்லேன்.) ஜன்ம மரணுதிரூபமான ஸம்ஸாரத்தில் அழுந்தி அனர்த்தங்களை விளைக்கின்ற சரீரத்தினின்று விடுபடுமுபாயத்தை அறியாதிருக்கிற

ஜீவனுக்கு உன்புகழாகிற பெரிய தீபத்தை லீலாவதாரங்களால் ஏற்றிக்கொடுத்தனை. அத்தகையனான உன்னை நான் சரணமடைகின்றேன். நீ எல்லாமறிந்தவன். உனக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. ஆயினும் மனுஷ்ய உருவத்தை ஏற்றுக்கொண்டு மனுஷ்ய ரீதியை அனுஸரித்திருக்கின்ற நீ வினவுகின்றனையாகையால் உன்னுடைய அத்தையின் பிள்ளையும் உன்பக்தனுமாகிய யுதிஷ்டிர மன்னவன் செய்ய நினைத்திருப்பதைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. பாண்டவனான யுதிஷ்டிரமன்னவன் உன்னோடு ஸாரூப்யம் பெறுகையாகிற மேன்மையை விரும்பி ராஜஸூயமென்னும் சிறந்த யாகத்தினால் உன்னை ஆராதிக்கப்போகிறான். அதை நீ அனுமோதனஞ் செய்யவேண்டும் (அருகே இருந்து நீ அதை நடத்தவேண்டும்.) பெரும்புகழுடைய சிசுபாலாதி ராஜர்களும் அந்த யாகத்தைப் பார்க்கவிரும்பி அவ்விடம் வருவார்கள். சண்டாளாதிகளுங்கூட உன்னுடைய நாமத்தைக் கேட்பது கீர்த்தனஞ் செய்வது நினைப்பது இவைகளில் ஏதேனுமொன்று செய்யினும் பாபங்களெல்லாம் தீர்ந்து பரிசுத்தராவார்கள். உன்னைக் கண்ணால் காண்பார்களாயின், அவர்கள் பரிசுத்தராவார்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? உன்புகழ் திசைகளுக்கெல்லாம் மேற்கட்டுபோல் அலங்காரமாகி ஆகாயத்திலும் பாதாளத்திலும் பூமியிலும் நிறைந்து ஜகத்தை யெல்லாம் புனிதஞ் செய்கின்றது. மற்றும் உன்ஸ்ரீபாததீர்த்தம் ஆகாயத்தில் மந்தாகினி யென்றும் பாதாளத்தில் போகவதியென்றும் இவ்வுலகத்தில் கங்கையென்றும் ப்ரஸித்திபெற்று உலகங்களையெல்லாம் புனிதஞ் செய்கின்றது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தன் பக்ஷத்தைச் சேர்ந்

அந்தச் சபையிலுள்ள யாதவர்கள் இங்ஙனம் ராஜவ்ருத்தாந்தத்தையும் யுதிஷ்டிர வ்ருத்தாந்தத்தையுங் கேட்டு [1]மாகதனை ஜயிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் தூண்டப்பட்டு 'முதலில் மாகதனை எதிர்த்துப்போவதுதான் முக்யம்' என்று சொல்லிக்கொண்டிருக்கையில் ஸ்ரீக்ருஷ்ணன் புன்னகை செய்துகொண்டு ம்ருதுவான உரைகளுடன் உத்தவனைக் குறித்து மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—நீர் எமக்குச் சிறந்த கண்ணாயிருக்கின்றீர். (கண்போல எல்லா விஷயங்களையும் தெரியப்படுத்த வல்லராயிருக்கின்றீர்). கண் மறைவிலிருப்பதைத் தெரிவிக்கவல்லதன்று. நீர் எல்லாவற்றையும் தெரிவிக்க வல்லராகையால் சிறந்த கண்ணாயிருக்கின்றீர். மற்றும், எமக்கு நண்பர்; மற்றும், மந்த்ராலோசனையால் ஸாதிக்கக்கூடிய கார்யங்களின் உண்மையை அறிந்தவர். ஆகையால் இப்பொழுது எதைச் செய்யவேண்டுமோ, அதை நிரூபித்துச் சொல்வீராக. நீர் சொல்லுவதை நாங்கள் நம்புகிறோம். அப்படியே செய்யவும் செய்கிறோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் தான் ஸர்வஜ்ஞனாயினும் ஒன்றுமறியாதவன் போல் ஆலோசனை சொல்லும்படி தூண்டுகையில், உத்தவன் அப்பகவானுடைய ஆஜ்ஞையைத் தலையால் வஹித்து மறுமொழி கூறினான். எழுபதாவது அத்யாயம் முற்றிற்று.

---

1. ஜராஸந்தனை.

உத்தவன் யுதிஷ்டிரயாகத்திற்குப் போக வேண்டுமென்று விரூபிக்கையில் ஸ்ரீக்ருஷ்ணன அப்படியே அங்கீகரித்துப் போதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மிகுந்த மதியுடைய உத்தவன் தேவர்ஷியாகிய நாரதர் மொழிந்ததைக் கேட்டு ஜராஸந்தனை எதிர்க்கையே முக்யமென்கிற ஸபிகர்களின் அபிப்ராயத்தையும் ராஜஸூயத்திற்குப் போக வேண்டுமென்கிற ஸ்ரீக்ருஷ்ணனுடைய அபிப்ராயத்தையும் அறிந்து மேல்வருமாறு கூறினான்.

உத்தவன் சொல்லுகிறான்:—தேவனே! 'அத்தையின் பிள்ளையாகிய யுதிஷ்டிரன் யாகம் செய்யப்போகிறான். அவனுக்கு நீ ஸஹாயஞ் செய்யவேண்டும்' என்று நாரதமஹர்ஷி மொழிந்தாரல்லவா? அதை அவஸ்யம் செய்யவேண்டும். சரணம் விரும்புகிற ராஜர்களைக் காக்கவேண்டியதும் அவஸ்யமே. இரண்டும் முக்யமான கார்யங்களே. ப்ரபூ! திக்விஜயம் செய்தபினபு தான் ராஜஸூயயாகம் நடத்தவேண்டும். ஆகையால் முன்பு திக்விஜயம் செய்யவேண்டும். அதற்கு நீ உதவி செய்யவேண்டியது அவஸ்யமாகையால் நாம் இங்கிருந்து முதலில் இந்த்ரப்ரஸ்தத்திற்குப் போகவேண்டும். அங்கு யுதிஷ்டிரனால் அனுமதி கொடுக்கப்பெற்று அவனுடைய ப்ரயோஜனத்திற்காகவே ஜராஸந்தனை வதிப்பாயாக. அங்ஙனம் திக்விஜயத்திற்காக ஜராஸந்தனைக் கொல்வது, ராஜஸூயத்தை நடத்துவது ராஜர்களை விடுவிப்பது ஆகிய இரண்டு ப்ரயோஜனங்களையும் நிறைவேற்றுமென்று எனக்குத் தோற்றுகிறது. கோவிந்தனே! முதலில் ராஜஸூயத்திற்குப் போவோமாயின் இதனாலேயே நாம் விரும்புகிற பெரிய ப்ரயோஜனமும் கைகூடுகின்றது. ஜராஸந்தனைக் கொன்று ராஜர்களைச் சிறையினின்று விடுவிக்கிற உனக்குப் புகழும் உண்டாகும். அந்த

ஜராஸந்தன் பதினாயிரயானைபலமுடையவன். பிறர்க்குப் பொறுக்கமுடியாத கொடிய பலமுடைய பீமஸேனனைத் தவிர மற்ற பலிஷ்டர்கள் அனைவர்க்கும் அவன் வருத்தி யும் பொறுக்க முடியாதவன். பீமஸேனன் அவனோடொ த்த பலமுடையவனாகையால் அவனை வெல்ல வல்லனே. ஆனால் அவனை த்வந்த்வ யுத்தத்தினால் வெல்ல வேண்டு மன்றி நூறு அக்ஷௌஹிணிஸைன்யங்கள் போரினும் வெல்லமுடியாது. அளவற்ற ஸைன்யங்களையுடைய அம் மகதராஜனோடு பீமஸேனனுக்கு த்வந்த்வயுத்தம் எப் படி நேருமென்றால், அவன் ப்ராஹ்மண விஸ்வாஸமுடை யவன். அவர்கட்கு வேண்டினவற்றையெல்லாம் நிறை வேற்றிக்கொடுக்குந்தன்மையன். அவன் ப்ராஹ்மணர் கள் வேண்டினால் ஒருகாலும் மறுக்கமாட்டான். ஆகை யால் பீமஸேனன் ப்ராஹ்மணவேஷம் பூண்டு அவனிடம் சென்று த்வந்த்வயுத்தத்தை யாசிக்கவேண்டும். நீ ஸமீபத்தில் இருப்பாயாயின் த்வந்த்வயுத்தஞ் செய்கின்ற அம்மகதராஜனைப் பீமஸேனன் வதித்துவிடுவான். ப்ர பஞ்சத்தின ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கு நீயே ஆதிகா ரணன். காலத்தைச் சரீரமாகவுடையவனும் ப்ராக்ருத உருவங்களற்றவனுமாகிய உனக்கு ப்ரஹ்ம ருத்ரர்களிரு வரும் அம்சங்களே. அவ்விருவர்மூலமாய் நீயே ஸ்ரு ஷ்டி ஸம்ஹாரங்களை நடத்துகின்றனை. இங்ஙனம் நீ ஜராஸந்தனை வதிப்பாயாயின், அவனால் தகையுண்ட ரா ஜர்களின் பத்னிகள் தங்கள் சத்ருவாகிய ஜராஸந்த னைக் கொன்றதும் தங்களைச் சிறையினின்று விடுவித் ததுமாகிய நிர்மலமான உன் சரித்ரத்தைத் தத்தம் க்ரு ஹங்களில் குழந்தைகளைச் சீராட்டுவது முதலிய ஸம யங்களில் பாடுவார்கள். கோபிகைகளும் உன்னைச் சரணம் அடைந்த முனிவர்களும் நாங்களும் முதலி

யிடத்தினின்று யானையை விடுவித்தது ராவணனிடத்தி னின்று ஜனகராஜன் திருமகளான ஸீதையை விடுவித் தது கம்ஸனிடத்தினின்று தாய் தந்தைகளான தேவகீ வஸுதேவர்களை விடுவித்தது முதலிய உன் வ்ருத்தாந் தங்களைப் பாடுவதுபோல அவர்களும் இந்த வ்ருத்தாந் தத்தைப் பாடுவார்கள். ஸ்ரீக்ருஷ்ணனே! ஜராஸந்த னைக் கொல்லுவது அநேக ப்ரயோஜனங்களையும் நிறை வேற்றிக் கொடுக்கின்றது. (அவனை வதித்துவிட்டால் சிசுபாலாதிகளை அனுயாஸமாக வதிக்கலாம்); ஜராஸந்த னால் தளையப்பட்ட ராஜர்களின் புண்யகர்மம் பலிக்கும் படியான தசையை அடைந்திருக்கின்றமையால் அவர் களை விடுவிக்கவேண்டியது அவஸ்யமாயிருக்கின்றது. ராஜஸூய யாகம் உனக்கு இஷ்டமானதே. (யுதிஷ்டி ரன் அதைச் செய்ய விரும்புகிறுனகையால் அவனுக்கு இஷ்டமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் நாம் ராஜஸூய யாகத்தை உத்தேசித்துப் போவதுதான் நலம்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—ராஜனே! தன்பக்தர் களைக் கைவிடாமல் பாதுகாக்குந் தன்மையனுன ஸ்ரீக்ரு ஷ்ணனும் தேவர்ஷியாகிய நாரதரும் மற்றும் அங்குள்ள யதுவ்ருத்தர்களும் பலராமனும் இங்ஙனம் உத்தவன் எல்லாவிதத்திலும் மங்களத்தை விளைவிக்குமாறு மொ ழிந்த உரையைக் கேட்டு ஸந்தோஷமடைந்து புகழ்ந் தார்கள். அப்பால் தேவகியின் குமாரனும் ஷாட் குண்ய பூர்ணனும் ப்ரபுவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வஸு தேவன் முதலிய பெரியோர்களிடத்தில் அனுமதி பெற் றுக்கொண்டு ஜயசீலனுன தாருகன் முதலிய ப்ருத்யர் களை ப்ரயாணப்படும்படி ஆஜ்ஞாபித்தான். சத்ருக் களை அழிப்பவனே! புதல்வர்களோடும் மற்றுமுள்ள

கருவிகளோடும் தன் பத்னிகளைப் புறப்படச்செய்து பலராமனிடத்திலும் யதுராஜனுன உக்ரஸேனனிடத்திலும் அனுமதி பெற்றுக்கொண்டு ஸூதன் கொண்டுவந்த கருடக்கொடியுடைய தன்ரதத்தின்மேல் ஏறிக்கொண்டான். அப்பால் தேர் யானை காலாள் குதிரைக்காரர் ஆகிய இவற்றின் தலைவர்களால் பயங்கரமான தன் ஸைந்யத்தினுல் சூழப்பட்டு ம்ருதங்கம் துந்துபி ஆனகம் சங்கம் கோமுகம் முதலிய வாத்யங்களின் கோஷங்களால் திசைகளெல்லாம் ஒலிக்கும்படி செய்துகொண்டு பட்டணத்தினின்று புறப்பட்டான். பதிவ்ரதைகளான ருக்மிணி முதலிய ஸ்ரீக்ருஷ்ணபத்னிகள் சிறந்த ஆடை ஆபரணம் அங்கராகம் பூமாலை இவைகளை அணிந்து தத்தம் புதல்வர்களோடுகூடிக் கத்தி கேடயம் இவைகளைக் கையிலேந்தின ப்ருத்யர்களால் பாதுகாக்கப்பட்டுத் தங்களுக்கு ஏற்பட்டிருக்கிற குதிரை பொற்சிவிகை முதலிய வாஹனங்களின்மேல் ஏறிக்கொண்டு ரதத்தின்மேலேறிப் போகின்ற தங்கள் கணவனுன ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து சென்றுர்கள். ப்ருத்யர்களின் ஸ்த்ரீகளும் விலைமாதுகளும் நன்கு அலங்கரித்துக்கொண்டு பாய் குடிசை கம்பளி துணி முதலிய கருவிகளையெல்லாம் எடுத்துக் கட்டிக்கொண்டு பல்லக்கு ஒட்டகம் எருது கிடா கழுதை கோவேறு கழுதை வண்டி பெண்யானை முதலிய வாஹனங்களில் ஏறிக்கொண்டு சென்றுர்கள். பெரிய த்வஜபடங்களும் சத்ரசாமரங்களும் சிறந்த ஆயுதங்களும் ஆபரணங்களும் கிரீடங்களும் தவஜங்களும் அமைந்து பெருங் கோஷமுடைய அந்தப் பெரிய ஸைன்யம் ஸூர்யனுடைய கிரணங்களால் கலக்கமுற்ற திமிங்கலம் முதலிய ஜலஜந்துக்களால்மேலெழுகின்ற அலைகளையுடைய ஸமுத்

ரம்போல் பகலில் விளங்கிற்று. அப்பால் நாரத முனிவர் ஸ்ரீக்ருஷ்ணனால் வெகுமதிக்கப்பெற்று அவன் செய்த பூஜையை ப்ரீதியுடன் பெற்றுக்கொண்டு அவனை மனத்தில் நமஸ்கரித்து அவனுடைய அபிப்ராயத்தையும் அறிந்து அவனுடைய காட்சியினால் இந்த்ரியங்களெல்லாம் ஸந்தோஷம் அடையப்பெற்று ஆகாசமார்க்கத்தினால் புறப்பட்டுப்போனார். தேவகியின் புதல்வனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ராஜதூதனைக் குறித்து 'நீங்கள் பயப்படவேண்டாம். நான் மகதராஜனைக் கொன்றுவிடுகிறேன். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகும்' என்று மொழிந்தான். இங்ஙனம் சொல்லியனுப்பப்பட்ட அத்தூதன் அம்மன்னவர்களிடம் சென்று ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னபடி எல்லாவற்றையும் மொழிந்தான். அவர்களும் மாகதனுடைய பந்தனத்தினின்று விடுபடவிரும்பி ஸ்ரீக்ருஷ்ணனுடைய காட்சியை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் ஆனர்த்தம் ஸௌவீரம் குரு குருக்ஷேத்ரம் இத்தேசங்களைக் கடந்து இடையிலுள்ள பர்வதங்களையும் நதிகளையும் பட்டணங்கள் க்ராமங்கள் இடைச்சேரிகள் பொன் வெள்ளி விளையுமிடங்கள் இவற்றையும் கடந்தான். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் வ்ருஷத்வதி ஸரஸ்வதி என்னும் இந்நதிகளையும் பஞ்சாலதேசங்களையும் மத்ஸ்யதேசங்களையும் கடந்து இந்த்ரப்ரஸ்தம் போய்ச்சேர்ந்தான். யுதிஷ்டிரன் மனுஷ்யர்களுக்குக் கிடைக்க அரிதான காட்சியையுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் வருவதைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து புரோஹிதர்களோடும் பந்துக்களோடும் நண்பர்களோடும் கூடிப் பட்டணத்தினின்று புறப்பட்டான். அந்த யுதிஷ்டிரன் பெரிய வாத்ய கோஷத்தோடும் அத்தகைய வேதகோஷத்தோடும்

இந்த்ரியங்கள் ப்ராணனை எதிர்கொள்வதுபோல ஸ்ரீக்ரு ஷ்ணனை எதிர்கொண்டான். அப்பாண்டவன் ஸ்ரீக்ருஷ் ணனைக் கண்டு மனம் உருகப்பெற்றுக் கண்டு நெடுநாள் ஆனமையாலும் மிகவும் அன்பிற்கிடமாகையாலும் அவனை அடிக்கடி ஆலிங்கனஞ் செய்துகொண்டான். அந்த யுதிஷ்டிரன் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு நிர்மலமான வா ஸஸ்தானமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய அங்கத்தை இரு புஜங்களாலும் ஆலிங்கனஞ்செய்து அசுபங்களெல்லாம் தீர்ந்து கண்களில் ஆநந்தநீர் பெருகவும் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகவும் லோகவ்யாபாரம் மறக்கவும் பெற்று மஹாநந்தம் அடைந்தான். பீமஸேனன் புன் னகை செய்துகொண்டே ப்ரீதியின் மிகுதியாலுண்டான கண்ணீர்களால் கண்கள் மறையப்பெற்று அம்மான் பிள்ளையாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனை அணைந்துக் கொண்டு ஸந்தோஷம் அடைந்தான். நகுல ஸஹதே வர்களும் அர்ஜுனனும் கண்களில் மேன்மேலென ஆநந்தநீர் பெருகப்பெற்று மிகவும் அன்பிற்கிடமான அவ்வச்யுதனை அணைத்துக் கொண்டார்கள். ஸ்ரீக்ருஷ் ணன் அர்ஜுனனால் அணைக்கப்பெற்று நகுலஸஹதேவர் களால் அணைத்து அபிவாதனமும் செய்யப்பெற்று யுதி ஷ்டிரன் பீமன் ப்ராஹ்மணர்கள் மற்றுமுள்ள குலவ்ருத் தர்கள் ஆகிய இவர்களுக்குப் பாதவந்தனஞ்செய்து வெகுமதிக்கப்பெற்றுக் குருக்களையும் ஸ்ருஞ்சயர்களையும் கேகயர்களையும் வெகுமதித்து விசாரித்தான். ஸூதர் களும் மாகதர்களும் கந்தர்வர்களும் வந்திகளும் ஹாஸ் யக்காரர்களும் ப்ராஹ்மணர்களும் ம்ருதங்கம் சங்கம் படஹம் வீணை பணவம் வேணு என்னும் இவ்வாத்யகோ ஷங்களுடன் தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைத் துதித்தல் ஆடல்பாடல் இவைகளைச்செய்தார்கள். புண்ய

மான புகழுடையவர்களுக்குச் சிகாமணியான அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் இங்ஙனம் நண்பர்களால் சூழ்ந்து துதிக்கப்பெற்று அலங்காரஞ் செய்யப்பெற்ற பட்டணத்திற்குள் நுழைந்தான். அப்பட்டணத்தின் வீதிகளெல்லாம் யானைகளின் மதஜலங்களாகிற பரிமளமுள்ள நீர்களால் நனைக்கப்பட்டிருந்தன. மற்றும், அந்நகரம் விசித்ரமான த்வஜங்களாலும் ஸ்வர்ணமயமான தோரணங்களாலும் பூர்ணகும்பங்களாலும் நன்கு ஸ்னானஞ்செய்து புதிய வெண்பட்டு வஸ்த்ரங்களை உடுத்து ஆபரணங்களை அணிந்து சந்தனம் முதலிய அங்கராகங்களைப் பூசிக்கொண்டிருக்கிற புருஷர்களாலும் அத்தகைய மடந்தையர்மணிகளாலும் விளக்கமுற்றிருந்தது. மற்றும், அந்நகரம் வீடுகள்தோறும் நன்கு எரியுமாறு தீபங்களை ஏற்றிப் புஷ்பம்முதலிய பலிகளை இட்டுச் சாளரங்களின் வழியாய் வெளிவருகின்ற தூபங்களால் அழகாகித் திகழ்கின்ற பதாகைகளுடையதும் வெள்ளியால் இயற்றின பெரிய சிகரங்களின் நுனியில் பொற்கலசங்கள் இடப்பெற்ற மாளிகைகளால் நிரம்பியதுமாயிருந்தது. இத்தகையதான இந்த்ரப்ரஸ்தநகரத்திற்குள் ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரவேசித்தான். மனுஷ்யர்கள் கண் கொட்டாதபடி பேராவலுடன் பார்ப்பதற்குரிய பேரழகனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் வருவதைக் கேட்டுப் பட்டணத்து மடந்தையர்கள் அந்தக்ஷணமே வீட்டுவேலைகளையும் படுக்கையில் கணவர்களையும் துறந்து பார்க்கவேண்டுமென்னும் பேராவலால் தலைச்சொருக்குகளும் அரையிலுடுத்த வெண்பட்டுவஸ்த்ரத்தின் முடியும் அவிழப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்க்க ராஜமார்க்கத்திற்கு வந்தார்கள். வீடுகளில் உப்பரிக்கைகளின்மேல் ஏறிக்கொண்டிருக்கிற யௌவனவயதுடைய பெண்மணிகள்

யானை குதிரை தேர் காலாட்கள் இவைகளால் மிகவும் நிறைந்திருக்கிற அந்த ராஜமார்க்கத்தில் பார்வைக ளோடு வருகின்ற ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு அவன்மேல் புஷ்பங்களை இறைத்து அவனை மனத்தினால் ஆலிங்க னஞ் செய்து புன்னகையோடுகூடின கண்ணோக்கத் தினால் 'நல்வரவா' என்று வினவினார்கள். அம்மடந் தையர்கள் சந்த்ரனோடு கூடிய நக்ஷத்ரங்கள்போன் றிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணபத்னிகளைக் கண்டு 'இவர்கள் என்ன புண்யஞ் செய்தார்களோ? ஏனென்றால், புரு ஷோத்தமனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கம்பீரமான புன்னகை யோடு கூடின கடைக்கண்ணோக்கத்தினால் இவர்கள் கண்களுக்கு மஹோத்ஸவத்தை விளைக்கிறானல்லவா?' என்று மொழிந்தார்கள். பாபங்களெல்லாம் தீரப்பெற்ற பட்டணத்து ஜனங்களும் தொழிலாளர்களில் முக்யர் களும் மங்களவஸ்துக்களைக் கைகளில் ஏந்திக்கொண்டு வந்து ஆங்காங்கு ஸ்ரீக்ருஷ்ணனைப் பூஜித்தார்கள். (அத னால்அவர்கள் பாபங்களெல்லாம் தீரப்பெற்றார்கள்). அம் முகுந்தன் ப்ரீதியினால் பரபரப்புற்று மலர்ந்த கண்களை யுடைய அந்தப்புரத்து ஜனங்களால் பதிகொள்ளப் பெற்று ராஜக்ருஹத்திற்குள் நுழைந்தான். குந்தி தன் னுடன்பிறந்தவனுடைய பிள்ளையும் மூன்று லோகங் களுக்கும் ஈஶ்வரனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக்கண்டு மனக் களிப்புற்று மஞ்சத்தினின்று எழுந்து தனமனாட்டுப் பெண்ணாகிய த்ரௌபதியுடன் அவனை அணைத்துக் கொண்டாள். யுதிஷ்டர மன்னவன் தேவர்களுக்குத் தேவனான ப்ரஹ்மதேவனுக்கும் நியாமகனாகிய ஸ்ரீக்ரு ஷ்ணனைத் தன்க்ருஹத்திற்கு ஆதரவுடன் அழைத்துக் கொண்டுவந்து ஸந்தோஷத்தினால் மெய்ம்மறந்து அவ னைப் பூஜிக்கவேண்டிய விஷயத்தில் செய்யவேண்டிய

கார்யம் இன்னதென்று தெரியப்பெறுதிருந்தான். ராஜனே! ஸ்ரீக்ருஷ்ணன் தன் தந்தையின் உடன் பிறந்தவளான குந்திக்கும் பெரியோர்களின் பத்னிகளான மற்றுமுள்ள மடந்தையர்களுக்கும் வந்தனஞ் செய்து த்ரௌபதியாலும் தன்னுடன்பிறந்தவளான ஸுபத்ரையாலும் வந்தனஞ் செய்யப் பெற்றான். த்ரௌபதி தன்மாமியாரான குந்தியால் தூண்டப்பட்டு ருக்மிணி ஸத்யை பத்ரை ஜாம்பவதி காளிந்தி மித்ரவிந்தை லக்ஷ்மணை நாக்னஜிதி முதலிய ஸ்ரீக்ருஷ்ணபத்னிகளனைவரையும் மற்றும் எவரெவர் வந்தார்களோ அம்மடந்தையர்களையும் வஸ்த்ரங்கள் பூமாலைகள் அலங்காரங்கள் இவை முதலியவைகளைக் கொடுத்துப் பூஜித்தாள். தர்மராஜன் ஸ்ரீக்ருஷ்ணனையும் அவனுடைய ஸைன்யங்களையும் அவனோடுகூட வந்தவர்களையும் அவனுடைய பார்யைகளையும் புதிதுபுதிதாயிருக்கும்படி ஸுகமாக வஸிக்கச் செய்தான். எவன் முன்பு அர்ஜுனனோடு கூடிக் காண்டவவனத்தினால் அக்னிக்கு த்ருப்தியை விளைவித்து அவ்வக்னியினின்று மயனை விடுவித்து அவனைக் கொண்டு யுதிஷ்டிரமஹாராஜனுக்கு திவ்யமான ஸபையை ஏற்படுத்திக்கொடுத்தானோ, அத்தகையனான ஜனார்த்தனனை அந்த யுதிஷ்டிரமஹாராஜன் ஆவலுடன் வஸிக்கும்படி செய்துகொண்டு வந்தான். அம்மஹானுபாவன் யுதிஷ்டிரனுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி அர்ஜுனனுடன் ரதத்தில் ஏறிப் படர்களால் சூழப்பட்டு விளையாடிக் கொண்டு அங்குச் சில மாதங்கள் வஸித்திருந்தான். எழுபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீக்ருஷ்ணன் பீமஸேனனைக் கொண்டு ஜராஸந்தனை வதித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஒருகால் ஸபையினிடையில் முனிவர்கள் ப்ராஹ்மண க்ஷத்ரியவைஶ்யர்கள் ப்ராதாக்கள் ஆசார்யர்கள் குலவ்ருத்தர்கள் ஜ்ஞாதிகள் ஸம்பந்திகள் பந்துக்கள் இவர்களால் சூழப்பட்ட யுதிஷ்டிரன் இவர்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கையில் ஸ்ரீக்ருஷ்ணனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:--கோவிந்தனே! ப்ரபூ யாகங்களில்சிறந்த ராஜஸூயயாகத்தினால்பரிசுத்தமான உன் விபூதிகளான தேவதைகளை ஆராதிக்க விரும்புகிறேன். அதை நீ நிறைவேற்றவேண்டும். அசுபங்களைப் போக்கவல்ல உன்பாதுகைகளை எவர்கள் நல்லமன முடையவர்களாகித் தேஹத்தினால் ஸர்வகாலமும் பரிசரிப்பதும் மனத்தினால் த்யானிப்பதும் வாயால் துதிப்பதும் செய்கின்றார்களோ, அவர்கள் மோக்ஷத்தை அடைகின்றார்கள். ப்ரபூ! பத்மநாபனே! அவர்கள் எந்தெந்த மனோரதங்களை விரும்புகிறார்களோ அவற்றையும் பெறுகின்றார்கள். பரிசர்யை முதலியன செய்யாதவர்கள் சக்ரவர்த்திகளாயினும் அவற்றைப் பெற முடியாது. (நீ பக்தர்களிடத்தில் பக்ஷபாத முடையவனாகையால் உன்பாதாரவிந்தங்களைப் பற்றின எங்கள் மனோரதம் எல்லாம் ஸுகமாக நிறைவேறக்கூடுமல்லவா?) தேவர்களுக்கும் தேவனே! ஆகையால் இவ்வுலகம் உன்பாதாரவிந்தங்களைப் பணிதலின் ப்ரபாவத்தைக் காணுமாக. குருக்கள் ஸ்ருஞ்சயர்கள் இவர்களுக்குள் எவர்கள் உன்னைப் பணிகின்றார்களோ, எவர்கள் பணிகிறதில்லையோ, அவ்விருவர்களின்நிலைமையையும் காட்டு

வாயாக. (உன்னைப் பணிகிறவர்கள் க்ஷேமம் பெறுவதையும் பணியாதவர்கள் அதைப் பெறுதொழிவதையும் உலகத்தவர்களுக்கு ப்ரத்யக்ஷமாம்படி காட்டுவாயாக). கெட்ட குணங்கள் எவையுமின்றிக் கல்யாண குணங்கள் நிறைந்திருக்கிற பரப்ரஹ்மரூபனுன உனக்குத் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பேதபுத்தி கிடையாது. நீ ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். (பல சரீரங்களையுடைய ஒருவனுக்குத் தன்சரீரங்களுக்குள் சிலவற்றில் தன்னுடையவையென்னும் நினைவும் சிலவற்றில் பிறனுடையவையென்னும் நினைவும் உண்டாகாதல்லவா? ஜகத்தெல்லாம் உனக்குச் சரீரமாகையால் அதில் சிலவற்றில் ப்ரீதியும் சிலவற்றில் அப்ரீதியும் உண்டாகாது). நீ எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையன்; தனக்கு அஸாதாரணமாயிருப்பதும் அளவற்றதுமாகிய ஆநந்தத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவன். உனக்கு ராகம் த்வேஷம்முதலியவை எவையும் கிடையா. ஆயினும் உன்னைப் பணிகிறவர்களிடத்தில்தான் உனக்கு அனுக்ரஹம். அதிலும் பணிகைக்கு உரியபடிதான் பலன் கொடுப்பாய். கல்பவ்ருக்ஷம் தன்னைப் பணிகிறவர்களுக்குப் பலன் கொடுக்குமேயன்றித் தன்னைப் பணியாதவர்களுக்குப் பலன் கொடுக்காது. இதைப்பற்றி அந்தக் கல்பவ்ருக்ஷத்திற்குப் பக்ஷபாதமென்று சொல்லக்கூடுமோ? அங்ஙனமே நீயும் உன்னைப் பணிகிறவர்களின் மனோரதங்களை நிறைவேற்றுவது பக்ஷபாதமாகாது.

ஸ்ரீபகவான் சொல்லுகிறுன்:—ராஜனே! சத்ருக்களை அழிப்பவனே! நீ நன்றாக நிச்சயித்தனை. மங்களமான உன்புகழ் இதனால் உலகங்கள்முழுவதும் நிரம்பும். ரிஷிகளுக்கும் பித்ருதேவதைகளுக்கும் உனது

நண்பர்களான எங்களுக்கும், ஆயிரம் சொல்லி என்? ஸமஸ்த பூதங்களுக்கும் யாகங்களில் சிறந்த இந்த ராஜஸூயயாகம் இஷ்டமானது. ஸமஸ்த ராஜர்களை யும் ஜயித்து ஜகத்தையெல்லாம் வசப்படுத்திக்கொண்டு ஸம்பாரங்களை யெல்லாம் ஸித்தப்படுத்திப் பெருமை யுடைய இந்த யாகத்தை நடத்துவாயாக. ராஜர்களை எப்படி ஜயிப்பேனென்று சங்கிக்கவேண்டாம். இதோ இருக்கின்ற உன்ப்ராதாக்களாகிய பீமஸேனாதிகள் லோ கபாலர்களான தேவதைகளின் அம்சங்களால் பிறந்த வர்கள். இவர்களால் ஸமஸ்த ராஜர்களையும் அனாயா ஸமாகவே ஜயிக்கக்கூடும். மற்றும், இந்த்ரியங்களை வெல்ல முடியாதவர்களால் வருந்தியும் வெல்லமுடியாத நான் இந்த்ரியங்களை வென்று என்னிடத்தில்பக்தியினால் தாழ்ந்த மனமுடைய உன்னால் வெல்லப்பட்டேன். இனி உனக்கு எதுதான் ஸாதிக்கமுடியாதது? என்னையே முக்யமாகப்பற்றி என்னிடத்தில் நிலை நின்ற மனமுடை யவனை எத்தகைய தேவனாயினும் தேஜஸ்ஸினாலாவது யசஸ்ஸினாலாவது செல்வத்தினாலாவது ஸைன்யம் முத லிய ஸம்ருத்திகளாலாவது இவ்வுலகத்தில் பரிபவிக்க முடியாது. இனி மன்னவர்கள் பரிபவிக்கவல்லரல்ல ரென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—யுதிஷ்டிரன் ஸ்ரீக்ருஷ்ண பகவான் மொழிந்ததைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து முகம் மலரப்பெற்று ஸ்ரீமஹாவிஷ்ணுவின் தேஜஸ்ஸினால் வளர்க்கப்பட்ட பீமஸேனன் முதலிய ப்ராதாக்களைத் திக்விஜயஞ் செய்ய நியமித்தான். அந்த யுதிஷ்டிரன் ஸ்ருஞ்சயர்களோடுகூட ஸஹதேவனைத் தெற்குதிக்கி லும், நகுலனை மேற்குதிக்கிலும், அர்ஜுனனை வடக்கு திக்கிலும், மத்ஸ்யர் கேகயர் மத்ரகர் இவர்களுடன்

பீமஸேனனைக் கிழக்குதிக்கிலும் ஜயித்து வரும்படி நியமித்தான். மன்னவனே! வீரர்களான அந்தப் பீமஸேனுதிகள் தங்கள் தேஜஸ்ஸினால் ராஜர்களையெல்லாம் ஜயித்துத் திசைகளினின்று அபாரமாகப் பணத்தைக் கொண்டு வந்து யாகஞ் செய்யப் போகிற தர்மபுத்ரனிடம் சேர்த்தார்கள். தர்மபுத்ரன் ஜராஸந்தனை ஜயிக்கவில்லையென்று சொல்லக்கேட்டு அதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில் ஸ்ரீக்ருஷ்ணன் அப்பொழுது உத்தவன் சொன்ன உபாயத்தையே அவனுக்கு மொழிந்தான். அப்பால் பீமஸேனன் அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணன் ஆகிய இம்மூவரும் ப்ராஹ்மணவேஷம் பூண்டு இந்த்ரப்ரஸ்தத்தினின்று புறப்பட்டு ஜராஸந்தன் இருக்குமிடமாகிய கிரிவ்ரஜத்திற்குப் போனார்கள். க்ஷத்ரியர்களும் ப்ராஹ்மணவேஷம் பூண்டவர்களுமாகிய அந்தப் பீமஸேனுதிகள் க்ருஹஸ்தாஸ்ரமத்தி லிருந்துகொண்டு அவ்வாஸ்ரமதர்மங்களைக் குறைவற அனுஷ்டிப்பவனும் ப்ராஹ்மணர்களிடத்தில் விஸ்வாஸமுற்று அவர்கள் விரும்பினவற்றையெல்லாம் கொடுப்பவனுமாகிய ஜராஸந்தனிடம் அவன் அதிதிஸத்காரஞ்செய்யும் வேளையில் சென்று இங்ஙனம் யாசித்தார்கள்.

பீமாதிகள் சொல்லுகிறார்கள்:—ராஜனே! நாங்கள் வெகு தூரங்கடந்து வந்த அதிதிகளென்று அறிவாயாக. நாங்கள் உன்னிடத்தில் ஒன்று யாசித்துப் பெறவேண்டுமென்று வந்திருக்கிறோம். உனக்கு க்ஷேமம் உண்டாகுக. நாங்கள் எதை விரும்புகிறோமோ அதை எங்களுக்குக் கொடுப்பாயாக. 'நீங்கள் விரும்பினது கொடுக்கக்கூடாததாயிருக்குமாயின் என் செய்வேன்' என்று சொல்ல வேண்டாம். ஏனென்றால், பொறுக்குந்தன்மையர்களுக்கு எதுதான் பொறுக்க

முடியாதது? எதுவும் இல்லை. துஷ்ட ஸ்வபாவமுடையவர்களுக்கு எதுதான் செய்யத்தகாதது? எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்கும் தன்மையர்களுக்கு எவன் தான் பிறன்? தான சீலர்களுக்கு எதுதான் கொடுக்கத் தகாதது? (பொறுமையுள்ளவர்களுக்குப் பொறுக்க முடியாதது எதுவும் இல்லாதாப் போலவும், துஷ்டர்களுக்குச் செய்யத்தகாத கார்யம் எதுவும் இல்லாதாப் போலவும், ஜகத்தையெல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானிகளுக்கு ப்ரஹ்மஸ்வரூபமல்லாத வஸ்து எதுவும் தோற்றாதாப் போலவும், மிகவும் உதாரகுணமுடையவர்களுக்குக் கொடுக்கக் கூடாதது எதுவுமே இல்லை. தானசீலர்கள் தேஹத்தையுங்கூட யாசகர்களுக்குக் கொடுத்து விடுவார்கள்). எவன், தான் ஸமர்த்தனாயிருந்தும் நிலைநின்றிருப்பதல்லாத சரீரத்தைக் கொண்டு ஸத்புருஷர்களால் பாடத்தகுந்ததும் நிலைநின்றிருப்பதுமாகிய புகழை விளைத்துக்கொள்ளாதிருப்பானோ, அவன் நிந்திக்கத்தகுந்தவன்; மற்றும், 'இவன் என்ன தௌர்ப்பாக்யமுடையவனோ?" என்று மன இரக்கமுடையவர்களால் சோகிக்கத் தகுந்தவன். நிலையற்ற சரீரத்தினால் நிலைநின்ற புகழைச் சம்பாதித்தவர்கள் உண்டோ என்றால் சொல்லுகிறோம், கேள். ஹரிச்சந்த்ரன் விஸ்வாமித்ரருடைய கடனைத் தீர்க்கும் பொருட்டுப் பிள்ளை பெண்டிர் முதலியவற்றையும் விற்றுத் தான் சண்டாளத் தன்மையை அடைந்தும் மன வெறுப்பற்றிருந்து கடைசியில் அயோத்யையிலுள்ள ஜனங்களுடன் ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தான். ரந்திதேவன் தன் குடும்பத்துடன் நாற்பத்தெட்டு நாள்கள் சோறு தண்ணீர் இவை கிடைக்கப்பெறாதிருந்து, கடைசியில் கிடைத்ததையும் அதிதிகளுக்குக் கொடுத்

து ப்ரஹ்மலோகம் அடைந்தான். உஞ்சவ்ருத்திபண்ணிக்கொண்டிருந்த முத்கலன் ஆறுமாதங்கள் குடும்பத்துடன் வருத்தமுற்றிருந்தும் கடைசியில் அதிதிஸத்காரஞ் செய்து ப்ரஹ்மலோகம் அடைந்தான். சிபிசக்ரவர்த்தி தன்னைச் சரணம் அடைந்த புறாவைக் காக்கும்பொருட்டுத் தன்மாம்ஸத்தைப் பருந்துக்குக் கொடுத்து ஸ்வர்க்கலோகம் அடைந்தான். பலிசக்ரவர்த்தி ப்ராஹ்மணவேஷம் பூண்டுவந்த விஷ்ணுவுக்குத் தன்ஸொத்தையெல்லாம் கொடுத்து அவனையே தன் வசஞ்செய்து கொண்டான். புறா அதிதியாக வந்த வேடனுக்குத் தன்பேடையுடன் மாம்ஸத்தைக் கொடுத்து விமானத்தின்மேல் ஏறி ஸ்வர்க்கலோகஞ் சென்றது. வேடன் அந்தப் புறாக்களின் கதியைக் கண்டு தான் மிகவும் மனவெறுப்புற்று மஹாப்ரஸ்தானஞ் செய்து காட்டுத் தீயில் அகப்பட்டுத் தேஹம் எரியுண்டு பாபங்கள் தீர்ந்து ஸ்வர்க்கம் அடைந்தான். இங்ஙனம் மற்றும் பல மஹானுபாவர்களும் நிலையற்ற சரீரத்தினால் நிலைநின்ற புகழைச் சம்பாதித்தார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஜராஸந்தன் குரல்களாலும் ஆகாரங்களாலும் நாணுறைந்த புஜங்களாலும் அந்த யாசகர்களை க்ஷத்ரியர்களென்றும் த்ரௌபதீ ஸ்வயம்வராதிகளில் முன்பு நாம் இவர்களைப் பார்த்திருக்கிறோமென்றும் தெரிந்துகொண்டு 'இவர்கள் க்ஷத்ரியர்கள்; ப்ராஹ்மணவேஷங்களைத் தரித்திருக்கிறார்கள். இவர்கள் துறக்கமுடியாத தேஹத்தை யாசிப்பார்களாயினும் கொடுத்து விடுகிறேன். ஸ்ரீமஹாவிஷ்ணு கபடத்தினால் ப்ராஹ்மணவேஷம் பூண்டு பலிசக்ரவர்த்தியிடம் வந்து மூன்றடிகள் வேண்டி வளர்ந்து உலகங்களையெல்லாம் அளந்து பெற்றுக்கொண்டு

அவனை மஹத்தான ஐஸ்வர்யத்தினின்று நழுவச் செய்தான். ஆயினும் அவனுடைய புகழ் நிர்மலமாகித் திசைகளெல்லாம் நிரம்பிச் செவிப்படவில்லையா என்ன? ஸ்ரீமஹாவிஷ்ணு இந்த்ரனுக்கு த்ரிலோகராஜ்யமாகிற ஐஸ்வர்யத்தை வாங்கிக் கொடுக்க விரும்பி ப்ராஹ்மண வேஷம் பூண்டு வந்து யாசிக்கையில் தைத்யராஜனாகிய பலி அக்கபடத்தை அறிந்தும் சுக்ராசார்யனால் தடுக்கப்பட்டும் அவனுக்குப் பூமியைக் கொடுத்தான். அழியுந்தன்மையுடைய க்ஷத்ரியதேஹம் ப்ராஹ்மணனுக்காக நிர்மலமான பெரும்புகழை விளைக்காது போமாயின், அத்தேஹம் ஜீவித்திருப்பதனால் என்ன ப்ரயோஜனம்?" என்று கம்பீரமான மதியுடைய அந்த ஜராஸந்தன் தனக்குள் சிந்தித்து நிச்சயித்துக் கொண்டு க்ருஷ்ணன் அர்ஜுனன் பீமஸேனன் இவர்களைப் பார்த்து 'ஓ அந்தணர்களே! உங்களுக்கு இஷ்டமான மனோரதத்தை வரிப்பீர்களாக. உங்களுக்கு என் தலையையாயினும் கொடுக்கின்றேன்' என்றான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ராஜஸ்ரேஷ்டனே! உனக்கு இஷ்டமாயிருக்குமாயின் எங்களுக்கு இரட்டையிரட்டையாக யுத்தங் கொடுப்பாயாக. (த்வந்த்வ யுத்தம் கொடுப்பாயாக). நாங்கள் யுத்தத்தை விரும்பிவந்த க்ஷத்ரியர்கள்; அன்னத்தை விரும்பிவந்த ப்ராஹ்மணர்களல்லோம். இவன் ப்ருதையின் புதல்வனாகிய பீமஸேனன். இவன் அவனுடைய ப்ராதாவான அர்ஜுனன். நான் இவர்களுக்கு அம்மான்பிள்ளையும் உன் சத்ருவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனென்று தெரிந்துகொள்வாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனால் அறிவிக்கப்பட்ட அந்த மாகதமன்னவன் உரக்கச்

சிரித்துக் கோபாவேசமுற்று 'அறிவில்லாத மூடனே! யுத்தம் விரும்புகிறீர்களா! ஆனால் உங்களுக்கு அப்படியே யுத்தங் கொடுக்கிறேன். நீ யுத்தத்தில் தைர்யமற்ற மனமுடையவன். ஆகையால் பயப்படுந்தன்மையனை உன்னோடு நான் யுத்தஞ் செய்யமாட்டேன். நீ உன் ஸொந்த பட்டணமாகிய மதுரையை விட்டு ஸமுத்ரத்தைச் சரணம் அடைந்தனையல்லவா ? இவ்வர்ஜுனனோ வென்றால் வயதில் எனக்கு ஒத்தவனல்லன். அதிகபலமுடையவனுமல்லன். ஆகையால் இவன் என்னோடு யுத்தஞ் செய்யத்தகுந்தவனல்லன். பீமஸேனனோ வென்றால் என்னோடொத்த பலமுடையவன். ஆகையால் அவனோடுமாத்ரமே யுத்தஞ் செய்வேன்' என்று மொழிந்து பீமஸேனன்கையில் பெரிய ஒரு கதையைக் கொடுத்துத் தானும் மற்றொரு கதையை எடுத்துக்கொண்டு பட்டணத்தினின்று வெளிப்புறப்பட்டான். வீரர்களும் யுத்தத்தில் கொடிய மதமுடையவர்களுமாகிய பீமஸேனன் ஜராஸந்தன் இவ்விருவர்களும் மேடுபள்ளமில்லாத இடத்தில் ஒன்று சேர்ந்து யுத்தஸங்நாஹஞ் செய்து கொண்டு வஜ்ராயுதம்போன்ற கதைகளால் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டார்கள். வலமாகவும் இடமாகவும் விசித்ரமான மண்டலகதிகளைச் செய்கின்ற அவ்வீரர்களின் யுத்தம் ரங்கத்தை அடைந்த யானைகளின் யுத்தம்போன்றிருந்தது. அப்பால் கதைகள் ஒன்றோடொன்று உறைவதனாலுண்டான சடசடவென்னும் சப்தம் வஜ்ரகோஷம்போன்று யானைகளின் தந்தங்கள் ஒன்றோடொன்று உறைவதனாலுண்டாகும் சப்தத்தை நிகர்த்திருந்தது. கோபமாகிற அக்னி ஜ்வலிக்கப்பெற்று யானைகள்போல் சண்டை செய்கின்ற அவ்வீரர்கள் புஜபலத்தினால் ஒருவர்

மேலோருவர் வீசியறைகின்ற அக்கதைகள் ஒருவர்க் கொருவருடைய தோள் இடை பாதம் கை துடை கழுத்தடி இவ்விடங்களை அடைந்து எருக்கன்கிளை கள்போல முறிந்து சூர்ணமாயின. இங்ஙனம் கோப முற்று ஒருவரை யொருவர் அடிக்கின்ற மனுஷ்ய வீரர் களான அந்தப் பீமஸேன ஜராஸந்தர்கள் இரும்பு போல் உறுதியாயிருக்கின்ற முட்டிகளில் கதைகளைச் சூர்ணஞ் செய்தார்கள். கைகளால் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு யுத்தஞ் செய்கின்ற அவ்வீரர் களின் உள்ளங் கையடியினாலுண்டான சப்தம் வஜ்ர கோஷம்போல் கடோரமாயிருந்தது. மன்னவனே! அப்யாஸம் பலம் ப்ரபாவம் இவையெல்லாம் ஸமமா யிருக்கப்பெற்ற அவ்வீரர்களிருவரும் பலம் குறையாமல் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டிருக்கையில் அந்த யுத்தம் 'இன்னவன் ஜயிப்பான். இன்னவன் தோற் பான்' என்று ஒரு விசேஷமும் நிச்சயிக்க முடியா திருந்தது. சத்ருவாகிய ஜராஸந்தன் இரண்டு துண் டங்களாகப் பிறந்ததையும் ஜரை யென்னும் பிசாசத் தினால் ஒன்று சேர்க்கப்பட்டு ஜீவித்ததையும் மீளவும் இரண்டு துண்டங்களாகக் கிழித்துப் பொகட்டால் தான் அவன் மரணம் அடைவானென்பதையும் அறிந்த ஸ்ரீக்ருஷ்ணன் பீமஸேனனைத் தன் தேஜஸ்ஸினால் உத் ஸாஹமுற்று வளரும்படி செய்துகொண்டு இவனை வதிக்கவேண்டும் உபாயத்தைப் பீமனுக்கு எப்படி தெரிவிக்கலாமென்று சிந்தித்தான். அப்பால் வீணாகாத அறிவுடைய அப்பகவான் இங்ஙனம் தெரிவிக்கலா மென்று சிந்தித்து நிச்சயித்துக்கொண்டு ஒருகிளையை ஒடித்து அதைத் தான் வெறுமனே பிளக்கிறவன்போல் இருபிளவாகப் பிளந்து 'நான் இந்தக்கிளையைப் பிளப்

பதுபோல நீயும் இவனை இரண்டு துண்டங்களாகக் கிழித்துப் போகடுவாயாக' என்று பீமனுக்கு ஸங்கேதஞ்செய்து காட்டிச் சத்ருவை வதிக்கும் உபாயத்தை அவனுக்குக் தெரிவித்தான். மிகுந்த பலமுடையவனும் யுத்தஞ் செய்பவர்களில் சிறந்தவனுமாகிய அப்பீமஸேனன் அந்த ஸங்கேதத்தை அறிந்துகொண்டு சத்ருவைப் பாதங்களில் பிடித்துக்கொண்டு பூமியில் விழத் தள்ளி அவனுடைய ஒற்றைக்காலைத் தன்காலால் மிதித்துககொண்டு மற்றொரு காலைத் தன்கைகளால் பிடித்துக்கொண்டு பெருயானை கிளையை முறிப்பது போல் மலத்வாரம் துடங்கி அவனை இரண்டு துண்டங்களாகக் கிழித்துப் போகட்டான். அப்பொழுது ஜனங்கள் ஒற்றைக்காலும் ஒற்றை வ்ருஷணமும் ஒற்றை இடையும் ஒற்றை முதுகும் ஒற்றை ஸ்தனமும் ஒற்றைத்தோளும் ஒற்றைக்கையும் ஒற்றைக் கண்ணும் ஒற்றைப்புருவமும் ஒற்றைக்காதுமுடைய இரண்டு துண்டங்களைக் கண்டார்கள். இங்ஙனம் மகதராஜன் மாளுகையில் பெரிய ஹாஹாகாரம் உண்டாயிற்று. அர்ஜுனனும் ஸ்ரீக்ருஷ்ணனும் பீமஸேனனை அணைத்துக் கொண்டு அவனைப் பூஜித்தார்கள. பீமஸேனன் ஸ்ரீக்ருஷ்ணனால் அணைக்கப் பெற்று உடம்புநோயெல்லாம் தீர்ந்து ஸுகமுற்றான். ப்ராணிகளுக்கு நன்மை செய்யுந் தன்மையனும் அளவிடமுடியாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையவனும் மஹானுபாவனும் ப்ரபுவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ஜராஸந்தனுடைய பிள்ளையாகிய ஸஹதேவனை மகததேசங்களுக்குப் பதியாக ஏற்படுத்தினான். ஜராஸந்தனால் சிறையில் அடைக்கப்பட்ட மன்னவர்களையும் அதினின்று விடுவித்தான். எழுபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.



2680 ஜராஸந்த வதம்.

ராஜர்கள் ஸ்ரீக்ருஷ்ணனைத் துதித்தலும், ஸ்ரீக்ருஷ்ணன் அவர்களை அனுக்ரஹித்து பீமார்ஜுனர்களுடன் இந்த்ரப்ரஸ்தம் சேர்ந்து தர்மபுத்ரனைக் காணுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இருபதினாயிரத்து எண்ணூறு ராஜர்கள் ஜராஸந்தனால் யுத்தத்தில் அவலீலையாக ஜயிக்கப்பட்டு மலைச்சாரலில் அடைப்புண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்னானம் முதலிய ஸம்ஸ்காரங்களில்லாமையால் உடம்பெல்லாம் அழுக்கடைந்து அழுக்குத் துணியை உடுத்துப் பசியினால் இளைத்து முகம் உலர்ந்து அடைப்புண்டிருந்தமையால் வருத்தமுற்றிருந்தார்கள். அம்மன்னவர்கள் அந்தமலைச்சாரலினின்று வெளிவந்து, மேகம்போல் கறுத்துப் பொன்னிறமான பட்டுவஸ்த்ரம் தரித்து ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளமும் நான்கு புஜங்களும் தாமரையிதழ்போன்ற கண்களும் தெளிந்த அழகிய முகமும் திகழ்கின்ற மகரகுண்டலங்களும் கையில் தாமரைமலரும் கதை சங்கம் சக்ரம் இவைகளும் அமைந்து கிரீடம் ஹாரம் கைவளை அரைநாண்மாலை தோள்வளை இவைகளை அணிந்து கழுத்தில் ரத்னங்களில் சிறந்த கௌஸ்துபமணி விளங்கப்பெற்று வனமாலையைத் தரித்துத் திகழ்கின்ற ஸ்ரீ க்ருஷ்ணனைக் கண்டார்கள். அவர்கள், அவனைக் கண்களால் பானஞ் செய்பவர்கள்போலவும் நாக்கால் நக்குபவர்கள்போலவும் மூக்கினால் மோருகிறவர்கள்போலவும் புஜங்களால் அணைப்பவர்கள்போலவும் கண்டு பாபங்கள் தொலையப் பெற்றுத் தலைகளால் அவனுடைய பாதங்களில் விழுந்து வணங்கினார்கள். அம்மன்னவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்ட ஆநந்தத்தினால் சிறையிலிருந்த வருத்தங்களெல்லாம் தீர்ந்து கைகளைக் குவித்துக் கொண்டு அழகிய உரைகளால் அவ்விருடீகேசனைத் துதித்தார்கள்

ராஜர்கள் சொல்லுகிறார்கள்:—தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய ப்ரஹ்மதேவனுக்கும் நியாமகனே! உன்னையே சரணம் அடைந்தவர்களின் வருத்தங்களைப் போக்கும் தன்மையனே! விகாரங்களற்றவனே! பக்தர்களுக்கு ஸுகத்தை விளைக்கும்பொருட்டு அவதரித்து ஸ்ரீக்ருஷ்ணனென்னும் பெயர் பூண்டிருப்பவனே! பயங்கரமான ஸம்ஸாரத்தினின்று வெறுப்புற்று உன்னையே சரணம் அடைந்திருக்கின்ற எங்களைக் காப்பாயாக. நாதனே! மதுஸூதனா! இந்த மாகதன் நம்மைச் சிறையில் அடைத்தானே யென்று நாங்கள் அவன்மேல் தோஷத்தை நினைக்கவில்லை. குணங்களையே நினைக்கின்றோம். ஏனென்றால், ப்ரபூ! நீ ராஜர்களான எங்களை ராஜ்யத்தினின்று நழுவச் செய்து அனுக்ரஹித்தனை. (ஜராஸந்தன்மூலமாய் நீ எங்களை அனுக்ரஹித்தனை யென்றே நாங்கள் நினைத்திருக்கின்றோம்). ராஜ்யங் கைசோரப்பெறுதல் எங்ஙனம் அனுக்ரஹமாகு மென்றால், மன்னவன் ராஜ்யத்தினாலும் ஐம்வர்யத்தினாலும் மதித்துத் தடையின்றி நினைத்த வழியெல்லாம் நடக்கத் தொடங்கி நன்மையைப் பெறுகிறதில்லை; உன்மாயையினால் மதிமயங்கி நிலையற்ற செல்வங்களை நிலைநின்றவை யென்று நினைக்கின்றான். தெரியாத மூடர்கள் கானலைக் கண்டு ஜலாதாரமென்று ப்ரமிப்பதுபோல இந்த்ரியங்களை அடக்கமுடியாத மந்தர்கள் சப்தாதிவிஷயங்களாகிற உன்மாயையைச் சாம்வதமென்று ப்ரமிக்கின்றார்கள். நாங்கள் முன்பு ஐம்வர்யமதத்தினால் விவேகமற்று இந்தப் பூமியையெல்லாம் ஜயித்துப் பெறவேண்டு மென்று ஒருவர்மேலொருவர் பொறாமையுற்றுச் சிறிதும் மனஇரக்கமின்றித் தம்ப்ரஜைகளை ஹிம்ஸித்துக் கொண்டு எதிரேயிருக்கிற ம்ருத்யுவை நினையாமல் கொடிய மதமு

டையவர்களாயிருந்தோம். ஸ்ரீக்ருஷ்ணா! அத்தகைய நாங்கள் இப்பொழுது மிகுந்த வேகமுடையதும் அளவற்றவீர்யமுடையதும் உனக்குச் சரீரமுமாகிய காலத்தினால் ஐஸ்வர்யமெல்லாம் நழுவும்படி செய்யப்பெற்று உன் கருணையினால் கொழுப்படங்கி உன்பாதாரவிந்தங்களை வணங்கி உன்னையே சரணம் அடைந்தோம். இங்ஙனம் ராஜ்யம் இருந்தால் கெடுதியும் அது இல்லாது நீங்கினால் நன்மையும் விளைகின்றனவாகையால் ஸர்வ காலமும் ரோகங்களுக்கிடமாயிருப்பதும் அழியப்போகிறதுமாகிய தேஹத்தினால் கானலோடொத்த ராஜ்யத்தை உபாஸிக்கலாகாது. ப்ரபூ! காதுகளுக்கு மாத்ரமே ப்ரீதியை விளைப்பதும் (இதினின்று எப்பொழுது விழுந்து விடுவோமோ வென்னும் பயத்திற்கிடமாயிருக்குமாகையால் துக்கம் தொடர்ந்திருப்பதும்) சரீரத்தைத் துறந்து லோகாந்தரம் சென்று அனுபவிக்கத்தக்கதும் யஜ்ஞாதிகர்மங்களின் பலனுமாகிய ஸ்வர்க்காதி ஸுகத்தையும் நாங்கள் விரும்பவில்லை. ஆகையால் நாங்கள் இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் ஸம்ஸரித்துக் கொண்டிருப்பினும் எங்களுக்கு எந்த உபாயத்தினால் உன்பாதாரவிந்தங்களில் நினைவு மாறுதிருக்குமோ அத்தகைய உபாயத்தை எங்களுக்கு அனுக்ரஹிப்பாயாக. பக்தர்களுக்கு ஸுகத்தை விளைப்பவனாகையால் ஸ்ரீ க்ருஷ்ணனென்றும், வஸுதேவகுமாரனாயிருக்கை ஸமஸ்தஜகத்திலும் தான் அமைந்து ஸமஸ்த ஜகத்திற்கும் தான் ஆதாரமுமாகி அதன் தோஷங்கள் எவையும் தன்மேல் தீண்டப்பெறாமல் திகழ்கை- ஆகிய இக்காரணங்களால் வாஸுதேவனென்றும் பெயர்களைப் பெற்றவனும் தன் பக்தர்களின் ஸம்ஸார பந்தத்தைப் போக்குந்தன்மையனும் பரமாத்மனும் வணங்

கினவர்களின் வருத்தங்களைத் தீர்ப்பவனும் கோவிந்தா பிஷேகம் செய்யப் பெற்றவனுமாகிய உனக்கு அடிக்கடி நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனும் மன இரக்கமுடையவனும் காக்கவல்லவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஜராஸந்தனுடைய சிறையினின்று விடு பட்ட மன்னவர்களால் இங்ஙனம் துதிசெய்யப்பெற்று ம்ருதுவான மொழியுடன் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ மன்னவர்களே! நீங்கள் ஆசைப்பட்டபடியே உங்களுக்கு ஸர்வாந்தராத் மாவும் ஸர்வேஶ்வரனுமாகிய என்னிடத்தில் இன்று முதல் திடமான பக்தி உண்டாகும். மன்னவர்களே! நீங் கள் நன்றாக நிச்சயித்தீர்கள். இது எனக்கு ஆநந்தமா யிருக்கின்றது. நீங்கள் சொல்லுவதெல்லாம் உண்மையே. செல்வத்தினாலும் ஐஶ்வர்யத்தினாலும் உண்டாகும் மதம் தலையெடுத்திருக்குமாயின் அது மதிமயக்கத்தை விளை த்துக் கெடுத்து விடுமென்றே நானும் நினைக்கின்றேன். கார்த்தவீர்யார்ஜுனன் நஹுஷன் வேனன் ராவணன் நரகன் மற்றும் பல தேவர்களும் அஸுரர்களும் சக்ர வர்த்திகளும் செல்வக்கொழுப்பினால் தத்தம் பதவியி னின்று நழுவும்படி செய்யப்பட்டார்கள். ஆகையால் நீங்கள் பிறவியுள்ள தேஹம் முதலியவை யெல்லாம் நஶ்வரங்களென்று தெரிந்து மனவூக்கத்துடன் யஜ்ஞங் களால் என்னை ஆராதித்துக்கொண்டு தர்மம் தவறா மல் ப்ரஜைகளைப் பாதுகாத்து வருவீர்களாக. பிள்ளை பேரன் முதலிய ஸந்ததிகளை வளரச் செய்துகொண்டு ஸுகதுக்கங்களையும் ஜன்மமரணங்களையும் அவ்வவை நேரும்பொழுது ஸமமாகவே அனுபவித்துக்கொண்டு என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களாகிக்

காலத்தைக் கழிப்பீர்களாக. தேஹத்திலும் தேஹத்தைத்தொடர்ந்த வீடு முதலியவற்றிலும் அஹங்காரமமகாரங்களின்றி ஆத்மபரமாத்மாக்களின் உண்மையை ஆராய்வதில் ஊக்கமுற்று என்னிடத்தில் நன்றாக மனத்தை நிலைநிறுத்தி ப்ராரப்தகர்மாவஸானத்தில் பரப்ரஹ்மமாகிய என்னைப் பெறுவீர்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஷாட்குண்யபூர்ணனும் ஜகதீஶ்வரனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அம்மன்னவர்களுக்கு இங்ஙனம் கட்டளை அளித்து அவர்களுக்கு ஸ்னானஞ் செய்விக்கும்படி புருஷர்களையும் ஸ்த்ரீகளையும் நியமித்தான். அப்பரமன் மன்னவர்களுக்குரிய ஆடையாபரணங்களாலும் புஷ்ப சந்தனாதிகளாலும் ஸஹதேவனைக் கொண்டு அம்மன்னவர்களுக்குப் பூஜை செய்வித்தான். நன்றாக ஸ்னானஞ் செய்து நன்கு அலங்கரித்துக்கொண்டிருக்கின்ற அம்மன்னவர்களுக்குச் சிறந்த அன்னம் அளித்துப் புசிப்பித்து மன்னவர்கட்குரிய தாம்பூலம் முதலிய பலவகைப் போகங்களையும் நடப்பித்தான். அம்மன்னவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனால் வருத்தத்தினின்று விடுவித்துப் பூஜிக்கப்பட்டுத் திகழ்கின்ற குண்டலங்களுடையவர்களாகிச் சரத்ருதுவில் சந்த்ராதிக்ரஹங்கள் விளங்குவது போல விளங்கினார்கள். அப்பகவான் அம்மன்னவர்களை ரத்னங்களாலும் ஸ்வர்ணத்தினாலும் அலங்கரிக்கப்பட்டுச் சிறந்த குதிரைகள் கட்டப்பெற்றவைகளுமான ரதங்களில் ஏற்றி உண்மையும் ப்ரியமுமான உரைகளால் ஸந்தோஷப்படுத்தித் தத்தம் தேசங்களுக்கு அனுப்பினான். அம்மன்னவர்கள் இங்ஙனம் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் வருத்தத்தினின்று விடுவிக்கப்பட்டு அவனையும் ஜகதீஶ்வரனான அவனுடைய சரித்ரங்

களையுமே த்யானித்துக்கொண்டு சென்றார்கள். அவர்கள் தத்தம் தேசங்களுக்குச் சென்று தங்கள் மந்த்ரி முதலியவர்களுக்கு மஹாபுருஷனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய செயலைச் சொன்னார்கள்; மற்றும், அவன் எப்படி நியமித்தானோ அப்படியே சோம்பலின்றி அனுஷ்டித்துக்கொண்டு வந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனோவென்றால், பீமஸேனனைக் கொண்டு ஜராஸந்தனைக் கொல்வித்து ஸஹதேவனால் பூஜிக்கப்பட்டு பீமார்ஜுனர்களுடன் புறப்பட்டுப் போனான். சத்ருவை வென்ற அம்மூவரும் இந்த்ரப்ரஸ்தம் சேர்ந்து தங்கள் நண்பர்களுக்கு ஸந்தோஷத்தையும் சத்ருக்களுக்கு மனவருத்தத்தையும் விளைத்துக்கொண்டு சங்கநாதங்களைச் செய்தார்கள். இந்த்ரப்ரஸ்தத்திலுள்ளவர்கள் அனைவரும் அச்சங்கநாதத்தைக் கேட்டு மனக்களிப்புற்று மாகதன் முடிந்தானென்று நினைத்துக்கொண்டார்கள். யுதிஷ்டிரமன்னவனும் தன்மனோரதம் கைகூடப்பெற்றான். அப்பால் பீமஸேனன் அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணன் ஆகிய இம்மூவரும் ராஜனாகிய யுதிஷ்டிரனுக்கு நமஸ்காரஞ் செய்து தாங்கள் செய்ததையெல்லாம் அவனுக்குச் சொன்னார்கள். தர்மபுத்ரனோவென்றால் அதையெல்லாம் கேட்டு ஸ்ரீக்ருஷ்ணனால் அருள் புரியப்பெற்று ஆநந்தத்தினால் கண்ணீர்த்துளிகளைப் பெருக்கிக்கொண்டு ப்ரீதியின் மிகுதியால் ஒன்றும் பேசமுடியாதிருந்தான்.

எழுபத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ராஜஸூய யாகமும், சிசுபாலவதமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! யுதிஷ்டிர மன்னவன் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் பீமஸேனனைக் கொண்டு நடத்தின ஜராஸந்தவதத்தையும் அவனு

டைய அத்தகைய வைபவத்தையும் கேட்டு ஸந்தோஷம் அடைந்து அவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—மூன்று லோகங்களுக்கும் குருக்களான ஸனகாதிகளும் உலகத்திலுள்ள ஸமஸ்த ஜனங்களும் அந்த ஜனங்களுக்கு ப்ரபுக்களான மற்றவர்களும் கிடைக்க அரிதான உன்கட்டளையைப் பெற்று 'நமக்கு இது பாக்யத்தினால் கிடைத்தது' என்னும் பஹுமானத்துடன் அதைச்சிரஸ்ஸினால் தரிக்கின்றார்கள். தாமரைக் கண்ணனே! அளவற்ற மஹிமையுடையவனே! அப்படிப்பட்ட நீ தங்களை ஸ்வதந்த்ரப்ரபுக்களாக நினைத்துக்கொண்டிருக்கிற ஜனங்களின் கட்டளையைத் தலையால் தாங்கி நடத்துகின்றனையென்பது மனுஷ்யசேஷ்டையை அபிநயஞ் செய்வது மாத்ரமேயன்றி வேறன்று. இல்லாத பக்ஷத்தில் ஸர்வநியாமகனும் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைக் கேவல ஸங்கல்பத்தினால் நடத்துகிறவனுமாகிய உனக்கு ப்ராக்ருதமான விஜயம்முதலிய செயல்களை நேரே நடத்துவது எங்ஙனம் பொருந்தும்.? நாமரூபங்களுக் கிடமல்லாத சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடையவனாகி ஜகத்திற்கு உபாதானகாரணமாயிருப்பவனும் இணையெதிரின்றித் தானே நிமித்த காரணமாயிருப்பவனும் அதற்கு வேண்டிய ஜ்ஞானம் சக்திமுதலிய கல்யாணகுணங்களால் மேன்மையுடையவனும் நித்யவிபூதியென்கிற பரமபதத்தில் வஸிப்பவனும் பரமாத்மனுமாகிய உனக்கு, ப்ராக்ருதமான சத்ருஜயம் முதலிய கர்மங்களால் ப்ரபாவம் வளர்வதுமில்லை; அவற்றைச் செய்யாமையால் உன்ப்ரபாவம் குறைவதுமில்லை. ஸூர்யனுடைய தேஜஸ்ஸு உதயத்தினால் வளர்வதும் அஸ்தமயத்தி

ளுல் குறைவதும் உண்டோ? அங்ஙனமே உனக்கும் இச்செயல்களால் ஒரு மேன்மையாவது இவை இல்லாமையால் ஒரு தாழ்வாவது கிடையாது. ஆயினும் மானிடர்களை அனுஸரித்து நீ இங்ஙனம் நடக்கின்றனை. மாதவனே! ஒருவராலும் வெல்லமுடியாதவனே! ஆஹாரம் நித்ரை பயம் மைதுனம் இவற்றையொழிய மற்றொன்றையும் அறியாத பசுக்களைப்போன்ற தேஹாத்மாபிமானிகளுக்கு நானென்றும் என்னுடையதென்றும் நீயென்றும் உன்னுடையதென்றும் விபரீதபுத்திகள் உண்டாவதுபோல உன்பக்தர்களுக்கு உண்டாகிறதில்லை. அவர்களுக்கு அவ்விபரீதபுத்தியால் வரும் குறைவு நிறைவுகள் எங்கிருந்து வரப்போகின்றன? இனி உனக்கு அவ்விபரீதபுத்தியும் அதனால் வரும் குறைவு நிறைவுகளும் கிடையாவென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த யுதிஷ்டிர மன்னவன் இங்ஙனம் மொழிந்து யாகத்திற்குரியகாலம் நேரப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனால் அபிநந்திக்கப்பட்டுப் பிறவி முதலியவற்றால் மேன்மையுற்றவர்களும் வேதங்களை ஓதியுணர்ந்தவர்களுமாகிய த்வைபாயனர் பரத்வாஜர் ஸுமந்து கௌதமர் அஸிதர் வஸிஷ்டர் ச்யவனர் கண்வர் மைத்ரேயர் கவஷர் த்ரிதர் விஸ்வாமித்ரர் வாமதேவர் ஸுமதி ஜைமினி க்ரது பைலர் பராசரர் அகஸ்த்யர் வைசம்பாயனர் அதர்வர் கஸ்யபர் தௌம்யர் பரசுராமர் ஆஸுரி வீதிஹோத்ரர் மதுச்சந்தர் வீரஸேனர் அக்ருதவ்ரணர் இவ்வந்தணர்களை ருத்விக்குக்களாக வரித்தான். மற்றும், பீஷ்மர் த்ரோணர் க்ருபர் முதலியவர்களையும் த்ருதராஷ்டரனையும் அவன் பிள்ளைகளையும் மிகுந்த மதியுடைய விதுரனையும் அழைத்தான். மன்னவ

னே! ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் வைஶ்யர்களும் சூத்ரர்களும் ஸமஸ்த ராஜர்களும் மந்த்ரி முதலிய ராஜர்களின் பரிகரங்களும் அம்மன்னவனால் அழைக்கப்பெற்று யாகத்தைப் பார்க்க வந்தார்கள். அனந்தரம் ருத்விக்குக்களாக வரிக்கப்பட்ட தவைபாயனர் முதலிய அவ்வந்தணர்கள் யாகபூமியை ஸ்வர்ணமயமான கலப்பையினால் உழுது சுத்திசெய்து யுதிஷ்டிரனை த்தீக்ஷிப்பித்தார்கள். முன்பு வருணனுடைய யஜ்ஞத்தில் ஸ்ருக்கு ஸ்ருவம் முதலிய உபகரணங்களெல்லாம் ஸ்வர்ணமயமாயிருந்தாற்போல் அம்மன்னவனுடைய யஜ்ஞத்திலும் உபகரணங்களெல்லாம் ஸ்வர்ணமயமாயிருந்தன. ப்ராஹ்மருத்ரர்களோடுகூடின லோகபாலர்கள் தத்தம் கூட்டங்களோடு கூடின ஸித்தர்கள் கந்தர்வர்கள் வித்யாதரர்கள் பெருமையுடைய உரகர்கள் முனிவர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் பதகர்கள் கின்னரர்கள் சாரணர்கள் அழைக்கப்பெற்ற ராஜர்கள் ராஜபத்னிகள் ஆகிய அனைவரும் அந்த யாகத்திற்கு வந்தார்கள். எல்லாரும் ஸ்ரீக்ருஷ்ணபக்தனும் பாண்டுவின் புதல்வனுமாகிய அந்த யுதிஷ்டிர மன்னவனுடைய ராஜஸூய யாகத்தைக் கண்டு சிறிதும் வியப்பின்றி 'இவனுக்கு இது மிகவும் தகுந்தது' என்று நினைத்தார்கள். தேவதைகள் வருணனைக் கொண்டு யாகஞ்செய்வித்தாற்போலத் தேவதைகளோடொத்த ஒளியுடைய அந்த ருத்விக்குக்கள் யுதிஷ்டிர மஹாராஜனைக் கொண்டு ராஜஸூய யாகம் செய்வித்தார்கள். ஸோமலதையை அபிஷவஞ்செய்யுந் தினத்தினன்று யுதிஷ்டிரமன்னவன் மஹானுபாவர்களான ருத்விக்குக்களையும் அத்தகைய ஸபிகர்களையும் மிகவும் சிறந்த பூஜைகளால் பூஜிக்கத் தொடங்கினான். அம்மன்னவன் ஸபையில் முதலில் பூஜிக்கத் தகுந்தவன்

எவனென்று ஆராய்ந்து பலரும் உரியவர்களாயிருந்த மையால் இன்னவனைத்தான் முதலில் பூஜிக்கவேண்டு மென்கிற நிச்சயம் தோற்றப்பெருதிருந்தான். அப் பொழுது ஸஹதேவன் எழுந்து மொழிந்தான்.

ஸஹதேவன் சொல்லுகிறுன்:—தன்னைப் பற்றின வர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந்தன்மையனை இவ்வச்சுதன்தான் முதலில் பூஜிப்பதற்குரிய மேன்மை யுடையவன். இவன் ஷாட்குண்ய பூர்ணன்; ப்ரஹ்ம வித்துக்களென்று ப்ரஸித்தர்களான த்வைபாயனுதி மஹர்ஷிகளுக்கும் இவனே ப்ரபு. ஸமஸ்த தேவதை களும் இவனே. யாகத்திற்குரிய தேசம் காலம் தனம் முதலியவைகளும் இவனே. இந்த ப்ரபஞ்ச மெல்லாம் இவனே. யாகங்களும் இவனே. அக்னி ஆஹுதிகள் மந்த்ரங்கள் ஆத்மாவின் உண்மையை ஆராய்கையா கிற ஸாங்க்யம் பரமாத்மோபாஸனமாகிற யோகம் இவை யெல்லாவற்றிற்கும் இவனே நிர்வாஹகன். இந்த ப்ரபஞ்ச மெல்லாம் இவனையே அந்தராத்மாவாகவுடை யது. ஸ்ருஷ்டிக்கு முன்பு நாம ரூபங்களுக்கிடமல் லாத சேதனு சேதனங்களைச் சரீரமாகக் கொண்டு இவ னொருவனே இருந்தான். இவனுக்கு இணையாவது எதிராவது கிடையாது. இத்தகையனை இவன் தன் னையே ஆதாரமாகவும் மற்ற உபகரணங்களாகவும் கொண்டு ப்ரபஞ்சத்தைப் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் செய்கின்றுன். இவன் பிறவி முதலிய விகா ரங்கள் எவையும் தீண்டப் பெருதவன். இவன் இந்த ப்ரபஞ்சத்திற்கு தர்மம் முதலிய நன்மைகளை யெல் லாம் விளைக்கும்பொருட்டுப் பல செயல்களைச் செய்கின் றுன். இவனுக்குத் தன்ப்ரயோஜனத்திற்காகச் செய் யவேண்டியது ஒன்றுமே இல்லை. ஆகையால் எல்லாரி

னும் மேன்மை யுடையவனுகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்குப் பூஜை செய்வாயாக. இப்படி செய்வாயாயின் ஸமஸ்த பூதங்களுக்கும் பூஜை செய்தாற்போலாகும். தன்னையும் மேன்மைப் படுத்திக்கொண்டதாகும். ஏனென்றால், இவன் ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன்; தன்னைக்காட்டிலும் வேறுபட்ட வஸ்து ஏதுவும் இல்லாதவன்; ராகம் த்வேஷம் முதலிய தோஷங்கள் எவையும் தீண்டப் பெருதவன்; இயற்கையில் [1] அவாப்தஸமஸ்தகாமன். ஆகையால், தான் செய்யும் தானம் அளவற்ற பயனை விளைக்கவேண்டுமென்னும் விருப்பம் உளதாயின் இந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குத்தான் முதலில் பூஜாதானம் செய்யவேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:— ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையை அறிந்த ஸஹதேவன் இங்ஙனம் மொழிந்து பேசாதிருந்தான். ப்ரஹ்மஜ்ஞானிகளில் சிறந்த த்வைபாயனுதிகள் அதைக் கேட்டு நல்லது நல்லதென்று புகழ்ந்தார்கள். இங்ஙனம் ஸபையிலுள்ள அந்தணர்கள் மனவிருப்பத்துடன் நல்லது நல்லதென்று மொழிந்ததைக் கேட்டு யுதிஷ்டிரன் ஸந்தோஷம் அடைந்து ஸ்னேஹத்தினுல் தழதழத்து ஸ்ரீக்ருஷ்ணனைப் பூஜித்தான். அம்மன்னவன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதங்களை அலம்பி உலகங்களையெல்லாம் புனிதஞ்செய்யவல்ல அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தைத் தன் பார்யைகளோடும் தம்பிகளோடும் மந்த்ரிகளோடும் மற்றுமுள்ள குடும்பத்தோடும் சிரஸ்ஸினுல் மனக்களிப்புடன் தரித்தான். மற்றும், அவன் வஸ்த்ரங்களாலும் பொன்னிறமுள்ள பட்டு வஸ்த்ரங்களாலும் விலையுயர்ந்த ஆபர

1. விருப்பங்களெல்லாம் கைகூடப் பெறறவன்.

ணங்களாலும் ஸ்ரீ க்ருஷ்ணனை ஆராதித்து ஆநந்தநீர்கள் நிறைந்தகண்களுடையவனாகி அந்தப் பகவானைப் பார்க்க முடியாதிருந்தான். ஸமஸ்த ஜனங்களும் இங்ஙனம் பூஜிக்கப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு கைகளைக் குவித்து 'உனக்கு நமஸ்காரம். நீ மேன்மையுடன் விளக்க முற்றிருப்பாயாக' என்று மொழிந்து அவனை வணங்கினார்கள். அப்பொழுது பூமழைகள் பொழிந்தன. சிசுபாலன் இங்ஙனம் நடந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய குணவர்ணனத்தைக் கேட்டுக் கோபமுற்றுத் தன் ஆஸனத்தினின்றும் எழுந்து கையைத் தூக்கிக் கொண்டு பொறாமையுற்றுப் பயமின்றிப் பருஷமான வசனங்களைப் பகவானுடைய செவியில் படுத்த முயன்று மேல் வருமாறு மொழிந்தான்.

சிசுபாலன் சொல்லுகிறான்:—பரஹ்மாதிகளுக்கும் ப்ரபுவான காலம் ஒருவராலும் கடக்கமுடியாதென்னும் பழமொழி உண்மையே. ஏனென்றால், எல்லாம் தெரிந்த வ்ருத்தர்களின் புத்தியுங்கூட ஒன்றுந் தெரியாத பாலர்களின் வாக்யங்களால் மாறிப்போகின்றதே. ஸபையிலுள்ள பெரியோர்களே! க்ருஷ்ணன் முன் அக்ரபூஜைக்குத் தகுந்தவனென்று சொல்லுகிற இந்தப் பாலகன்வாக்யத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளலாகாது. ஏனென்றால், நீங்கள் தானத்திற்குரிய ஸத்பாத்ரம் இன்னதென்பதை அறிந்தவர்களில் சிறந்தவர்களல்லவா? உபவாஸம் முதலிய தவம் சாஸ்த்ராப்யாஸத்தினால் விளையும் ஜ்ஞானமாகிய வித்யை சாந்த்ராயணம் முதலிய வ்ரதம் இவற்றைத் தவறாமல் விதிப்படி அனுஷ்டிப்பவர்களும் பரமாத்மோபாஸனரூப ஜ்ஞானத்தினால் பாபங்களெல்லாம் தீரப்பெற்றவர்களும் பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்து அதில் நிலைநின்றவர்

களும் லோகபாலர்களால் பூஜிக்கப்பட்டவர்களுமாகிய பரமரிஷிகளை அனுதரித்துக் குலாதமனுன இந்தக் கோபாலன், காக்கை புரோடாசத்திற்கு உரியதல்லா தாப்போல் பூஜைக்கு எங்ஙனம் உரியவனுவான்? ப்ராஹ்மண க்ஷத்ரியாதிவர்ணங்கள் ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஶ்ரமங்கள் குலம் இவற்றினின்று நழுவினவனும் வர்ணாஶ்ரமதர்மங்களுக்கு வெளிப்பட்டவனும் தோன்றபடி நடப்பவனும் குணங்களற்றவனுமாகிய இவ்விடைப் பெய்யன் எங்ஙனம் பூஜைக்கு உரியவனுவான்? இந்த யாதவர்களின்குலம் யயாதியால் சபிக்கப்பட்டு ஸத்புருஷர்களால் பஹிஷ்காரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அத்தகைய குலத்தில் பிறந்த இவன் வீணுகப் பாபத்தில் மனவிருப்பங்கொண்டு மதித்திருக்கின்றுன். இவன் எப்படி பூஜைக்கு உரியவனுவான்? ப்ரஹ்மர்ஷிகள் நடையாடுகிற ஆர்யாவர்த்ததேசத்தையும் ப்ரஹ்மவர்ச்சஸத்தையும் துறந்து ஸமுத்ரத்தினிடையிலுள்ள துர்க்கத்தை (நுழையத்தகாத தேசத்தை) அடைந்து துஷ்ட ஜந்துபோல் ஜனங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறுன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—நன்மை அழியப் பெற்ற அந்தச் சிசுபாலன் இவை முதலிய அமங்கலமான பருஷவாக்யங்களை மொழிந்தான். ஸிம்ஹம் நரியின் சப்தத்தைக் கேட்டுப் பேசாதிருப்பதுபோல ஸ்ரீக்ருஷ்ணன் அதைக் கேட்டும் ஒன்றும் பேசாதிருந்தான். ஸபையிலிருந்தவர்கள் பொறுக்க முடியாத பகவானுடைய நிந்தையைக் கேட்டுக் காதுகளை மூடிக் கொண்டு கோபத்தினுல் சிசுபாலனைப் பழித்துக் கொண்டே அப்புறம் சென்றுர்கள். பகவானுடைய நிந்தையையாவது அவனிடத்திலுக்கமுற்ற ஜனத்

தின் நிந்தையையாவது கேட்டு அவனிடத்தினின்று ஏவன் அப்புறம் போகாதிருக்கிறானோ, அவனும் ஸுக்ருதத்தினின்று நழுவி நரகத்தில் விழுவான். அப்பால் பாண்டவர்களும் மத்ஸ்யர்களும் கேகயர்களும் ஸ்ருஞ்சயர்களும் கோபித்துச் சிசுபாலனைக் கொல்ல விரும்பி ஆயுதங்களை ஏந்திக்கொண்டு எழுந்திருந்தார்கள். பாரதனே! அனந்தரம் சிசுபாலன் சிறிதும் பயமின்றிப் பரபரப்பற்று ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பக்ஷத்திலுள்ள அரசர்களை யெல்லாம் ஸபையில் விரட்டிக் கொண்டு கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக் கொண்டான். அவ்வளவில் ஸ்ரீ க்ருஷ்ணன் கோபித்துத் தன் பக்ஷத்தைச் சேர்ந்த அம்மன்னவர்களைத் தடுத்து எதிர்த்து வருகின்ற சத்ருவின் தலையைக் கத்தியின் நுனிபோன்ற நுனியுடைய சக்ராயுதத்தினால் தானே அறுத்தான். சிசுபாலன் மாண்டு போகையில் பெரிய கோலாஹல சப்தம் உண்டாயிற்று. அந்தச் சிசுபாலனைத் தொடர்ந்து வந்த மன்னவர்கள் அனைவரும் ப்ராணன்களோடு தப்பிப் பிழைக்க விரும்பி ஓடிப் போனார்கள். சிசுபாலனுடைய தேஹத்தினின்று கிளம்பின ஜீவனாகிற தேஜஸ்ஸு ஆகாயத்தினின்று நழுவின கொள்ளி பூமியில் விழுந்து மறைவது போல, ஸமஸ்த பூதங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் வாஸுதேவனிடத்தில் நுழைந்து மறைந்தது. அச்சிசுபாலன் மூன்று ஜன்மங்களாகத் தொடர்ந்து வருகின்ற வைரத்தினால் நிலைநின்ற புத்தியுடன் ஸ்ரீ க்ருஷ்ணனை த்யானித்துக்கொண்டிருந்தானாகையால் அவனோடு ஸாதர்ம்யத்தை அடைந்தான். பாவமல்லவோ, (மனக்கருத்தல்லவோ) சுபாசுப ஜன்மங்களுக்குக் காரணம். ஆகையால் சுபாஸ்ரயமான ஸ்ரீ க்ருஷ்ணனுடைய திவ்யமங்களவிக்ரஹத்தில் அவ



2694 ராஜஸூயயாக மூலமாய் ஸ்ரீக்ருஷ்ணன் சிசுபாலனை வதித்தல்.

னுடைய பாவம் நிலைநின்றிருந்தமையால் அவன் சுப
மான நிலைமையைப் பெற்றான். இணையெதிரில்லாத
தனியரசனாகிய யுதிஷ்டிரமன்னவன் ருத்விக்குக்களுக்
கும் ஸபிகர்களுக்கும் அமிதமான தக்ஷிணையைக் கொடு
த்து எல்லோரையும் விதிப்படி பூஜித்து அவப்ருத
ஸ்னானஞ் செய்தான். யோகேஶ்வரர்களுக்கும் ஈஶ்
வரனான ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் யுதிஷ்டிரமன்ன
வனுடைய ராஜஸூய யாகத்தை நிறைவேற்றி நண்பர்
களால் வேண்டப்பெற்றுச் சில மாதங்கள் அவ்விடத்
தில் வஸித்திருந்தான். அப்பால் ஸர்வேஶ்வரனாகிய
ஸ்ரீக்ருஷ்ணன் தான் போவதற்கு ஸம்மதியாதிருக்
கிற யுதிஷ்டிரமன்னவனிடத்தினின்று நிர்ப்பந்தமாகவே
அனுமதி பெற்றுக்கொண்டு பார்யைகளோடும் மந்த்ரிக
ளோடும்கூடப் புறப்பட்டுத் தன்பட்டணம் போய்ச்
சேர்ந்தான். வைகுண்டவாஸிகளான ஜய விஜயர்
களுக்கு ஸனகாதி அந்தணர்களின் சாபத்தினால் அடிக்
கடி ஜன்மம் உண்டான விஷயத்தைப் பற்றின அவ்வு
பாக்யானத்தை உனக்கு நான் முன்னமே மிகவும்
ஸவிஸ்தரமாக மொழிந்தேன். (ஆகையால் ஸ்ரீ க்ருஷ்
ணனிடத்தில் மிகுந்த த்வேஷமுடைய சிசுபாலன் அவ
னுடைய ஸாதர்ம்யத்தை எப்படி அடைந்தானென்று
சங்கிக்க வேண்டாம்). யுதிஷ்டிர மன்னவன் ராஜஸூ
யயாகத்தை முடித்து அவப்ருதஸ்னானம் செய்து
ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் நிறைந்த ஸபையின்
இடையில் தேவேந்த்ரன்போல விளங்கினான். தேவ
தைகள் மனுஷ்யர்கள் ஆகாசத்தில் திரிபவர்களான
மற்ற ஸித்த சாரணாதிகள் ஆகிய அனைவரும் யுதிஷ்டிர
மன்னவனால் பூஜிக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணனையும் ராஜ
ஸூயயாகத்தையும் புகழ்ந்துகொண்டு மனக்களிப்பு

டன் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். பாபிஷ்டனும் தர்மத்தில் த்வேஷமுடையவனும் குருகுலத்திற்கு ரோகம்போல் நாசத்திற்கு ஹேதுவுமாகிய துர்யோதனனொருவனைத் தவிர மற்றவர் அனைவரும் ஸந்தோஷத்துடன் திரும்பிப் போனார்கள். அவன் மாத்ரம் அந்தப் பாண்டுபுத்ரனான யுதிஷ்டிரமன்னனுடைய அத்தகைய ஸம்ருத்தியைக் கண்டு பொறுக்க முடியாமல் வயிற்றெரிச்சலுடன் திரும்பிப் போனான். எவன் சிசுபாலவதம் ராஜர்களை ஜராஸந்த பந்தனத்தினின்று விடுவித்தது ராஜஸூயயாகத்தின் சிறப்பு ஆகிய இவை முதலிய இந்த ஸ்ரீக்ருஷ்ணசரித்ரத்தைக் கீர்த்தனஞ் செய்கிறானோ, அவன் ஸமஸ்தபாபங்களாலும் விடுபடுவான். எழுபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

யுதிஷ்டிர மன்னவனுடைய சிறப்பும், அதைக் கண்டு துர்யோதனன் பொறாமையால் பரிபவப் பட்டதும்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:— ப்ரஹ்மரிஷீ! யுதிஷ்டிரமன்னவனுடைய அத்தகைய ராஜஸூய யாகத்தின் பெருஞ்சிறப்பைக் கண்டு ராஜனாகிய துர்யோதனனைத் தவிர யாகத்திற்கு வந்திருந்த மனுஷ்யர்கள் தேவதைகள் ரிஷிகள் ஸித்தசாரணாதி உபதேவர்கள் ஆகிய அனைவரும் களித்தார்களென்று நாங்கள் கேட்டிருக்கிறோம். அதற்குக் காரணம் என்னவோ அதைச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனும் உன் பாட்டனுமாகிய யுதிஷ்டிர மன்னவனுடைய ராஜஸூயயாகத்தில் பந்துக்கள் அனைவரும் அவனிடத்தில் ப்ரீதியினால் கட்டுண்டு பரிசாரகர்களைப்போல வேண்டிய

காரியங்களைச் செய்தார்கள். பீமஸேனன் யாகசாலையில் காரியங்களை நிர்வஹித்தான். ஸஹதேவன் வந்தவர்களை விசாரித்து வெகுமதிக்குங் காரியத்தை நடத்தினான். நகுலன் வேண்டிய பலவகை வஸ்துக்களைச் சேகரிப்பதில் ஊன்றியிருந்தான். அர்ஜுனன் பெரியோர்களுக்குச் சுஸ்ரூஷை செய்யுங் காரியத்தை ஏற்றுக்கொண்டான். ஸ்ரீக்ருஷ்ணன் பாதங்களை அலம்புவதில் முயன்றிருந்தான். த்ருஷ்டத்யும்னன் அவரவர்களுக்குப் பக்ஷ்ய போஜ்யாதிகளைப் பறிமாறும் காரியத்தையும், தாராளமான மனமுடைய கர்ணன் தானாதிகாரத்தையும் நடத்தினார்கள். ஸாத்யகி விகர்ணன் ஹார்த்திக்யன் விதுரன் பாஹ்லீகபுத்ரர்கள் இவர்களும் பூரிஸ்ரவஸ்ஸு முதலியவர்களும் ஸந்தர்த்தனாதிகளும் அம்மஹாயாகத்தில் பற்பல காரியங்களில் தூண்டப்பட்டு ராஜனுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி அந்தந்தக் காரியங்களை நடத்தினார்கள். ருத்விக்குக்கள் ஸபிகர்கள் பண்டிதர்கள் நண்பர்கள் ஆகிய இவர்கள் அனைவரும் நல்வார்த்தைகள் சிறந்த பூஜைகள் தக்ஷிணைகள் இவைகளால் நன்கு பூஜிக்கப்பட்டிருக்கையில் சிசுபாலனும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களை அடைகையில் கங்காநதியில் அவப்ருதஸ்நானத்தை நடத்தினார்கள். அந்த அவப்ருதமஹோத்ஸவத்தில் ம்ருதங்கம் சங்கம் பணவம் துந்துபி ஆனகம் கோமுகம் முதலிய விசித்ரமான பலவாத்யங்களும் முழங்கின. நர்த்தகர்கள் ஸந்தோஷத்துடன் ஆடினார்கள். காயகர்கள் ஸந்தோஷமுற்றுக் கூட்டங்கூட்டமாய்ப் பாடினார்கள். வீணை வாசிப்பதும் புல்லாங்குழல் ஊதுவதும் கைத்தாளமிடுவதுமாயிருக்கின்ற அங்குள்ள ஜனங்களின் சப்தம் ஆகாயம் முழுவதும் அளாவிற்று. அப்பொழுது பொற்

சங்கிலி முதலிய அலங்காரங்களை அணிந்திருக்கிற மன்னவர் விசித்ரமான த்வஜங்களும் சிறந்த பதாகைகளுமுடைய [1]கஜஸ்ரேஷ்டங்களோடும் தேர்களோடும் குதிரைகளோடும் நன்கு அலங்கரித்துக் கொண்டிருக்கிற [2]யோதர்களோடுங்கூடிப் புறப்பட்டார்கள். யதுக்களும் ஸ்ருஞ்சயர்களும் கம்போஜர்களும் குருக்களும் கோஸலர்களும் கேகயர்களும் யஜமானனுன யுதிஷ்டிர மன்னவனை முன்னிட்டுத் தங்கள் ஸைன்யங்களால் பூமியை நடுங்கச் செய்து கொண்டு புறப்பட்டுப்போனார்கள். ஸபிகர்களும் ருத்விக்குக்களும் ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்களும் பெரிய வேதகோஷத்துடன் சென்றார்கள். தேவதைகளும் ரிஷிகளும் பித்ருக்களும் கந்தர்வர்களும் புஷ்பங்களைப் பெய்துகொண்டு துதித்தார்கள். புருஷர்களும் ஸ்த்ரீகளும் ஆடையாபரணம் புஷ்பம் சந்தனம் முதலியவைகளால் நன்றாக அலங்கரித்துக்கொண்டு பலவகை ரஸங்களால் பூசுவதும் இறைப்பதுமாகி விளையாடினார்கள். விலைமாதுகள் எண்ணெய் பால் தயிர் நெய் கந்தஜலம் மஞ்சள் குங்குமம் இவைகளைக் கொண்டு புருஷர்களால் பூசப்பட்டுத் தாங்களும் அவற்றைக் கொண்டு அவர்கள்மேல் பூசிக் கொண்டு விளையாடினார்கள். தெய்வமடந்தையர்கள் விமானங்களின்மேல் ஏறி ஆகாயத்தில் புறப்படுவதுபோல ராஜபத்னிகள் படர்களால் பாதுகாக்கப் பெற்று ரதம் முதலிய வாஹனங்களில் ஏறிக்கொண்டு இந்த அவப்ருதஸ்னானத்தைப் பார்க்க விரும்பிக் கிளம்பினார்கள். அம்மாதரசிகள் மாமன்பிள்ளைகளாலும் ஸகிகளாலும் சந்தனஜலம் முதலியவைகளால் நனைக்கப் பெற்று வெட்கத்தோடு கூடின மந்தஹாஸத்தினால்

1. கஜஸ்ரேஷ்டம்—சிறந்த யானை. 2. யோதன்—யுத்தவீரன்.

மலர்ந்த முகமுடையவர்களாகி விளங்கினார்கள்; கந்த ஜலம் முதலியவைகளால் ஆடைகள் நனைந்து அங்கங்களும் கொங்கை துடை இடை இவைகளும் துலங்கப் பெற்ற அம்மடந்தையர்மணிகள் ஜலம் இறைக்கும் யந்த்ரங்களால் மைத்துனன்மார்களையும் ஸகிகளையும் நனைத்தார்கள். அவர்கள் யந்த்ரங்களால் கந்தஜலாதிகளையெடுத்து இறைக்கும் குதூஹலத்தின் மிகுதியால் தலைச் சொருக்குகள் அவிழ்ந்து பூமாலைகள் நழுவப் பெற்று அழகியவிலாஸங்களால் காமுகர்களுக்கு மனக்கலக்கத்தை (மன்மத விகாரத்தை) விளைத்தார்கள். அந்த யுதிஷ்டிரமஹாராஜன் நல்ல குதிரைகள் கட்டிப் பொற் சங்கிலிகளால் அலங்காரம் செய்யப் பெற்றிருப்பதுமாகிய ரதத்தில் ஏறிக்கொண்டு தன்பத்னிகளோடுகூடி ப்ரயாஜம் முதலிய க்ரியாகலாபங்களோடு கூடிய ராஜஸூயயாகம்போல் விளங்கினான். ருத்விக்குக்கள் பத்னீஸம்யாஜமென்கிற சில யாகவிசேஷங்களையும் அவப்ருதத்திற்கு அங்கமான கர்மத்தையும் அனுஷ்டித்து ஆசமனம் செய்த அம்மன்னவனுக்கும் த்ரௌபதிக்கும் கங்கையில் ஸ்னானஞ் செய்வித்தார்கள். அப்பொழுது ஒரே ஸமயத்தில் தேவதுந்துபிகளும் மனுஷ்யதுந்துபிகளும் முழங்கின. தேவதைகளும் ரிஷிகளும் பித்ருக்களும் மனுஷ்யர்களும் பூமழைகளைப் பொழிந்தார்கள். மஹாபாதகம் செய்தவனும் அவப்ருத ஸ்மயத்தில் ஸ்னானஞ் செய்வானாயின் அப்பொழுதே அந்தப்பாபத்தினின்று விடுபடுவானாகையால் ப்ராஹ்மணாதிவர்ணங்களும் ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஸ்ரமங்களுமாகிய வ்யவஸ்தைகளையுடைய ஸகல ஜனங்களும் ஸ்னானஞ் செய்தார்கள். அப்பால் யுதிஷ்டிர மன்னவன் புதிய வெண்பட்டு வஸ்த்ரங்களை உடுத்துக்கொண்டு நன்கு அலங்காரங்களையும்

அணிந்து ருத்விக்குக்கள் ஸதஸ்யர்கள் ப்ராஹ்மணர் கள் முதலியவர்களை ஆபரணம் அம்பரம் முதலிய ஸம் மானங்களால் பூஜித்தான். ஸ்ரீமந்நாராயணனையே முக்யமாகப்பற்றின அம்மன்னவன் எல்லாம் அவனு டைய சரீரங்களே யென்னும் புத்தியுடையவனுகையால் பந்துக்களையும் ஜ்ஞாதிகளையும் நன்மனமுடைய ராஜர் களையும் நண்பர்களையும் மற்றுமுள்ள அனைவரையும் அடிக்கடி பூஜித்தான். அங்குள்ள ஸமஸ்த புருஷர்க ளும் தேவதைகளோடொத்த ஒளியுடையவர்களும் ரத் னமயமான குண்டலங்கள் பூமாலைகள் தலைப்பாகை கஞ் சுகம் வெண்பட்டு வஸ்த்ரங்கள் விலையுயர்ந்த ஹாரங்கள் ஆகிய இவற்றையுடையவர்களுமாகி விளங்கினுர்கள். ஸ்த்ரீகளும் இரண்டு குண்டலங்களோடும் முன்னெற்றி மயிர்களோடும் கூடின முகங்களால் சோபையுடையவர் களாகி ஸ்வர்ணமயமான அரைநாண்மாலையுடன் விள ங்கினுர்கள்; மன்னவனே! அனந்தரம் சிறந்த நல்லொ ழுக்கமுடைய ருத்விக்குக்களும் ப்ரஹ்மவாதிகளான ஸபிகர்களும் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய சூத்ரர்க ளும் மற்றும் யாகத்திற்காக வந்திருந்த ராஜர்களும் தேவதைகள் ரிஷிகள் பித்ருக்கள் மற்ற பூதங்கள் லோ கபாலர்கள் அவரவர்களுடைய பரிஜனங்கள் ஆகிய அனைவரும் அம்மன்னவனுல் பூஜிக்கப்பட்டு அவனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு தத்தம் இருப்பிடம் போய்ச்சேர்ந்தார்கள். மனுஷ்யன் அம்ருதத்தைப் பரு கி த்ருப்தி அடையாதிருப்பதுபோல அனைவரும் ஸ்ரீக் ருஷ்ணனுடைய தாஸனும் ராஜர்ஷியுமாகிய யுதிஷ்டிர னுடைய ராஜஸூயமஹோத்ஸவத்தைப் புகழ்ந்து சிறிதும் த்ருப்தி அடையாதிருந்தார்கள். அப்பால் யுதி ஷ்டிரமன்னவன் தத்தம் இருப்பிடங்களுக்குப் போக

மூயன்ற நண்பர்களையும் ஸம்பந்திகளையும் பந்துக்களையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் விட்டுப் பிரியப் பொறுமையாலும் ஸ்னேஹத்தினாலும் போகவொட்டாமல் தடுத்தான். ஸ்ரீக்ருஷ்ணன் அந்த யுதிஷ்டிரனுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி ஸாம்பன் முதலிய யதுவீரர்களை த்வாரகைக்கு அனுப்பித் தான் அங்குச் சிலநாள் வஸித்திருந்தான். இங்ஙனம் தர்மபுத்ரன் மிகவும் கடக்க முடியாத மனோரதமாகிற மஹாஸமுத்ரத்தை ஸ்ரீக்ருஷ்ணனுடைய அனுக்ரஹத்தினால் கடந்து மனக்கவலை தீரப்பெற்றான். தன்பக்தர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந் தன்மையனான பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடைய யுதிஷ்டிரனுடைய அந்தப்புரத்திலுள்ள ஸம்பத்தையும் ராஜஸூயம் நடந்தபெருமையையுங் கண்டு துர்யோதனன் ஒருகால் பரிதபித்தான். அம்மன்னவனுடைய அந்தப்புரத்தில் பூலோகத்திலுள்ள மன்னவர்கள் அஸுரஸ்ரேஷ்டர்கள் தேவேந்த்ரன் முதலிய லோகபாலர்களாகிய இவர்களுக்குள்ளஸம்ருத்திகளெல்லாம் அமைக்கப்பட்டு விளக்கமுற்றிருந்தன. த்ரௌபதி அத்தகைய ஸம்ருத்திகளுடன்தன் கணவனைப் பரிசரித்து வந்தாள். துர்யோதனன் அந்த த்ரௌபதியிடத்தில் மிகவும் மனவிருப்பமுற்றுப் பரிதபித்தான். மற்றும், அப்பொழுது அவ்வந்தப்புரத்தில் நிதம்பத்தின் பாரத்தினால் மெல்லமெல்ல ஒலிக்கின்றசிலம்பு தண்டைகளோடுகூடிய பாதங்களால் சோபையுடன் திகழ்பவரும் இடையில் மிக்க அழகியர்களும் கொங்கைமேல் அணிந்த குங்குமங்களால்சிவந்த ஹாரங்களுடையவர்களும் மிகவும் அழகிய முகமுடையவர்களும் அசைகின்ற குண்டலங்களும் முன்னெற்றி மயிர்களும் அமைந்து விளங்குபவர்களுமாகிய ஸ்ரீக்ருஷ்ண மஹிஷிகள் அனேகமாயிரக்கணக்

கில் உலாவிக் கொண்டிருந்தார்கள். அதுவும் அந்தத் துர்யோதனனுக்குப் பரிதாப ஹேதுவாயிற்று. மயனால் தன்திறமைகளெல்லாம் தோன்றும்படி நிர்மிக்கப் பட்ட ஸபையில் மஹாராஜனாகிய தர்மபுத்ரன் தம்பிக ளோடும் பந்துக்களோடும் தனக்குக் கண்ணைப்போல் ஹிதாஹிதங்களை அறிவிக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனோடும் கூடி ஓரிடத்தில் ஸ்வர்ணமயமான ஸிம்ஹாஸனத்தில் ப்ரஹ்மதேவனுடைய செல்வத்தோடொத்த செல்வத்து டன் ஸ்துதிபாடகர்களால் துதிக்கப்பெற்றுத் தேவேந் த்ரன்போல உட்கார்ந்திருந்தான். அப்பொழுது துரஹங்காரமுடையவனும் கையில் கத்தியைத் தரித்தவ னும் கிரீடம் பூமாலை இவை அணிந்தவனுமாகிய துர் யோதனன் ப்ராதாக்களால் சூழப்பட்டு த்வாரபாலர் களைக் கோபத்துடன் பழித்துக்கொண்டு அவ்விடம் வந் தான். (சத்ருக்கள் ஜலத்தைத் தரையாகவும் தரை யை ஜலமாகவும் ப்ரமிக்கச் செய்யுந் தன்மையுடைய அச் சபையுள் நுழைகின்ற) அத்துர்யோதனன் மயனுடைய மாயையினால் மதிமயங்கித் தரையைக் கண்டு ஜலமென்று ப்ரமித்து அரையாடையைத் தூக்கிக்கொண்டு நடந் தான்; மற்றும் ஓரிடத்தில் தரையை ஜலமென்று ப்ர மித்து ஜலத்தில் நடப்பதுபோல நடந்து இடறி விழுந் தான்; மற்றும், ஓரிடத்தில் ஜலத்தைத் தரையாக ப்ர மித்துத் தரையில் நடப்பதுபோல நடந்து இடறி விழுந் தான். பீமஸேனனும் ஸ்த்ரீகளும் மற்றுமுள்ள ராஜர் களும் அந்தத் துர்யோதனனைக் கண்டு யுதிஷ்டிரமன் னவனால் வேண்டாமென்று தடுக்கப்பட்டும் ஸ்ரீக்ருஷ்ண னால் அனுமோதனஞ் செய்யப்பெற்றுச் சிரித்தார்கள். அத்துர்யோதனன் வெட்கமுற்றுத் தலையைக் கவிழ்த் துக் கோபத்தினால் ஜ்வலித்துக்கொண்டே ஒன்றும்

பேசாமல் புறப்பட்டு ஹஸ்தினாபுரத்திற்குப் போனான். அப்பொழுது 'ஆ! ஆ! துர்யோதனன் அவமதிக்கப்பட்டான்' என்று பெரிய கோஷம் உண்டாயிற்று. அதற்கு யுதிஷ்டிரன் மனவருத்த முற்றான். ராஜனே! நீ என்னை எதைப்பற்றி வினவினையோ அதற்கு இங்ஙனம் மறுமொழி கூறினேன். துர்யோதனன் யுதிஷ்டிரனுடைய செல்வப் பெருக்கைக் கண்டு பொறுக்க முடியாமல் பரிதபித்தமையாகிற துர்ப்புத்தித்தனத்தினால் அவமதி அடைந்த விஷயத்தை விசதமாக மொழிந்தேன். எழுபத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸால்வவத வ்ருத்தாந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! விளையாட்டிற்காக மானிட உருவம் பூண்டிருக்கிற பரம புருஷனான ஸ்ரீக்ருஷ்ணன் ஸௌபமென்னும் விமானத்தையுடைய ஸால்வனைக்கொன்ற அற்புதமான மற்றொரு வ்ருத்தாந்தத்தையும் சொல்லுகிறேன், கேட்பாயாக. முன்பு சிசுபாலனுக்கு நண்பனாகிய ஸால்வனும் ஜராஸந்தன் முதலிய மன்னவர்களும் ருக்மிணியின் விவாஹத்தின்பொழுது வந்திருந்தார்கள். அப்பொழுது அந்த ஸால்வனும் ஜராஸந்தாதிகளும் யாதவர்களால் ஜயிக்கப்பட்டார்கள். அவர்களில் ஸால்வன் ஸமஸ்த ராஜர்களும் கேட்டுக்கொண்டிருக்கையில், 'பூமியில் யாதவர்களே இல்லாதபடி அழித்து விடுகிறேன். என் பௌருஷத்தைப் பாருங்கள்' என்று ப்ரதிஜ்ஞை செய்தான். மூடனாகிய அந்த ஸால்வன் இங்ஙனம் ப்ரதிஜ்ஞை செய்து தினந்தோறும் ஒருவேளை ஒரு பிடி மண் புழுதியைப் புசித்துக் கொண்டு ப்ரபுவான பசுபதியை ஆராதித்தான். மஹானுபாவனாகிய அவ்வுமாபதி இங்ஙனம்

ஸம்வத்ஸரம் நடந்த பின்பு கடைசியில் சிறிது ஸந்தோ ஷம் அடைந்து அவனிடம் வந்து தன்னைச் சரணம் அடைந்த அன்னவனை வரம் வேண்டும்படி தூண்டி ஞன். அந்த ஸால்வனும் தேவர் அஸுரர் மனுஷ்யர் கந்தர்வர் உரகர் ராக்ஷஸர் இவர்களால் பேதிக்க முடி யாததும் நினைத்தபடி செல்லுந்திறமையுடையதும் வ்ருஷ்ணிகளுக்குப் பயங்கரமுமாகிய ஒரு விமானத் தைக் கொடுக்கும்படி வேண்டிஞன். அந்தக் கிரிசனும் அப்படியே ஆகட்டுமென்று மயனுக்குக் கட்டளையிடச் சத்ருபட்டணங்களை வெல்லுந் திறமையுடைய அம்மய னும் இரும்புமயமாயிருப்பதும் பட்டணம்போன்றது மாகிய ஸௌபமென்னும் பெயருடைய ஒரு விமானத் தை நிர்மித்து ஸால்வனுக்குக் கொடுத்தான். அந்த ஸால்வன் இருட்டிற்கிருப்பிடமாயிருப்பதும் நினைத்த படி செல்லுந் திறமையுடையதும் ஒருவராலும் கிட்ட முடியாததுமாகிய விமானத்தைப் பெற்று வ்ருஷ்ணி கள் செய்த வைரத்தை நினைத்து த்வாரகைக்குச் சென் ருன். பரதஶ்ரேஷ்டனே! ஸால்வன் அளவிறந்த தன் ஸைன்யத்திஞல் த்வாரகாபுரியைத் தகைந்து உபவனங் களையும் உத்யானவனங்களையும் முறித்துப் பாழ்செய் தான். அவன் கோபுரங்களையும் த்வாரங்களையும் உப் பரிக்கைகளையும் கோட்டையின் மேலுள்ள க்ருஹங் களையும் வெளிவாசற்படிகளையும் வீதிகளையும் விளை யாடு மிடங்களையும் இடித்துப் பாழ்செய்தான். மற் றும் விமானங்களில் சிறந்த அவனுடைய ஸௌப விமானத்தினின்று ஆயுதங்களாகிற மழைகளும் கற்க ளும் மரங்களும் இடிகளும் ஸர்ப்பங்களும் விடாமழை யும் பறற்கற்களும் வந்து விழுந்தன. மற்றும் கொடிய சுழற்காற்று வீசிற்று. தூட்களால் திசைகளெல்லாம்

மூடப்பட்டன. ஸ்ரீக்ருஷ்ணனுடைய பட்டணமாகிய த்வாரகை இங்ஙனம் ஸௌபவிமானத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டு த்ரிபுரத்தினால் பீடிக்கப்பட்ட பூமண்டலம்போலச் சிறிதும் ஸுகத்தை அடையாதிருந்தது. மஹானுபாவனுகிய ப்ரத்யும்னன் தன்ப்ரஜைகள் வதிக்கப்படுவதைக் கண்டு மஹாரதனும் வீரனுமாகையால் பயப்படவேண்டாமென்று ப்ரஜைகளுக்கு ஸமாதானஞ் சொல்லி ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு ஸால்வனை எதிர்த்துச் சென்றான். அங்ஙனமே ஸாத்யகி சாருதேஷ்ணன் ஸாம்பன் அக்ரூரன் அவன் தம்பிகள் ஹார்த்திக்யன் பானுவிந்தன் கதன் சுகன் ஸாரணன் இவர்களும் ரதிகர்களின் கூட்டங்களை அடக்கியாளுந் திறமையுள்ள வீரர்களின் கூட்டங்களையும் அடக்கியாள வல்லவர்களான மற்றும் பல மஹாவீரர்களும் கவசங்களை அணிந்து தேர் யானை குதிரை காலாள் இவைகளால் பாது காக்கப்பட்டுப் புறப்பட்டார்கள். அப்பால் ஸால்வர்களுக்கு யாதவர்களோடு யுத்தம் நடந்தது. அந்த யுத்தம் முன்பு அஸுரர்களுக்குத் தேவதைகளோடு நடந்த யுத்தம்போல் கேட்போர்களுக்கு மயிர்க் கூச்சத்தை விளைப்பதாகித் துமுலமாயிருந்தது. ப்ரத்யும்னன் ஸௌபவிமானமுடைய ஸால்வன் ப்ரயோகித்த அம்மாயைகளை யெல்லாம் ஸூர்யன் ராத்ரியிலுண்டான இருட்டைப் போக்குவதுபோல் திவ்யாஸ்த்ரங்களால் ஒரு க்ஷணத்திற்குள் நாசஞ் செய்தான்; மற்றும், பொற்பிடியும் இருப்பு நுனியும் வளைந்த கணுக்களுமுடைய இருபத்தைந்து பாணங்களால் ஸால்வனுடைய ஸேனுபதியை அடித்தான்; மற்றும், ஸால்வனை நூறு பாணங்களாலும், ஸேனையிலுள்ள போர்வீரர்களை ஒவ்வொரு பாணத்தினாலும் உதவி ஸேனுபதிகளையும் ஸார

திகளையும் பல்வத்து பாணங்களாலும் யானை முதலிய வாஹனங்களை மும்மூன்று பாணங்களாலும் அடித்தான். மஹானுபாவனாகிய ப்ரத்யும்னன் செய்த அவ்வற்புதமான செயலைக் கண்டு அவன் ஸேனையிலுள்ள வீரர்களும் சத்ரு ஸேனையிலுள்ள வீரர்களும் ஆகிய அனைவரும் அவனைப் புகழ்ந்தார்கள்; மயனால் நிர்மிக்கப்பட்டதும் பற்பல மாயைகள் சேர்ந்து ஒரு வடிவங்கொண்டிருப்பதுமாகிய அந்த ஸௌபவிமானம் ஒருகால் பல உருவங்களுடையதும் ஒருகால் ஓருருவமுடையதும ஒருகால் புலப்படுவதும் ஒருகால் புலப்படாமல் மறைவதுமாகிச் சத்ருக்களால் கண்டு பிடிக்க முடியாதிருந்தது. மற்றும், அந்த ஸௌபவிமானம் ஒருகால் பூமியிலும் ஒருகால் ஆகாயத்திலும் ஒருகால் பர்வத சிகரத்திலும் ஒருகால் ஜலத்திலும் புலப்பட்டு நின்ற இடத்தில் நிலை கொள்ளாமல் [1]அலாத சக்ரம்போல் சுழன்று கொண்டிருந்தது. ஸால்வன் ஸௌபவிமானத்தோடும் ஸைன்யங்களோடும் எங்கெங்குப் புலப்படுகிறானோ அவ்வவ்விடங்களில் ஸாத்வதவீரர்கள் பாணங்களை ப்ரயோகித்தார்கள்: அக்னி ஸூர்யன் இவர்களோடொத்த ஸ்பர்சமுடையவைகளும் ஸர்ப்பங்கள்போல் அணுக முடியாதவைகளுமான ஸாத்வதவீரர்களின் பாணங்களால் ஸால்வன் தன் விமானமும் ஸைன்யங்களும் பீடிக்கப்பெற்று மதிமயங்கினான். யதுவீரர்கள் ஸால்வனுடைய ஸேனாபதிகளின் ஆயுத ஸமூஹங்களால் மிகவும் பீடிக்கப்பட்டும் மூன்று லோகங்களையும் ஜயிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவர்களாகையால் தத்தம் யுத்தத்தை விட்டுப்போகாமல் நிலைநின்றிருந்தார்கள்;

---

1. அலாதம்—கொள்ளி. அதைச சுழற்றினால் சக்ரம்போல் தோன்றும். அதையே அலாத சக்ரமென்பர்கள்.

த்யுமானென்று ப்ரஸித்திபெற்ற ஸால்வனுடைய மந்த்ரி ப்ரத்யும்னனுடைய அஸ்த்ரத்தினால் மிகவும் பீடிக்கப் பட்டு அவனருகே வந்து மிகுந்த பலமுடையவனாகை யால் பெரும்பளுவுடையதும் எஃகினால் இயற்றப்பட்டது மாகிய கதையினால் அவனை அடித்து ஸிம்ஹநாதம் செய் தான். சத்ருக்களை அடக்குந் திறமையுடைய ப்ரத்யும் னன் கதையின் அடியினால் மார்பு விரிந்து வருத்தமுற் றிருப்பதைக் கண்டு ஸாரதியாகிய தாருகபுத்ரன் ஸார திகள் நடத்த வேண்டுந் தர்மங்களை அறிந்தவனாகை யால் அவனை யுத்த பூமியினின்று அப்புறம் கொண்டு போனான். ஸ்ரீக்ருஷ்ணனுடைய குமாரனாகிய அந்த ப்ரத்யும்னன் ஒரு முஹூர்த்தத்திற்குள் ப்ரஜ்ஞையை அடைந்து ஸாரதியைக் குறித்து இங்ஙனம் மொழிந் தான்.

ப்ரத்யும்னன் சொல்லுகிறான்;—ஸாரதீ! நீ என்னை யுத்தபூமியினின்று அப்புறம் கொண்டு போயினையே; இது யுக்தமன்று. ஆ! இப்படியும் செய்யலாகுமா? யாதவர்களின் வம்சத்தில் பிறந்தவன் தைர்யமற்ற மன முடைய ஸாரதியால் நிந்தையைப் பெற்ற என்னைத் தவிர மற்ற எவனும் யுத்தத்தினின்று நழுவினதாகக் கேட்டதில்லை. தந்தைகளான ராமக்ருஷ்ணர்களிடம் சென்று அவர்களால் வினவப்பெற்றுத் தர்மந் தவறாத யுத்தத்தினின்று ஓடிப்போன நான் எனக்குத் தகுந் திருக்குமாறு என்ன மறுமொழி கூறுவேன்? என் ப்ரா தாக்களின் பத்னிகள் யுத்தத்தில் நேர்ந்த என்னுடைய அதைர்யத்தைச் சிரித்துக்கொண்டு ஒருவர்க்கொருவர் சொல்லப் போகிறார்கள். இது நிச்சயம். வீரனே! மற்றுமுள்ளவர்களும் என்னைப்பற்றி எப்படியெப்படி யோ சொல்லுவார்கள்.

ஸாரதி சொல்லுகிறான்:—ப்ரபூ! ஆயுஷ்மன்! (வளர்ந்த வாழ்நாளுடையவனே!) 'ஸாரதி ஆபத்தை அடைந்த ரதிகனை ரக்ஷிக்கவேண்டும். ரதிகனும் ஆபத்தை அடைந்த ஸாரதியை ரக்ஷிக்கவேண்டும்' என்கிற தர்மத்தை அறிந்த நான் இங்ஙனம் செய்தேன். ஆகையால் நான் உன்னை அப்புறம் கொண்டுபோனது தர்மமே. நீ சத்ருவினால் கதையால் அடியுண்டு வருந்தி மூர்ச்சை அடைந்திருப்பதை அறிந்து உன்னை நான் யுத்தபூமியினின்று அப்புறம் கொண்டு போனேன்.

எழுபத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

த்யுமானை ப்ரத்யும்னன் அடிக்கையில் யதுக்கள் யுத்தஞ்செய்து கொண்டிருக்கையில் ஸ்ரீக்ருஷ்ணபகவான் வந்து ஸால்வனை வதித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ப்ரத்யும்னன் ஜலத்தை ஆசமனஞ் செய்து கவசம் பூண்டு தனுஸ்ஸைத் தரித்து 'ஸாரதி! என்னை வீரனாகிய த்யுமானிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக' என்றான். அந்த ருக்மிணி புத்ரன் தன்ஸைன்யங்களை அழிக்கின்ற த்யுமானைக் கிட்டி எதிர்த்துத் தகைந்து புன்னகை செய்து கொண்டே எட்டு நாராசபாணங்களால் அடித்தான்; மற்றும், நான்கு குதிரைகளை நான்கு பாணங்களாலும் ஸாரதியை ஒரு பாணத்தினாலும் அடித்து இரண்டு பாணங்களால் தனுஸ்ஸையும் த்வஜத்தையும் மற்றொரு பாணத்தினால் த்யுமானுடையசிரஸ்ஸையும் அறுத்தான். கதன் ஸாத்யகி ஸாம்பன் முதலிய யாதவர்கள் ஸௌபபதியான ஸால்வனுடைய ஸைன்யத்தை அடித்தார்கள். ஸௌபவிமானத்திலிருந்தவர்கள் அனைவரும் கழுத்

தறுப்புண்டு ஸமுத்ரத்தில் விழுந்தார்கள். இங்ஙனம் யாதவர்களும் ஸால்வர்களும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டிருக்கையில் அந்த யுத்தம் பயங்கரமாகவும் துமுலமாகவும் ஒன்பது ராத்ரிகள் நடந்தது. தர்மபுத்ரனால் அழைக்கப் பெற்று இந்த்ரப்ரஸ்தத்திற்குச் சென்ற ஸ்ரீக்ருஷ்ணன் ராஜஸூயம் நடந்து சிசுபாலனும் முடிகையில் குருவ்ருத்தர்களிடத்திலும் முனிவர்களிடத்திலும் குந்தியிடத்திலும் அவன் பிள்ளைகளான தர்மபுத்ராதிகளிடத்திலும் சென்று 'நான் தமையனாகிய பலராமனுடன் இவ்விடம் வந்தேன். சிசுபாலனுடைய பக்ஷத்தில் சேர்ந்த மன்னவர்கள் என் பட்டணத்தை நிச்சயமாய் நாசஞ் செய்வார்கள். ஆகையால், நான் புறப்பட்டுப் போக வேண்டும்' என்று மொழிந்து விடை பெற்றுக்கொண்டு மிகவும் பயங்கரமான அவசகுனங்களைப பார்த்துக்கொண்டே த்வாரகைக்குத் திரும்பி வந்தான். அந்த ஸ்ரீ க்ருஷ்ணன், தன்னுடையவர்கள் யுத்தஞ் செய்வதையும் ஸௌபவிமானத்தையும் ஸால்வனையும் கண்டு பட்டணத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும்படி பலராமனை ஏற்படுத்தித் தாருகனைப் பார்த்து 'ஸாரதீ! என்ரதத்தைச் சீக்ரத்தில் ஸால்வனிடம் கொண்டுபோவாயாக. அவனோடு நான் யுத்தஞ் செய்ய வேண்டும். இந்த ஸால்வன் பெரிய மாயாவி; ஒருவராலும் பேதிக்க முடியாத ஸௌபமென்னும் விமானமுடையவன்' என்று மொழிந்தான். இங்ஙனம் சொல்லப்பட்ட தாருகன் ரதத்தின்மேல் படிய உட்கார்ந்து குதிரைகளை ஓட்டினான். கருடக்கொடியுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணரதம் யுத்தபூமியில் நுழைகையில் அவன் பக்ஷத்தைச் சேர்ந்த யாதவர்களும் சத்ருபக்ஷத்திலுள்ளவர்களும் அதைக் கண்டார்கள்.

ஸைன்யமெல்லாம் பெரும்பாலும் அழியப்பெற்ற ஸால்வன் யுத்தபூமியில் ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு பயங்கரமான ஒலியுடைய கதையை அவனுடைய ஸாரதியின் மேல் ப்ரயோகித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் குறைக்கொள்ளிபோல் வேகத்துடன் ஆகாயத்தில் வருவதும் திசைகளையெல்லாம் விளங்கச் செய்வதுமாகிய அந்தக் கதையைப் பாணங்களால் நூறு துண்டங்களாகச் சேதித்தான். மற்றும், அவன் அந்த ஸால்வனைப் பதினாறு பாணங்களால் அடித்து, ஸூர்யன் தன் கிரணங்களால் ஆகாயத்தைத் துளைப்பதுபோல ஆகாயத்தில் சுழலமிடுகின்ற ஸௌபவிமானத்தையும் பாணஸமூஹங்களால் அடித்தான். ஸால்வன் சார்ங்கமென்னும் தனுஸ்ஸோடு கூடிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய புஜத்தை அடித்தான். அவனுடைய புஜத்தினின்று சார்ங்கம் விழுந்தது. அப்படி ஒருகாலும் நடந்ததில்லையாகையால் அது மிகவும் ஆச்சர்யத்திற் கிடமாயிருந்தது. அங்கு யுத்தம் பார்க்கிற ப்ராணிகள் அனைவரும் பெரிய ஹாஹாகாரஞ் செய்தனர். ஸௌபவிமானத்தையுடைய ஸால்வன் (சார்ங்கம் நழுவி விழுந்ததற்கு மிகவும் ஸந்தோஷம் அடைந்து) உரக்க ஸிம்ஹநாதஞ் செய்து ஜனார்த்தனனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸால்வன் சொல்லுகிறான்:—மூடனே! நீ எங்கள் ஸ்னேஹிதனான சிசுபாலனுக்குப் பார்யையாக ஏற்படுத்தப்பட்ட ருக்மிணியை நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் பறித்துக் கொண்டு போயினை. மற்றும், எங்கள் ஸ்னேஹிதன் ஸபையினிடையில் மனவூக்கமற்றிருக்கையில், அவனை வதித்தனை. நாம் எங்கும் தோற்பதில்லையென்று அபிமானித்துக் கொண்டிருக்கிற அத்தகையனான உன்னை இப்பொழுது கூரான

பாணங்களால் மீண்டுவர முடியாத ம்ருத்யுவினிடம் அனுப்பி விடுகிறேன். என்னெதிரில் நிற்பாயாயின் இங்ஙனம் நிச்சயமாய் நடத்தி விடுகிறேன். நிற்பாயாக.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—மந்தனே! (மதியற்றவனே!) வீணாகப் பிதற்றுகின்றனை. அருகாமையில் வந்திருக்கின்ற ம்ருத்யுவையும் நீ காணப் பெறாதிருக்கின்றனை. சூரர்கள் பௌருஷத்தைக் காட்டுவார்களன்றி வீணாகப் பலவும் பேசமாட்டார்கள்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் இங்ஙனம் மொழிந்து மிகவும் கோபித்துப் பயங்கரமான வேகமுடைய கதையால் ஸால்வனைக் கழுத்துக்கும் தோளுக்கும் ஸந்தியில் அடித்தான்; அந்த ஸால்வன் குருதியைக் கக்கிக்கொண்டு நடுங்கினான். கதை திரும்பி வருகையில் ஸால்வன் மறைந்தான்; அப்பால் ஒரு முஹூர்த்தகாலம் கழித்தவுடனே ஒரு புருஷன் வந்து ஸ்ரீ க்ருஷ்ணனைத் தலையால் வணங்கி அழுதுகொண்டே 'தேவகியால் அனுப்பப்பட்டேன்' என்று மொழிந்து மீளவும் அவனைக் குறித்துத் 'தந்தையிடத்தில் மிகுந்த அன்புடையவனே! பசுஹிம்ஸை செய்பவன் பசுவைக் கட்டிக்கொண்டு போவதுபோல, ஸால்வன் உன் தந்தையாகிய வஸுதேவனைக் கட்டிக்கொண்டு போனான்' என்றான். ஸ்ரீ க்ருஷ்ணன் இங்ஙனம் அனிஷ்டமான வார்த்தையைக் கேட்டு மனுஷ்யர்களின் ஸ்வபாவத்தைப் பின்சென்று மன இரக்கமும் மனவருத்தமு முற்று அற்ப புருஷன் போல இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்.—மிகவும் அற்ப பலனான ஸால்வன் எப்படிப்பட்ட ஸங்கடத்திலும் பர

பரப்பின்றிப் பின் வாங்காதிருக்குந் தீரனும் தேவதைகளாலாவது அஸுரர்களாலாவது ஜயிக்க முடியாதவனுமாகிய பலராமனை ஜயித்து என் தந்தையைக் கொண்டுவந்தான். ஆ! தெய்வம் மிக்க வலிவுடையது.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீ க்ருஷ்ணன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் ஸால்வன் தன் மாயையினால் வஸுதேவனைப் போல ஒருவனைக் கொண்டுவந்து ஸ்ரீ க்ருஷ்ணனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸால்வன் சொல்லுகிறான்:—நீ எவனுக்காக இங்குப் பிழைத்திருக்கின்றனையோ, அத்தகைய உன்னைப் பிறப்பித்த தந்தையை இதோ நான் கொண்டு வந்திருக்கின்றேன். இவனை நான் இப்பொழுது நீ பார்த்துக் கொண்டிருக்கையில் வதிக்கப் போகிறேன். மூடனே! நீ வல்லையாயின் இவனை என்னிடத்தினின்று காப்பாயாக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—மாயாவியாகிய ஸால்வன் இங்ஙனம் விரட்டி அவ்வஸுதேவனுடைய தலையை அறுத்தெடுத்துக் கொண்டு ஆகாயத்திலிருக்கிற ஸௌபவிமானத்தில் ஏறிக்கொண்டான். தனக்கு அஸாதாரணமான அறிவையுடைய அந்த ஸ்ரீ க்ருஷ்ண பகவான் ஒருமுஹூர்த்தகாலம் இங்ஙனம் மனுஷ்யர்களின் ஸ்வபாவத்தில் ஆழ்ந்து பந்துக்களிடத்தில் மனவிருப்பம் தலைக் கொண்டு வருத்த முற்றிருந்தான். அப்பால் மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அவையெல்லாம் மயனால் போதிக்கப்பட்ட ஸால்வன் ப்ரயோகித்த அஸுரமாயையென்று தெரிந்து கொண்டான். ஸ்வப்னங் கண்டு விழித்துக் கொண்டவன் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களைக் காணாததுபோல

மாயையென்று தெளிந்தறிந்த அவ்வச்சுதன் அப்பொழுதே யுத்தபூமியில் தாதனையாவது தன் தந்தையின் சரீரத்தையாவது காணவில்லை. பின்னையோவென்றால், ஸௌபவிமானத்தில் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற சத்ருவைக் கண்டு அவனை வதிக்க முயன்றான். ராஜர்ஷீ! சில ரிஷிகள் முன்பின் ஸந்தர்ப்பங்களை ஆராயாமல் இங்ஙனம் சொல்லுகிறார்கள். [1]இது தங்கள் வார்த்தையோடு விரோதிக்குமென்பதையுங்கூட அவர்கள் நினைக்கவில்லை. ஸமஸ்த வஸ்துக்களைப் பற்றின அறிவும் அவற்றின் உண்மையைப்பற்றின அறிவும் ஐஸ்வர்யமும் ஆகிய இவை அளவற்றிருப்பவனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய ஸர்வேஸ்வரனுக்கு ஜ்ஞானமில்லாத மூடர்களுக்கு உண்டாகக்கூடிய ஸோகமோஹங்களாவது ஸ்நேஹம் பயம் இவைகளாவது எப்படி ஸம்பவிக்கும்? பண்டிதர்கள் எவனுடைய பாதாரவிந்தங்களின் பரிசர்யையால் நிலைநின்ற ஆத்ம ஜ்ஞானத்தைப் பெற்று அனாதியாக ஏற்பட்டிருக்கிற தேஹாத்மப்ரமம்

1. ஸ்ரீக்ருஷ்ணன் ராஜஸூயத்திற்குப் போனபோது பலராமனுடன் போகவில்லை. பலராமனைப் பட்டணத்திலிருக்கும்படி நிறுத்திவிட்டுப் போனதாகவே முன்பு கூறப்பட்டது. ஸ்ரீக்ருஷ்ணன் இந்த்ரப்ரஸ்தத்திலிருக்கும்பொழுது ஸால்வன் வந்தானென்பதும் சரியன்று. 'ஸால்வனோடு யுத்தஞ்செய்துகொண்டிருந்தேனாகையால் உங்கள் த்யூதத்தைப் பற்றி எனக்குத் தெரியாமற் போய்விட்டது' என்று காம்யக வனத்திலிருந்த பாண்டவர்களுக்கு நல்வார்த்தை சொல்லும்பொழுது ஸ்ரீக்ருஷ்ணன் மொழிந்தானாகையால் ஸால்வயுத்தம் அதற்குப் பின்பு நடந்ததாகவே தெரியவருகிறது. ஆகையால் 'நான் என் தமையனாகிய பலராமனுடன் இவ்விடம் வந்துவிட்டேனாகையால் சத்ருக்கள் என் பட்டணத்தைப் பாழ்செய்வார்கள். ஆகையால் புறப்பட்டுப் போகவேண்டும்' என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு போனானென்பது சரியன்று.

ஸ்வதந்த்ராத்மப்ரமம்முதலிய விபரீதஜ்ஞானமாகிறபிசா சத்தைப் போக்கிக்கொள்கிறார்களோ; தங்களுக்கு ஸ்வ பாவஸித்தமான அபஹதபாப்மத்வம் முதலிய குணங் கள் தோன்றப் பெறுகையாகிற ஐஶ்வர்யத்தையும் பெறு கிறார்களோ; அத்தகையனும் ஸத்புருஷர்களுக்குக் கதி யுமாகிய பரமபுருஷனுக்கு மோக்ஷமென்பது எப்படி ஸம் பவிக்கும்? (அவன் பாதங்களில் பரிசர்யை செய்பவர்களு க்குங்கூட மோக்ஷம் உண்டாகாதென்றால் அவனுக்கு மோக்ஷம் உண்டாகாதென்பதைப்பற்றிச் சொல்லவேண் டுமோ?) எங்கும் தடைபடாத பராக்ரமமுடைய ஸ்ரீக்ருஷ் ணன் பலத்தினால் பாணஸமூஹங்களை ப்ரயோகித்து யுத்தஞ் செய்கின்ற ஸால்வனைப் பாணங்களால் அடித்து அவனுடைய கவசத்தையும் தனுஸ்ஸையும் சிரோமணி யையும் அறுத்தான்; ஸௌபவிமானத்தையும் கதை யினால் முறித்தான். அவ்விமானம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஹஸ்தத்தினால் ப்ரயோகிக்கப்பட்ட கதையினால் ஆயிரந் துணுக்கைகளாகச் சூர்ணமாகி ஸமுத்ர ஜலத்தில் விழுந்தது. அப்பால் ஸால்வன் அந்த ஸௌபவிமானத் தைத் துறந்து பூமியில் இறங்கி நின்று கதையை எடுத் துக்கொண்டு வேகமாக ஸ்ரீ க்ருஷ்ணனை எதிர்த்து வந் தான். அங்ஙனம் அவன் எதிர்த்தோடி வருகையில் ஸ்ரீக்ருஷ்ணன் தோள்வளைகளோடு கூடின அவன் கையைப் பல்லபாணத்தினால் அறுத்து உடனே அ வனை வதிக்கும்பொருட்டு ப்ரளயகாலத்து ஸூர்யனோ டொத்திருப்பதும் அற்புதமுமாகிய சக்ராயுதத்தை ஏந் திக்கொண்டு ஸூர்யனோடு கூடிய உதய பர்வதம்போல் ப்ரகாசித்தான். இந்த்ரன் வஜ்ராயுதத்தினால் வ்ருத்ரா ஸுரனுடைய சிரஸ்ஸை அறுத்தாற்போல, ஸ்ரீக்ருஷ் ணன் பலமாயைகளையுடைய ஸால்வனுடைய சிரஸ்ஸை

அந்தச் சக்ராயுதத்தினாலேயே அறுத்தான். அப்பொழுது ஜனங்கள் ஹாஹாவென்று சப்தஞ் செய்தார்கள். ஸௌபவிமானம் கதையால் முறிந்து பாபிஷ்டனாகிய அந்தஸால்வனும் முடிந்து விழுகையில் தேவகணங்களால் அடிக்கப்பட்ட தேவதுந்துபிவாத்யங்கள் முழங்கின. அப்பொழுது தந்தவக்த்ரன் தன்ஸ்னேஹிதர்களான ஸால்வாதிகளுக்கு உபகாரஞ் செய்யவிரும்பிக் கோபத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்து வந்தான். எழுபத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் தந்தவக்த்ர விதூரதர்களை வதித்தலும், தீர்த்தயாத்ரையாகச் சென்ற பலராமன ஸூதரை வதித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹாராஜனே! தந்தவக்த்ரன் தன் நண்பர்களும் பரலோகம் அடைந்தவர்களுமான சிசுபாலன் ஸால்வன் துர்ப்புத்தியான பௌண்ட்ரகன் இவர்களுக்குப் பரோக்ஷத்தில் ஸ்னேஹத்தினால் செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யமுயன்று மிகவும் கோபமுற்றுக் கையில் கதையை ஏந்தித் தனியனாகவே பதாதியாய் விரைந்து மிகுந்த பலமுடையவனாகையால் பூமியைப் பாதங்களால் நடுங்கச் செய்துகொண்டு ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்து வந்தான். ஸ்ரீக்ருஷ்ணன் அவன் அங்ஙனம் வருவதைக் கண்டு தானும் விரைவுடன் கதையை எடுத்துக்கொண்டு ரதத்தினின்றும் இறங்கி ஸமுத்ரத்தை அதன்கரை தடுப்பதுபோல அவனை எதிர்த்துத் தடுத்தான். கொடிய மதமுடைய தந்தவக்த்ரன் கதையை மேல் தூக்கிக்கொண்டு முகுந்தனைப் பார்த்து மொழிந்தான்.

தந்தவக்த்ரன் சொல்லுகிறான்:—எனக்கு மிகவும் ஸந்தோஷம் ஆயிற்று. ஏனென்றால், நீ தெய்வாதீனமாய் இப்பொழுது என் கண்ணில் பட்டனேயல்லவா? ஏக்ருஷ்ணா! நீ எங்களுக்கு அம்மான் பிள்ளை (ஸஹஜ மித்ரன்). ஆயினும் மித்ரர்களுக்கே த்ரோஹஞ் செய்பவனாகி என்னையும் கொல்ல விரும்புகின்றனை. ஆகையால் வஜ்ரம்போன்ற இக்கதையினால் உன்னை வதிக்கப் போகிறேன். நண்பர்களிடத்தில் மிகுந்த அன்புடைய நான் இப்பொழுது தேஹத்தில் தொடர்ந்து வருகின்ற வ்யாதியைப்போல் ம்ருத்யுவை விளைப்பவனும் பந்துரூபனான சத்ருவுமாகிய உன்னைக் கொன்று எனது நண்பர்களின் கடனைத் தீர்த்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—மாவெட்டிகளால் யானையை வருத்துவதுபோல் தந்தவக்த்ரன் பருஷ வசனங்களால் ஸ்ரீ க்ருஷ்ணனை வருத்திக்கொண்டு கதையினால் அவனைத் தலையில் அடித்து உடனே ஸிம்ஹம்போல் கர்ஜனை செய்தான். ஸ்ரீக்ருஷ்ணன் யுத்தத்தில் கதையினால் அடிக்கப்பட்டும் சிறிதும் சலிக்கவில்லை. பின்னையோவென்றால், பெரும் பளுவுடைய கௌமோதகியென்னும் தன் கதையால் காடமாக அவனை மார்பில் அடித்தான். அங்ஙனம் அடியுண்ட அந்த தந்தவக்த்ரன் அவ்வடியினால் நன்றாக ஹ்ருதயம் பிளவுண்டு முகத்தினின்று குருதியைக் கக்கிக்கொண்டு தலைமயிர்களையும் புஜங்களையும் பாதகங்களையும் பரப்பி ப்ராணன்களை இழந்து பூமியில் விழுந்தான். மன்னவனே! சிசுபால வதத்தில்போல ஸமஸ்த பூதங்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பதும் அற்புதமுமாகிய ஒரு தேஜஸ்ஸு ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் ப்ரவேசித்தது. அந்த தந்தவக்த்ரனுடைய

ப்ராதாவான விதூரதன் தன் ப்ராதாவான தந்தவக்த்ரன் மரண மடைந்தசோகத்தினால் மிகவும் வருந்திப் பெருமூச் செறிந்துகொண்டு கத்தி கேடயங்களை ஏந்தி அந்த ஸ்ரீக்ருஷ்ணனை வதிக்கவிரும்பி அவனை எதிர்த்து வந்தான். ராஜஸ்ரேஷ்டனே! ஸ்ரீக்ருஷ்ணன் கத்தியின் நுனிபோன்ற நுனியுடைய சக்ராயுதத்தினால் அவ் விதூரதனுடைய சிரஸ்ஸையும் கிரீட குண்டலங்களுடன் அறுத்துத் தள்ளினான். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் ஸௌப விமானத்தையும் ஸால்வனையும் தந்தவக்த்ரனையும் அவன் தம்பியாகிய விதூரதனையும் பொறுக்கமுடியாத மற்றுமுள்ள சத்ருக்களையும் வதித்து, தேவதைகள் மனுஷ்யர் முனிவர் ஸித்தர் கந்தர்வர் வித்யாதரர் பெருமை பொருந்திய உரகர் அப்ஸரமடந்தையர் பித்ருக்கள் யக்ஷர் கின்னரர் சாரணர் இவர்கள் தன் விஜயத்தைப் பாடிப் பூமழைகள் பொழியவும் வ்ருஷ்ணிஸ்ரேஷ்டர்கள் சூழ்ந்து வரவும் பெற்று அலங்காரஞ் செய்யப்பெற்ற பட்டணத்திற்குள் ப்ரவேசித்தான். யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனும் ஷாட்குண்ய பூர்ணனும் ஜகத்தை யெல்லாம் அடக்கியாள்பவனுமாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் இங்ஙனம் பிறரால் ஒருகால் ஜயிக்கப்பட்டு ஒருகால் தானும் அவர்களை ஜயிக்கிறானென்று பசுக்களோடொத்த அறிவுடைய மூடர்கள் நினைக்கிறார்கள். (அவன் ஒருவராலும் ஜயிக்கப்படாதவனாகவே யிருந்து பிறரை ஜயிக்கிறானென்பதை அறிகிறதில்லை). இப்படியிருக்க, பலராமன், கௌரவர்கள் பாண்டவர்களோடு யுத்தஞ்செய்ய முயன்றார்களென்று கேள்விப்பட்டு இருதரத்தவர்களும் பந்துக்களாகையால் தான் ஒருவரிடத்திலும் பக்ஷபாதமின்றி மத்யஸ்தனாகிப் புண்ய தீர்த்தஸ்னான மென்னும்

வ்யாஜத்தினுல் ஊரை விட்டுப் புறப்பட்டுப் போனுன். அவன் ப்ரபாஸ தீர்த்தத்தில் ஸ்னுனஞ் செய்து பித்ருக் கள் தேவதைகள் ரிஷிகள் மனுஷ்யர் இவர்களுக்குத் தர்ப்பணஞ் செய்து ப்ராஹ்மணர்களால் சூழப்பட்டு மேற்கு முகமாகப் பெருகுந் தன்மையுடைய ஸரஸ்வதி நதிக்குப் போனுன். ப்ருதூதகம் பிந்துஸரஸஸு த்ரி கூடம் ஸுதர்சனம் விசாலம் ப்ரஹ்மதீர்த்தம் சக்ரதீர்த் தம் த்ரிவேணி யமுனே அதைச் சேர்ந்த புண்ய தீர்த்தங் கள் கங்கை அதைச் சேர்ந்த புண்ய தீர்த்தங்கள் ஆகிய இப்புண்ய தீர்த்தங்களுக்குச் சென்று ரிஷிகள் ப்ரஹ்மஸத்ரம் நடத்துகிற நைமிசாரண்யத்திற்குச் சென்றுன். தீர்க்க ஸத்ரமென்னும் ப்ரஹ்ம ஸத்ரத்தை நடத்திக்கொண்டிருக்கிற சௌனகாதிகளான அம் முனிவர்கள் அந்த பலராமன் வருவதைக் கண்டு அபி நந்தித்து எழுந்து நமஸ்கரித்து விதிப்படி பூஜித்தார் கள். அப்பலராமன் தன்பரிவாரங்களுடன் பூஜிக்கப் பட்டு ஆஸனத்தில் உட்கார்ந்து மஹர்ஷியாகிய பாதரா யணருடைய சிஷ்யரான ரோமஹர்ஷணர் எழுந்திரா மலே உட்கார்ந்திருக்கக் கண்டான். ஸூதர் எழுந் திராமை மாத்ரமேயன்றி நமஸ்காரமாவது அஞ்சலி யாவது செய்யாமல் அந்த ப்ராஹ்மணர்களுக் கெல்லாம் மேலாக உயர்ந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருப்ப தைக் கண்டு பலராமன் கோபமுற்றுத் 'தாழ்ந்த ஜாதியில் பிறந்த இந்த ஸூதன் இந்த ப்ராஹ்மணர் களையும் தர்மத்தைப் பாதுகாப்பவர்களான நம்மையும் அலக்ஷ்யஞ் செய்து எந்தக் காரணத்தினுல் உயர்ந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கிறுன். ஒரு காரணத் தையும் காணேம். ஆகையால் துர்ப்புத்தி யுடைய இவன் வதிக்கத் தகுந்தவன். ஜ்ஞாஞதி குணங்கள்

நிறைந்த மஹானுபாவரான பாதராயண மஹர்ஷிக்குச் சிஷ்யனாகி இதிஹாஸ புராணங்களையும் பல தர்மசாஸ்த்ரங்களையும் முழுவதும் அத்யயனஞ் செய்து இந்த்ரிய நிக்ரஹமும் வணக்கமு மின்றி வீணாகவே தன்னைத் தானே பண்டிதனாக அபிமானித்துக்கொண்டிருக்கிற இந்த ஸூதனுக்கு அந்த இதிஹாஸாத்யயனம் முதலியவை அனைத்தும் மன அடக்கமில்லாத நடனுக்குப்போல் குணத்தை விளைவிக்க வல்லவையாக வில்லை. இதற்காகவன்றோ நான் இவ்வுலகத்தில் அவதாரஞ் செய்தது. கபடத்தினால் பெரியோர்களின் வேஷத்தைப் பூண்டு அதற்குரியபடி தர்மத்தை அனுஷ்டியாதிருப்பவர்கள் வதிக்கத் தகுந்தவர்களே. அவர்கள் பாதகிகளைக் காட்டிலும் மேற்பட்டவர்களல்லவா? அவர்கள் பெரும்பாபிஷ்டர்கள். (ஆகையால் துஷ்டர்களை அழிப்பதற்காக அவதரித்த நான் இத்தகையர்களை வதிப்பது அவஸ்யமே)' என்று இவ்வளவும் தன் மனத்திற்குள் சொல்லிக் கொண்டு மஹானுபாவனாகிய அப்பலராமன் அஸத்துக்களை வதிப்பதினின்று மீண்டிருப்பவனாயினும் அங்ஙனம் நடக்க வேண்டியிருக்கையால் கையிலிருந்த தர்ப்பத்தின் நுனியால் அந்த ரோமஹர்ஷணரை வதித்தான். அப்பொழுது முனிவர்கள் அனைவரும் ஹாஹாவென்று மொழிந்து கொண்டு மனவருத்த முற்று பலராமனைப் பார்த்து மொழிந்தார்கள்.

ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—ப்ரபூ! நீ அதர்மம் செய்தனை. யாதவகுமாரனே! நாங்கள் இந்த ஸூதருக்கு ப்ரஹ்மாஸனம் கொடுத்தோம். இந்த ப்ரஹ்ம ஸத்ரம் முடிகிறவரையில் தேஹஸ்ரம மில்லாத ஆயுளையும் கொடுத்தோம். ஆகையால் இந்த ஸூதவதம்

ப்ராஹ்மணவதம்போன்றது. இதை நீ தெரியாதவன் போல் செய்துவிட்டனை. நீ யோகேஸ்வரன். உனக்கு எவ்வித பாபமும் கிடையாது. நீ கர்மத்திற்கு உட்படாதவன். ஆகையால் 'ப்ராஹ்மணனை வதிக்கலாகாது' என்னும் சாஸ்த்ரமும் உன்னை நியமிக்கவல்லதன்று. உலகங்களை யெல்லாம் புனிதமாக்குந் தன்மையனே! ஆயினும் இந்த ப்ரஹ்மஹத்யையைப் போக்கவல்ல ப்ராயச்சித்தத்தைப் பிறரால் தூண்டப்படாமல் ஸ்வயமாகவே அனுஷ்டிப்பாயாயின், அப்பொழுது லோகஸங்க்ரஹும் செய்ததாம். (நீ வெறுமனே யிருப்பாயாயின், உலகத்திலுள்ள மற்றவரும் 'ராமனே ப்ராயச்சித்தம் அனுஷ்டிக்க வில்லையே நாம் ஏதுக்காக அனுஷ்டிக்க வேண்டும்?' என்று பாபத்தைச் செய்தும் ப்ராயச்சித்தத்தை அனுஷ்டிக்காமல் அழிந்து போய்விடுவார்கள். நீ அனுஷ்டிப்பாயாயின், உன்னை ப்ரமாணமாகக் கொண்டு மற்றவரும் அனுஷ்டித்து உஜ்ஜீவிப்பார்கள். ஆகையால் நீ லோகஸங்க்ரஹத்திற்காக இந்த ப்ரஹ்மஹத்யைக்கு ப்ராயச்சித்தம் அனுஷ்டிக்க வேண்டும்).

பலராமன் சொல்லுகிறான்:—மஹர்ஷிகளே! உலகத்தவர்களை அனுக்ரஹிக்கும்பொருட்டு இந்த ஸூதவத ரூபமான பாபத்திற்கு ப்ராயச்சித்தம் பண்ணிக் கொள்கிறேன். முக்யபக்ஷத்தில் என்ன நியமம் ஏற்பட்டிருக்கிறதோ, அதை எனக்கு விதிப்பீர்களாக. (முக்யமான ப்ராயச்சித்தத்தை உபதேசிப்பீர்களாக). மற்றும், இந்த ரோமஹர்ஷணருக்குத தீர்க்கமான ஆயுளும் இந்த்ரியங்கள் தளராதிருக்கையாகிற பலமும் மற்றும் ஏதேது நீங்கள் விரும்புகிறீர்களோ, அவற்றையும் சொல்வீர்களாயின். நான் என்னுடைய யோக

மாயையினால் அவற்றையெல்லாம் ஸாதித்துக் கொடுக்கிறேன்.

ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—நீ ப்ரயோகித்த தர்ப்பத்தின் நுனியாகிற ஆயுதம் உன் வீர்யம் இந்த ரோமஹர்ஷணருடைய மரணம் எங்கள் வார்த்தை ஆகிய இவை யெல்லாம் எப்படி உண்மையாகுமோ, அங்ஙனமே செய்வாயாக.

பலராமன் சொல்லுகிறான்:—தகப்பன்றானே பிள்ளையாகப் பிறக்கிறானென்று வேதங்கள் கூறுகின்றன. ஆகையால் இந்த ரோமஹர்ஷணருடைய பிள்ளையாகிய உக்ரஶ்ரவர் உங்களுக்குப் புராணம் சொல்லுவாராக. ஆயுள் இந்த்ரியம் பலம் இவற்றையும் பெற்றிருப்பாராக. (நேரே ரோமஹர்ஷணர் பிழைக்காமையால் என்னுடைய அஸ்த்ரமும் இவருடைய மரணமும் உண்மையாயின. புத்ரன் மூலமாய் ஆயுள் முதலியன ஸித்திக்கப் பெற்றுப் புராணஞ் சொல்லுகிறாராகையால் உங்கள் வசனமும் உண்மையாயிற்று). முனிஶ்ரேஷ்டர்களே! மற்றும் உங்களுக்கு என்ன விருப்பமோ அதைச் சொல்லுவீர்களாக. அதை நான் நிறைவேற்றுகிறேன். பண்டிதர்களே! மற்றும், ப்ரஹ்மஹத்தையைச் செய்து அதற்கு ப்ராயச்சித்தம் இன்னது செய்யவேண்டுமென்று தெரியாதிருக்கின்ற எனக்குத் தகுந்த ப்ராயச்சித்தத்தை உள்ளபடி ஆலோசித்து விதிப்பீர்களாக.

ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—ராமா! இல்வலனுடைய பிள்ளை பல்வலனென்னும் ஒரு அஸுரன் இருக்கிறான். அவன் பர்வந்தோறும் இவ்விடம் வந்து எங்கள் ஸத்ரயாகத்தைப் பாழ் செய்கிறான். தாசார்ஹனே! சீ ரக்தம் மலம் மூத்ரம் மத்யம் மாம்ஸம் இவைகளை வர்ஷித்து எங்கள் யாகத்தைக் கெடுக்கும்

பாபிஷ்டனாகிய அவ்வஸுரனை வதிப்பாயாக. அது எங்களுக்கு மேலான சுஶ்ரூஷையாம். அனந்தரம் மிகுந்த மனவூக்கத்துடன் பாரதவர்ஷத்தை ப்ரதக்ஷிணஞ் செய்து அப்பால் புண்ய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து கொண்டு பன்னிரண்டு மாதங்கள் ஸஞ்சரித்துச் சுத்தனாவாய். எழுபத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

பலராமன் பல்வலனை வதித்துத் தீர்த்தயாத்ரையை முடித்துக் கதாயுத்தஞ்செய்கிற பீமஸேன துர்யோதனர்களிடம் வந்து அவர்களுக்குப் புத்தி சொல்லியும் கேளாமையால் புறப்பட்டு நைமிசாரண்யஞ் சென்று யாகஞ் செய்தல்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—ராஜனே! அப்பால் பர்வகாலம் ப்ராப்தமாகையில் தூட்களைப் பெய்வதும் துர்க்கந்தமுடையதும் கொடியதும் பயங்கரமுமாகிய பெருங்காற்று முழுவதும் நிரம்பி வீசிற்று. அப்பால் பல்வலனால் நிர்மிக்கப்பட்ட அமேத்யமயமான மழை யாக சாலையில் பெய்தது. உடனே அப்பல்வலாஸுரனும் சூலாயுதத்தை ஏந்திக் கொண்டு வந்து புலப்பட்டான். பெருஞ்சரீரமுடையவனும் நன்கு இழைக்கப்பட்ட மெய்க்குவியலோடொத்தவனும் உருக்கப்பட்ட தாம்ரம்போன்ற தலைமயிர் மீசை தாடி இவைகளாலும் கோரைப்பல் புருவநெரிப்பு இவைகளாலும் பயங்கரமான முகமுடையவனுமாகிய அவ்வஸுரனைக் கண்டு சத்ருஸைன்யங்களைப் பிளக்கவல்ல முஸலாயுதத்தையும் அஸுரர்களை அழிக்கவல்ல ஹலாயுதத்தையும் நினைத்தான். அவையும் சீக்ரத்தில் கிட்டிநின்றன. அனந்தரம் பலராமன் கோபமுற்று ஆகாசசாரியான அவ்

வஸ்வலனைக் கலப்பையின் நுனியால் பிடித்திழுத்து ப்ராஹ்மணத்ரோஹஞ் செய்யுந் தன்மையனான அன்னவனைச் சிரஸ்ஸில் முஸலாயுதத்தினால் அடித்தான். அவன் அம்முஸலத்தின் அடியினால் நெற்றி பிளவுண்டு குருதி பெருகப் பெற்றுத் துக்கத்தினால் உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டு வஜ்ராயுதத்தினால் அடியுண்ட சிவந்த பர்வதம்போல் புவியில் விழுந்தான். மிகுந்த மதியும் பாக்யமுமுடையவனே! அப்பால் முனிவர்கள் பலராமனைத் துதித்து அவனுக்குப் பொய்யாகாத ஆசீர்வாதங்களைச் செய்து வ்ரத்ராஸுரனை வதித்த தேவேந்த்ரனுக்குத் தேவதைகள் அபிஷேகஞ் செய்தாற்போல அபிஷேகஞ் செய்தார்கள். மற்றும், அவர்கள் சோபைக்கு இடமாகி வாடாத தாமரைமலர்கள் கோக்கப்பெற்ற வைஜயந்தி யென்னும் மாலையையும் திவ்யமான வஸ்த்ரங்களையும் திவ்யமான ஆபரணங்களையும் பலராமனுக்குக் கொடுத்தார்கள். அனந்தரம் அந்தப் பலராமன் அம்முனிவர்களால் அனுமதி கொடுக்கப்பெற்று ப்ராஹ்மணர்களுடன் கௌசிகிநதிக்கு வந்து அங்கு ஸ்நானஞ்செய்து ஸரயூநதிக்கு உத்பத்திஸ்தானமாகிய ஸரோவரமென்னும் புண்ய தீர்த்தத்திற்குச் சென்று அதினின்று ஸரயுவின் ப்ரவாஹம் போகும் வழியைத் தொடர்ந்து ப்ரயாகத்திற்கு வந்து அங்கு ஸ்நானஞ் செய்து தேவர் முதலியவர்களுக்குத் தர்ப்பணஞ் செய்து புலஹாஸ்ரமத்திற்குச் சென்றான். கோமதி கண்டகி விபாசை இந்நதிகளிலும் சோணநதத்திலும் ஸ்நானஞ் செய்து கயைக்குச் சென்று அங்குப் பித்ருக்களை மானஸிகமாக ஆராதித்துக் கங்கை ஸமுத்ரத்தில் போய் விழுமிடத்திற்குச் சென்று ஸ்நானஞ் செய்து மஹேந்த்ர பர்வதத்திற்குச் சென்று அங்குப் பரசுராமனைக் கண்டு



MAHAMAHOPADHYAYA
DR. U.V.S. IYER LIBRARY

நமஸ்கரித்து ஸப்தகோதாவரி வேணி பம்பை பீமரதி என்னும் இப்புண்யநதிகளுக்குச் சென்று ஸுப்ரஹ்மண்யனைக் கண்டு ருத்ரனுக்கு வாஸஸ்தானமாகிய ஸ்ரீ பர்வதத்திற்குச் சென்றான். அப்பால் அந்த ராமன் த்ரவிடதேசங்களில் மிகவும் புண்யமான திருவேங்கடமலை, காமகோடி, காஞ்சீபட்டணம், நதிகளில் சிறந்த காவேரி மிகவும் புண்யமாயிருப்பதும் ஸ்ரீமந் நாராயணன் நித்யஸந்நிதானஞ் செய்யுமிடமுமாகிய ஸ்ரீரங்கக்ஷேத்ரம் ஸ்ரீவிஷ்ணுக்ஷேத்ரமாகிய திருமாலிருஞ் சோலைமலை தென்மதுரை இவற்றைக் கண்டு மஹத்தான பாபங்களை யெல்லாம் போக்கவல்ல ஸமுத்ரஸேதுவுக்குச் சென்றான். பலராமன் அங்கு ப்ராஹ்மணர்களுக்குப் பதினாயிரம் பசுக்களைக் கொடுத்தான். அப்பால் அம்மஹானுபாவன் க்ருதமாலை தாம்ரபர்ணி இந்நதிகளில் ஸ்நானஞ் செய்து மலயமென்னும் குலபர்வதத்திற்குச் சென்று அங்கு உட்கார்ந்திருக்கிற அகஸ்த்யருக்கு நமஸ்கரித்து அபிவாதனஞ் செய்து அவரால் ஆசீர்வாதஞ்செய்து அனுமதிகொடுக்கப்பெற்றுத் தெற்கு ஸமுத்ரஞ் சென்று கன்யாகுமாரி யென்னும் துர்க்காதேவியைக் கண்டு அவ்விடத்தினின்று அனந்தபுரஞ் சென்று ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஸந்நிதான முடையதாகையால் சிறப்புடைய பஞ்சாப்ஸரமென்னும் ஸரஸ்ஸுக்குச் சென்று அங்கு ஸ்நானஞ் செய்து பதினாயிரம் பசுக்களைக் கொடுத்தான். அனந்தரம் மஹானுபாவனாகிய அந்த ராமன் கேரளம் த்ரிகர்த்தம் இத்தேசங்களைக் கடந்து ருத்ரனுடைய ஸாந்நித்யம் மாறாதிருக்கப் பெற்ற சிவக்ஷேத்ரமாகிய கோகர்ண க்ஷேத்ரத்திற்குச் சென்று அங்கு த்வைபாயனி யென்னும் அம்பிகையைக் கண்டு அதினின்று சூர்ப்பாரகக்ஷேத்ரம் சென்றான். அப்

பால் தாபி பயோஷ்ணி நிர்விந்த்யை இந்நதிகளில் ஸ்நா னஞ்செய்து தண்டகாரண்யத்தில் நுழைந்து மாஹிஷ் மதீபுரத்தின் அருகாமையில் பெருகுகிற ரேவாநதிக் குச் சென்று அவ்விடத்தினின்று மனுதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து மீளவும் ப்ரபாஸதீர்த்தத்திற்கு வந்தான். அங்குப் பலராமன் குருக்களுக்கும் பாண்ட வர்களுக்கும் நடந்த யுத்தத்தில் இருவர்க்கும் ஸஹா யமாய் வந்த ராஜர்கள் அனைவரும் முடிந்தார்க ளென்று ப்ராஹ்மணர்கள் சொல்லிக் கொண்டிருப் பதைக் கேட்டுப் பூமியின் பாரம் நீக்கப்பட்டதென்று நினைத்தான். யாதவ குமாரனுகிய அந்தப் பலராமன் கதைகளால் யுத்தஞ் செய்கிற பீம துர்யோதனர்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு நாசம் அடை வதைத் தடுக்கவேண்டுமென்று அவ்விடம் சென்றான் யுதிஷ்டிரனும் க்ருஷ்ணார்ஜுனர்களும் அந்தப் பல ராமனைக் கண்டு அவனிடம் சென்று நமஸ்கரித்து என்ன சொல்ல விரும்பி வந்தாரோவென்று சங்கித்துப் பேசாதிருந்தார்கள். அந்தப் பலராமன், கதைகளைக் கையில் ஏந்திக் கோபாவேசமுற்று ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பி விசித்ரமான மண்டலகதிகளைச் செய் கின்ற பீமஸேன துர்யோதனர்களிருவரையும் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

பலராமன் சொல்லுகிறான்:—ராஜனே! துர்யோ தன! பீமஸேன! நீங்களிருவரும் துல்யபலமுடைய வீரர் களே. ஆயினும் ஒருவனுகிய பீமஸேனன் பலத்தில் அதிகனென்றும் மற்றொருவனுன துர்யோதனன் சிக்ஷை யில் (கதாயுத்தப்பயிர்ச்சியில்) அதிகனென்றும் நான் நினைக்கின்றேன். ஆகையால் ஸமான வீர்யர்களான உங்களிருவரில் ஒருவனுக்கு ஜயமும் மற்றொருவனுக்

குப் பராஜயமும் நேரிடுமென்று தோற்றவில்லை. ஆகை யால் வீணான இந்த யுத்தம் இவ்வளவோடு நிற்குமாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜகுமாரர்களான அந்த பீமதுர்யோதனர்கள் பலராமனால் இங்ஙனம் சொல்லப்பெற்றும் ஒருவர்மேல் ஒருவர் நிலைநின்ற வைரமுடையவர்களாகையால் ஒருவரை யொருவர் சொன்ன துர்ப்பாஷணங்களையும் ஒருவர்க்கொருவர் செய்த கெட்ட நடத்தைகளையும நினைத்து அந்தப் பலராமனுடைய வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. அப்பால் பலராமன் அவர்கள் தன் வசனத்தை ஏற்றுக் கொள்ளாமைக்கு அவர்களின்கர்மமே காரணமென்று நினைத்து த்வாரகாபுரிக்குச் சென்று ஸமஸ்த ஸம்பத்துக்களும் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்ற உக்ரஸேனன் முதலிய பந்துக்களோடு கலந்தான். மீளவும் அந்த ராமன் நைமிசாரண்யத்திற்குச் செல்ல அங்குள்ள ரிஷிகள் அனைவரும் மனக்களிப்புற்று, ஸமஸ்த விரோதங்களும் தீரப்பெற்ற மஹானுபாவனாகிய அப்பலராமனைக் கொண்டு அங்கங்களோடுகூடின யாகங்களால் யாகங்களைச் சரீரமாகவுடைய பரம புருஷனை ஆராதித்தார்கள். மஹானுபாவனும் ப்ரபுவுமாகிய பலராமனும் ஸம்சய விபர்யயங்களுக்கிடமின்றி ஜகத்தெல்லாம் பரமாத்மாவினிடத்தில் அமைந்திருப்பதையும் அப்பரமாத்மா ஜகத்தில் அமைந்திருப்பதையும் ஸாக்ஷாத்காரஞ் செய்விக்கவல்ல தத்வஜ்ஞானத்தை அந்த ரிஷிகளுக்கு உபதேசித்தான் அப்பலராமன் ஜ்ஞானிகளாலும் பந்துக்களாலும் நண்பர்களாலும் சூழப்பட்டுப் பத்னியுடன் அவப்ருதஸ்னானஞ் செய்து சிறந்த வஸ்த்ரங்களைத் தரித்து நன்றாக அலங்கரித்துக் கொண்டு தன் நிலவுடன்கூடின சந்த்ரன்போல் விளங்கினான் பலராமன் அநந்தனுடைய

அவதாரம். அவன் கணக்கிடமுடியாத கல்யாணகுணங்களுடையவன். அவன் தன் ஸங்கல்பத்தினால் மானிட உருவத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறான். அவன் மஹாபலமுடையவன். இத்தகைய பலராமனுடைய சரித்ரங்கள் இவற்றைப்போல் பற்பலவுமுண்டு. அவற்றை எம்மால் சொல்லிமுடியாது. ஆச்சர்யமான செயல்களையுடையவனும் அனந்தனுடைய அவதாரமுமாகிய பலராமனுடைய செயல்களை எவன் கேட்கிறானோ, எவன் சொல்லுகிறானோ, எவன் நினைக்கிறானோ, அவர்கள் மூவரும் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு மிகவும் அன்பராவார்கள். எழுபத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

நசேலோபாக்யானம்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹானுபாவரே! அளவிடமுடியாத ஸ்வரூபஸ்வபாவங்களுடையவனும் பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்கையாகிற பெருந்தன்மையுடையவனும் போகமோக்ஷங்களைக் கொடுப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமைகளை வெளியிடவல்ல அவன் செயல்களைக்கேட்க விரும்புகிறோம். நீர் அவற்றையெல்லாம் நன்றாகச் சொல்லவல்லவரல்லவா? ப்ரஹ்மரிஷீ! சப்தாதிவிஷயங்களைத் தேடித்திரிந்து அவை கிடையாமையால் வருந்துகை தவிர்ந்து பகவத்விஷயத்தில் ரஸமறிந்திருப்பானாயின் உத்தமச்லோகனான பகவானுடைய கதைகளை அடிக்கடி கேட்டும் எவன்தான் அதினின்று மீளுவான். (ரஸஜ்ஞனாயிருப்பானாயின் எவ்வளவு கேட்கினும் எவனும் அதினின்று மீளமாட்டான்). அளவற்ற ஸ்வரூபஸ்வபாவங்களையுடைய ஸ்ரீக்ருஷ்ணனுடைய குணங்களைச் சொல்லுமாயின் அந்த வாக்கே வாக்கு (பயன்பெற்றதாம்). அந்தப் பக

வானுடைய ஆராதனரூபமான கார்யங்களைச் செய்யுங் கைகளே கைகள் (பயன்பெற்றவையாம்). ஸ்தாவரங்களி லும் ஜங்கமங்களிலும் அந்தராத்மாவாய் வஸித்திருக் கின்ற பகவானை நினைக்கும் மனமே மனம். அவ னுடைய புண்ய கதைகளைக் கேட்கும் கர்ணமே கர் ணம் (காது). சேதனசேதனங்களைச் சரீரமாகவுடைய பகவானுடைய விபவாவதார உருவங்களையும் அர்ச்சா வதார உருவங்களையும் வணங்குந்தலையே தலை. அவ் வுருவங்களைக் காணும் கண்ணே கண். ஸ்ரீமஹாவிஷ் ணுவின் ஸ்ரீபாததீர்த்தத்தையாவது அவனுடைய பக் தர்களின் ஸ்ரீபாததீர்த்தத்தையாவது பணியும் அங்கங் களே அங்கங்கள். மற்றவை வீணே

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பரீக்ஷித்து மன்னவனால் வினவப்பெற்ற மஹானுபாவரான சுகமுனி வர் ஷாட்குண்ய பூர்ணனை வாஸுதேவனிடத்தில் ஆழ்ந்த மனமுடையவராகி மேல்வருமாறு மொழிந் தார்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—ப்ரஹ்மவித்துக்களில் சிறந்தவரும் சப்தாதிவிஷயங்களில் விருப்பமற்றவரும் மன அடக்கமுடையவரும் ஜிதேந்தரியரும் தெய்வாதீன மாய்க் கிடைத்த அன்னாதிகளைக் கொண்டு ஜீவிப்பவரும் க்ருஹஸ்தாஸ்ரமத்தி லிருப்பவரும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நண்பருமாகிய ஒரு அந்தணர் இருந்தார். குசேலரென் னும் பெயருடைய அவ்வந்தணருடைய பார்யை தெய் வாதீனமாய்க் கிடைத்ததைக் கணவனுக்குப் பரிமாறிப் பசியினால் இளைத்து அவரைப் போலவே இந்த்ரியங் களை அடக்கியாளுந்திறமையுடையவளும் பதிவ்ரதையுமா யிருந்தாள். அவள் தாரித்ரியத்தினால் வருந்தி நடுக்க முற்று அருகேவந்து ஒருகால் வாடியுலர்ந்த முகத்துடன்

தன் கணவனுன அவ்வந்தணரைக் குறித்து இங்ஙனம் மொழிந்தாள்

ப்ராஹ்மணி சொல்லுகிருள்:—ஓ ப்ராஹ்மணரே மஹானுபாவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் உமக்கு நண்பன். ப்ராஹ்மண விஸ்வாஸமுடையவன்; அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் நிறைவேற்றிக் கொடுக்குந்தன்மையன். தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்ற நான்கு வகைப் புருஷார்த்தங்களில் எதையேனும் பெற விரும்பிச் சரணம் அடையினும் அவர்களுக்கு அதை நிறைவேற்றிக்கொடுத்துக் காக்குந்தன்மையன்; ஜ்ஞானம் முதலிய ஷட்குணங்கள் அமைந்தவன். (ஆகையால் நீர் போன மாத்ரத்தில் உம்முடைய அபிப்ராயத்தை அறிந்து நிறைவேற்ற வல்லவன்); தன்னுடைய ஸௌசீல்யத்தின் மிகுதியால் ஸாத்வதஶ்ரேஷ்டனுய் அவதரித்திருக்கிருன். ஆகையால் அவன் தன் மேன்மையைக் கொண்டு நம்மை ஆதரிப்பானே மாட்டானேவென்று சங்கிக்க வேண்டியதில்லே. ஸாதுக்களான உம்மைப்போன்ற பெரியோர்களுக்குப் பரமகதியாயிருப்பவன். ஆகையால் அவனிடம் செல்வீராக. பெருங் குடும்பியும் ஏழ்மையினுல் வருந்துகின்றவருமாகிய உமக்கு அம்மஹானுபாவன் அளவற்ற பணம் கொடுப்பான். அவன் இப்பொழுது போஜர்கள் வ்ருஷ்ணிகள் அந்தகர்கள் இவர்களைப் பாதுகாத்துக் கொண்டு த்வாரகாபுரியில் இருக்கின்றுன்; தன் பாதாரவிந்தங்களை நினைப்பவர்களுக்குத் தன்னையுங் கொடுக்கும் ஜகத்குருவாகிய அப்பரமபுருஷன் இங்கிருந்து வெகுதூரம் சென்று வேண்டுகிற உமக்குக் கடைசியில் விரஸங்களாகையால் அவ்வளவு மேல்விழுந்து விரும்பத்தகாதவைகளான அர்த்தகாமங்களைக் கொடுப்பானென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—ம்ருதுஸ்வபாவமுடைய அவ்வந்தணர் இங்ஙனம் பார்யையால் வேண்டப் பெற்று 'உத்தமஸ்லோகனுடைய தர்சனம் நேருமாயின் இது நமக்குப் பெரிய லாபமல்லவா!' என்று மனத்தில் சிந்தித்துப் போக உத்தேசங் கொண்டார். அவர் தன் பார்யையைப் பார்த்து 'மங்களஸ்வபாவமுடையவளே! ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொண்டுபோய்க் கொடுக்க நம்க்ருஹத்தில் ஏதேனும் உபஹாரம் இருக்கிறதா?' என்று வினவினர். அவளும் அங்குள்ள ப்ராஹ்மணர்களிடம் சென்று நான்கு பிடி அவல் இரந்து கொண்டுவந்து அதைத் துணிக்கந்தலில் முடிந்து ஸ்ரீக்ருஷ்ணனுக்கு உபஹாரமாகக் கொண்டுபோகும்படி பர்த்தாவினிடம் கொடுத்தாள். அந்தணர்களில் சிறந்த அக்குசேலர் அதை வாங்கிக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனுடைய காட்சி எனக்கு எப்படி நேருமென்று சிந்தித்துக்கொண்டே த்வாரகைக்குச் சென்ருர். அவ்வந்தணர் மூன்று கோட்டைகளையும் மூன்று கட்டுக்களையும் கடந்து அணுகமுடியாத மஹா வீரர்களான அந்தகர் வ்ருஷ்ணிகள் ஆகிய இவர்களின் க்ருஹங்களி னிடையிலுள்ள ஸ்ரீக்ருஷ்ணமஹிஷிகளான பதினுயிரம் பெண்மணிகளின் மாளிகைகளுக்குள் மிகுந்த செல்வக்கிளர்த்தியுடைய ஒரு க்ருஹத்தைக் கண்டு ப்ரஹ்மாநந்தம் பெற்றவன் வைகுண்டத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மந்திரத்தில் ப்ரவேசிப்பதுபோல அந்த க்ருஹத்திற்குள் நுழைந்தான். அன்பிற்கிடமான காதலியின் படுக்கையில் வீற்றிருந்த ஸ்ரீக்ருஷ்ணன் தூரத்திலேயே அவ்வந்தணரைக் கண்டு தன்பக்தர்களைக் கைவிடாது காக்குந் தன்மையனுகையால் படுக்கையினின்று விரைந்தெழுந்து ஸந்தோஷத்துடன் அவ்வந்தணரை இரண்டுபுஜங்களாலும் அணைத்துக்கொண்டான்.

தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரியமுள்ள நண்பரும் ப்ரஹ்மர்ஷியுமாகிய அக்குசேலருடைய அங்கத்தை அணைத்தமையால் மிகவும் ஸந்தோஷம் அடைந்து ஸந்தோஷத்தின் மிகுதியால் கண்களினின்று நீர்த்துளிகளைப் பெருக்கினான். அப்பால் அம்மஹானுபாவன் அவரை மஞ்சத்தில் உட்காரவைத்து மிகுந்த நண்பராகிய அவருக்குத் தானே உபஹாரம் கொண்டுவந்து ஸமர்ப்பித்து அவருடைய பாதங்களை அலம்பி அந்த ஜலத்தை உலகங்களையெல்லாம் பாவனஞ் செய்யவல்ல அப்பரமன் தன்தலையில் தரித்துத் திவ்யமான வாஸனையுடைய சந்தனம்அகுரு குங்குமம் இவைகளை அவர்மேல் பூசினான். மற்றும், அவ்வக்ஷுதன் மிகுந்த வாஸனையுடைய தூபங்களாலும் தீபங்களாலும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களாலும் நண்பராகிய அவ்வந்தணரைப் பூஜித்துத் தாம்பூலத்தையும் பசுவையும் ஸமர்ப்பித்து நல்வரவாவென்று வினவினான். அழுக்கடைந்து இளைத்து உடம்பெல்லாம் நரம்புகள் நிறைந்திருக்கிற அந்தக்குசேலரை ஸ்ரீக்ருஷ்ணனுடைய பத்னியாகிய ருக்மிணி சாமரம் வீசுவது விசிறுவது முதலிய உபசாரங்கள் செய்து பூஜித்தாள். நிர்மலமான புகழுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அழுக்கடைந்த அவ்வந்தணரை மிகுந்த ப்ரீதியுடன் பூஜிப்பதைக் கண்டு அந்தப்புரத்துஜனங்கள் அனைவரும் வியப்புற்று 'அழுக்கடைந்தவரும் தரித்ரரும் இவ்வுலகில் நிந்திக்கத்தகுந்தவரும் அதமருமாகிய இந்தப்பிக்ஷுகர் என்ன புண்யம் செய்தாரோ? ஏனென்றால், மூன்றுலோகங்களுக்கும் குருவாகி ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் படுக்கையில் இருக்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மியைத் துறந்து இவரை வெகு மதித்துத் தன் தமையனைப்போல அணைத்துக்கொண்

டானல்லவா?" என்று ஒருவர்க்கொருவர் மொழிந்து கொண்டார்கள். ராஜனே! ஸ்ரீக்ருஷ்ணனும் குசேலரு மாகிய அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் கையைப் பிடித்துக்கொண்டு தாங்கள் முன்பு குருகுலத்தில் வஸிக்கும் பொழுது நடந்த அழகான கதைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—தர்மங்களை உணர்ந்தவரே! நீர் குருதக்ஷிணை கொடுத்துக் குருகுலத்தினின்று திரும்பிவந்து ஸமாவர்த்தன மென்னும் கர்மத்தை முடித்துத் தகுதியான பார்யையை மணம் புரிந்தீரா; இல்லையா? தத்வங்களை உணர்ந்த அறிஞரே! உம்முடைய மனம் சப்தாதி விஷயங்களைப் பற்றின விருப்பங்களால் தீண்டப்படாதிருக்கு மல்லவா? ஆகையால் உமக்கு இல்லறவாழ்க்கையில் மனம் ருசிக்காதென்று நினைக்கிறேன். மற்றும், பணத்தில் உமக்கு அவ்வளவாக ப்ரீதி கிடையாதென்பதும் எனக்குத் தெரியும். சிலர் சப்தாதிவிஷயங்களைப் பற்றின விருப்பங்களால் இழுக்கப்படாத மனமுடையவராயினும் மோக்ஷத்தில் விருப்பமுற்றுத் தேவனுடைய மாயையைத் துறக்க முயன்று நான் லோகஸங்க்ரஹத்திற்காகச் செய்வதுபோலப் பலன்களை விரும்பாமல் நித்யநைமித்திகாதி கர்மங்களை அனுஷ்டிக்கின்றார்கள். (அதற்காக இல்லறவாழ்க்கையையும் ஏற்றுக்கொள்கிறார்கள். அங்ஙனமே நீரும் இல்லறவாழ்க்கையை ஏற்றுக் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது). அந்தணரே! அந்தணன் எதனால் அறியத்தகுந்த ஆத்மபரமாத்ம ஜ்ஞானத்தை அறிந்து அஜ்ஞானத்தினின்று மீண்டு மோக்ஷத்தை அடைவானோ, அப்படிப்பட்ட குருகுலவாஸத்தை நாம் அனுஷ்டித்துக் கொண்டிருக்கும்பொழுது நடந்ததெல்லாம் உமக்கு

நினைவிருக்கிறதா? ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் வைஸ்யர் என்கிற மூன்று வர்ணத்தவர்களுக்கும் அந்தக் குருகுல வாஸம் ஸத்கர்மங்களை அனுஷ்டிப்பதற்குக் காரணமா யிருக்கும். இந்தக் குருகுலவாஸத்தில் ப்ரஹ்மசர்யா ஸ்ரமத்திலிருப்பவர்களுக்குக் குரு என்னைப்போல் ஜ்ஞா னோபதேசம் செய்கிறாரல்லவா? (அந்த ஜ்ஞானத்தினால் செய்யவேண்டிய ஸத்கர்மங்களை அறிந்து நடத்துகிறார் களாகையால் குருகுலவாஸம் ஸத்கர்மங்களுக்குக் கார ணமாயிருக்கும். ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! இந்த ஸம் ஸாரத்தில் தேஹபந்தத்தை விளைக்கிறவன் முதன்மை யான குரு. ப்ராஹ்மணன் முதலிய மூன்று வர்ணத்தவர் களுக்கும் ஸத்கர்மங்களை அனுஷ்டிப்பதற்குக் காரண மான உபநயன ஸம்ஸ்காரத்தைநடத்தி வேதங்களை ஓது விப்பவன் இரண்டாங்குரு. ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஸ்ர மங்களில் இருப்பவர்கள் அனைவர்க்கும் ஜ்ஞானோபதே சஞ்செய்பவன் மூன்றாங்குரு. அவனை நேரே என்னைப்போ லவே பாவிக்க வேண்டும். (நானே ஆசார்யன் மூலமாய் அவரவர்களுக்கு ஜ்ஞானோபதேசஞ் செய்கிறேனாகை யால் ஜ்ஞானோபதேசஞ்செய்யுங் குருவை என்னைப்போல வே பாவிக்கவேண்டும்). ப்ராஹ்மணரே! இந்த ஸம்ஸா ரத்தில் ஸமஸ்தவர்ணங்களிலும் ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஸ்ரமமுடையவர்களிலும் எவர் குருஸ்வரூபனான என் னால் ஜ்ஞானோபதேசம் செய்யப்பெற்று ஸுகமாக ஸம் ஸாரமாகிற ஸமுத்ரத்தைத் தாண்டுகிறார்களோ, அவர் களே தங்கள் புருஷார்த்தங்களை நிறைவேற்றிக் கொள் ளுந் திறமையுடையவர்கள். ஸமஸ்த பூதங்களுக்கும் அந் தராத்மாவாகிய நான் குருஸுஸ்ரூஷையினால் ஸந்தோ ஷம் அடைவதுபோலப் பஞ்சமஹாயஜ்ஞங்களை அனுஷ் டிக்கையாலாவது நற்குலத்தில் பிறவியாலாவது உபவா

ஸம் முதலிய வ்ரதங்களை அனுஷ்டிக்கையாலாவது இந்த்ரியங்களை அடக்கி யாள்கையாலாவது ஸந்தோஷம் அடையமாட்டேன். அந்தணரே! நாம் குருகுலவாஸஞ் செய்யும்பொழுது ஒருகால் குருபத்னியால் கட்டைகள் கொண்டுவரும்படி தூண்டப்பட்ட நமக்கு ஒன்று நடந்ததே; அது உமக்கு நினைவிருக்கிறதா? மழைக் கிடமான வர்ஷருது போயிருக்கையில் அகாலத்தில் நாம் காஷ்டங் கொண்டுவருவதற்காகப் பெரிய அரண்யத்தில் ப்ரவேசிக்கக் காற்றும் மழையும் கடோரமான இடிகளும் உண்டாயின. அப்பொழுது ஸூர்யனும் அஸ்தமித்தான். திசைகளெல்லாம் இருள் மூடப்பெற்றன. மேடும் பள்ளமும் ஆகிய எல்லா இடங்களும் ஜலமயமாயின. ஆகையால் மேடென்றும் பள்ளமென்றும் ஒன்றும் தெரியவில்லை. நாம் அந்த ஜலப்ரவாஹத்தில் பெருங்காற்றினாலும் ஜலத்தினாலும் மிகவும் பீடிக்கப்பட்டுத் திசைகளை அறியாமல் வருந்தி ஒருவர்க்கொருவர் கையைப் பிடித்துக்கொண்டு வனமெல்லாம் சுற்றினோம். நங்குருவாகிய ஸாந்தீபினி நாம் இங்ஙனம் வருந்துவதை அறிந்துகொண்டு ஸூர்யன் உதயமாகையில் தேடிக்கொண்டு வந்து நம்மைக் கண்டு மொழிந்தார்.

ஸாந்தீபினி சொல்லுகிறார்:—ஓ என்னருமைப் புதல்வர்களே! ப்ராணிகளுக்குத் தேஹம் மிகவும் அன்பிற்கிடமாயிருக்குமல்லவா? நீங்கள் அத்தகைய தேஹத்தையும் அனாதரித்து எனக்குப் பணிவிடை செய்வதில் மனவூக்கமுற்று என்ப்ரயோஜனத்திற்காக மிகவும் வருத்தமுற்றீர்கள். மனத்தூய்மையுடன் ஸர்வப்ரகாரத்தாலும் குருவுக்குச் சரீரத்தை அர்ப்பணஞ் செய்கையாகிற இவ்வளவே நல்ல சிஷ்யர்கள் தங்கள் குருவுக்குச் செய்ய வேண்டிய ப்ரத்யுபகாரமாம். இருபிறப்பினர்களில் சிறந்

தவர்களே! நான் உங்களிடத்தில் மிகவும் ஸந்தோஷம் அடைந்தேன். உங்கள் விருப்பங்களெல்லாம் உண்மையாய்ப் பலிக்குமாக. என்னிடத்தினின்று நீங்கள் ஓதின வேதங்களெல்லாம் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் விருப்பங்களை யெல்லாம் நிறைவேற்றிக் கொடுக்க வல்ல வீர்யமுடையவைகளாயிருக்குமாக.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—(அந்தணரே! நங் குரு இங்ஙனம் நம்மை அனுக்ரஹித்தாரல்லவா?) நாம் குருகுலத்தில் வஸிக்கும்பொழுது இத்தகைய வ்ருத்தாந்தங்கள் பலவும் நடந்தன. (அவையெல்லாம் நமக்கு நினைவில்லையா?) இவ்வுலகத்தில் புருஷன் குருவினுடைய அனுக்ரஹத்தினால்தான் தன் மனோரதங்களெல்லாம் நிறைவேறப் பெற்று மிகுந்த சாந்தியையும் பெறுவான்.

ப்ராஹ்மணர் சொல்லுகிறார்:—தேவர்க்கும் தேவனே! உலகங்களுக்கெல்லாம் குருவே! ஸத்யஸங்கல்பனாகிய உன்னுடன் குருகுலவாஸம் நேரப்பெற்ற எனக்கு எதுதான் கைகூடாது? (ஸத்யஸங்கல்பனாகிய நீ குருகுலவாஸமிருந்தது எங்கள் மனோரதத்தை நிறைவேற்றும் பொருட்டேயன்றி மற்றொரு ப்ரயோஜனத்திற்காகவன்று. ஸர்வஜ்ஞனும் ஸத்யஸங்கல்பனுமாகிய உனக்குக் குருகுலவாஸத்தினால் ஆகவேண்டியது என்ன இருக்கிறது?) அளவற்ற மஹிமையுடைய வேதங்களெல்லாம் எவனுடைய தேஹமோ, எவனுடைய தேஹம் ஸமஸ்த புருஷார்த்தங்களுக்கும் விளைநிலமாயிருக்கின்றதோ, அத்தகைய நீ குருகுலத்தில் வாஸஞ்செய்தது உலக நீதியை அனுஸரிப்பதற்காகச் செய்த கார்யமேயன்றி வேறன்று. எண்பதாவது அத்யாயம் முற்றிற்று.

—••—◆ குசேல வ்ருத்தாந்தம். ◆—••—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் ப்ராஹ்மண ஸ்ரேஷ்டராகிய அந்தக் குசேலருடன் பேசிக்கொண்டிருந்து ஸமஸ்த ப்ராணிகளுடைய மனோபாவத்தையும் அறிந்தவனாகையால் எனக்காக அவல் கொண்டுவந்தும் அதைக் கொடுக்க வெட்கப்படுகிறாரென்று தெரிந்துகொண்டு அவ்வந்தணரைக் குறித்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ப்ராஹ்மணரே! உம்முடைய க்ருஹத்தினின்று எனக்கு என்ன உபஹாரங் கொண்டுவந்தீர். என பக்தர்கள் ப்ரீதியுடன் எனக்கு எதைக் கொடுப்பார்களோ அது அற்பமாயினும், அதுவே எனக்குப் பெரிதாயிருக்கும். என்னிடத்தில் பக்தியில்லாதவர் எனக்கு அபாரமாகக் கொடுப்பினும் அது எனக்கு ஸந்தோஷத்தின் பொருட்டு ஆகாது. எவனேனும் இலையையாவது பூவையாவது பழத்தையாவது எனக்குப் பக்தியுடன் கொடுப்பானாயின், தூயமனமுடைய அவன் பக்தியுடன் கொடுத்த அதையெல்லாம் நான் சாப்பிடுவேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! அந்த ப்ராஹ்மணர் ஸ்ரீக்ருஷ்ணனால் இங்ஙனம் மொழியப் பெற்றும் வெட்கமுற்றுத் தலையை வணக்கிக்கொண்டு ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தான் கொண்டுவந்த அவல்பிடியைக் கொடாமலேயிருந்தார். ஸமஸ்த ப்ராணிகளின் மனத்தை அறிபவனும் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிப்பவனுமாகி அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ப்ராஹ்மணருடைய வரவின் காரணத்தை அறிந்து தான் செய்ய வேண்டியதைப்



2737 குசேலர் கொண்டுவந்த அவலை ஸ்ரீக்ருஷ்ணன் சாப்பிடுதலும், ருக்மிணிதேவி போதுமென்று தடுத்தலும்.

பற்றித் தனக்குள் சிந்தித்தான். 'இவர் முன்பு செல்வம் வேண்டு மென்னும் விருப்பத்துடன் என்னைப் பணிய வில்லை. என்னுடைய நண்பராகிய இவர் இப்பொழுது பதிவ்ரதையான தன்பார்யைக்கு ப்ரியஞ் செய்யவிரும்பி யென்னிடம் வந்தார். தேவர்களுக்கும் கிடைக்க அரிய ஸம்பத்துக்களை நான் இவருக்குக் கொடுக்கவேண்டும்' என்று ஸ்ரீக்ருஷ்ணன் தனக்குள் சிந்தித்து அவ்வந்த ணர் துணிக்கந்தலில் கட்டிக்கொண்டு வந்திருக்கிற அவலை இது வென்னென்று தானே பிடுங்கிக்கொண்டு 'நண்பரே! இதோ கொண்டுவந்திருக்கிறீரே. இது எனக்கு மிகவும் ஸந்தோஷத்தை விளைப்பதல்லவா? இந்த அவல்கள் ப்ரபஞ்சத்தையெல்லாம் சரீரமாக வுடைய என்னை மிகவும் த்ருப்தி அடையச் செய் கின்றன' என்று மொழிந்து ஒருபிடியவல் எடுத்துப் புசித்து இரண்டாம் பிடி எடுத்தான். அவ்வளவில் ஸ்ரீம ஹாலக்ஷ்மியாகிய ருக்மிணி அதைச் சாப்பிட வொட் டாமல் விரைவுடன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கரத்தைப் பிடித்துக் கொண்டு 'ப்ரபஞ்சத்திற்கெல்லாம் அந்த ராத்மாவாகி அதையெல்லாம் சரீரமாகவுடையவ னே! இந்த ஒருபிடியவல் சாப்பிட்ட மாத்ரத்திலே யே புருஷனுக்கு இஹத்திலாவது பரத்திலாவது ஸம ஸ்த ஸம்பத்துக்களும் விளையுமே. ப்ரபஞ்சஸ்வரூபி யான உமக்கு ஸந்தோஷத்தை விளைக்க இவ்வள வே போதுமாயிருக்க இரண்டாம் பிடியும் சாப்பிட்டு என்ன செய்யப் பார்க்கிறீரோ தெரியவில்லையே. என் னையுங்கூட இவ்வந்தணர் பின்னோடனுப்பப் பார்க்கிறீரா என்ன? ஆகையால் இவ்வளவே போதும்' என்று மொழிந்தாள். அவ்வந்தணர் ஸ்ரீக்ருஷ்ணனுடைய திரு மாளிகையில் புசித்துப் பருகி அன்றிரவெல்லாம் ஸுக

மாக வஸித்திருந்து தன்னை ஸ்வர்க்கவாஸியாக நினைத்துக் கொண்டார். மற்றைநாள் பொழுது விடிகையில் அவர் ஜகத்திற்கெல்லாம் க்ஷேமத்தை விளைப்பவனும் நண்பனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் அபிநந்தனஞ் செய்து அனுமதிகொடுத்துக் கொஞ்ச தூரம் தொடர்ந்து வழிவிட்டு வந்தனமுஞ் செய்யப்பெற்றுத் தன் க்ருஹத்திற்குச் சென்றார். அவ்வந்தணர் தன் நண்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தினின்று தனம் கிடைக்கப் பெறாமல் தானும் 'எனக்குப் பணம் வேண்டும்' என்று யாசிக்காமல் வெட்கமுற்று மஹானுபாவனான பகவானுடைய காட்சி நேர்ந்தமையால் ஸந்தோஷம் அடைந்து தன் க்ருஹத்திற்குச் சென்றார். அவர் போகும் பொழுது தனக்குள் சிந்தித்தார். 'ஆ! என்ன ஆச்சர்யம்! ஸ்ரீக்ருஷ்ணன் ப்ராஹ்மண விஶ்வாஸமுடையவர்களில் சிறந்தவனென்று கேள்விப்பட்டிருக்கிறேன். ப்ராஹ்மணர்களைத் தெய்வம்போல் கொண்டாடுகையாகிற அவன் தன்மையை இப்பொழுது நேரில் கண்டனுபவித்தேன். ஏனென்றால், மிகவும் தரித்ரனாகிய நான் மார்பில் ஸ்ரீமஹாலக்ஷ்மியைத் தரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணனால் அணைக்கப்பெற்றேனல்லவா? தரித்ரனும் பாபிஷ்டனுமாகிய நான் எங்கே? ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் எங்கே? ஆயினும் ப்ராஹ்மணனென்றன்றோ என்னை ஸ்ரீக்ருஷ்ணன் புஜங்களால் அணைத்துக் கொண்டான். மற்றும், தனது அன்பநாயகியான ஸ்ரீமஹாலக்ஷ்மி வீற்றிருக்கத் தகுந்த படுக்கையில் அவன் என்னை ப்ராதாவைப்போல் உட்காரவைத்துச் சாமரத்தைக் கையில் ஏந்திக் கொண்டிருக்கிற தன்பார்யையுடன் வணக்கமுற்று எனக்கு விசிறினான். தேவர்களுக்குத் தேவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரா

ஹ்மணர்களையே தனக்குத் தெய்வமாகவுடையவனுகை யால் கால்களைப் பிடிப்பது முதலிய உபசாரங்களால் மிகுந்த சுஶ்ரூஷை செய்து என்னைத் தேவதையைப் போல் பூஜித்தான். அவனுடைய பாதாரவிந்தங் களில் செய்யும் பூஜை ப்ராணிகளுக்குப் பாதாளம் பூமி ஆகிய இவற்றிலுள்ள ஸமஸ்த ஸம்பத்துக்களையும் ஸம ஸ்த ஸித்திகளையும் ஸ்வர்க்க மோக்ஷங்களையும் விளைக் கும். ஆயினும், 'பணமில்லாமையால் இப்பொழுது என் னையே நினைத்துக்கொண்டு சாந்தனுயிருக்கிற இவன் பணத்தைப் பெற்ருல் மிகவும் மதித்து என்னை நினைக்க வேமாட்டான்' என்று நினைத்துக் கருணையுடைய ஸ்ரீக் ருஷ்ணன் எனக்கு அபாரமாகப் பணத்தைக் கொடுக்க வில்லை' என்று அந்தப் பகவானுடைய குணங்களைச் சிந் தித்துக்கொண்டே தன்க்ருஹத்திற்கு அருகாமையில் சென்ருர். அந்த க்ருஹமோ வென்ருல் ஸூர்யன் அக் னி சந்த்ரன் இவர்களோடொத்த விமானங்களாலும் பறவைகள் குலாவப் பெற்றவைகளும் ஆம்பல் தாமரை செங்கழுநீர் நெய்தல் இவை மலர்ந்த ஜலாதாரங்கள் அமைந்தவைகளும் விசித்ரங்களுமான உபவனங்களா லும் உத்யானவனங்களாலும் நன்கு அலங்கரித்துக்கொ ண்டிருக்கிற புருஷர்களாலும் அங்ஙனமே நன்ருக அ லங்காரங்களை அணிந்து மானமருமென்னேக்கியர்களு மான மடந்தையர்மணிகளாலும் நாற்புறத்திலும் சூழப் பட்டிருந்தது. அவ்வந்தணர் அதைக் கண்டு 'இதெ ன்ன? இது யாருடைய இடம்? என்னுடையதேயாயின் அது எங்ஙனம் இத்தகையதாயிற்று'? என்று சிந்தித் துக் கொண்டிருக்கையில், தேவதைகளோடொத்த ஒளி யுடைய புருஷர்களும் ஸ்த்ரீகளும் மஹானுபாவராகிய அவரைப் பெரிய ஸங்கீதத்தோடும் வாத்யங்களோடும்

எதிர்கொண்டார்கள். அவருடைய பார்யை தன்கணவன் வந்திருப்பதைக் கேட்டு ப்ரேமத்தினாலும் மிகுந்த ஸந்தோஷத்தினாலும் மிகவும் பரபரப்புற்று உருவங்கொண்ட ஸ்ரீமஹாலக்ஷ்மிபோல் க்ருஹத்தினின்று விரைவுடன் புறப்பட்டு வந்தாள். பதிவ்ரதையாகிய அம்மடந்தையர்மணி தன்கணவனைக் கண்டு ப்ரீதியாலும் நெடுநேரம் காணாத ஆவலாலும் கண்களில் நீர் பெருகப்பெற்றுக் கண்களை மூடிக்கொண்டு அவரைப் புத்தியினால் வணங்கி மனத்தினால் அணைத்துக்கொண்டாள். அவ்வந்தணர் விமானத்திலேறிய தெய்வமடந்தைபோல் திகழ்கின்றவளும் கழுத்தில் பொன்பதகங்களை அணிந்த தாதிகளினிடையில் ப்ரகாசிக்கின்றவளுமாகிய தன்பத்னியைக் கண்டு மிகவும் வியப்புற்று அந்தப் பார்யையுடன் ரத்னமயமான ஸ்தம்பங்களின் ஸமூஹங்களோடுகூடித் தேவேந்த்ரபவனம்போன்ற தன் க்ருஹத்திற்குள் நுழைந்தார். அவர், பால் நுரைபோல் மென்மையும் வெண்மையும் அமைந்த படுக்கைகளும் யானைத்தந்தங்களால் இயற்றப்பட்டு ஸ்வர்ணமயமான கருவிகளும் அமைக்கப்பெற்ற மஞ்சங்களும் பொற்பிடி யிடப்பெற்ற சாமரங்களும் மெதுவான மெத்தைகள் இடப்பெற்ற ஸ்வர்ணமயமான ஆஸனங்களும் முத்துச் சரங்கள் தொங்க விடப்பெற்று மிகுந்த ஒளியுடையவைகளுமான மேற்கட்டுக்களும் நிர்மலமான ஸ்படிக ரத்னங்களால் எடுக்கப் பட்டவைகளும் விலையுயர்ந்த மரகத ரத்னங்கள் அமைக்கப் பெற்றவைகளுமான சுவர்களில் திகழ்கின்ற ரத்னதீபங்களும் மடந்தையர்மணிகளும் நிறைந்திருக்கிற அம்மாளிகையில் ஸமஸ்த ஸம்பத்துக்களும் ஸம்ருத்தமாயிருக்கக் கண்டு ப்ரமித்து நின்று ஒரு காரணமு மில்லாமல் இந்த ஸம்

ருத்தி நமக்கு எப்படி நேரிட்டது?" என்று சிந்தித்தார். மீளவும் அவர் தனக்குள் 'பாக்யமற்றவனும் ஸர்வ காலமும் தரித்ரனுமாயிருக்கிற எனக்கு இந்த ஸம்பத்து நேரிட்டதற்குக் காரணம் உபயவிபூதி நாயகனும் யாதவஸ்ரேஷ்டனுமாகிய ஸ்ரீ க்ருஷ்ணனுடைய தர்சனமே யொழிய மற்றொன்றும் காரணமாக அமையாது. அளவற்ற யோகத்தையுடைய பகவான் யாசகனுக்கு அபாரமான செல்வத்தைக் கொடுப்பதாயிருப்பினும் 'கொடுக்கிறேன், வாங்கிக்கொள்' என்று சொல்லாமலே பரோக்ஷத்தில் கொடுக்கிறான். (ப்ரஹ்மபதம் வரையிலுள்ள ஐஸ்வர்யத்தைக் கொடுப்பினும் தன் போகத்தைக் காட்டிலும் அது மிகவும் அற்பமாகையால் அதைக் கொடுக்க லஜ்ஜித்துத் தான் நேரில் கொடுக்கிறதில்லை. மேகம் ஒருகால் அமிதமாக மழை பெய்யினும் அதைத் தன் சக்திக்கு அற்பமாகவே நினைத்து ராத்ரியில் ஜனங்கள் படுத்துறங்கும்பொழுது கர்ஜனை செய்யாமல் பரோக்ஷத்தில் மழை பெய்வது போல, யாதவஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் தன் பக்தன் ஸமர்ப்பிப்பது அற்பமாயினும் அதை வெகுவாக அபிமானித்து விருப்ப முள்ளவர்களுக்கு அவர்கள் விரும்பும் புருஷார்த்தங்களை யெல்லாம் பெய்கின்றான். ஸ்ரீ க்ருஷ்ணன் தான் கொடுப்பது அளவற்றிருப்பினும் அதை அற்பமாகவே நினைக்கின்றான். தன் பக்தன் ஸமர்ப்பிப்பது அற்பமாயினும் அதை வெகுவாக நினைக்கின்றான். நான் கொண்டுபோன ஒரு அவல்பிடியை மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பெரிய ப்ரீதியுடன் அங்கீகரித்தான் அல்லவா? உபயவிபூதி நாதனாகிய அப்பரமனுக்கு அதனால் ஆகவேண்டியது என்ன இருக்கிறது? ஆயினும் அது கிடைக்கப் பெறாதவன்

போல் பெரிய ஆவலுடன் அதை மேல்விழுந்து பிடுங்கிக்கொண்டு புசித்தானல்லவா?) ஆகையால் அந்த மஹானுபாவனே எனது ஜன்மங்கள்தோறும் ஹிதமுரைக்கும் ஸுஹ்ருத்தும் ப்ரீதிக்கிடமான நண்பனும் ஆபத்துக்களில் பாதுகாக்கிற மித்ரனுமாவானாக. (அந்தப் பகவானோடேயே எனக்கு ஜன்மங்கள்தோறும் எல்லாவிதத்திலும் ஸ்னேஹம் விளையுமாக). மற்றும், அவனுக்கே நான் ஜன்மங்கள்தோறும் தாஸனாயிருப்பேனாக. அளவற்ற கல்யாண குணங்களுடையவனும் மஹானுபாவனுமாகிய பகவானோடு இடைவிடாமல் ஸஹவாஸம் செய்வேனாயின், எனக்கு அவனுடைய பக்தர்களோடு மிருந்த ஸஹவாஸம் நேருமல்லவா? (ஆகையால் ஜன்மங்கள்தோறும் அவனுடைய ஸஹவாஸத்தையே வேண்டுகிறேனன்றி இந்த ஐஶ்வர்யத்தை விரும்பவில்லை.) நான் பகவானிடத்தில் பக்தியுடையவனாயிருப்பேனாயின், எனக்குப் பகவான் ஐஶ்வர்யம் கொடுத்தது ஆச்சர்யமே. எனக்கு ஐஶ்வர்யங் கொடுத்தமையால் என்னைப் பக்தனன்றென்றே நினைக்கிறேன். ஏனென்றால், கர்மத்தினால் விளையும் பிறவியற்ற பகவான் பணமுடையவர்களுக்கு மதம் உண்டாவதையும் அவர்கள் நரகத்தில் விழுவதையும் அவர்களுக்கு அது அத்தகைய அவிவேகத்தை விளைப்பதையும் ஆலோசித்து ஸமர்த்தனாகையால் தன்பக்தர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தானரூபமான ஸம்பத்துக்களையாவது ராஜ்யத்தையாவது பிள்ளை பசு பணம் முதலிய விபூதிகளையாவது கொடுக்கிறதில்லை. ஆகையால் அவன் எனக்குத் தன்னிடத்தில் மேன்மேலும் பக்தியையே விளைப்பானாக என்று விவேகபுத்தியினால் நிச்சயித்துப் பகவானிடத்தில்

மிகுந்த பக்தியுடையவராகிச் சப்தாதிவிஷயங்களை மெல்ல மெல்லத் துறக்க முயன்று அவற்றில் அவ்வளவு ஆவலின்றிப் பார்வையுடன் அவற்றை அனுபவித்துக் கொண்டு வந்தார். ப்ரபூ! (இணையெதிரில்லாத பகவான் மிகவும் தரித்ரனாகிய ப்ராஹ்மணனை எதற்காக இங்ஙனம் ஆதரித்தானென்று சங்கிக்க வேண்டாம்!) ஏனென்றால், யஜ்ஞங்களுக்கு நிர்வாஹகனும் ப்ரஹ்ம தேவன் முதலிய தேவர்களுக்கும் தேவனும் தன் பக்தர்களின் வருத்தங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பகவானுக்கு ப்ராஹ்மணர்களே ப்ரபுக்களும் தெய்வமும்; அவனுக்கு அவர்களைக்காட்டிலும் வேறொரு தெய்வம் கிடையாது. (ஆகையால் அவன் அவ்வந்தணரை அங்ஙனம் ஆதரித்த விஷயத்தைப் பற்றிச் சங்கிக்கவேண்டாம்.) இங்ஙனம் பகவானுக்கு மிகுந்த நண்பராகிய அவ்வந்தணர் பிறரால் வெல்லமுடியாதவனாயினும் தன் ப்ருத்யர்களால் நன்கு வெல்லப்பட்ட பகவானைக் கண்டு த்யானயோகத்திற்கு உதவி செய்கின்ற பஞ்சமஹாயஜ்ஞாதிகளான தன்வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டித்து அந்தப் பகவானுடைய த்யானம் மேன்மேலும் வளரப்பெற்று அதனால் ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட்டு நித்ய முக்தர்களுக்கு வாஸஸ்தானமாகிய வைகுண்டமென்கிற அந்தப் பகவானுடைய லோகத்தை அடைந்தார். ப்ராஹ்மண குலத்திற்கு வேண்டியவற்றை நிறைவேற்றிக்கொடுப்பவர்களில் சிறந்த பகவானுடைய [1] ப்ரஹ்மண்யத்தனத்தை வெளியிடுகிற இந்த உபாக்யானத்தைக் கேட்கும் புருஷன் பகவானிடத்தில் பக்தி விளையப்பெற்றுப் புண்யபாபகர்மங்களால் விளைகிற ஸம்ஸாரத்தினின்று விடுபடுவான். எண்பத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

1. ப்ரஹ்ம குலத்திற்கு ஹிதஞ் செய்யுந்தன்மை.

## ஸூர்யக்ரஹணத்தின் பொழுது ஸ்ரீக்ருஷ்ணாதிகள் குருக்ஷேத்ரத்திற்குப் போன வ்ருத்தாந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அனந்தரம பலராமனும ஸ்ரீக்ருஷ்ணனும் த்வாரகையில் வஸித்துக்கொண்டிருக்கையில் ஒருகால் ப்ரளயகாலத்தில்போலப் பெரிய ஸூர்யக்ரஹணம் உண்டாயிற்று. ஸத்புருஷர்கள் அனைவரும் ஜ்யோதிஷர்மூலமாய் முன்னதாகவே அந்த ஸூர்யக்ரஹணத்தைத் தெரிந்துகொண்டு தங்கள் தங்களுக்கு நன்மையைச் செய்துகொள்ள விரும்பி, ஆயுதமேந்தினவர்களில் சிறந்த பரசுராமன் பூமியில் க்ஷத்ரியப் பூண்டுகளே இல்லாதபடி செய்ய முயன்று ராஜர்களைக் கொன்று அவர்களின் ரக்தப்ரவாஹத்தினால் எவ்விடத்தில் ஐந்து மடுக்களை நிர்மித்தானோ, மற்றும் மஹானுபாவனான அந்தப் பரசுராமன் புண்ய பாப ரூபமான கர்மத்தினால் தீண்டப்படாதவனாயினும் உலகத்தவர் இங்ஙனம் செய்யவேண்டுமெனபதைத் தெரிவிக்க முயன்றும் பிறருடைய பாபங்கள் நீங்க விரும்பியும் புண்ய பாபங்களுக்கு உட்பட்ட ஸாதாரண புருஷன் செய்வது போல எவ்விடத்தில் யாகங்களைச் செய்தானோ, அத்தகைய ஸமந்தபஞ்சகமென்னும் க்ஷேத்ரத்திற்குச் சென்றார்கள். பரதவம்சாலங்காரனே! மிகவும் புண்யமான அந்தத் தீர்த்தயாத்ரையைப் பற்றிப் பாரதவர்ஷத்திலுள்ள ப்ரஜைகள் அனைவரும் அவ்விடம் வந்தார்கள். வ்ருஷ்ணிகளும் அக்ரூரன் வஸுதேவன் ஆஹுகன் முதலியவர்களும் தங்கள் பாபத்தைப் போக்கிக்கொள்ள விரும்பி அந்த ஸமந்தபஞ்சக க்ஷேத்ரத்திற்குச் சென்றார்கள். கதன் ப்ரத்யும்னன் ஸாம்பன் இவர்களோடும் ஸுசந்த்ரன் சுகன்

ஸாரணன் இவர்களோடுங்கூட அநிருத்தனும் ஸேனாதிபதியான க்ருதவர்மனும் த்வாரகையைக் காக்கும்பொருட்டு அங்கேயே இருந்தார்கள். மிகுந்த பாக்யமுடைய அந்த அக்ரூராதிகள் தேவவிமானங்கள்போன்ற ரதங்களின்மேலும் அலைகளோடொத்த நடையுடைய குதிரைகளின்மேலும் மேகங்கள்போன்று கர்ஜிக்கின்ற யானைகளின்மேலும் ஏறிக்கொண்டு வித்யாதரர்களை நிகர்த்த ஒளியுடைய மனுஷ்யர்களால் சூழப்பட்டுப் பொன்மாலைகளையும் திவ்யமான பூமாலைகளையும் சிறந்த ஆடைகளையும் அத்தகைய கவசங்களையும் அணிந்து தந்தம் பார்யைகளோடுகூடி வழியில் போகும்பொழுது தேவதைகள்போல் விளங்கினார்கள். மிகவும் பாக்யசாலிகளான அவ்வக்ரூராதிகள் மிகுந்த மனவூக்கத்துடன் அவ்விடத்தில் ஸ்நானஞ் செய்து உபவாஸமிருந்து புதிய வஸ்த்ரங்களாலும் பூமாலைகளாலும் பொன்மாலைகளாலும் அலங்காரஞ் செய்யப்பெற்ற பசுக்களை ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்தார்கள். அந்த வ்ருஷ்ணிகள் பரசுராமனால் நிர்மிக்கப்பட்ட மடுக்களில் விதிப்படி மீளவும் ஸ்நானஞ் செய்து 'எங்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பக்தி விளையவேண்டும்' என்னும் வேண்டுகோளுடன் ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்களுக்கு ஸ்வர்ணங்களைக் கொடுத்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணபகவான், தானும் ஸ்நானஞ் செய்து தானமும் செய்தான். ஸ்ரீக்ருஷ்ணனையே தெய்வமாகவுடைய வ்ருஷ்ணிகள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனால் அநுமதி கொடுக்கப்பெற்று யதேஷ்டமாகப் புசித்து இடைவெளியின்றி நிறைந்த நிழலுடைய வ்ருக்ஷங்களின் அடிகளில் உட்கார்ந்தார்கள். அவர்கள் அவ்விடத்தில் நண்பர்களும் ஸம்பந்திகளு

மான மத்ஸ்யம் உசீனரம் கோஸலம் விதர்ப்பம் குரு ஸ்ருஞ்சயம் கம்போஜம் கேகயம் மத்ரம் குந்தி ஆரட்டம் கேரளம் முதலிய தேசங்களின் அரசர்களையும் தங்கள் பக்ஷத்தில் சேர்ந்த மற்றும் பல மன்னவர்களையும் பிறர் பக்ஷத்தில் சேர்ந்த பற்பல மன்னவர்களையும் நண்பர்களான நந்தன் முதலிய கோபர்களையும் நெடுநாளாகக் காணவேணு மென்னும் பேராவலுடைய கோபிகைகளையும் கண்டார்கள். அவர்கள் ஒருவரை யொருவர் கண்ட ஸந்தோஷத்தின் மிகுதியால் ஹ்ருதயங்களும் தாமரைமலர்போன்ற முகங்களும் மலர்ந்து மிகுந்த ஒளியுடையவராகி ஒருவரையொருவர் அழுந்தக் கட்டியணைத்துக் கண்களினின்று நீர் பெருகவும் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகவும் பேச்சு தடைபடவும் பெற்று ஸந்தோஷம் அடைந்தார்கள். மடந்தையர்களும் ஒருவரையொருவர் கண்டு ஸ்னேஹத்தின் மிகுதியால் புன்னகையோடு கூடிப் பரிசுத்தமான கண்ணோக்கமுடையவர்களாகி ப்ரீதியினால் கண்களில் நீர் பெருகப்பெற்றுக் குங்குமக்குழம்பு நிரம்பவும் பூசப்பெற்ற கொங்கைகளால் அத்தகைய கொங்கைகளை நெருக்கிப் புஜங்களால் ஒருவரையொருவர் அணைத்துக்கொண்டார்கள். அனந்தரம் அந்த யதுக்களும் மற்றவர்களும் பெரியோர்களை நமஸ்கரித்துச் சிறியவர்களால் நமஸ்காரஞ் செய்யப்பெற்று நல்வரவையும் க்ஷேமத்தையும் விசாரித்து ஒருவர்க்கொருவர் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது குந்தியென்னும் ப்ருதை தன் ப்ராதாக்களையும் பகினிகளையும் அவரவர் பிள்ளைகளையும் தாய் தந்தைகளையும் ப்ராதாக்களின் பத்னிகளையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் கண்டு ஒருவருக்கொருவர் ப்ரீதியு

டன் பேசி வருத்தங்களையெல்லாம் துறந்தாள். மற்றும் வஸுதேவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தாள்.

குந்தி சொல்லுகிறாள்:—அய்யா! ப்ராதாவே! நான் என்னை மனோரதங்களெல்லாம் நிறைவேறப்பெறாதவளாகவன்றோ நினைக்கிறேன். (என்மனோரதங்கள் நிறைவேறவில்லை). ஏனென்றால், ஸத்புருஷர்களில் சிறந்தவர்களே! ஆபத்காலங்களில் நீங்கள் என் வார்த்தையை நினைக்கவேயில்லையல்லவா? (இதுவும் யுக்தமென்றே எனக்குத் தோற்றுகிறது. ஏனென்றால்,) எவனுக்குத் தெய்வம் ப்ரதிகூலமாயிருக்கிறதோ, அவனை நண்பர்களாவது பிள்ளைகளாவது ப்ராதாக்களாவது தந்தைகளாவது நினைக்கவேமாட்டார்கள். (எனக்குத் தெய்வம் ப்ரதிகூலமாகையால் நீங்கள் நினைக்கவில்லையேயன்றி உங்கள் மேல் ஒரு பிசகும் இல்லை.)

வஸுதேவன் சொல்லுகிறான்:—அம்மே! தெய்வத்திற்குப் பொம்மைகள்போல் மானிட உருவம் பூண்ட விளையாட்டுக்கருவிகளான எங்கள்மேல் நீ கோபங்கொள்ளலாகாது. ஈச்வரன் உலகத்திலுள்ள ஜனங்களையெல்லாம் தன்வசமாக்கிக் கொண்டு தன்னிஷ்டப்படி செயல்களில் தூண்டுகின்றான். நாங்கள் அனைவரும் கம்ஸனால் பீடிக்கப்பட்டுத் திசைகள்தோறும் ஓடிப்போனோம். உடன்பிறந்தவளே! இப்பொழுதுதான் நாங்கள் தெய்வானுகூல்யத்தினால் எங்களிருப்பிடம் சேர்ந்தோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த மாத்ஸ்யர் முதலிய மன்னவர்கள் வஸுதேவன் உக்ரஸேனன் முதலிய யாதவர்களால் பூஜிக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்ட மஹாநந்தத்தினால் ஸுகித்திருந்தார்கள். பீஷ்மர்

த்ரோணர் த்ருதராஷ்ட்ரன் காந்தாரி அவள்பிள்ளைக ளான துர்யோதனுதிகள் பாண்டவர்கள் அவரது பத் கனிகள் குந்தி ஸஞ்சயன் விதுரர் க்ருபர் குந்திபோஜன் விராடன் பீஷ்மகன் நக்னஜித்து புருஜித்து த்ருபதன் சைப்யன் த்ருஷ்டகேது காசிராஜன் தமகோஷன் விசா லாக்ஷன் மைதிலன் மத்ரராஜன் கேகயராஜன் யுதா மன்யு ஸுசர்மா பாஹ்லிகன் முதலியவர் அவரது புத ல்வர்கள் மற்றும் யுதிஷ்டிரனைத் தொடர்ந்த மன்னவர் கள் அவரது மடந்தையர்கள் ஆகிய அனைவரும் ஸ்ரீம ஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகிய ஸ்ரீ க்ருஷ்ணனு டைய திவ்யமங்களவிக்ரஹத்தைக் கண்டு வியப்புற்ருர் கள். அப்பால் அப்பீஷ்மாதிகள் ஸ்ரீ க்ருஷ்ணனுலும் பலராமனுலும் நன்கு பூஜிக்கப்பெற்று மனக்களிப் புற்று ஸ்ரீக்ருஷ்ணனுல் பரிக்ரஹிக்கப்பட்ட வ்ருஷ்ணிகளைப் புகழ்ந்தார்கள்.

பீஷ்மாதிகள் சொல்லுகிருர்கள்:—ஓ உக்ரஸேன மன்னவனே! இவ்வுலகில் மனுஷ்யர்களுக்குள் நீங்களே பயன்பெற்ற பிறவியுடையவர்கள். (உங்கள் பிறவியே பிறவியன்றி மற்றவர் பிறவி பிறவியேயன்று). ஏனென் ருல், யோகிகளுக்குங்கூடக் காண அரியனான ஸ்ரீக்ருஷ் ணனை இடைவிடாமல் கண்டனுபவிக்கிறீர்களல்லவா? எவனுடைய புகழ் வேதங்களால் கொண்டாடப்படுகின் றதோ, எவனுடைய புகழ் தன்னை நினைக்கிற இவ்வுல கத்தை யெல்லாம் மிகவும் பரிசுத்தமாக்குகின்றதோ, எவனுடைய ஸ்ரீ பாதத்தீர்த்தம் ஜகத்தை யெல்லாம் புனிதஞ் செய்கின்றதோ, எவனுடைய வாக்கு சாஸ்த்ர மோ, பூமி காலக்கெடுதியால் பகவானுடைய மஹிமை கள் நடையாடப் பெறுகையாகிற தன்குணங்களெல் லாம் அழிந்திருப்பினும் எவனுடைய பாதாரவிந்தங்க

ளின் ஸ்பர்சத்தினால் மீளவும் தன்சக்திகளெல்லாம் தலையெடுத்து எங்கள்விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றுகின்றதே; அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணனைக் காணுதல் தொடுதல் பின்றொடர்ந்து செல்லுதல் அவனோடு பேசுதல் படுத்தல் உட்காருதல் புசித்தல் பெண்கொடுத்தல் கொள்ளுதல் ஸாபிண்ட்யம் முதலிய ஸம்பந்தங்கள் உங்களுக்கு என்றும் உண்டாயிருக்கின்றனவல்லவா? மற்றும், ஸ்ரீக்ருஷ்ணன் உங்கள் க்ருஹத்தில் அவதரித்தானல்லவா? அன்றியும் நீங்கள் ஸம்ஸாரமாகிற நரகத்திற்கு மேன்மேலும் வழிகாட்டவற்றான ப்ரவ்ருத்தி மார்க்கங்களில் இருப்பினும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அநுக்ரஹத்தினால் உங்களுக்கு ஸ்வர்க்க மோக்ஷங்களில் விருப்பின்மை உண்டாயிருக்கிறதல்லவா? (இத்தகையர்களான உங்கள் பிறவியே பிறவியன்றி மற்றவர் பிறவி பிறவியாமோ?)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நந்தன் அங்கு ஸ்ரீக்ருஷ்ணன் முதலிய யாதவர்கள் வந்திருப்பதை அறிந்து அவர்களைப் பார்க்க விரும்பிக் கோபர்களால் சூழப்பட்டு வண்டிகள்வரிசை வரிசையாய்த் தொடரப்பெற்று அவ்விடம் வந்து சேர்ந்தான். நெடுநாளாகக் காணவேண்டுமென்று விருப்பமுற்றிருக்கிற வ்ருஷ்ணிகள் அனைவரும் அந்த நந்தனைக் கண்டு ஸந்தோஷமுற்று ப்ராணனைப் பெற்ற சரீரங்கள்போல எழுந்து அவனை அழுந்தக் கட்டியணைத்தார்கள். வஸுதேவன் அந்த நந்தனை அணைத்து மிகவும் ஸந்தோஷம் அடைந்து ப்ரீதியினால் தழதழத்துத் தனக்குக் கம்ஸனால் நேர்ந்த வருத்தங்களையும் தன்பிள்ளைகளைக் கோகுலத்தில் வைத்ததையும் நினைத்துப் பேசாதிருந்தான். அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணன் பலராமன் இவ்விருவரும் தாய் தந்தை

களான யசோதாநந்தர்களை வணங்கி அணைத்து ப்ரீதியினால் கண்களில் நீர் ததும்பப்பெற்று ஒன்றும் பேசாதிருந்தார்கள். யசோதையும் நந்தகோபனும் பிள்ளைகளான அந்த ராமக்ருஷ்ணர்களை மடியில் உட்கார வைத்துப் புஜங்களால் அணைத்து நெடுநாள் பிரிந்திருந்த வருத்தங்களைத் துறந்தார்கள். அப்பால் ரோஹிணியும் தேவகியும் இடைச்சேரிக்குத் தலைவியாகிய யசோதையை அணைத்து அவள் செய்த ஸ்னேஹத்தை நினைத்துக் கண்ணீரால் கண்டம் தடைபடப்பெற்று இங்ஙனம் மொழிந்தார்கள்.

ரோஹிணிதேவகிகள் சொல்லுகிறார்கள்:—இடைச்சேரிக்குத் தலைவியான யசோதே! தேஹம் உள்ளவரையில் தொடர்ந்து வருவதாகிய உங்கள் ஸ்னேஹத்தை எவள்தான் மறப்பாள்? தேவேந்த்ரனுடைய ஐச்வர்யத்தைப் பெறினும் அதற்கு இவ்வுலகில் பதில் செய்ய முடியாதல்லவா? யசோதே! பிறந்தநாள் முதல் தாய் தந்தைகளைக் காணாத இந்த ராமக்ருஷ்ணர்கள் உங்களையே தாய்தந்தைகளாக ஏற்படுத்தி உங்களிடத்தில் விடப்பட்டு உங்களால் ஸந்தோஷத்திற்கிடமான கார்யங்களும் பற்பல நன்மைகளும் போஷித்தலும் பாதுகாத்தலும் செய்யப் பெற்று எவ்விதத்திலும் பயமின்றி உங்களிடத்தில் வஸித்துக் கொண்டிருந்தார்கள். இமை கண்களைக் காப்பதுபோல, நீங்களும் அவர்களைப் பெரிய ஆவலுடன் பாதுகாத்து வந்தீர்கள். பெரியோர்களுக்குத் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பேதபுத்தி கிடையாது. (அவர்களுக்கு ஜகத்தெல்லாம் தங்கள் குடும்பமாகவே தோன்றும்).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபிகைகளும் மிகவும அன்பிற்கிடமான ஸ்ரீக்ருஷ்ணனை நெடுநாள் கழித்துக்

கண்டு காண்பதற்குத் தடையாக இமையைப் படைத்த ப்ரஹ்மதேவனைப் பழித்து என்றும் இடைவிடாமல் த்யானஞ் செய்கிற யோகிகளுக்கும் பெற அரியனான அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்வழியால் ஹ்ருதயத்தில் நுழைத்துக் கொண்டு அவனை நிரம்பவும் அனுபவித்தார்கள். ஷாட்குண்யபூர்ணனான ஸ்ரீ க்ருஷ்ணன் அங்ஙனம் தன்னிடத்தில் ஆழ்ந்த மனவிருப்பமுடைய கோபிகைகளுடன் ஏகாந்தத்தில் கலந்து ஆலிங்கனஞ் செய்து ஆரோக்யம் விசாரித்துப் புன்னகை செய்து கொண்டு மேல்வருமாறு கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தோழிகளே! என்னை மறவாமல் நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? என்னுடையவர்களான ஸத்புருஷர்களின்ப்ரயோஜனத்தை நிறைவேற்றும்பொருட்டு நான் போய் நெடுங்காலம் கழித்துவிட்டேன். என்மனம் சத்ரு பக்ஷங்களை அழிப்பதில் ஊக்கமுற்றிருந்தமையால் *எனக்குத் திரும்பிவர முடியவில்லை; 'இவன் க்ருதஜ்ஞனல்லன்; க்ருதக்னனே' என்று நினைத்து என்னை அவமதியாதிருக்கிறீர்களா? பகவான் ப்ராணிகளைச் சேர்ப்பதும் பிரிப்பதுமாயிருக்கிறான். இது நிச்சயம். ஆகையால் ஒருவன் மற்றொருவனோடு சேர்ந்திருக்கையாவது பிரிந்திருக்கையாவது அவனுடைய இஷ்டப்படி நடக்கிறதன்று. காற்று மேகக்கூட்டத்தையும் புற்களையும் பஞ்சுகளையும் தூட்களையும் ஒன்றோடொன்று சேர்ப்பதும் பிரிப்பதும் செய்வதுபோல ப்ராணிகளைப் படைக்கிற பகவான் ஒருகால் அந்த ப்ராணிகளைச் சேர்த்து மீளவும் பிரிக்கின்றான். ப்ராணிகளுக்கு என்னிடத்தில் பக்தி உண்டாகுமாயின் அது மோக்ஷத்தை விளைக்கும். அத்தகைய என்னிடத்தில் உங்களுக்கு ஸ்னே

ஹம் உண்டாயிற்றல்லவா! இது மிகவும் க்ஷேமத்திற்காகவே. ஏனென்றால், அது சீக்ரத்தில் உங்களை என்னிடம் சேர்க்கும். பெண்மணிகளே! ஸமஸ்த பூதங்களுக்கும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்துகிறவன் நானே. மற்றும், பஞ்ச பூதங்களின் பரிணாமமான தேவ மனுஷ்யாதி சரீரங்களில் ஆகாசம் ஜலம் பூமி வாயு அக்னி ஆகிய இவ்வைந்து பூதங்களும் உள்ளும் புறமும் வ்யாபித்திருப்பதுபோல, நான் ஸமஸ்த பூதங்களிலும் உள்ளும் புறமும் வ்யாபித்திருப்பவன். இங்ஙனம் இந்த ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களும் அவற்றின் கார்யங்களான தேவமனுஷ்யாதி சரீரங்களும் அந்தச் சரீரங்களில் இருக்கிற ஜீவாத்மாவும் என்னால் உள்ளும் புறமும் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் அந்தச் சேதனாசேதனரூபமான வஸ்துக்களெல்லாம் அவற்றில் வ்யாபித்திருப்பினும் அவற்றின் விகாரங்கள் தீண்டப்பெறாமல் என்றும் ஒருவாறாயிருப்பவனும் அவற்றைக் காட்டிலும் விலக்ஷணனுமாகிய என்னிடத்தில் தோற்றக் காண்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸ்ரீ க்ருஷ்ணனால் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையைப்பற்றி உபதேசம் செய்து சிக்ஷிக்கப்பெற்ற கோபிகைகள் அவன் உபதேசித்த அந்த ஆத்மஜ்ஞானத்தை நன்றாக ஆராய்ந்து அவனை த்யானஞ் செய்து ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கிற கர்ம மூலமான அஜ்ஞானம் தொலையப்பெற்று அந்தப் பகவானை அடைந்தார்கள். அப்பொழுது அந்தக் கோபிகைகள் ஸ்ரீ க்ருஷ்ணனைக் குறித்துத் 'தாமரை யுந்தியனே! ஆழ்ந்த அறிவுடைய யோகீஸ்வரர்களாலும் ஹ்ருதயத்தில் த்யானிக்கத் தக்கதேயன்றிக் கண்களால் ஸாக்ஷாத்கரிக்க முடியாததும்

ஸம்ஸாரமாகிற கிணற்றில் விழுந்தவையும் ப்ராணிகளுக்கு அதினின்று கரையேற அவலம்பமாயிருப்பதுமாகிய உன்பாதாரவிந்தம் நாங்கள் இல்லற வாழ்க்கையில் அழுந்தி அலைந்துகொண்டிருப்பினும் எங்கள் மனத்தில் ஸர்வகாலமும் உள்ளபடி ப்ரகாசித்துக் கொண்டிருக்குமாக. எண்பத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் தர்மபுத்ராதிகளை க்ஷேமம் விசாரிக்க அவர்கள் மறுமொழி கூறுதலும், த்ரௌபதியால் வினவப்பெற்ற ருக்மிணி முதலிய ஸ்ரீக்ருஷ்ணபத்னிகள் தங்களை ஸ்ரீக்ருஷ்ணன் மணம்புரிந்த வ்ருத்தாந்தத்தை விசதமாகக் கூறுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அனந்தரம் தத்வோபதேசஞ் செய்பவனுகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் கோபிகைகளுக்கு அவர்கள் விரும்பின வண்ணமே தன் பாதாரவிந்தங்களில் விருப்பம் மாறுமல் மேன்மேலும் வளர்ந்துவருகையாகிற அனுக்ரஹத்தைச் செய்து யுதிஷ்டிரனையும் மற்றுமுள்ள நண்பர்களனைவரையும் குறித்து ஆரோக்யம் விசாரித்தான். இங்ஙனம் லோகநாதனுகிய ஸ்ரீ க்ருஷ்ணனுல் நன்கு ஸத்கரித்து வினவப்பெற்ற அந்த யுதிஷ்டிராதிகள் அப்பகவானுடைய பாதாரவிந்தங்களின் தர்சனத்தினுல் பாபங்களெல்லாம் தொலையப்பெற்று மனக்களிப்புற்று மொழிந்தார்கள்.

யுதிஷ்டிராதிகள் சொல்லுகிறுர்கள்:— ப்ரபூ! கம்பீர மனமுடைய பெரியோர்களின் அழகிய முகாரவிந்தத்தினின்று பெருகி வருவதும் தேவ மனுஷ்யாதியான பற்பல தேஹ ஸம்பந்தமுடைய ஜீவாத்மாக்

களுக்கு அத்தகைய தேஹ ஸம்பந்தத்திற்குக் காரண மும் அநாதியுமான அஜ்ஞானத்தை வேரோடறுப்பது மாகிய உன் பாதாரவிந்தங்களின் வைபவமாகிற அம் ருதத்தைக் காதுகளாகிற பானபாத்ரங்களால் நன்கு பருகுபவர்க்கு அமங்களம் எப்படி உண்டாகும்? (அம் ருதம்போல் மதுரமாகிச் சப்தாதி விஷயங்களில் விருப் பத்தை மறக்கடிப்பதுமான உன் பாதாரவிந்தங்களின் ப்ரபாவத்தைப் பெரியோர்கள் மூலமாய் உள்ளபடி அறிந்து அவற்றை த்யானஞ் செய்பவர்க்கு ஒருகாலும் அமங்களம் உண்டாகாது.) நீ பரமஹம்ஸர்களுக்கு ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தானே யாயிருப்பவன். மற்றும், நீ காலத்தின் கொடுமையால் அழிந்த வைதிக தர்மங்களின் மர்யாதையை நிலைநிறுத்தும்பொருட் டுத் தன்யோகமாயையினால் திவ்யமங்கள விக்ரஹத் தை ஏற்றுக்கொண்டிருப்பவன். (நீ உன் ஸங்கல்பத்தி னாலேயே வேதவிரோதிகளை அழித்து விடுவாய். ஆயினும் உன்பக்தர்களிடத்தில் வாத்ஸல்யத்தினா லும் அவர்களோடு கலந்து பரிமாறவேண்டுமென்கிற ஸௌசீல்யத்தினாலும் இத்தகைய திருவுருவங்களை ஏற்றுக்கொள்கின்றனை. மற்றும், நீ தன்னைப்பற்றி னவர்களின் அனிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுப்பது முதலியன செய்வதற்குரிய அளவற்ற நீண்ட அறிவுடையவன்; ஆநந்த வெள்ளம் போன்றவன்; தான் நடத்துகிற ஸ்ருஷ்டிஸ்திஸம்ஹா ரங்களென்கிற மூன்று அவஸ்தைகளையும் தன்தேஜஸ்ஸி னால் உதறியிருப்பவன். (நீ மற்றவர்க்கு ஸ்ருஷ்டி முதலியவற்றை நடத்துபவனே யன்றி உனக்கு அந்த ஸ்ருஷ்டியாதிகள் கிடையா.) இத்தகையனான உன் னை நாங்கள் வணங்குகிறோம்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஜனங்கள் இங்ஙனம் உத்தமச்லோகர்களில் தலைவனாகிய ஸ்ரீ க்ருஷ்ணனை நாற்புறத்திலும் துதித்துக்கொண்டிருக்கையில் அந்தகர்களின் மடந்தையர்களும் கௌரவர்களின் மடந்தையர்களும் ஒன்று சேர்ந்து ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். மூன்று லோகங்களிலும் பாடப்பட்ட அந்தக் கதைகளை உனக்குச் சொல்லுகிறேன், கேள். (அவர்களில் த்ரௌபதி ஸ்ரீ க்ருஷ்ண பத்னிகளை இங்ஙனம் வினவினாள்.)

த்ரௌபதி சொல்லுகிறாள்:—ஸ்ரீக்ருஷ்ணனை என்றும் பிரியாத ருக்மிணி! பத்ரே! ஜாம்பவதி! கௌஸல்யே! ஸத்யபாமே! காளிந்தி! மித்ரவிந்தே! ரோஹிணி! லக்ஷ்மணே! மற்றுமுள்ள ஸ்ரீ க்ருஷ்ண பத்னிகளே! மஹானுபாவனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன தன் ஸங்கல்பத்தினால் உலக ரீதியைப் அனுஸரித்து உங்களை எங்ஙனம் மணம் புரிந்தானோ, இதை எங்களுக்குச் சொல்வீர்களாக.

ருக்மிணி சொல்லுகிறாள்:—சிசுபாலனுடைய பக்ஷத்தில் சேர்ந்த மன்னவர்கள் என்னை அந்தச் சிசுபாலனுக்குக் கொடுப்பிக்க முயன்று கையும் வில்லுமாய் நின்றிருக்கையில், ஒருவராலும் வெல்லமுடியாத போர் வீரர்களுக்குச் சிரோபூஷணமான பாதாரவிந்தங்களின் பராகத்தையுடைய ஸ்ரீக்ருஷ்ணபகவான், ஸிம்ஹம் ஆட்டுமந்தையினின்று தன்பாகத்தைப் பறித்துக் கொண்டு வருவதுபோல என்னைப் பறித்துக்கொண்டு வந்தான். செல்வக்கிளர்த்தி யுடையதாகிய அந்தப் பகவானுடைய பாதாரவிந்தம் என்பணிவிடைக்கு இடங் கொடுக்குமாக. (அவனுடைய பாதாரவிந்தங்களையே நான் எப்பொழுதும் பணிந்து வருவேனாக.)

ஸத்யபாமை சொல்லுகிறாள்.— என் தந்தை வேட்டைக்குச் சென்ற தன்ப்ராதாவான ப்ரஸேனன் ஸிம்ஹத்தினால் அடியுண்டு மாண்டு மீண்டு வாராதிருக்கையில் மனவருத்தமுற்று 'ரத்னத்திலாசையால் ஸ்ரீ க்ருஷ்ணனே என் ப்ராதாவை வதித்தான்' என்று அபவாதங் கிளப்பிவிட, ஸ்ரீ க்ருஷ்ணன் அந்த அபகீர்த்தியைப் போக்க விரும்பி ப்ரஸேனனைக் கொன்று ரத்னத்தைப் பறித்துக் கொண்ட ஸிம்ஹத்தை வதித்து அதினிடத்தினின்று அந்த ரத்னத்தை எடுத்துக்கொண்ட ருக்ஷராஜனாகிய ஜாம்பவானை ஜயித்து ரத்னத்தை மீட்டுக்கொண்டு வந்து அதை என்தந்தையிடம் கொடுத்தான். என்தந்தை 'நாம் உண்மையை ஆராயாமல் பழி சொன்னோமே' என்று தன் அபராதத்தினால் பயந்து அக்ரூராதிகளுக்குக் கொடுப்பதாக வாக்தானஞ் செய்த என்னையும் அந்த ரத்னத்தையும் ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கொடுத்தான்.

ஜாம்பவதி சொல்லுகிறாள்:—என் தந்தையாகிய ஜாம்பவான் இந்த ஸ்ரீக்ருஷ்ணனைத் தன்ஸ்வாமியும் குலதெய்வமுமான ஸீதாதிபதி யென்று தெரிந்துகொள்ளாமல் இவனோடு இருபத்தேழுநாள் யுத்தஞ்செய்தான். பிறகு 'ஸீதாபதியான ராமனே இப்பொழுது யதுகுலத்தில் அவதரித்திருக்கிறான்' என்று தெரிந்துகொண்டு பாதாரவிந்தங்களைப் பிடித்து அருள்புரிவித்து ரத்னத்துடன் என்னை உபஹாரமாகக் கொடுத்தான். நான் இந்தப் பகவானுக்கு தாஸியாயிருப்பேனாக. (ஆத்மஸ்வரூபமுள்ளதனையும் நான் இவனுக்குப் பணிவிடை செய்து வருவேனாக).

காளிந்தி சொல்லுகிறாள்:—ஸ்ரீ க்ருஷ்ணன், நான் தன் பாதாரவிந்தங்களில் பரிசர்யை செய்ய விரும்பித்

தவஞ்செய்வதை அறிந்து தன் ஸ்னேஹிதனை அர்ஜு-னனுடன் வந்து என்னை மணம் புரிந்தான். அத்தகைய நான் அவன் க்ருஹத்தை விளக்குந் தாஸியாயிருப்பேனாக.

பத்ரை சொல்லுகிறாள்:—ஸிம்ஹம் நாய்க்கூட்டத்தினிடையிலிருக்கிற தன்பலியைப் பெறுவதுபோல எவன் ஸ்வயம்வரத்தில் வந்து ராஜர்களையும் விரோதஞ் செய்கிற என்ப்ராதாக்களையும் ஜயித்து என்னைச் செல்வம் நிரம்பின தன்பட்டணத்திற்குக் கொண்டுபோனானோ, அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நான் ஜன்மங்கள்தோறும் பாதங்களை விளக்குந் தாஸியாயிருப்பேனாக.

ஸத்யை சொல்லுகிறாள்:—ராஜர்களின் வீர்யத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு என் தந்தையால் ஏற்படுத்தப்பட்டவைகளும் பிருந்த பலவீர்யங்கள் அமைந்து மிகவும் கூரான கொம்புடையவைகளும் கொடிய மதமுடையவர்களைக் கொல்லுபவைகளுமான ஏழு எருதுகளைக் கண்டு சிறு பிள்ளைகள் ஆட்டுக்குட்டிகளை அடக்குவதுபோலத் தன் பலத்தினால் சீக்ரமாகவே அடக்கி அனாயாஸமாகப் பந்தித்து யுத்தத்திற்கு வந்த ராஜர்களனைவரையும் ஜயித்து இங்ஙனம் வீர்யத்தையே பந்தயமாகவுடைய என்னைத் தாஸிகளோடும் சதுரங்க ஸேனைகளோடும் எவன் அழைத்துக் கொண்டுபோனானோ, அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் என்றும் பணிவிடை செய்துவருவேனாக.

மித்ரவிந்தை சொல்லுகிறாள்:—த்ரௌபதி! என் தந்தை எனது அம்மான்பிள்ளையாகிய ஸ்ரீக்ருஷ்ணனைத் தானே அழைத்து அவனிடத்திலேயே நிலை

கின்ற மனமுடைய என்னை அக்ஷெளஹிணி ஸைன்யங்களுடன் அவனுக்குக் கொடுத்தான். புண்ய பாபகர்மங்களால் சுழலும்படி தூண்டப்படுகிற எனக்கு நன்மையை விளைக்க வல்லதாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் பரிசர்யை ஜன்மங்கள்தோறும் மாறாமல் தொடர்ந்து வருமாக.

லக்ஷ்மணை சொல்லுகிறாள்:—ராஜபத்னி! ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிறவியையும் செயலையும் நாரதர் அடிக்கடி பாடக் கேட்டும் கையில் தாமரைமலரேந்தின ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சமாகிய ருக்மிணி ஸ்ரீ க்ருஷ்ணனை மேல் விழுந்து மணம் புரிந்ததை நன்கு ஆராய்ந்தும் என்மனமும் லோகபாலர்களையும் துறந்து அந்த ஸ்ரீ க்ருஷ்ணனிடத்திலேயே மிகவும் விருப்பமுற்றிருந்தது. நல்லொழுக்க முடையவளே! என் தந்தையாகிய ப்ருஹத்ஸேனனென்பவன் என் அபிப்ராயத்தை அறிந்து பெண்ணிடத்தில் ப்ரீதியுடையவனாகையால் அந்த ஸ்ரீ க்ருஷ்ணனைப் பெறுதற்கு உபாயஞ் செய்தான். ராஜபத்னி! உன்னுடைய ஸ்வயம்வரத்தில் அர்ஜுனனைப் பெறுதற்காக உன் தந்தை மத்ஸ்யத்தை லக்ஷ்யமாக ஏற்படுத்தினாற்போல், என் தந்தையும் மத்ஸ்யத்தையே லக்ஷ்யமாக ஏற்படுத்தினான். ஆனால் அந்த மத்ஸ்யம் வெளியில் மாத்ரம் மறைக்கப் பட்டிருந்ததேயன்றி ஸ்தம்பத்தின் ஓரத்தில் கண் விட்டு மேல் நோக்கினால் காணக்கூடியதாயிருந்தது. இந்த மத்ஸ்யமோவென்றால் அப்படியன்று. ஸ்தம்பத்தின் கீழே அமைக்கப்பட்ட கலசஜலத்தில் மாத்ரம் காணக்கூடியதாயிருந்தது. ஆகையால் பார்வை கீழேயும் லக்ஷ்யம் மேலேயுமாயிருந்தது. (ஜலத்தில் தெரிகிற ப்ரதிபிம்பத்தைப் பார்த்து மத்ஸ்யத்தின் இருப்பிடத்தை அறிந்து அடி

க்கவேண்டியதாயிருந்தபடியால் ஸ்ரீக்ருஷ்ணனைத்தவிர மற்ற எவர்க்கும் முடியாதிருந்தது). ஸமஸ்த அஸ்த்ர சஸ்த்ரங்களின் உண்மையை அறிந்த அனேகமாயிரம் ராஜர்கள் இங்ஙனம் மத்ஸ்யயந்த்ர நிர்மாணஞ் செய்திருப்பதைக் கேட்டு உபாத்யாயர்களுடன் நாற்புறத்தினின்றும் என்தந்தையின் பட்டணத்திற்குப் புறப்பட்டு வந்தார்கள். அம்மன்னவர்கள் அனைவரும் தங்கள் வீர்யத்திற்கும் வயதிற்கும் தகுந்தபடி என் தந்தையால் பூஜிக்கப்பட்டு என்னிடத்தில் விருப்பமுற்றுச் சபையில் மத்ஸ்யத்தை அடிக்கும்பொருட்டுப் பாணத்தோடு கூடின தனுஸ்ஸை எடுத்துக்கொண்டார்கள். சிலர் தனுஸ்ஸை எடுத்து நாணேற்ற முடியாமல் உடனே தனுஸ்ஸை விட்டுப் போனார்கள். சிலர் தனுஸ்ஸின் நுனிவரையில் நாணை இழுத்தும் கடைசியில் நாணேற்ற முடியாமல் அந்தத் தனுஸ்ஸினால் அடியுண்டு விழுந்தார்கள். வீரர்களான மாகதன் அம்பஷ்டன் சேதிராஜன் பீமன் துர்யோதனன் கர்ணன் முதலிய மற்ற மன்னவர்கள் தனுஸ்ஸை நாணேற்றியும் குறியிருக்குமிடம் தெரிந்துகொள்ளவில்லை. அர்ஜுனனோவென்றால் கலசஜலத்தில் மத்ஸ்யத்தின் ப்ரதிபிம்பத்தைக்கண்டு குறியினிருப்பிடம் அறிந்து ப்ரயத்னப்பட்டு பாணத்தை ப்ரயோகித்தான். அந்தப்பாணம் அந்தமத்ஸ்யத்தை ஸ்பர்சித்ததேயன்றி அதை அறுத்துத்தள்ள வல்லதாகவில்லை. நாம் வீரர்களென்னும் அபிமானமுடைய ராஜர்கள் அனைவரும் தங்கள் அபிமானம் அழிந்து மீளுகையில் ஸூர்யன் அபிஜித்தில் இருக்கும்பொழுது (ஸமஸ்தப்ரயோஜனங்களையும் ஸாதிக்கவல்ல மத்யாஹ்ன ஸமயத்தில்) மஹானுபாவனான ஸ்ரீக்ருஷ்ணன் தனுஸ்ஸை எடுத்து அதில் அனாயாஸமாக நாணையேற்

றிப் பாணத்தைத் தொடுத்து ஜலத்தில் ஒருதரம் ப்ரதி பிம்பத்தைப் பார்த்துப் பாணத்தினால் அந்த மத்ஸ்ய யந்த்ரத்தை அறுத்துத் தள்ளினான். அப்பொழுது ஆகாயத்தில் துந்துபிவாத்யங்கள் முழங்கின. பூமி யில் 'ஜய விஜயீபவ' என்னும் சப்தங்கள் முழங்கின. தேவதைகள் ஸந்தோஷத்தினால் தழதழத்து ஓயாமல் பூமழை பொழிந்தனர். அப்பொழுது நான் விலையு யர்ந்த புதிய பட்டு வஸ்த்ரங்களை உடுத்துத் தலைச் சொருக்கில் புஷ்பங்களைச் சூடி வெட்கம் வழிகின்ற புன்னகையோடு கூடின முகமுடையவளாகி ஸ்வர்ணத் தினால் திகழ்கின்ற ரத்னமாலையை எடுத்துக் கொண்டு இனிய ஒலியுடைய சிலம்புதண்டைகளை அணிந்த பாதங்களால் நடந்து அரங்கத்திற்குள் நுழைந்தேன். சுருண்டழகிய முன்னெற்றிமயிர்களும் குண்டலங் களின் காந்தியால் திகழ்கின்ற கபோலங்களும் உடைய முகத்தை உயரத் தூக்கிக் குளிர்ந்த புன்னகை அமை ந்த கடைக் கண்ணோக்கங்களால் மெல்லமெல்ல நாற் புறத்திலும் நிறைந்திருக்கிற மன்னவர்களைக் கண்டு ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் அனுராகமுற்ற மனமுடைய நான் அவன் கழுத்தில் அந்த மாலையைப் பொகட் டேன் அப்பொழுது ம்ருதங்கம் படஹம் சங்கம் பேரி ஆனகம் முதலிய வாத்யங்கள் முழங்கின. நடர்களும் நர்த்தகிகளும் ஆடினார்கள். பாட்டுக்காரர்கள் பாடி னார்கள். த்ரௌபதி! நான் ஜகதீசனும் யாதவ ஸ்ரேஷ்டனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனை இங்ஙனம் வரிக்கை யில் மன்னவர்கூட்டங்களில் தலைமையுள்ளவர்கள் காம விகாரத்தினால் பீடிக்கப்பட்டு ஸ்பர்த்தை உண்டாகப் பெற்று அதைப் பொறுக்க முடியாதிருந்தார்கள். சதுர்ப்புஜனான ஸ்ரீ க்ருஷ்ணனோவென்றால் சிறந்த

நான்கு குதிரைகள் கட்டப்பெற்ற ரதத்தில் என்னை ஏற்றிச் சார்ங்கமென்னும் தனுஸ்ஸை ஊன்றிக்கொண்டு முயற்சியுடன் யுத்தத்திற்கு நின்றிருந்தான். ராஜபத்னி! தாருகன் பொன்னலங்காரஞ் செய்யப்பெற்ற அந்த ரதத்தை ஓட்டினான். ம்ருகங்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸிம்ஹம் நடப்பதுபோல, ஸ்ரீக்ருஷ்ணன் ராஜர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் அவர்களைப் பொருள் செய்யாது நடந்தான். அவர்களில் சில மன்னவர்கள் யுத்தஞ்செய்ய முயன்று கவசங்களை அணிந்து தனுஸ்ஸுக்களையும் ஏந்திக்கொண்டு வழியில் தடுக்க விரும்பி க்ராமஸிம்ஹங்கள் ஸிம்ஹத்தைத் தொடர்வதுபோல, ஸ்ரீ க்ருஷ்ணனைத் தொடர்ந்தார்கள். அவர்களில் சிலர் சார்ங்கத்தினின்று நழுவின பாணஸமூஹங்களால் புஜங்களும் பாதங்களும் கழுத்துக்களும் அறுப்புண்டு யுத்தபூமியில் விழுந்தார்கள். சிலர் யுத்தமுயற்சியைத் துறந்து அவ்விடத்தினின்று ஓடிப்போனார்கள். அனந்தரம் யதுபதியான ஸ்ரீக்ருஷ்ணபகவான் நாற்புறத்திலும் நன்கு அலங்காரஞ் செய்யப் பெற்றதும் ஸூர்யனை மறைக்கின்ற த்வஜபடங்களும் விசித்ரமான தோரணங்களும் நிறைந்து ஆகாயத்திலும் பூமியிலும் ஸர்வகாலமும் துதிக்கப்பட்டதுமாகிய தன்பட்டணமான த்வாரகைக்குச் சென்று ஸூர்யன் தன்மண்டலத்திற்குள் ப்ரவேசிப்பதுபோலத் தன்க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தான். அப்பொழுது என்தந்தை நண்பர்களையும் ஸம்பந்திகளையும் பந்துக்களையும் சிறந்த ஆடையாபரணங்களாலும் படுக்கை ஆஸனம் பரிவாரம் இவைகளாலும் பூஜித்தான். பூர்ணனாகிய (அவாப்த ஸமஸ்தகாமனாகிய) ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஸமஸ்தஸம்பத்துக்களும் அமைந்த தாஸிகளையும் காலாள் யானை தேர் குதிரை

ஆகிய சதுரங்க ஸைன்யங்களையும் சிறந்த ஆயுதங்களை யும் பக்தியுடன் கொடுத்தான். இந்த நாங்கள் எட்டுப் பேர்களும் எல்லாவற்றிலும் பற்றில்லாமையாகிற வைராக்யத்தினாலும் தவத்தினாலும் மஹாநந்த ஸ்வரூபனான தன்னைத் தான் அனுபவிக்கையால் நிறைவாளனான அந்தப் பகவானுக்கு நேரே வீட்டுவேலை செய்யும் தாஸிகளானோம்.

மற்ற மஹிஷிகள் சொல்லுகிறார்கள்:—ஸ்ரீக்ருஷ்ணன நரகாஸுரனையும் அவனைத் தொடர்ந்த கூட்டங்களையும் வதித்து திக்விஜயத்தில் ஜயிக்கப்பட்ட ராஜாகளின் கன்னிகைகளாகிய எங்களை அந்த நரகாஸுரன் சிறையில் அடைத்திருப்பதை அறிந்து சிறையினின்று விடுவித்து அவன் அவாப்தஸமஸ்தகாமனாயினும் ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கவல்ல தனபாதாரவிந்தங்களை இடைவிடாமல் நினைக்கும் தன்மையுள்ள எங்களை மணம் புரிந்தான். நல்லொழுக்கமுடையவளே! நாங்கள் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருக்கையாகிற ஸாம்ராஜ்யத்தையாவது இந்த்ரபதவியையாவது கைவல்யத்தையாவது அவற்றாலுண்டாகும் போகத்தையாவது அணிமாதிஸித்திகளையாவது ப்ரஹ்மபதத்தையாவது அளவற்ற பரமபதத்தையாவது விரும்பவில்லை. பின்னையோ வென்றால், ஸ்ரீமஹாலக்ஷ்மியின கொங்கைமேல் குங்குமத்தின் மணம் நிறைந்து மிகவும் அழகியதுமான இக்கதாதரனுடைய பாதாரவிந்தங்களின பராகத்தைச் சிரஸ்ஸினால் தரிக்க விரும்புகிறோம. அளவற்ற ஸௌசீல்யகுணமுடைய மஹானுபாவனான இந்த ஸ்ரீக்ருஷ்ணன் கோகுலத்தில் பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கையில் கோகுலத்திலுள்ள கோபிகைகளும் காடுகளிலுள்ள வேடப்பெண்களும் புற்களும் செடி கொடிக

ளும் கோபர்களும் இவனுடைய பாதாரவிந்தங்களின் ஸ்பர்சத்தை விரும்பினவல்லவா? (அங்ஙனமே நாங்களும் விரும்புகின்றோம். ஸௌசீல்யம் ஸௌலப்யம் முதலிய குணங்கள் அளவற்றிருக்கிற பகவானுடைய பாததூளி அவன்பக்தர்களுக்கு ஸுலபமாகக் கிடைக்கக் கூடியதே). எண்பத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ரிஷிகள் ஸ்ரீக்ருஷ்ணராமர்களைப் பார்க்க வருதலும், வஸுதேவனுக்கும் ரிஷிகளுக்கும் ஸம்பாஷணமும், ரிஷிகள் வஸுதேவனுக்கு யாகஞ் செய்வித்தலும், அவரவர் திரும்பிப் போதலும.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குந்தி காந்தாரி த்ரௌபதி ஸுபத்ரை இவர்களும் மற்றுமுள்ள ராஜபத்னிகளும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மிகுந்த பக்தியுடைய கோபிகைகளும் ஸர்வாந்தராத்மாவும் ஷாட்குண்ய பூர்ணனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குபவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் கபடமற்ற ஸ்னேஹம் நிறைந்த ருக்மிணி முதலியவர்களின் வசனத்தைக் கேட்டு அனைவரும் ஆநந்தநீர் நிரம்பின கண்களுடையவராகி வியப்புற்றார்கள். இங்ஙனம் பெண்கள் பெண்களோடும் புருஷர் புருஷர்களோடும் பேசிக்கொண்டிருக்கையில், வ்யாஸர் நாரதர் ச்யவனர் தேவலர் அஸிதர் விஸ்வாமித்ரர் சதாநந்தர் பரத்வாஜர் கௌதமர் பரசுராமர் அவருடைய சிஷ்யர்கள் மஹானுபாவரான வஸிஷ்டர் காலவர் ப்ருகு புலஸ்த்யர் கஸ்யபர் அத்ரி மார்க்கண்டேயர் ப்ருஹஸ்பதி த்விதர் த்ரிதர் ஏகதர் ப்ரஹ்மபுத்ரரான அங்கிரஸ்ஸு அகஸ்த்யர் யாஜ்ஞவல்க்யர் இம்முனிவர்களும் வாமதேவர் முதலிய மற்றும் பல முனிவர்

களும் ராமக்ருஷ்ணர்களைப் பார்க்க விரும்பி அவ்விடம் வந்தார்கள். முன்னதாகவே அங்கு உட்கார்ந்திருக்கிற மன்னவர் முதலியவர்களும் பாண்டவர்களும் ஸ்ரீக்ருஷ்ண ராமர்களும் உலகங்களால் பூஜிக்கப்பட்ட மஹானுபாவர்களான அம்முனிவர்களைக் கண்டு விரைந்தெழுந்து நமஸ்கரித்தார்கள். அனைவரும் அம்முனிவர்களைப் பூஜித்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனும் பலராமனும் தானுமாக 'நல்வரவா?' என்று விசாரித்து ஆஸனம் அளித்துப் பாத்யம் அர்க்யம் பூமாலை தூபம் சந்தனம் குங்குமம் முதலிய பூச்சு இவைகளால் அவர்களைப் பூஜித்தான். தர்மத்தைக் காக்கும் பொருட்டு ஏற்றுக்கொண்ட திருவுருவமுடைய ஸ்ரீக்ருஷ்ண பகவான் அப்பெருஞ்சபை முழுவதும் பேசாமல் கேட்டுக்கொண்டிருக்கையில் ஸுகமாக உட்கார்ந்திருக்கின்ற அம்முனிவர்களைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ முனிவர்களே! இவ்வுலகத்தில் நாங்களே ஜன்மம் படைத்தவர்கள். ஜன்மத்தின் பலன் முழுவதும் எங்களுக்குக் கை கூடிற்று. ஏனென்றால், தேவதைகளுக்கும் கிடைக்க அரிதான யோகீஶ்வரர்களாகிய உங்கள் தர்சனம் எங்களுக்குக் கிடைத்த தல்லவா? அல்ப புண்யர்களும் ப்ரதிமைகளையே தேவதையென்று நினைத்துக் கொண்டிருப்பவர்களுமான ஸாதாரண மனுஷ்யர்களாகிய எங்களுக்கு உங்களைத் தரிசித்தல் ஸ்பர்சித்தல் வினவுதல் வணங்குதல் பாதங்களைப் பூஜித்தல் முதலிய இந்நன்மைகள் எப்படி நேர்ந்தன? இது ஆச்சர்ய மாயிருக்கின்றது. ஜலமயமான புண்ய தீர்த்தங்களும் மண்ணாலும் சிலையாலும் இயற்றப்பட்ட தேவதாப்ரதிமைகளும் கண்ட மாத்ரத்தில் ப்ராணிகளைப் புனிதஞ் செய்ய

வல்லவையாக மாட்டா. பின்னையோ வென்றால், நெடுங் காலம் ஆராதித்தால்தான் புனிதஞ் செய்யும். ஸத்புருஷர்களோ வென்றால் கண்டவுடனே புனிதஞ் செய்வார்கள். தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறுபட்டவனென்னும் பேதபுத்தி யுடையவன் அக்னி ஸூர்யன் சந்த்ரன் நக்ஷத்ரங்கள் பூமி ஜலம் ஆகாயம் காற்று வாக்கு மனம் இவற்றின் அபிமானிதேவதைகளைப் பணிவானாயின், அவைகள் அவனுடைய பாபத்தைச் சீக்கிரத்தில் போக்க வல்லவையாக மாட்டா. ஸத்புருஷர்களோ வென்றால் ஒரு முஹூர்த்த காலம் பணிந்த மாத்ரத்தில் ப்ராணிகளின் பாபங்களை யெல்லாம் போக்குவார்கள். வாதபித்தஶ்லேஷ்மங்களென்கிற மூன்று தாதுக்களின் ஸமுதாயமும் சவம்போன்றதுமாகிய தேஹத்தில் ஆத்மாவென்னும் அபிமானமும் பார்யா புத்ராதிகளிடத்தில் தன்னுடையவரென்னும் அபிமானமும் மண் சிலை முதலியவற்றால் இயற்றின ப்ரதிமைகளில்மாத்ரம் தேவதையென்னும் அபிமானமும் கங்காதி ஜலத்தில்மாத்ரம் புண்யதீர்த்தமென்னும் அபிமானமும் எவனுக்கு உள்ளதோ, அவன் பசுவும் கழுதையும்போல ஒன்றுமறியாத மூடனே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—எங்கும் தடைபடாத மதியுடைய மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தனக்குத் தகாத வசனத்தை இங்ஙனம் மொழியக் கேட்ட அவ்வந்தணர்கள் மயங்கின மதியுடையவர்களாகி ஒன்றும் பேசாதிருந்தார்கள். (ஆ! இதென்ன? தன்னைப் பணிவதனாலுண்டான மஹிமையுடைய நம்மை இவன் தன்னைக்காட்டிலும் மேலானவர்களாக வைத்துச் சொல்லுகிறான். ஆகையால் இவன் சொல்லுவது விபரீதமாயிருக்கிறதேயென்று மதிமயங்கிப் பேசாதிருந்தார்கள்.)

ஸ்ரீக்ருஷ்ணன் உலகத்திலுள்ள ஜனங்கள் பெரியோர்களை இங்ஙனம் பணியவேண்டுமென்று தெரிவிக்கும் பொருட்டுத் தான் ஸர்வேஸ்வரனாயிருந்தும் தன்னை நியமிக்கத் தகுந்தவனாக அபிநயிக்கிறானென்று அம்முனிவர்கள் நன்றாக நெடுநேரம் ஆலோசித்தறிந்து புன்னகை செய்துகொண்டு ஜகத்குருவான அந்தப் பகவானைக் குறித்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

முனிவர்கள் சொல்லுகிறார்கள்:— உலகங்களைப் படைக்கின்ற ப்ரஹ்மாதிகளுக்கும் நியாமகனே! நாங்கள் தத்வவித்துக்களில் சிறந்தவராயினும் உன்னுடைய மாயையினால் மிகவும் மதிமயக்க முற்றோம். நீ ஸர்வநியாமகனாயிருந்தும் நியமிக்கத் தகுந்த கர்மவஸ்யன்போல் அபிநயிப்பதைக் கண்டு உலகத்தவர்களுக்குப் பெரியோர்களிடத்தில் அவர்கள் இருக்க வேண்டிய நிலைமையை அறிவிக்கும்பொருட்டு இங்ஙனம் அபிநயஞ் செய்கிறாயென்று தெரிந்துகொள்ள முடியாமல் ப்ரமித்தோமல்லவா? ஆ! ஷாட்குண்யபூர்ணனான ஸர்வேஸ்வரனுடைய செயல் மிகவும் ஆச்சர்யமானது. நாங்கள் தத்வித்துக்களில் சிறந்தவர்களாயிருந்தும் உன் மாயையினால் மதிமயங்கினமை ஆச்சர்யம். நீ ஸர்வ நியாமகனாயிருந்தும் மனுஷ்ய சேஷ்டையினால் தன்னுடைய மேன்மையை மறைத்துக்கொண்டு கர்மவஸ்யன்போல் பிறர் நியமிக்கும்படி நடக்கையாகிற உன் செயல் மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. தத்வங்களை உணர்ந்தவர்களில் சிறந்த நாங்கள் எவனுக்கு இஷ்டப்படி நியமிக்கத் தகுந்தவர்களோ, அப்படிப்பட்ட ஸர்வேஸ்வரன் மனுஷ்யசேஷ்டையினால் மறைந்து பிறர்க்கு நியமிக்கத் தகுந்த கர்மவஸ்யனான ஸாதாரணஜீவன்போல் அபிநயிப்பது மிகவும் ஆச்

சர்ய மாயிருக்கின்றது. புண்ய பாபகர்மங்களால் விளை யுஞ் செயலற்ற நீ காரணாவஸ்தையில் ஒருவனாகவே யிருந்து தானே இந்த ஜகத்தை யெல்லாம் பலவாறு படைக்கின்றனை; பிறகு பாதுகாக்கின்றனை; பிறகு ஸம் ஹரிக்கின்றனை. ஆயினும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹா ரங்களுக்கிடமான சேதநாசேதனங்களின் தோஷங்க ளால் நீ தீண்டப்படுகிறதில்லை. மண்ணுருண்டை யொன்றே குடம் மடக்கு சால் முதலிய பல உருவங்களை யும் பல பெயர்களையும் பெற்று எங்ஙனம் பலவாறு விளங்குகின்றதோ, அங்ஙனமே ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூபங்களுக்கிடமல்லாத ஸூக்ஷ்மசேதநாசேதனங் களைச் சரீரமாகக் கொண்டு ஒருவனாயிருந்த நீ நாம ரூபங்களுக்கிடமான ஸ்தூலசேதநாசேதன ரூபமான இந்த ப்ரபஞ்சமாய் விரிந்து பலவாறாகத் தோற்றுகின் றனை. அங்ஙனம் அளவற்ற மஹிமையுடைய நீ இங்ங னம் மனுஷ்யசேஷ்டையால் மறைந்து கர்மவஶ்யனான ஒரு ஜீவன்போல் அபிநயிப்பது மிகவும் ஆச்சர்யமா யிருக்கின்றது. நீ ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனான ஸர்வேஶ்வரனாயினும் உன்பக்தர்களைக் காப்பதற்கும் துஷ்டர்களை நிக்ரஹிப்பதற்கும் வர்ணாஶ் ரம தர்மங்களுக்கு உட்பட்ட கர்மவஶ்யனான ஜீவன் போன்று ப்ராக்ருத உருவம்போன்ற சுத்த ஸத்வமய மான உருவத்தை ஏற்றுக் கொண்டிருக்கின்றனை. மற் றும், உன்னுடைய லீலா ரூபமான ஆசாரத்தினால் வர் ணாஶ்ரம தர்மங்களை நிலைநிறுத்தி அநாதியான வேத மார்க்கத்தை வளர்க்கின்றனை. நீ கர்மவஶ்யனான ஜீவன்போல் அபிநயிக்கினும் உண்மையில் பரமபுரு ஷனே புருஷர்களுக்கு நேரக்கூடிய ப்ரமம் முத லிய தோஷங்கள் தீண்டப் பெறாததும் உபவாஸம்

முதலிய தவம் வேதாத்யயனம் வர்ணாஸ்ரமதர்மங்கள் பாமார்த்தமான சேதனாசேதனங்கள் அவற்றைக் காட்டிலும் விலக்ஷணனான பரமபுருஷன் ஆகிய இவற்றின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவிப்பதுமாகிய வேதம் உனக்கு ஹ்ருதயம்போன்றது. வேதசாஸ்த்ரத்தையே தன்னை உள்ளபடி அறிவதற்குக் காரணமாகவுடையவனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய உனக்கு ப்ராஹ்மணகுலம் ஸ்தானமாயிருக்கின்றது. (உன்னுடைய உண்மையை அறிவிக்கிற வேதத்திற்கு ஆதாரமானதையால் ப்ராஹ்மணகுலம் உனக்கு ஆதாரமாயிருக்கின்றது). மற்றும், நீ ப்ராஹ்மணர்களை வெகு மதிப்பவர்களில் சிறந்தவன். ஆகையால் நீ ப்ராஹ்மண குலத்தை மேன்மைப்படுத்துகின்றனை. ஸத்புருஷர்களுக்கு ப்ராப்யனும் ப்ராபகனு மாயிருக்கிற உன்னோடு ஸமாகமம் நேர்ந்ததையால் எங்களுக்கு இப்பொழுது ஜன்மஸாபல்யம் உண்டாயிற்று. (ஜனமம் ஸபலமாயிற்று). எங்கள் வித்யையும் தவமும் கண்களும் இப்பொழுது பயன் பெற்றன. உன்னுடைய ஸமாகமம் நன்மைகளெல்லாவற்றிலும் சிறந்த நன்மை யல்லவா? ஆகையால் உன்னுடைய ஸமாகமம் நேரப்பெற்ற எங்கள்பிறவி முதலியவையெல்லாம் பயன்பெற்றன. அத்தகைய நீ உன்னை உன்னுடைய ஆச்சர்யசக்தியினால் மறைத்துக்கொண்டிருக்கின்றனை. நீ பரமாத்மா; ஷாட்குண்ய பூர்ணன்; உலகங்களுக்கு ஸுகம் விளைப்பதற்காக அவதரித்தவன்; எங்கும் எவ்விதத்திலும் எக்காலத்திலும் தடைபடாத ஸங்கல்பமுடையவன். இத்தகைய உனக்கு நமஸ்காரம். தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணமான ஆத்மஸ்வரூபத்தை ஆராய்ந்தறிந்து அவ்வாத்மானுபவத்தில் ஆழ்ந்திருக்கிற இந்த

வ்ருஷ்ணிராஜர்களுங்கூட உன்னை உள்ளபடி அறிய மாட்டார்கள். ஏனென்றால், நீ ஸமஸ்த ஜீவாத்மாக்களையும் மயக்கச் செய்கிற மாயையாகிற திரையினால் உன்னைப் பிறர் அறியாதபடி மறைத்துக்கொண்டிருக்கின்றனை. ஆகையால் இவர்கள் எப்பொழுதும் உன்னை விட்டுப் பிரியாதிருப்பினும் ஆத்ம ஸ்வரூபத்தை உணர்ந்தவராயினும் உன்னை உள்ளபடி அறிய வல்லரல்லர். ஸத்வாதிகுணங்களின் பரிணாமமான சப்தாதிவிஷயங்களைப் புருஷார்த்தமாகவும் ஸத்வாதி குணங்களின் பரிணாமமான தேஹத்தை ஆத்மாவாகவும் ப்ரமிக்கும் புருஷன் படுத்துறங்கி ஸ்வப்னங்காண்பானாயின் அவன் ஆத்மாவை ஸ்வப்னத்தில் ஏற்படுகிற நாமரூபங்களும் இந்த்ரியங்களு முடையவனாக அறிவானன்றி, இயற்கையில் நாம ரூபாதிகளற்றவனாகவும் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனாகவும் அறியமாட்டான். பரப்ரஹ்மமனே! இங்ஙனமே விழித்துக் கொண்டிருக்கும் புருஷனும் உன்மாயையினால் ஏற்பட்ட நாமரூபங்கள் இந்த்ரியங்கள் இவற்றிற்கு உரிய சேஷ்டையினால் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின அறிவு மறையப்பெற்று ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவாகவும் ஸ்வதந்த்ரனல்லாதஆத்மாவை ஸ்வதந்த்ரனாகவும் ப்ரமிக்கின்ற மனமுடையவனாகி உன்னை ஆஶ்ரயித்திருக்கிற ஜீவாத்மாவை அறிகிறதில்லை. ஜீவாத்மாவுக்கு அந்தராத்மாவான உன்னை அறியவேமாட்டானென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? பாபராசிகளையெல்லாம் பறக்கடித்துச் சுத்திசெய்வதும் நன்கு நிறைவேறின பக்தி யோகமுடைய பெரியோர்களால் மனத்தில் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதுமாகிய உன் பாதாரவிந்தத்தை இப்பொழுது நாங்கள் கண்டோம். பல பெரியோர்கள் மிக

வும் தலையெடுத்த பக்தியினால் கர்மவாஸனையும் அஜ்ஞானமாகிற மறைவும் தீரப்பெற்று உன் கதியைப் பெற்றார்கள். ஆகையால் உன்பக்தர்களான எங்களை அனுக்ரஹிப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜர்ஷீ! அம்முனிவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனைக் குறித்து இங்ஙனம் மொழிந்து த்ருதராஷ்ட்ரன் யுதிஷ்டிரன் இவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு தங்கள் ஆஸ்ரமங்களுக்குப் 'போக மனங்கொண்டார்கள். அப்பொழுது பெரும் புகழ்கள் பெற்ற வஸுதேவன் அவர்கள் அங்ஙனம் புறப்பட்டுப் போக மனங்கொண்டிருப்பதைக் கண்டு அவர்களிடஞ் சென்று வணங்கித் தன் கைகளால் அவர்களுடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டு மிக்க மனவூக்கத்துடன் இவ்வாறு மொழிந்தான்.

வஸுதேவன் சொல்லுகிறான்:—ஸமஸ்ததேவதைகளும் தம்மிடத்தில் வாஸஞ்செய்யப்பெற்ற உங்களுக்கு நமஸ்காரம். ஓ ரிஷிகளே! என் வசனத்தைக் கேட்பீர்களாக. வர்ணாஸ்ரமதர்மங்களை எப்படி அனுஷ்டித்தால் பகவானிடத்தில் பக்தியோகம் உண்டாவதற்குத் தடையான பழைய புண்யபாபகர்மங்கள் தீருமோ, அவ்வண்ணத்தை எனக்கு மொழிவீர்களாக.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—ஓ அந்தணர்களே! வஸுதேவன் தன்னுடைய நன்மைக்கு எது ஸாதனமென்பதை அறிய விரும்பி ஸ்ரீக்ருஷ்ணனைக் குழந்தையாக நினைத்து நம்மை வினவுகிறான். இது பெரிய ஆச்சர்யமன்று. மனுஷ்யர்களுக்கு என்றும் ஸமீபத்திலிருக்கை அனாதரஞ் செய்வதற்குக் காரணமாகின்றது. ஆகையால் இவன் ஸ்ரீக்ருஷ்ணனை ஒன்றுமறி

யாத குழந்தையாக நினைத்து நம்மை வினவுகிருன். கங்கையின் கரையிலிருப்பவன் தன்சுத்திக்காக அந்த கங்காஜலத்தைத் துறந்து வேருெரு புண்ய தீர்த்தத்தைத் தேடிக்கொண்டு செல்வது வழக்கமே. அங்ஙனமே இவன் ஸர்வஜ்ஞனை ஸ்ரீக்ருஷ்ணனைத் துறந்து நம்மிடத்தில் தர்மஸந்தேஹம் தீர்த்துக்கொள்ளப் பார்க்கிருன்.) இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஜ்ஞானம் காலத்திஞலாவது இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துவதனுலாவது பிறராலாவது ஸத்வாதி குணங்களாலாவது மற்ற எந்தக் காரணத்திஞலாவது என்றும் அழிகிறதில்லை. (நமக்குக் காலாதிகளால் ஜ்ஞானம் அழிந்துபோவதுண்டு. இவனுக்கு அது கிடையாது). ஜன்மஜராமரணுதி வருத்தங்கள் புண்யபாபகர்மங்கள் அவற்றின் பலனை ஸுகதுக்கங்கள் ஸத்வாதிகுணங்களின் ப்ரவாஹம் இவைகளால் தடைபடாத அறிவுடையவனும் இணையெதிரில்லாதவனும் ஸர்வேஸ்வரனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனை அறியாத மூட ஜனங்கள் அவன்றன்னுல் படைக்கப்பட்ட ப்ராக்ருதமான இந்த்ரியம் முதலியவைகளால் மறைக்கப்பட்ட அறிவுடையனுக நினைக்கிருர்கள். அது ஸுர்யனை மேகம் பனி க்ரஹணம் இவைகளால் மறைக்கப்பட்டவனென்று நினைப்பதுபோலவே.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—மன்னவனே! அம்முனிவர்கள் இங்ஙனம் மொழிந்து மீளவும் வஸுதேவனை அழைத்து ஸமஸ்த ராஜர்களும் பலராம க்ருஷ்ணர்களும் கேட்டுக்கொண்டிருக்கையில் இங்ஙனம் மொழிந்தார்கள்.

முனிவர்கள் சொல்லுகிருர்கள்:—ஸமஸ்தயாகங்களுக்கும் நிர்வாஹகனை ஸ்ரீமஹாவிஷ்ணுவை யாகங்

களால் ஸ்ரத்தையுடன் ஆராதிக்கையாகிற இதுவே வர்ணாஸ்ரமங்களுக்குரிய கர்மத்தினால் புண்ய பாபகர்மங்களைப் போக்கிக் கொள்ளுகையாமென்று பெரியோர்கள் நிர்சயித்திருக்கிறார்கள். ஸ்ரீமஹாவிஷ்ணுவை ஆராதிக்கையாகிற இந்தத் தர்மமே மனத்தில் ஸம்ஸார துக்கங்கள் தீண்டப் பெறுமையாகிற சாந்தியையும் அளவற்ற மோக்ஷஸுகத்தையும் விளைக்கும். இதுவே ஸுகமான உபாயமென்று அறிவுள்ள முனிவர்கள் சாஸ்த்ரமாகிற * நேத்ரத்தினால் கண்டறிந்தார்கள். பரபீடை முதலிய கெடுதிகளின்றி நல்வழியில் ஸம்பாதித்த பரிசுத்தமான பணத்தைக் கொண்டு பரமபுருஷனை ஸ்ரத்தையுடன் ஆராதிக்கையாகிற இதுவே க்ருஹஸ்தாஸ்ரமத்திலிருக்கும் ப்ராஹ்மணனுக்கு மோக்ஷஸுகத்தை விளைக்கும் மார்க்கமாம். யாகங்களாலும் தானங்களாலும் பணத்தாசையையும், க்ருஹஸ்தாஸ்ரமத்திற்குரிய போகங்களால் பெண்டிர் பிள்ளை முதலிய வற்றிலுண்டான ஆசையையும், அந்த ஸ்வர்க்காதி போகங்களெல்லாம் காலக்கழிவில் அழியுந்தன்மையுடையவை யென்று நிரூபிக்கவல்ல விவேகத்தினால் தேஹம் கழிந்த பின்பு ஸ்வர்க்காதி போகங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் ஆசையையும் துறக்க வேண்டும். இங்ஙனமே பல பண்டிதர்கள் க்ராமத்தில் இருக்கும்பொழுதே பொருளாசை பெண்புதல்வராசை பரலோகபோகங்களை அனுபவிக்கவேண்டுமென்னுமாசை ஆகிய மூன்றுவகை ஆசைகளையும் துறந்து தபோவனத்திற்குச் சென்றார்கள். ப்ரபூ! ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களென்கிற மூன்றுவர்ணத்தவர்களும் பிறக்கும்பொழுது தேவதைகள் ரிஷிகள் பித்ருக்கள் இம்மூவ

---

* கண்ணால்.

ரைப்பற்றின மூன்று ருணங்களுடன் பிறக்கிறார்கள். ஆகையால் அம்மூன்று ருணங்களையும் யாகங்களைச் செய்தல் வேதங்களை யோதுதல் பிள்ளைகளைப் பெறுதல் ஆகிய இம்மூன்றுகளால் தீர்த்துக் கொள்ளாமல் வெறுமனே திரிவார்களாயின் நரகத்தில் விழுவார்கள். ஆழ்ந்த மதியுடையவனே! நீ இப்பொழுது ரிஷிருணம் பித்ருருணம் ஆகிய இவ்விரண்டு ருணங்களினின்று விடுபட்டனை. இனி யஜ்ஞங்களால் தேவதேவனான பரமபுருஷனை ஆராதித்துத் தேவருணத்தையும் தீர்த்துக்கொண்டு மூன்று ருணங்களினின்றும் விடுபட்டு இல்லறவாழ்க்கையில் பற்றற்றிருப்பாயாக. ஓ வஸுதேவனே! நீ தன்னைப் பற்றினவர்களின் வருத்தங்களைப் போக்குந் தன்மையனும் ஜகதீச்வரனுமாகிய பகவானைச் சிறந்த பக்தியுடன் ஆராதித்தனை. இது நிச்சயம். ஏனென்றால், அவன் தானே உனக்குப் பிள்ளையாக வந்து பிறந்தானல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஆழ்ந்த மனமுடைய வஸுதேவன் இங்ஙனம் அம்முனிவர்கள் மொழிந்த வசனத்தைக் கேட்டு அவர்களைத் தலையால் வணங்கி அருள் புரிவித்துத் தனக்கு ருத்விக்குக்களாயிருக்கும்படி வேண்டினான். இங்ஙனம் வஸுதேவனால் விதிப்படி வேண்டப்பட்ட அம்முனிவர்கள் தார்மிஷ்டனாகிய அவ்வஸுதேவனைக் கொண்டு அந்த ஸமந்தபஞ்சகக்ஷேத்ரத்தில் மந்த்ரம் தந்த்ரம் த்ரவ்யம் முதலியவற்றில் சிறிதும் லோபமில்லாத முக்யகல்பமான யாகங்களை நடத்தினார்கள். ராஜனே! அந்தயாகதீக்ஷை ஆரம்பிக்கையில் வ்ருஷ்ணிமன்னவர்கள் ஸ்னானஞ் செய்து நல்ல வஸ்த்ரங்களை உடுத்து நன்கு அலங்கரித்துத் தாமரைப் பூமாலைகள் அணிந்து விளங்கினார்கள் அவ்வஸுதேவனுடைய

பத்னிகள் குங்குமசந்தனுதிகளைப் பூசி விலையுயர்ந்த வஸ்த்ரங்களை உடுத்துக் கழுத்தில் பொற்பதகங்களை அணிந்து கைகளில் உபஹாரங்களை ஏந்திக்கொண்டு மனக்களிப்புடன் தீக்ஷாசாலைக்கு வந்தார்கள். ம்ரு தங்கம் படஹம் சங்கம் பேரி ஆனகம் முதலிய வாத்யங் கள் பலவும் முழங்கின. நடர்களும் நர்த்தகிகளும் ஆட் டம் ஆடினுர்கள். ஸூதர்களும் மாகதர்களும் துதித் தார்கள். அழகிய கண்டமுடைய கந்தர்வப்பெண்கள் தத்தம் கணவர்களுடன் ஸங்கீதம் பாடினுர்கள். கண் களில் மெய்யிட்டு உடம்பெல்லாம் வெண்ணெய் பூசிக் கொண்டு பதினெட்டு பத்னிகளோடு கூடின அவ்வஸு தேவனுக்கு ருத்விக்குக்கள் நக்ஷத்ரங்களோடு கூடின சந்த்ரனுக்கு அபிஷேகஞ் செய்வது போல அபிஷே கஞ் செய்தார்கள். வெண்பட்டுவஸ்த்ரங்களை உடுத்துக் கைவளை முத்துமாலை சிலம்பு தண்டை குண்டலம் இவை களையும் மற்றும்பல அலங்காரங்களையும் அணிந்து நன்கு விளங்குகின்ற அப்பத்னிகளோடு கூடி மான்தோலை உடுத்துத் தீக்ஷையிலிருக்கிற அவ்வஸுதேவமன்ன வன் ப்ரகாசித்தான். மஹாராஜனே! அவனுடைய ருத்விக்குக்களும் ஸதஸ்யர்களும் புதிய பட்டு வஸ்த்ரங் களைத் தரித்து இந்த்ரனுடைய யாகத்திற்போல மிக வும் விளங்கினுர்கள். ப்ரஹ்மாதி தேவதைகளுக்கும் ப்ரபுக்களாகிய ராமக்ருஷ்ணர்கள் மிகுந்த விபவங்க ளோடு கூடின தத்தம் பந்துக்களோடும் தேவஶ்ரேஷ் டர்களின் அம்சங்களான பிள்ளைகளோடும் பார்யை களோடும் விளங்கினுர்கள். அம்மன்னவன் இங்ங னம் பல யாகங்கள் செய்தான். அவன் ஒவ்வொரு யாக த்திலும் ப்ராக்ருதங்களென்று சொல்லப்படுகிற ஜ்யோ திஷ்டோம தர்ச பூர்ணமாஸாதி யாகங்களாலும் வைக்

ருதங்களென்று சொல்லப்படுகிற ஸௌர்ய ஸத்ராதி யாகங்களாலும் அக்னிஹோத்ரம் முதலிய ஹோமங்களாலும் பஞ்சபூதங்கள் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்கள் இவற்றிற்கு நிர்வாஹகனும் புரோடாசம் முதலிய த்ரவ்யங்கள் கர்மங்களைப் பற்றின அறிவு அவற்றின் அனுஷ்டானம் இவற்றிற்கு ப்ரபுவுமாகிய பரமபுருஷனை விதிப்படி ஆராதித்தான். அனந்தரம் அவ்வஸுதேவன் தான் நன்கு அலங்கரித்துக்கொண்டு நன்கு அலங்காரங்களை அணிந்து விளங்குகிற ருத்விக்குக்களுக்கு உரிய காலத்தில் சாஸ்த்ரங்களில் சொல்லியபடி தக்ஷிணைகளைக் கொடுத்தான்; மற்றும், அவர்களுக்கு விலையுயர்ந்த பசுக்களையும் பூமிகளையும் சிறந்த கன்னிகைகளையும் கொடுத்தான். அம்மஹர்ஷிகள் பத்னீஸம்யாஜம் ஆவப்ருத்யம் என்கிற யாகவிசேஷங்களை நடத்தி யஜமானனை முன்னிட்டுக்கொண்டு பரசுராமனால் நிர்மிக்கப்பட்ட ஸமந்தபஞ்சகமென்னும் மடுவில் ஸ்னானஞ்செய்தார்கள். அம்மன்னவன் அவப்ருதஸ்னானஞ்செய்து வந்திகளுக்கு ஆபரணங்களையும் ஆடைகளையும் கொடுத்தான். ஸ்த்ரீகளும் ஸ்னானஞ் செய்து நன்கு அலங்கரித்துக்கொண்டார்கள். அம்மன்னவன் நாய்வரையில் ஸமஸ்தவர்ணங்களையும் அன்னத்தினால் பூஜித்தான். மற்றும், அவன் பிள்ளைபெண்டிர்களோடு கூடிய பந்துக்களுக்கும் விதர்ப்பர் கோஸலர் குருக்கள் * காசியர் கேகயர் ஸ்ருஞ்சயர் இவர்களுக்கும் அளவற்ற பரிசுகளை அளித்தான். ஸதஸ்யர்கள் ருத்விக்குக்கள் தேவகணங்கள் மனுஷ்யர் பூதர் பித்ருக்கள் சாரணர் இவர்கள் அனைவரும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு ஸ்தானமாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடம் அனுமதி பெற்று யாகத்தைப்

* காசிப்பட்டணத்தார்.

புகழ்ந்துகொண்டு சென்ருர்கள். த்ருதராஷ்ட்ரன் அவன் தம்பி விதுரன் அர்ஜுனன் பீஷ்மர் த்ரோணர் குந்தி நகுல ஸஹதேவர்கள் நாரதர் மஹானுபாவராகிய வ்யாஸர் நண்பர்கள் ஸம்பந்திகள் பந்துக்கள் இவர்கள் அனைவரும் பந்துக்களான யாதவர்களை அணைத்து ஸ்னேஹத்தினுல் மனம் உருகப்பெற்றுப் பிரிய வேண்டுமே யென்னும் வருத்தத்துடன் தத்தம் தேசங்களுக்குச் சென்ருர்கள். யாகத்திற்கு வந்த மற்ற ஜனங்களும் திரும்பிச் சென்ருர்கள். நந்தனே வென்ருல் ஸ்ரீக்ருஷ்ணன் ராமன் உக்ரஸேனன் முதலியவர்களால் மிகுந்த பூஜை செய்து வெகுமதிக்கப்பட்டுப் பந்துக்களிடத்தில் வாத்ஸல்யமுடையவனுகையால் கோபர்களுடன் அங்கேயே வஸித்திருந்தான். வஸுதேவன் தன்மனோரதமாகிற மஹாஸமுத்ரத்தை அனுயாஸமாகக் கடந்து நண்பர்களால் சூழப்பட்டு மனக்களிப்புடன் நந்தனைக் கையில் பிடித்துக் கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

வஸுதேவன் சொல்லுகிருன்:—அப்பனே! ஈஸ்வரன் ப்ராணிகளுக்கு ஸ்னேஹமென்னும் பாசத்தை ஏற்படுத்தியிருக்கிருன். தேவதைகள் தங்கள் வலிவினுலாவது யோகிகள் தங்கள் ஜ்ஞானத்தினுலாவது அதை விடுவித்துக்கொள்ள வல்லரல்லரென்று நினைக்கின்றேன். செய்த நன்றியை அறிந்து மறவாதிருக்குந்தன்மையற்ற எங்களிடத்தில் மிகவும் மேன்மையுடைய நீங்கள் நிகரற்றதான இத்தகைய நட்பை வைத்தீர்கள். அதற்கு இதுவரையில் எவ்வித ப்ரத்யுபகாரம் இல்லாமற் போயினும் அந்நட்பு இன்றும் மாருமல் அப்படியே இருக்கின்றது. ப்ராதாவே! முன்பு கம்ஸனுல் நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கும்பொழுது திறமையில்லாமையால்

உங்களுக்கு எவ்வகை ப்ரியத்தையும் செய்யவில்லை. இப்பொழுது நாங்கள் ஐஸ்வர்யத்தினால் மதித்துக் கண் தெரியாதவர்களாகி முன்பு நீங்கள் செய்த உபகாரத்தை நினைக்கவுங் கூட முடியாதிருக்கின்றோம். நண்பர்களுக்கு வெகுமதியளிப்பவனே! சத்ருக்களின் கர்வத்தை அழிப்பவனே! நன்மையை விரும்பும் புருஷனுக்கு ராஜ்ய ஸம்பத்து நேரிடாதிருக்கவேண்டுமென்று நான் ப்ரார்த்திக்கிறேன். ஏனென்றால், ராஜ்யஸம்பத்து நேரிடப் பெற்ற புருஷன் ஐஸ்வர்யமதத்தினால் கண் கெட்டு ஸாதுக்களையாவது பந்துக்களையாவது கண்ணெடுத்துப் பார்க்கமாட்டான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—வஸுதேவன் இங்ஙனம் ஸ்னேஹத்தினால் மனம் தழுதழுத்து அந்நந்தனுடைய நட்பை நினைத்துக் கண்ணும் கண்ணீருமாய்ப் புலம்பினான். நந்தனோவென்றால் நண்பனாகிய வஸுதேவனுக்கும் ராம க்ருஷ்ணர்களுக்கும் ப்ரேமத்தினால் ப்ரியஞ் செய்ய விரும்பிக் காலையில் புறப்பட்டால் ஸாயங்காலம் போகலாமென்றும் ஸாயங்காலம் புறப்பட்டால் நாளைக்குப் போகலா மென்றும் யாதவர்களால் தடுத்து வெகுமதிக்கப்பட்டு மூன்று மாதங்கள் அவ்விடத்திலேயே வஸித்திருந்தான். அனந்தரம் நந்தன் பந்துக்களோடும் மற்ற கோகுலத்து இடையர்களோடும் கூடிச் சிறந்த ஆபரணங்களாலும் வெண்பட்டுக்களாலும் பலவகை ரத்னங்களாலும் யானை குதிரை முதலிய பரிவாரங்களாலும் மற்றும் பல விருப்பங்களாலும் நிறைக்கப்பட்டு வஸுதேவன் உக்ரஸேனன் ஸ்ரீக்ருஷ்ணன் உத்தவன் பலராமன் முதலியவர்களால் விடை கொடுக்கப் பெற்று அந்தப் பரிசுகளையெல்லாம் எடுத்துக் கொண்டு யாதவர்களால் ப்ரயாணஞ் செய்விக்கப்பெற்றுப் புறப்

பட்டுப் போனான். பந்துக்கள் அனைவரும் புறப்பட்டுப் போகையில் ஸ்ரீக்ருஷ்ணனையே தெய்வமாகவுடைய வருஷ்ணிகள் வர்ஷாகாலம் ஸமீபித்திருப்பதைக் கண்டு மீண்டு த்வாரகைக்கு வந்தார்கள். அவர்கள் யாதவர்களுக்குத் தேவனான வஸுதேவனுடைய யாகமஹோத்ஸவத்தையும் தீர்த்தயாத்ரையில் நண்பர்களைக் கண்டது முதலிய மற்ற விசேஷங்களையும் த்வாரகையிலுள்ள ஜனங்களுக்குச் சொன்னார்கள். எண்பத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

## { ஸ்ரீக்ருஷ்ணன் கம்ஸனால் கொல்லப்பட்ட தேவகியின் பிள்ளைகளைக் கொண்டுவருதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அனந்தரம் வஸுதேவன் ஒருகால் தன்புதல்வர்களான ராமக்ருஷ்ணர்கள் வந்து தன்பாதங்களில் விழுந்து வந்தனஞ் செய்து நிற்க அவர்களை ப்ரீதியுடன் புகழ்ந்து மொழிந்தான். அவ்வஸுதேவன் தன்பிள்ளைகளான ராமக்ருஷ்ணர்களின் ப்ரபாவத்தை வெளியிடுகின்ற முனிவர்களின் வசனத்தைக் கேட்டு அவர்களின் வீரச் செயல்களையும் கண்டு இவர்கள் ஜகதீஸ்வரர்களேயென்று நம்பிக்கை உண்டாகப்பெற்று அவர்களை அழைத்து இங்ஙனம் மொழிந்தான்.

வஸுதேவன் சொல்லுகிறான்:—க்ருஷ்ண! க்ருஷ்ண! மிகுந்த ஆச்சர்ய சக்தியுடையவனே! பலராம! புராண புருஷனே! நீங்கள் இந்த ஜகத்திற்கெல்லாம் காரணர்களும் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணர்களுமான ஒன்றான பரமபுருஷர்களென்று நான் அறிவேன். நீங்கள் ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாக

வுடையவர்கள். அதிகரணம் கர்த்தா உபாதானம் ஸம்பந்தி ஸம்ப்ரதானம் ப்ரயோஜகன் காலம் ப்ரகாரம் ஆகிய இவையெல்லாம் ப்ரக்ருதி புருஷர்களை நேரே நிய மிக்கிற மஹானுபாவனுகிய நீயே. இந்த்ரியங்களின் அறிவுக்கு எட்டாதவனே! உன்னிடத்தில் உன்னல் படைக்கப்பட்டதும் தேவர் மனுஷ்யர் பசுக்கள் வ்ருக்ஷங் களென்று பலவாருயிருப்பதுமாகிய இந்த ஜகத்தில் உன் சரீரமாகிய ஜீவன்மூலமாய் ப்ரவேசித்து ப்ராண னையும் ஜீவனையும் சரீரமாக வுடையவனுகி அவற்றின் ஜன்ம ஜராமரணுதியான தோஷங்கள் எவையும் தீண் டப்பெருமல் அதைப் பறிக்கின்றனை. இந்த ப்ர பஞ்சத்திலுள்ள தேவமனுஷ்யாதி சரீரங்களின் ஸ்ருஷ் டிக்குக் காரணங்களான ப்ராணுதிகளின் சக்திகள் எவ்வெவை உண்டு; அவற்றிற்கெல்லாம் நீயே நிர் வாஹகனுகையால் அவை பரமாத்மாவான உன்னுடைய வைகளே. சக்திகளையுடைய அந்த ப்ராணுதிகள் உன க்குப் பாதந்த்ரங்களேயன்றி ஸ்வதந்த்ரங்களன்று. இனி அவற்றின் சக்திகள் உன்னதீனங்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? அந்த ப்ராணுதிகளின் சக்திக ளுக்கு அவற்றுள் ஒன்றுக்கொன்று நிர்வாஹகங்களா யிருக்கலாகாதோ என்றுல், நிர்வாஹகங்களாகமாட்டா, ஏனென்றுல், அவற்றில் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொருசக்தி யே உள்ளது. ஒன்றின்சக்தி மற்றென்றுக்குக் கிடை யாது. ஒன்றைவிட மற்றென்று விலக்ஷணமாகையால் ஒன்றின் சக்திக்கு மற்றென்று நிர்வாஹகமென்று சொ ல்ல முடியாது. இங்குமங்கும் உலாவுகின்றதேஹங்களின் சேஷ்டை, ஜீவன் பரமாத்மா இவ்விருவருடையசேஷ்டை யேயன்றிக் கேவலஜீவனுடைய சேஷ்டையன்று. அந்த சேஷ்டையை ஜீவனே ஸ்வதந்த்ரனுயிருந்து நடத்து

கிறதில்லை. பரமாத்மாவினால் அனுமதி கொடுக்கப் பெற்றே நடத்துகிறானன்றி ஸ்வதந்த்ரனல்லன். சேதனர்களே இங்ஙனம் பரதந்த்ரர்களாயிருக்க, அசேதனங்களான ப்ராணாதிகள் பரதந்த்ரங்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? சந்த்ரனுடைய காந்தி, அக்னியின் தேஜஸ்ஸு, ஸூர்யனுடைய ஒளி, நக்ஷத்ரங்கள் மின்னல் இவற்றின் ப்ரகாசம், பர்வதங்களின் நிலைமை, பூமியின் குணமான கந்தம், பூமி ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஆதாரமாயிருக்கை ஆகிய இவையெல்லாம் உண்மையை ஆராய்ந்து பார்க்கையில் நீயே யென்று சொல்லக்கூடியவைகளாயிருக்கின்றன. (எல்லாம் உன்னால் நிர்வஹிக்கப்படுபவைகளே). ப்ராணிகளுக்கு த்ருப்தியை விளைக்கை அவற்றின் ஜீவனத்திற்கு ஹேதுவாயிருக்கை நனையச்செய்கை மாதுர்யகுணம் இவையும் இவற்றிற்கு ஆதாரமான ஜலமும் நீயே. (இவற்றிற்கெல்லாம் நீயே நிர்வாஹகன்). ப்ரவ்ருத்திஸாமர்த்யம் வேகம் தாரணஸாமர்த்யம் வ்யாபாரம் நடை ஆகிய வாயுவின் சக்திகள்யாவும் ஸர்வேஸ்வரனான நீயே. (அவற்றிற்கும் நீயே நிர்வாஹகன்). திசைகளின் இடைவெளியும் திசைகளும் நீயே. சப்தமும் அதற்கு ஆதாரமான ஆகாசமும் நீயே. நாதம் வர்ணம் ஓங்காரம் ஆகிய வாக்கின் பேதங்களும் அவற்றால் அறியப் படுகிற பொருள்களின் பேதங்களும் நீயே. (ஸ்போடம் நாதம் ஓங்காரமென்றும் பரை பஸ்யந்தி மத்யமை யென்றும் வழங்கிவருகிற வாக்கின் பேதங்களும் வைகரியென்று வழங்குகிற வர்ணங்களும் பதங்களும் நீயே). விஷயங்களை அறிவிக்குந்திறமைகளாகிற இந்த்ரியங்களின் சக்திகளும் அவற்றிற்கு அத்திறமைகளை விளைக்கிற அபிமானிதேவதைகளும் நீயே.

புத்தியின் அத்யவஸாயமும் ஜீவனுடைய உண்மையான நினைவும் நீயே. ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களுக்குக் காரணமான பூதாதியென்கிற தாமஸாஹங்காரமும், இந்த்ரியங்களுக்கு உதவி செய்கிற ராஜஸாஹங்காரமும், இந்த்ரியங்களுக்குக் காரணமான ஸாத்விகாஹங்காரமும் அனுபவித்து மிகுந்த கர்மத்தையுடைய ஜீவாத்மாக்களுக்குப்பலனைக்கொடுக்கிற கர்மமும் நீயே. பொன் மண் முதலியவற்றிற்குப் பற்பல உருவங்கள் உண்டாகி மாறிப் போயினும் அவற்றிற்கு ஆதாரமான அந்தப் பொன் மண் முதலியவை அழியாதிருப்பது போல, அவஸ்தைகள் வருவதும் போவதுமாயிருப்பினும் அவற்றிற்கு ஆதாரமாய் அழியாதிருக்கின்ற வஸ்துக்களும் நீயே. ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸென்கிற மூன்றுகுணங்களும் அவற்றின்பரிணாமங்களான மஹத்து முதலியவைகளும் ஸூக்ஷ்மசேதனங்களைச் சரீரமாகவுடைய பரப்ரஹ்மமாகிய உன்னிடத்திலேயே உன்ஸங்கல்பஜ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்டவை. உன் ஸங்கல்பத்தினால் படைக்கப்பட்ட மஹத்து முதலிய இந்தத் தத்வங்களெல்லாம் உண்மையில் உன்னிடத்தில் இல்லை. அவை ப்ரக்ருதி முதலியவற்றில் இருக்கின்றன. நீ சேதநாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணன். அவை ப்ரக்ருதி முதலியவற்றின் மூலமாய் உன்னிடத்தில் இருப்பவையன்றி நேரே இருப்பவையன்று. (பரிணாமங்களெல்லாம் ப்ரக்ருதி முதலியவற்றைச் சேர்ந்தவையன்றி உன்னைச்சேர்ந்தவைகளன்று. நீ என்றும் விகாரமற்றவன்). நீ அந்த ப்ரக்ருதிபரிணாமங்களில் புகுந்து ஸர்வகாலமும் அமைந்திருக்கின்றனையென்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. (நான் சொன்ன விஷயங்களுக்கெல்லாம் சாஸ்த்ரமே ப்ரமாணம்). ஸத்வாதி குணங்

களின் ப்ரவாஹரூபமான இந்த ஸம்ஸாரத்தில் விழுந்திருக்கிற ஜீவாத்மாக்கள் வருந்தியும் அறியமுடியாத ஸர்வாந்தராத்மாவான உன்னுடைய உண்மையை அறியாமல் அஜ்ஞானத்தினால் புண்ய பாபகர்மங்களை விளைத்துக்கொண்டு ஜன்மஜராமரணாதி துக்கங்களை அனுபவிக்கிறார்கள். ஜகதீச! இவ்வுலகத்தில் ப்ராணிகள் வருந்தியும் கிடைக்க அரியதும் நல்லதிறமையுள்ள இந்த்ரியங்கள் அமைந்திருப்பதுமாகிய மனுஷ்யஜன்மத்தைத் தெய்வாதீனமாய்ப் பெற்றும் உன்மாயையினால் தங்கள் நன்மையில் மனவூக்க மற்றுத் திரிகையில் அவர்களுடைய வயதெல்லாம் வீணாகவே கழிகின்றது. தேஹத்திலும் அதைத் தொடர்ந்த பிள்ளை பெண்டிர் முதலியவற்றிலும் 'இது என்னுடைய தேஹம். இவர்கள் என் புதல்வர்கள். இவள் என்பார்யை. இது என்வீடு' என்னும் ஸ்னேஹமாகிற பாசங்களால் ப்ரஹ்மதேவன் முதல் பசு பக்ஷி வரையிலுள்ள இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் நீ பந்தனஞ் செய்கின்றனை. நீங்கள் எங்கள் புதல்வர்களன்று; ப்ரக்ருதிபுருஷர்களுக்கு நியாமகர்களும் அவற்றைக்காட்டிலும் விலக்ஷணர்களுமாகிய ஒன்றான பரம புருஷர்களே. நீங்கள் பூமிக்குப் பாரமாயிருக்கிற க்ஷத்ரியர்களை அழிக்கும் பொருட்டு இங்கு அவதரித்தீர்கள். இங்ஙனம் முன்பு ஸூதிகாக்ருஹத்தில் நீயே மொழிந்தனையல்லவா? வருந்தினவர்களுக்கு பந்துவே! ஆகையால் மற்றொரு உபாயமுமில்லாத நான் சரணமடைந்தவர்களின் ஸம்ஸாரபயத்தைப் போக்க வல்லவைகளான உன்பாதாரவிந்தங்களைச் சரணம் அடைந்தேன். 'ஸுகமாயிருக்கிற நீ ஏன் இப்படி ஸம்ஸாரத்தை வெறுக்கின்றனை?' என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள். இந்த்ரியங்களின் த்ருப்திக்காகச் சப்

தாதி விஷயங்களில் விழுந்து இதுவரையில் அனுப வித்தது போதும் போதும். இனி வேண்டியதில்லை. ஏனென்றால், அந்தச் சப்தாதிவிஷயங்களில் அபிநி வேசத்தினாலல்லவோ நான் அறிவு கெட்டு மரணமடை யுந்தன்மையதான தேஹத்தை ஆத்மாவாகவும் ப்ரக்ரு திபுருஷர்களுக்கு நியாமகனும் அவற்றைக் காட்டிலும் விலக்ஷணனுமாகிய உன்னை என் பிள்ளையாகவும் ப்ர மிக்கின்றேன். (ஆகையால் சப்தாதி விஷயங்களை விரு ம்பி அனுபவித்தது போதும்). 'நான் கர்மத்தினால் விளையும் பிறவியற்றவனாயினும் நான் ஏற்படுத்தின தர்ம மர்யாதைகளை நிலைநிறுத்திப் பாதுகாக்கும்பொருட்டு யுகங்கள்தோறும் அவதரிக்கின்றேன்' என்று நீ ஸூ திக்ருஹத்தில் எனக்கு மொழிந்தனையல்லவா? 'சதுர்ப் புஜனான அத்தேவன் வேறு. நான் வேறு' என்கிறா யோ? அப்படியன்று. நீ பலவகை உருவங்களை ஏற்றுக் கொள்வதும் விடுவதுமாயிருக்கின்றனை. அப்பொழுது சதுர்ப்புஜ உருவத்துடன் தோன்றி உடனே அவ்வுரு வத்தை மறைத்து இவ்வுருவத்தை எடுத்துக்கொண் டனை. ஆகையால் நீ அப்பரமபுருஷனே. ஆகாயம் எல்லா இடங்களிலும் வ்யாபித்திருப்பினும் தன்ஸ்வரு பம் மாறாதிருப்பதுபோல நீ பற்பல உருவங்களை ஏற் றுக்கொள்ளினும் உன் ஸ்வபாவத்தைக் கைவிடாமல் என்றும் ஒருவாறாகவேயிருக்குந்தன்மையன். மிகுந்த புகழுடையவனே! அளவற்ற மஹிமையுடையவனும் எங்கும் நிறைந்தவனுமாகிய உன்னுடைய விபூதிகளை யும் ஆச்சர்ய சக்திகளையும் எவன்றான் அறியவல்ல வன்? எவனும் அறியமாட்டான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஷாட்குண்ய பூர்ணனும் ஸாத்வதஶ்ரேஷ்டனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம்

மொழிந்த தந்தையின் வார்த்தையைக் கேட்டு வணக்க முற்றுச் சிரித்துக்கொண்டே இனிய உரையுடன் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—புதல்வர்களான எங்களைக் குறித்துத் தத்வங்களை விரித்து மொழிந்தீர்களே. இந்த உங்கள் வார்த்தை மிகவும் பொருள் அமைந்திருக்கின்றது. எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமே யென்று எங்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டு எங்களையே உத்தேசித்துமொழிந்தீர்கள். யாதவஸ்ரேஷ்டனே! நான் நீங்கள் என்தமையனாகிய இந்தப் பலராமன் த்வாரகையிலுள்ள மற்றவர்கள் ஆகிய அனைவரும், பலபடைச் சொல்லியென்? ஜங்கமஸ்தாவரங்களடங்கின இந்த ஜகத்தெல்லாம் இங்ஙனமே பரமாத்மாவைக் காரணமாகவுடையதும் அவனுக்குச் சரீரமாகி அவனை அந்தராத்மாவாகவுடையதும் அவனால் நிர்வஹிக்கப்படுவதுமாயிருக்குமாகையால் எல்லாம் அவனேயன்றி வேறில்லை. பரமாத்மா ஸ்வயம்ப்ரகாசன்; தேவாதிசரீரங்களைக்காட்டிலும் அவற்றிற்கு அபிமானிகளான ஜீவாத்மாக்களைக் காட்டிலும் வேறுபட்டவன். அவன் தானே ப்ரக்ருதியின குணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களால் மஹத்து முதலிய தத்வங்களையும் அவற்றைக் கொண்டு தேவமனுஷ்யாதி சரீரங்களையும் படைத்து அவற்றுள் பலவாறு நிறைந்திருக்கிறனென்று ப்ரமாணங்கள் முறையிடத் தெரிகின்றது. ஆகாசம் வாயு அக்னி ஜலம் பூமி ஆகிய பஞ்சபூதங்கள் தம்மால் படைக்கப்பட்ட வஸ்துக்களில் அந்தந்த வஸ்துக்களுக்கு உரியபடி சில விடங்களில் வெளித்தோற்றத்தையும் சிலவிடங்களில் சிறுமையையும் சில விடங்களில் பெருமையையும் சில விடங்களில் ஒருமையையும் சில விடங்களில் பன்மையை

யும் பெறுவதுபோல, இப்பரமாத்மாவும் சில விடங்களில் வெளித்தோற்றத்தையும் சில விடங்களில் சிறுமையையும் சில விடங்களில் பெருமையையும் இயற்கையில் ஒருமையையும் தன்னால் வ்யாபிக்கப்படும் வஸ்துக்கள் பலவாகையால் பன்மையையும் பெறுகின்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—வஸுதேவன் இங்ஙனம் பகவான் மொழிந்த வார்த்தையைக் கேட்டுப் பரப்ரஹ்மஸ்வரூபமல்லாத வஸ்து ஏதுவுமே இல்லை யென்று தெரிந்து கொண்டு பேதபுத்தி தொலையப்பெற்று மனக்களிப்புற்றுப் பேசாதிருந்தான். குருஸ்ரேஷ்டனே! அனந்தரம் ஸமஸ்ததேவதாஸ்வரூபனுன பகவானுக்கு அவதரிக்குமிடமாகையால் ஸமஸ்த தேவதாஸ்வரூபமான தேவகி புதல்வர்களான ராமக்ருஷ்ணர்கள் மரணம் அடைந்த குருபுத்ரனை மீட்டுக் கொண்டு வந்து கொடுத்தார்களென்று கேள்விப்பட்டு மிகவும் வியப்புற்று அவர்களை அழைத்துத் தன்பிள்ளைகள் கம்ஸனால் ஹிம்ஸிக்கப்பட்டு மரணம் அடைந்ததை நினைத்துக்கொண்டு மனம் தழதழத்துக் கண்ணும் கண்ணீருமாய்க் கேட்போர்களுக்கு மன இரக்கம் உண்டாகும்படி இங்ஙனம் மொழிந்தாள்.

தேவகி சொல்லுகிறாள்:—ராம ராம! அளவிடமுடியாத ஸ்வரூப முடையவனே! க்ருஷ்ண! ஆச்சர்ய சக்தியுடைய யோகிஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனே! நீங்கள் உலகங்களைப் படைக்கின்ற ப்ரஹ்மாதிகளுக்கும் நியாமகர்களான ஜகத்காரண புருஷர்களென்று நான் அறிவேன். அத்தகைய நீங்கள், காலவசத்தினால் ஸத்வகுணம் சிறிதுமின்றி அழிந்து சாஸ்த்ரமர்யாதைகளைக் கடந்து நடப்பவர்களும் பூமிக்குப் பாரமாயிருப்

பவர்களுமாகிய மன்னவர்களை அழிக்கும்பொருட்டு என்னிடத்தினின்று அவதரித்தீர்கள். உன்னுடைய அனேகமாயிர அம்சங்களில் ஓரம்சத்தின் அனேக மாயிர அம்சங்களில் ஓரம்சத்தினால் இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதிகள் நடக்கின்றன. ஸமஸ்த ப்ரபஞ்சத்திற்கும் அந்தராத்மாவாகி அந்த ப்ரபஞ்சமெல்லாம் தானேயாயிருப்பவனே! அத்தகைய பூர்ணப்ரஹ்மஸ்வரூபனான உன்னை நான் இப்பொழுது சரணம் அடைந்தேன். நீங்கள் உங்கள் குருவான ஸாந்தீபினியால் நெடுநாளைக்கு முன்பு மரணம் அடைந்த தன் புதல்வனைக் கொண்டுவந்து கொடுக்கும்படி தூண்டப்பட்டு யமன்வீட்டினின்று அவரது புதல்வனை மீட்டுக்கொண்டுவந்து குரு தக்ஷிணையாகக் கொடுத்தீர்களாமே. ஆச்சர்யசக்தியுடையவர்களில் சிறந்த நீங்கள் அங்ஙனமே என்மனோரதத்தையும் நிறைவேற்ற வேண்டும். கம்ஸனால் கொல்லப்பட்ட என் பிள்ளைகளைப் பார்க்க விரும்புகிறேன். அவர்களை வரவழைத்துக் காட்டுவீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருகுலத்தை வளர்ப்பவனே! இங்ஙனம் தாயால் தூண்டப்பட்ட ராமக்ருஷ்ணர்கள் யோகமாயையைக் கைப்பற்றிப் பலிசக்ரவர்த்தியின் உலகமாகிய ஸுதலத்திற்குப் போனார்கள். தைத்யராஜனான பலி ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் தெய்வமும் தனக்கு மிகவும் இஷ்டதெய்வமுமாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் அந்த ஸுதலமென்கிற தன்னுலகத்தில் வந்திருக்கக் கண்டு ஸந்தோஷ ஸாகரத்தில் மூழ்கின மனமுடையவனாகித் தன் குடும்பத்துடன் அப்படியே எழுந்து நமஸ்கரித்தான். அப்பலிசக்ரவர்த்தி அவர்களுக்குச் சிறந்த ஆஸனங்களை அளித்து

அதில் உட்கார்ந்த அம்மஹாநுபாவர்களின் பாதாரவிந்தங்களை அலம்பி ப்ரஹ்மதேவன் வரையிலுள்ள ஸமஸ்த லோகங்களையும் புனிதஞ் செய்யவல்ல அந்த ஜலத்தைத் தான் பரிவாரத்துடன் சிரஸ்ஸில் தரித்தான். அவன், விலையுயர்ந்த ஆடைகள் ஆபரணங்கள் அங்கராகங்கள் பூமாலை தூபம் தீபம் அம்ருதம் போன்ற பக்ஷயங்கள் இவை முதலிய அளவற்ற விபவங்களையும் தன் குலம் பணம் இவற்றையும் தன்னையும் ஸமர்ப்பித்து அவர்களைப் பூஜித்தான். மன்னவனே! அவ்விந்த்ரஸேனன் ப்ரேமத்தினால் உருகின மனத்தில் அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களைத் தரித்து ஆநந்தநீர்களால் கண்கள் நிரம்பவும் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகவும் பெற்றுத் தழதழுத்த உரையுடன் மொழிந்தான்.

பலி சொல்லுகிறான்:— தன்படங்களின் ஒரு பாகத்தில் ஜகத்தையெல்லாம் தரிக்கின்ற* மஹாநுபாவனான ஆதிசேஷனுக்கு நமஸ்காரம். உலகங்களையெல்லாம் படைப்பவனும் கர்ம ஜ்ஞான பக்தியோகங்களை வெளியிட்டு அவற்றால் ஆராதிக்கப்படுகின்றவனும் அளவிடமுடியாத ஸ்வரூப ரூப குண விபூதிகளை யுடையவனும் மூன்றுலோகங்களிலும் உள்ளே புகுந்து நியமித்துத் தரித்துக்கொண்டிருக்கும் பரமாத்மனும் எங்கும் வ்யாபித்திருப்பினும் அவ்வவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரம். உங்கள் தர்சனம் சிலபேர்களுக்குவருந்திப் பெறக்கூடியதும் சிலர்க்கு வருந்தியும் பெறக்கூடாததுமாயிருப்பினும் உன்கருணைக்குப் பாத்ரமாகிய சிலர்க்கு அநாயாஸமாகக் கிடைக்கும். நாங்

* பலிக்கு இந்த்ரஸேனனென்று மற்றொருபெயர்.

கள் ரஜஸ்தமோகுணங்கள் நிறைந்த ஸ்வபாவ முடைய வர்களாயினும் உங்கள் தர்சனம் எங்களுக்கு அனு யாஸமாகக் கிடைத்தது. இதற்கு உன்க்ருபையே காரணமன்றி மற்ற எதுவும் காரணமன்று. தைத்யர் தானவர் கந்தர்வர் ஸித்தர் வித்யாதரர் யக்ஷர் ராக்ஷஸர் பிசாசர் பூதர் ப்ரமதநாயகர் இவர்கள் அனைவரும் சுத்தஸத்வத்திற்கு முக்யாதாரமாயிருப்பவனும் நேரே சாஸ்த்ரத்தினால் அறியத்தகுந்த ஸ்வரூபமுடையவனுமாகிய உன்னிடத்தில் என்றும் வேரூன்றினவைர முடையவர்கள். நாங்களும் அந்தத் தைத்ய வர்க்கத்தில் சேர்ந்தவராகையால் அத்தன்மையர்களே. மற்று முள்ள கம்ஸாதிகளும் அத்தகையர்களே. செந்தாமரைக்கண்ணனே! அவர்கள் அனைவரும் * ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாத்மதை முதலிய முக்திகளை அடைந்தார்கள். உன்னிடத்தில் இடைவிடாமல் மனப்பற்று வினையுமாயின் அது பலனை விளைத்துவிடும். பக்தி இருந்தால்தான் முக்தி உண்டாகுமென்கிற நிர்ப்பந்தம் இல்லை. த்வேஷமாயினும் உன்னை எப்பொழுதும் நினைவு மூட்டிக்கொண்டிருக்குமாயின், அவன் பாபங்களெல்லாம் தீர்ந்து முக்தியைப் பெறுவான். ஆகையால் உன்னிடத்தில் எவ்விதத்தி

---

*ஸாலோக்யமாவது = பகவானோடு ஸமானலோகத்திலிருக்கை. ஸாமீப்யமாவது-ஸமீபத்திலிருக்கை. ஸாரூப்யமாவது-ஸமானவேஷத்வம்; பகவானோடு வேஷம் ஒத்திருக்கப்பெறுகை. ஸாத்மதையாவது-ஆத்மகுணங்கள் ஒத்திருக்கப்பெறுகை. இதையே ஸாயுஜ்யமென்று சொல்லுவர்கள். 'ஸார்ஷ்டித்வமபு ஸாத்மதாம்' என்று பாடமானபோது ஸார்ஷ்டித்வமாவது-ஸம்ருத்திகள் ஒத்திருக்கப்பெறுகை. ஸாலோக்யாதிகள் மூன்றும் ஸாயுஜ்யத்தினால் விளைபவைகளாகையால் முக்திதாரதம்யசங்கைக்கிடமில்லை யென்றுணர்க.

லாயினும் மாருமல் மனப்பற்று நேரப்பெறுகையே முக்திக்குக் காரணம். கம்ஸன் முதலிய சிலர் உன்னிடத்தில் நிலைநின்ற வைரம் செய்து அதனால் உன்னையே மாருமல் நினைத்துக்கொண்டிருந்து முக்தியை அடைந்தார்கள். சிலர் பக்தியினால் முக்தியை யடைந்தார்கள். சிலர் (கோபிகைகள்) உன்னிடத்தில் காமத்தினால் முக்தியை அடைந்தார்கள். (கம்ஸாதிகள் வைரத்தினால் உன்னை அணுகாமல் ஒதுங்கி யிருப்பினும் முக்தியை அடைந்தார்கள். தேவாதிகள் உன்னிடத்தில் ப்ரீதியுடையவராகி உன்னை அணுகி யிருப்பினும் ஸத்வ குணம் தலையெடுத்திருப்பினும் அவர்களைப்போல் முக்தியை அடையவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால், தேவாதிகள் அனுக்கராயினும் பெரும்பாலும் அஹங்கார மமகாரங்களால் உன்னை மறந்து ஸத்வகுணம் தலையெடுத்தபோதுமாத்ரம் நினைப்பார்கள். கம்ஸாதிகள் த்வேஷத்தின்மிகுதியால் உன்னை ஓயாமல் நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆகையால் உன்னிடத்தில் எவ்விதத்திலாயினும் மாருத மனப்பற்று நேரப்பெறுகையே முக்திக்குக் காரணமன்றி மற்றொன்றும் அன்று. தேவாதிகள் அத்தகைய மனப்பற்று நேராமையால் முக்தியை அடையவில்லை. கம்ஸாதிகள் அது நேர்ந்தமையால் முக்தியை அடைந்தார்கள்). யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனே! யோகீஸ்வரர்களுக்கூட உன்னுடைய யோகமாயையை இன்னது இத்தகையதென்று அறிய முடிகிறதில்லை. நாங்கள் அதை எப்படி அறிவோம்? (அதன் ஸ்வரூபத்தை அறியாத நாங்கள் அதை எப்படி தாண்டுவோம்?) ஆகையால் மற்ற எதிலும் விருப்பமில்லாத பெரியோர்களால் தேடத்தகுந்த உன்பாதாரவிந்தங்களில் நிலை

கின்ற மதியுடையவனுகிப் பாபங்களுக்கிடமான இல்லற வாழ்க்கையாகிற பாழ்ங்கிணற்றினின்று கரையேறி ஜகத்திற்கெல்லாம் ரக்ஷகங்களான வ்ருக்ஷங்களின் அடிகளில் தானே உதிர்ந்த பழம் முதலியவற்றைப் புசித்து ஜீவித்துக்கொண்டு இந்த்ரியங்களெல்லாம் அடங்கித் தனியனுகவாவது எல்லோர்க்கும் நண்பர்களான பெரியோர்களுடன் கலந்தாவது திரியும்படி என்னிடத்தில் நீ அருள் புரிவாயாக. நியமிக்கத்தகுந்தவர்களுக்கு நியாமகனே! சேதனுசேதனங்களெல்லாம் உன்னுடைய நியமனத்திற்கு உட்பட்டவையேயன்றி அதற்கு உட்படாதது எதுவுமே இல்லை. எங்களுக்குக் கட்டளை அளிப்பாயாக. ப்ரபூ! எங்களைப் பாபமற்றவர்களாகச் செய்வாயாக. உனது கட்டளையை ஸ்ரத்தையுடன் அனுஷ்டிக்கிறவன் கர்மபந்தத்தினின்று விடுபடுவானல்லவா?

ஸ்ரீபகவான் சொல்லுகிறுன்:—முதல் அந்தரமாகிய ஸ்வாயம்புவமன்வந்தரத்தில் மரீசியென்னும் ப்ரஜாபதிக்கு ஊர்ணையென்னும் பார்யையிடத்தில் ஆறு பிள்ளைகள் பிறந்தார்கள். அத்தேவர்கள், ப்ரஹ்மதேவன் தன் புதல்வியான ஸரஸ்வதியைப் புணரவிரும்பக் கண்டு சிரித்தார்கள். அவர்கள் அந்தக் கெடுஞ்செயலால் அஸுரயோனியை அடைந்து ஹிரண்யகசிபுவுக்குப் பிள்ளைகளாகப் பிறந்தார்கள். அவர்கள் யோகமாயையினுல் பறியுண்டு தேவகியின் உதரத்தில் பிறந்தார்கள். ராஜனே! அவர்களைக் கம்ஸன் ஹிம்ஸித்தான். அந்தத்தேவகி அவர்களைத் தன்புதல்வர்களாக நினைத்துச் சோகிக்கிருள். அவர்கள் உன்னருகில் இதோ இருக்கின்றனர். தாயான தேவகியின் சோகத்தைப் போக்கும்பொருட்டு இவர்களை இவ்விடத்தி

னின்றும் கொண்டு போகின்றோம். அப்பால் ப்ரஹ்ம தேவனைச் சிரித்த பாபத்தினின்று விடுபட்டு மனவருத்த மற்றுப் புண்யலோகத்தைப் பெறுவார்கள். ஸ்மரன் உத்கீதன், பரிஷ்வங்கன், பதங்கன், க்ஷுத்ரப்ருக்கு, க்ருணி ஆகிய இவ்வறுவரும் பிறகு என் அநுக்ரஹத்தி ஞல் பெரியோர்கள் பெறுங்கதியான முக்தியைப் பெறு வார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—அந்த ராமக்ருஷ்ணர் கள் இங்ஙனம் மொழிந்து இந்த்ரஸேனனல் (பலியினல்) பூஜிக்கப்பட்டு அவர்களை அழைத்துக் கொண்டு மீண்டு த்வாரகைக்கு வந்து தாயான தேவகியிடம் புதல்வர் களைக் கொடுத்தார்கள். தேவகியும் அப்புதல்வர்களைக் கண்டு புத்ரஸ்னேஹத்தினல் ஸ்தனங்களில் பால் பெரு கப்பெற்று அவர்களை மடியில் ஏற்றி அணைத்து அடிக் கடி உச்சிமோந்தாள். ஜகத்தின் ஸ்ருஷ்டியை நடத் துகிற ஸ்ரீவிஷ்ணுவின் மாயையினல் மதிமயங்கப் பெற்ற அந்தத் தேவகி பிள்ளைகளின் ஸ்பர்சத்தினல் பால் பெருகப் பெற்ற ஸ்தனத்தை ப்ரீதியுடன் அவர் களுக்குப் பானஞ் செய்வித்தாள். அவர்கள், கதாத ரனுன ஸ்ரீக்ருஷ்ணன் பானஞ் செய்து மிகுந்திருப்பதும் அம்ருதம் போன்றதுமாகிய அந்தத் தேவகியின் ஸ்த ன்யத்தைப் பானஞ் செய்து ஸ்ரீமந் நாராயணனுன அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமேனியின் ஸ்பர்சத்தி னல் ஆத்மபரமாத்மாக்களின் உண்மையைப்பற்றின அறிவு நேரப் பெற்று, ஸ்ரீக்ருஷ்ணன் தேவகி தந்தையா கிய வஸுதேவன் பலராமன் இவர்களை நமஸ்கரித்து ஸமஸ்த பூதங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் கிளம்பி ஆகாயமார்க்கத்தினல் தேவலோகம் போய்ச் சேர்ந்தார்கள். மன்னவனே! தேவகி மரணம் அடைந்த

பிள்ளைகள் அங்ஙனம் மீண்டு வந்து புறப்பட்டுப் போன தைக் கண்டு மிகவும் வியப்புற்று எல்லாம் ஸ்ரீக்ருஷ்ண னுடைய மாயையினால் (ஆச்சர்ய சக்தியினால்) நடந்த தென்று நினைத்தாள். பாரதனே! ஸ்ரீக்ருஷ்ணன் அளவற்ற வீர்யமுடையவன்; ஷாட்குண்ய பூர்ணன்; பரமாத்மன். அவனுடை வீர்யங்கள் அற்புதமானவை. இத்தகைய அவனுடைய வீரச்செயல்கள் பற்பலவும் உண்டு. அவற்றிற்கு முடிவே கிடையாது.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—ஜகத்தின் பாபங்களை அடியோடு போக்குவதும் வ்யாஸ புத்ரராகிய சுக முனிவர் விரித்துரைத்ததும் ஸ்ரீக்ருஷ்ணபக்தர்களின் செவிக்கு ஆபரணம்போன்றதும் தூயபுகழுடைய ஸ்ரீக் ருஷ்ணனுடைய சரித்ரரூபமாகிய இந்த வ்ருத்தாந்தத் தை எவன் தான் கேட்கிறானோ, அல்லது பிறரைக் கேட்பிக்கிறானோ, அவன் பகவானிடத்தில் மனவூக்க முற்று எவ்விதத்திலும் பயமின்றி க்ஷேமமாயிருப்ப தாகிய அப்பகவானுடைய லோகத்தைப் பெறுவான். எண்பத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸுபத்ராஹரண வ்ருத்தாந்தமும், ஸ்ரீக் ருஷ்ணன் ச்ருததேவனென்னும் ப்ராஹ் மணனையும் ஜனகமஹாராஜனையும் அனுக் ரஹித்தலும்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ரஹ் மரிஷீ! எனக்குப் பிதாமஹியும் ராமக்ருஷ்ணர்களுக்கு உடன்பிறந்தவளுமாகிய ஸுபத்ரையை அர்ஜுனன் மணம் புரிந்த வ்ருத்தாந்தத்தை அறிய விரும்பு கிறேன். (அதை மொழிவீராக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸமர்த்தனாகிய அர்ஜுனன் தீர்த்தயாத்ரைக்காகப்பூமியைச் சுற்றிக்கொண்டு வருங்க்ரமத்தில் ப்ரபாஸதீர்த்தத்திற்கு வந்து தனது அம்மான் புதல்வியை ராமன் துர்யோதனனுக்குக் கொடுத்து விவாஹஞ் செய்விக்கப் போகிறானென்றும், மற்ற வஸுதேவாதிகள் அதற்கு இசையவில்லை யென்றும் கேள்விப்பட்டு அவளைத் தான் பெற விரும்பி த்ரிதண்டிஸந்ந்யாஸிவேஷம் பூண்டு த்வாரகைக்குச் சென்றான். பிக்ஷுவேஷம் பூண்ட அவ்வர்ஜுனன் பட்டணத்து ஜனங்களாலும் உண்மையை அறியாத மஹானுபாவனான பலராமனாலும் அடிக்கடி பூஜிக்கப்பட்டுத் தன்கார்யத்தை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு வர்ஷாகாலம் நான்குமாதங்களும் அங்கு வஸித்திருந்தான். ஒருகால் பலராமன் நான் செய்யும் அதிதிஸத்காரத்தை அங்கீகரிக்கவேண்டுமென்று வேண்டித் தன்க்ருஹத்திற்கு அழைத்துக்கொண்டு போய் ஸ்ரத்தையுடன் பிக்ஷை கொண்டு வந்து கொடுக்க அவ்வர்ஜுனன் புசித்தான். அவன் கொடிபோல் நுண்ணிய அங்கமுடையவளும் வீரர்களின் மனத்திற்கு இனியளுமாகிய அக்கன்னிகையை அவ்விடத்தில்கண்டு ப்ரீதியினால் கண்கள் மலரப்பெற்றுப் புணரவேண்டுமென்னும் விருப்பத்தினால் கலங்கின மனத்தை அவளிடம் வைத்தான். அக்கன்னிகையும் பெண்களின் மனத்திற்கு இனியனாகிய அவ்வர்ஜுனனைக் கண்டு சிரித்து வெட்கமுற்ற கடைக்கண்ணோக்கமுடையவளும் அவனிடத்தில் வைக்கப்பட்ட ஹ்ருதயமும் கண்களும் இவையுடையவளுமாகி அவனை விரும்பினாள். அர்ஜுனன் அப்பெண்மணியை எப்பொழுதும் த்யானித்துக்கொண்டு அவளைப் பறித்துக் கொண்டுபோக

அவகாசம் பெற விரும்பி மிகவும் வலிய காமபாதையி ஞல் வருந்தி ராமாதிகளின் ஸம்மானத்தினுல் விளையும் ஸுகத்தைச் சிறிதும் அனுபவிக்க முடியாதிருந்தான். இப்படி இருக்கையில், அவ்வர்ஜுனன் தாய் தந்தைக ளான தேவகீ வஸுதேவர்களாலும் மஹானுபாவனுன ஸ்ரீக்ருஷ்ணனுலும் அனுமதி கொடுக்கப் பெற்று, ஒரு கால் தேவயாத்ரைக்காக ப்ராகாரத்திற்கு வெளியில் வந்து ரதத்தின்மேல் இருக்கின்ற அக்கன்னிகையைப் பறித்துக் கொண்டு போனுன். அப்பால் அவன் ரதத் தில் நின்று காண்டீவமென்னும் தனுஸ்ஸை எடுத்துத் தன்னைத் தடுக்க வந்த சூரர்களான படர்களை ஓடச் செய்து தன்பந்துக்களான யாதவர்கள் முறையிட்டுக் கொண்டிருக்கையில் ஸிம்ஹம் தன் பாகத்தைப் பறிப் பதுபோல் அப்பெண்மணியைப் பறித்துக்கொண்டு போனுன். பிறகு பலராமன் அர்ஜுனன் ஸந்யாஸி வேஷம் பூண்டு வந்திருந்து ஸுபத்ரையைப் பறித்துக் கொண்டு போனுனென்று கேள்விப்பட்டுப் பர்வத்தின் பொழுது மஹாஸமுத்ரம் கலங்குவதுபோல் கோபா வேசத்தினுல் கலங்கி ஸ்ரீக்ருஷ்ணனும் நண்பர்களும் பா தங்களைப் பிடித்துக்கொண்டு வேண்டக் கோபந்தணிந் தான். பிறகு அப்பலராமன் ஸந்தோஷமுற்று மணவா ளன் மணப்பெண் இவர்களுக்கு விலையுயர்ந்த அலங்கா ரஞ் செய்த யானை தேர் குதிரை சிறந்த பணிப்பெண் கள் முதலிய பற்பல பரிசுகளை அனுப்பினுன். மணப் பெண்பிள்ளைகளுக்கு பந்துக்களாகிய யாதவர்களும் பாண்டவர்களும் ப்ரீதியினுல் முகமலர்த்தி அடைந்தார் கள். மற்றும், ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தன் பக்தர்களி டத்திலுள்ள வாத்ஸல்யத்தைப் பற்றி மற்றொரு வ்ருத் தாந்தம் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸ்ரீக்ருஷ்ண

னுக்கு நண்பராகிய ஶ்ருததேவரென்னும் ப்ராஹ்மணர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நிர்ஹேதுகமான பக்தி அமைந்து அதனால் நிறைவாளராகி இந்த்ரியங்களை அடக்கி எல்லாமறிந்தவரும் எதிலும் மனவிருப்ப மற்றவருமாயிருந்தார். அவர் விதேஹதேசத்தில் மிதிலாபுரத்தில் க்ருஹஸ்தாஶ்ரமத்தைக் கைப்பற்றி ஜீவனத்திற்காகத் தான் ஒரு ப்ரயத்னமும் செய்யாமல் தெய்வாதீனமாய்க் கிடைத்த ஆஹாரத்தைக் கொண்டு க்ருஹஸ்தாஶ்ரமத்திற்கு உரிய தர்மங்களை நடத்திக் கொண்டிருந்தார். அவர் தினந்தோறும் தேஹயாத்ரைக்கு வேண்டியவற்றைமாத்ரம் எதிர்பார்ப்பாரன்றி அதற்குமேல் எதிர்பார்க்கமாட்டார்; அவ்வளவு மாத்ரத்தினால் ஸந்தோஷம் அடைந்து தன்வர்ணாஶ்ரமங்களுக்கு உரிய பஞ்சமஹாயஜ்ஞாதி கர்மங்களை விதிப்படி அனுஷ்டித்துக்கொண்டு வந்தார். மன்னவனே! அத்தேசத்தை ஆள்கின்ற பஹுலாஶ்வனென்னும் ஜனக வம்சத்தரசனும் இந்த ஶ்ருததேவரைப் போலவே இருந்தான். மிதிலாபுரத்தரசனாகிய அந்தப் பஹுலாஶ்வன் தேஹாத்மாபிமான மற்றவன். இங்ஙனம் ஶ்ருததேவர் பஹுலாஶ்வன் இவ்விருவரும் தன் பக்தர்களைக் கைவிடாது காக்குந்தன்மையுள்ள ஸ்ரீக்ருஷ்ணனுக்கு மிகவும் அன்பர்களாயிருந்தார்கள். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் ஸமர்த்தனாகையால் அவர்களுக்கு அருள்புரிய விரும்பித் தாருகன் கொண்டுவந்த ரதத்தின்மேல் ஏறி ரிஷிகளுடன் விதேஹதேசத்திற்குப் போனான். அப்பொழுது நாரதர் வாமதேவர் அத்ரி க்ருஷ்ணத்வைபாயனர் பரசுராமர் அஸிதர் அருணர் நான் (சுகர்) ப்ருஹஸ்பதி கண்வர் மைத்ரே

யர் ச்யவனர் முதலிய பலரிஷிகள் ஸ்ரீக்ருஷ்ணனுடன் போனேம். ஆங்காங்குப் பட்டணத்து ஜனங்களும் காட்டுப்புறத்து ஜனங்களும் மன்னவர்களும் சுக்ரன் முதலிய க்ரஹங்களுடன் உதிக்கின்ற ஸூர்யன்போல் முனிவர்களோடு வருகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கைகளில் உபஹாரங்களை ஏந்திக் கொண்டு வந்து பூஜித்தார்கள். மன்னவனே! ஆனர்த்தம் தன்வம் குருஜாங்கலம் வங்கம் மத்ஸ்யம் பஞ்சாலம் குந்தி மது. கேகயம் கோஸலம் ருணம் முதலிய தேசங்களிலுள்ள புருஷர்களும் பெண்களும் மற்றுமுள்ள ஜனங்களும் அழகிய புன்னகையும் ஸ்னேஹம் நிறைந்தகண்களும் அமைந்து ரமணீயமான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகமாகிற தாமரைமலரிலுள்ள லாவண்யமாகிற மகரந்தத்தை நேத்ரங்களாகிற பாத்ரங்களால் பானஞ் செய்தார்கள். மூன்று லோகங்களுக்கும் குருவாகிய பகவான் தன்னுடைய காட்சிமாத்ரத்தினுல் அஜ்ஞானம் தொலையப் பெற்ற அவர்களுக்கு க்ஷேமம் உண்டாகும்படி அவர்களைக் கடைக்கண்ணுல் நோக்கி மிகவும் பரிசுத்தமாயிருப்பதும் திசைகளில் முழுவதும் வ்யாபித்திருப்பதுமாகிய தன்புகழைத் தேவர்களும் மனுஷ்யர்களும் பாடக் கேட்டுக்கொண்டே மெல்லமெல்ல விதேஹதேசம் போனுன். அத்தேசத்தில் பட்டணத்து ஜனங்களும் நாட்டுப் புறத்து ஜனங்களும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வரவைக் கேட்டு ஸந்தோஷமுற்றுக் கைகளில் பரிசுகளை ஏந்திக்கொண்டு அவனை எதிர்கொண்டார்கள். அவர்கள் உத்தமஸ்லோகனை (சிறப்புடைய ப்ரஹ்மாதிகளால் புகழப்படுபவனும் சிறந்த புகழுடையவனுமாகிய) அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு ஸந்தோஷத்தினுல் முகமும் மனமும் மலர்ந்து அம்மஹானுபாவனையும்

முன்பு கேள்விப்பட்டிருந்த மஹர்ஷிகளையும் அஞ்ச லித்த கைகளோடிணக்கமுற்ற தலைகளால் வணங்கினர் கள். மிதிலாபுரத்தரசனாகிய பஹுலாஶ்வனும் அத் தேசத்திலுள்ள ஶ்ருததேவரென்னும் அந்தணரும் ஸ்ரீக்ருஷ்ணன் தங்களை அனுக்ரஹிப்பதை அறிந்து ப்ரபுவாகிய அப்பகவானுடைய பாதங்களில் விழுந்து தண்டனிட்டார்கள். மைதிலன் ஶ்ருததேவர் ஆகிய அவ்விருவரும் வணக்கத்துடன் கைகளைக் குவித்து ஸ்ரீக்ருஷ்ணனை ப்ராஹ்மணர்களுடன் தங்கள் க்ரு ஹத்திற்கு வந்து அதிதிஸத்காரத்தை அங்கீகரிக் கவேண்டுமென்று ஒரேதடவையில் ப்ரார்த்தித் தார்கள். பகவானும் அதை அங்கீகரித்து இரு வர்க்கும் ப்ரியஞ் செய்ய விரும்பி அவ்விருவர்க்கும் தெ ரியாமல் இருவருடைய க்ருஹத்திற்கும் சென்றான். (மைதிலனுக்குத் தெரியாதபடி ஶ்ருததேவருடைய க்ருஹத்திற்கும், ஶ்ருததேவர்க்குத் தெரியாதபடி மைதிலனுடைய க்ருஹத்திற்கும், இரண்டு உருவங் களுடன் ஒரேதடவையில் சென்றான். மைதிலன் 'க்ருஷ்ணன் ஶ்ருததேவருடைய க்ருஹத்திற்குப் போ காமல் நம் க்ருஹத்திற்கே வந்தான்' என்று நினைத் தான். ஶ்ருததேவர் 'க்ருஷ்ணன் மைதிலனுடைய க்ருஹத்திற்குப் போகாமல் நம்க்ருஹத்திற்கே வந் தான்' என்று நினைத்தான்). ஜனகவம்சத்தரசனும் பெரும்புகழுனுமாகிய பஹுலாஶ்வன் அஸத்துக்களுக் குக் காதால் கேட்கவுங்கூட எட்டாத மஹானுபாவர் களான முனிவர்கள் தன்க்ருஹத்திற்கு வந்திருப்பதைக் கண்டு அவர்களுக்குச் சிறந்த ஆஸனங்களை வரவ ழைத்துக் கொடுத்து அவர்கள் ஸுகமாக உட்கார்ந் திருக்கையில் பக்தியின் மிகுதியால் மனத்தில் ஸந்தோ

ஷம் நிறைந்து கண்ணும் கண்ணீருமாகி அம்முனிவர்களை நமஸ்கரித்து அவரது பாதாரவிந்தங்களை அலம்பி உலகங்களையெல்லாம் புனிதஞ் செய்யவல்ல அந்த ஜலத்தைத் தானும் தன் குடும்பமும் சிரஸ்ஸில் தரித்துச் சந்தனம் முதலிய கந்தம் பூமாலை ஆடை ஆபரணம் தூபம் தீபம் முதலிய உபசாரங்களாலும் பசு எருது இவைகளாலும் ஸர்வேஸ்வரஸ்வரூபர்களான அம்முனிவர்களைப் பூஜித்தான். மற்றும், அவன் அம்முனிவர்களை அன்னத்தினால் த்ருப்தி அடையச் செய்து தன்மடியிலிட்ட பகவானுடைய பாதங்களை மெல்ல மெல்லத் தடவிக்கொண்டு அனைவரும் ஸந்தோஷம் அடையும்படி இனிய உரையுடன் இங்ஙனம் மொழிந்தான்.

பஹுலாச்வன் சொல்லுகிறான்:—ப்ரபூ! நீ ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மா; ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிப்பவன்; ஸ்வயம்ப்ரகாசன். ஆகையால் என்னுடைய அபிப்ராயத்தை அறிந்து உன்பாதாரவிந்தங்களை த்யானித்துக்கொண்டிருக்கிற எனக்குத் தர்சனம் கொடுத்தனை. 'எவன் மற்றொரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் என்னிடத்தில் நிலைநின்ற பக்தியைச் செய்கிறானோ, எனக்கு அவனைக் காட்டிலும் அனந்தனுவது ஸ்ரீமஹாலக்ஷ்மியாவது ப்ரஹ்மதேவனாவது அன்பிற்கிடமல்லர்' என்று நீ மொழிந்ததை உறுதி செய்யும் பொருட்டு எங்கள் கண்ணுக்குப் புலப்பட்டனை. இங்ஙனம் அறிந்தவன் உன் பாதாரவிந்தங்களை விடுவனோ? ப்ரார்த்தித்துப் பெறவேண்டியது மற்றொன்றுமில்லாதவர்களும் ஜிதேந்த்ரியர்களுமாகிய முனிவர்களுக்கு நீ நிரதிசய புருஷார்த்தஸ்வரூபனான உன்னையுங் கொடுக்குந்தன்மையன். ஆகையால் உன்னை எவன் விடு

வான்? இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் ஜன்மஜராமரணாதி துக்கங்களை அனுபவிக்கும் ஜீவாத்மாக்களுக்கு அந்த ஸம்ஸாரதாபத்தைப் போக்கும்பொருட்டு யதுவம்சத்தில் அவதரித்து மூன்றுலோகங்களின் பாபங்களையும் போக்கவல்ல உன்புகழைப் பரப்பினை. அத்தகையனும் ஷாட்குண்யபூர்ணனும் உலகங்களுக்கு ஸுகம் விளைப்பவனும் என்றும் எங்கும் தடைபடாத அறிவுடையவனாகையால் பிறர் செய்த நன்றியை அறியுந்தன்மையர்களில் சிறந்தவனும் நாராயணனென்னும் ரிஷியாய் அவதரித்து உலகங்களின் க்ஷேமத்திற்காகத் தவஞ்செய்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். (இத்தகைய உனக்கு நாங்கள் எவ்விதத்திலும் ப்ரதியுபகாரஞ் செய்யவல்லரல்லோமாகையால் உனக்கு வெறுமனே நமஸ்காரஞ் செய்கிறோம்). எங்கும் நிறைந்தவனே! நீ இவ்வந்தணர்களுடன் எங்கள் க்ருஹத்தில் சில நாள் வஸித்திருந்து பாததூளியால் இந்த நிமிகுலத்தைப் புனிதஞ்செய்வாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—உலகங்களைப் புனிதமாக்கிவாழச் செய்பவனும் மஹானுபாவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் மன்னவனால் வேண்டப்பட்டு மிதிலாபுரத்திலுள்ள புருஷர்களுக்கும் பெண்களுக்கும் மங்களத்தை விளைத்துக்கொண்டு வஸித்திருந்தான். ச்ருததேவரும் ஜனகனைப்போலவே தன்க்ருஹத்திற்கு வந்த ஸ்ரீக்ருஷ்ணனையும் முனிவர்களையும் வணங்கி ஸந்தோஷம் அடைந்து அந்த ஸந்தோஷத்தின் மிகுதியால் வெள்ளை வீசிக் கூத்தாடினார். அவ்வந்தணர் இந்த ஸ்ரீக்ருஷ்ணன் முதலியவர்களைப் புல்லால் மிடைந்த ஆஸனங்களிலும் தர்ப்பாஸனம் முதலிய வ்ரதிகள் உட்காரும் ஆஸனங்களிலும் உட்காரவைத்து

ஸ்வாகதம் விசாரித்துப் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துத் தன் பார்யையும் தாமுமாய் ஸந்தோஷமுற்று அவர்களுடைய பாதாரவிந்தங்களை அலம்பினர். மஹா பாக்யமுடையவரும் மிகுந்த மதி அமைந்தவருமாகிய அவ்வந்தணர் அந்த ஜலத்தினுல் தம்மையும் தம் க்ருஹத்தையும் தாமே சுத்திசெய்து தம்மனோரதங்களெல்லாம் நிறைவேறப்பெற்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்தார். பழங்கள் கந்தம் தூபம் தீபம் முதலியவை வெட்டிவேர் முதலிய பரிமளங்கள் சேர்க்கப்பெற்று நிர்மலமும் அம்ருதம் போன்றதுமாகிய ஜலம் கஸ்தூரி துளஸி தர்ப்பம் தாமரைமலர் அனுயாஸமாகக் கிடைக்கக்கூடிய மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்கள் ஸத்வத்தை வளர்க்கவல்ல அன்னம் இவைகளால் அவர் அவர்களை ஆராதித்தார். அவ்வந்தணர், 'இல்லறவாழ்க்கையாகிற பாழ்ங்கிணற்றில் விழுந்திருக்கிற எனக்கு இந்த ஸ்ரீக்ருஷ்ணனேடும் ஸமஸ்த புண்யதீர்த்தங்களுக்கும் இருப்பிடமான பாத தூளியுடையவர்களும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மூர்த்திக்கு வாஸஸ்தானமாயிருப்பவர்களுமாகிய இவ்வந்தணர்களோடும் ஸமாகமம் எப்படி நேரிட்டது? இதென்ன ஆச்சர்யம்!' என்று தமக்குள் சிந்தித்தார். அவ்வந்தணர் இங்ஙனம் அதிதிஸத்காரஞ் செய்யப் பெற்று ஸுகமாக உட்கார்ந்திருக்கிற அம்முனிவர்களின் அருகாமையில் உட்கார்ந்து தம்க்ருஹத்திற்கு வந்த பகவானைக் குறித்து அவருடைய பாதாரவிந்தங்களை ஸ்பர்சித்துக்கொண்டு மொழிந்தார்.

ஸ்ருததேவர் சொல்லுகிறர்:—எவன் ப்ரக்ருதி புருஷகாலாதிகளாகிற தன் சக்திகளைக் கொண்டு தன் ஸங்கல்பத்தினுல் இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் படைத்து என்றும் மாறுமல் ஒருவாறுயிருக்கின்ற தன் ஸ்வரூ

பத்தினால் அந்த ப்ரபஞ்சத்திற்குள் புகுந்திருக்கிறானோ, அத்தகையனும் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனும் பரமபுருஷனுமாகிய நீ இப்பொழுது எங்களுக்குத் தர்சனங் கொடுத்தனை. படுத்துறங்கும் புருஷனைச் சரீரமாகவுடைய பரமாத்மா தனக்குச் சரீரமான ஜீவனுடைய மனோரதத்தைத் தொடர்ந்து தன் ஸங்கல்பத்தினால் படுத்திருக்கும் சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டதும் ஸ்வப்னங்காண்கிற ஜீவனுடைய கர்மத்திற்கு அனுகுணமாக ஏற்பட்டிருப்பதும் ஸ்வப்ன காலம்வரையில்மாத்ரமே இருப்பதுமாகிய தேஹத்தில் தன்ஸங்கல்பத்தினால் புகுந்து அந்த ஜீவன் அனுபவிக்கிற தேசாந்தரகமனம் ராஜ்யாபிஷேகம் சிரச்சேதம் முதலியன தன்மேல் நேரே தீண்டப்பெறாமல் ப்ரகாசிப்பதுபோல, அப்பரமாத்மா தன் ஸங்கல்பத்தினால் இந்த ப்ரபஞ்சத்தைப் படைத்து இதற்குள் புகுந்தும் இதன் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாமல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறான். (அப்பரமாத்மா நீயே). ஸர்வகாலமும் உன்குணங்களைக் கேட்பதும் அவற்றைப் பேசுவதும் அர்ச்சாரூபமான உன் திருவுருவங்களைக் காண்பதும் அவற்றை வந்தனஞ் செய்வதும் அத்தகையர்களோடு ஸம்வாதஞ் செய்வதுமாகி நிர்மலமான மனமுடையவர்களுக்குங்கூட நீ மனத்திற்குள் தோன்றுவாயன்றி அவர்கள் கண்ணுக்குப் புலப்படமாட்டாய். கர்மத்தினால் இழுக்கப்பட்ட மனமுடையவர்களுக்கு நீ ஹ்ருதயத்திலிருப்பினும் வெகு தூரத்திலிருப்பவன் போலவே. ரஜஸ்தமோகுணங்களும் அவற்றின் கார்யமான காம க்ரோத மோஹாதிகளும் நிறைந்த மனமுடையவர்களுக்கு நீ ஸமீபத்திலிருப்பினும் மாயை முதலிய உன்சக்திகள் தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்

நாத்மாபிமானம் முதலியவற்றை விளைத்து உன்னுடைய உண்மையை மறைக்கின்றமையால் அவர்கள் உன்னை அறியவல்லராகிறதில்லை. உன்னுடைய உண்மையை உணர்ந்தவர்களுக்கு ப்ராப்யமான ஸ்வரூபமுடையவனும் உன்னிடத்தில் மனஞ் செலுத்தாதவர்களுக்கு ஸம்ஸார பந்தத்தை விளைப்பவனும் புண்யபாப கர்மமாகிற காரணத்தைப் பற்றியன்றியே கேவலம் அனுக்ரஹத்தினால் சரீரத்தை ஏற்றுக்கொள்பவனும் தன்மாயையினால் மயங்கினவர்களின் நெஞ்சுக்கு விஷயமாகாதவனுமாகிய உனக்கு நமஸ்காரம். அத்தகைய நீ உன்ப்ருத்யர்களான எங்களை நியமிப்பாயாக. தேவனே! உனக்கு ஏதேனுமொரு இஷ்டத்தைச் செய்து நாங்கள் ஸ்வரூபஸத்தை பெறுவோமாக. நீ மனுஷ்யர்களின் கண்ணுக்குப் புலப்படுவாயாயின், அவர்கள் அவ்வளவோடு ஸம்ஸார தாபங்களாகிற வருத்தமெல்லாம் தீர்ந்து முக்தியைப் பெறுவார்கள். (ஆகையால் நான் அது ஸித்தமென்று நினைத்து அதை வேண்டாமல் உன்கைங்கர்யத்தையே வேண்டுகிறேன்.)

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—தன்னைப் பணிகிறவர்களின் வருத்தங்களைப் போக்குந்தன்மையனான பகவான் இங்ஙனம் அவ்வந்தணர் மொழிந்த வார்த்தையைக் கேட்டுத் தன்கையால் அவர்கையைப் பிடித்துச் சிரித்துக்கொண்டே மொழிந்தான்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—ப்ராஹ்மணனே! இம்முனிவர்கள் உன்னை அனுக்ரஹிக்கும்பொருட்டு வந்திருக்கிறார்களென்று தெரிந்து கொள்வாயாக. என்னை மனத்தில் த்யானித்துக்கொண்டிருக்கிற இம்முனிவர்கள் தங்கள் பாததூளிகளால் உலகங்களைப்

புனிதஞ் செய்து கொண்டு திரிகின்றார்கள். தேவப்ர திமைகளும் அயோத்யை மதுரை முதலிய புண்ய க்ஷேத்ரங்களும் கங்கை முதலிய புண்யதீர்த்தங்களும் தர்சனம் ஸ்பர்சம் அர்ச்சனம் இவைகளால் ஸம்பந்த முடையவர்களை நெடுநாள் கழித்துப் புனிதஞ் செய்கின் றன. அங்ஙனம் அவை புனிதஞ்செய்வதும் என் பக் தர்களான பெரியோர்களின் கடாக்ஷத்தினாலேற்பட்ட மஹிமையாலன்றி வேறு காரணத்தினாலன்று. இவ் வுலகத்தில் ஸமஸ்த ப்ராணிகளிலும் ஶ்ரேஷ்டர்களான மனுஷ்யர்களுக்குள் ப்ராஹ்மணன் பிறவியால் ஶ்ரேஷ் டன்; ப்ராஹ்மணர்களுக்குள் தவமுடையவன் ஶ்ரேஷ் டன். அவனைக்காட்டிலும் வேதாந்தங்களை ஓதி உணர்ந்தவன் ஶ்ரேஷ்டன். அவனைக்காட்டிலும் நித்ய ஸந்தோஷமுடையவன் ஶ்ரேஷ்டன். இனி அத்தகை யன் என்னை உபாஸித்துக்கொண்டு வருவானாயின், அவன் ஶ்ரேஷ்டனென்பதைப் பற்றிச் சொல்லவேண்டு மோ? இரண்டு புஜங்களையுடைய இந்த என்னுருவமும் நான்கு புஜங்களை யுடைய என்னுருவமும் என்னை உபாஸிக்கிற ப்ராஹ்மணனைக்காட்டிலும் எனக்கு ப்ரிய மன்று. ப்ராஹ்மணன் ஸகலவேதஸ்வரூபன். நான் ஸகலதேவதாஸ்வரூபன். என்னுருவம் ஸமஸ்த தேவதா ஸ்வரூபமாயினும் என்னை உள்ளபடி அறிவதற்கு ப்ரமா ணமான வேதங்களே வடிவங்கொண்டாற்போ லிருக் கிற ப்ராஹ்மணனைக்காட்டிலும் எப்படி எனக்கு ப்ரிய மாகும்? (ப்ரமேயஸித்தி ப்ரமாணாதீனமன்றோ? என் னுடைய ஸித்தி ப்ராஹ்மணாதீனமாகையால் ஸகல வேதமயனான ப்ராஹ்மணனே எனக்கு மிகவும் ப்ரியன்) துரஹங்காரமுடைய சிலர் என்பக்தர்களின் ஸ்வரூபம் இத்தகையதென்பதை அறியாமல் அவர்களுடைய

குணங்களிலும் தோஷத்தை ஏறிட்டு அர்ச்சாவிக்ரஹம் முதலியவற்றில்மாத்ரமே பூஜ்யதாபுத்தி யுடையவர்களாகி என்னைக்காட்டிலும் வேறுகாதவனும் எனக்கு ஆத்மாவும் குருவுமாகிய ப்ராஹ்மணனை அவமதிக்கிறார்கள். ப்ராஹ்மணன் என்னை உள்ளபடி அறிந்தவனாகையால் ஜங்கமஸ்தாவரரூபமான இந்தப்ரபஞ்சம் இதற்குக் காரணங்களான மஹத்து முதலிய தத்வங்கள் இவையெல்லாம் என் ஸ்வரூபங்களென்றே நினைக்கின்றான். ப்ராஹ்மணனே! என் பக்தர்களின் மஹிமை இத்தகையதாகையால் இந்த ப்ரஹ்மரிஷிகளை ஶ்ரத்தையுடன் பூஜிப்பாயாக. இப்படி செய்வாயாயின் நான் நேரே பூஜிக்கப்பட்டவனாவேன். இப்படி யில்லாத பக்ஷத்தில் (என்பக்தர்களை அர்ச்சிக்காமல் என்னை மாத்ரம் அர்ச்சிப்பாயாயின்) அளவற்ற உபசாரங்கள் செய்யினும்நான் அர்ச்சிக்கப் பட்டவனாகமாட்டேன். என்னைஎவ்வளவு அர்ச்சிக்கினும் அர்ச்சிக்காதது போலவேயாம்).

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—அந்த ஶ்ருததேவரென்னும் அந்தணர் இங்ஙனம் ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் கட்டளையிடப் பெற்று ஸ்ரீக்ருஷ்ணனோடு கூடிய அந்த ப்ராஹ்மண ஶ்ரேஷ்டர்களைப் பரமாத்ம புத்தியுடன் ஆராதித்துப் பெரியோர்கள் பெறுங்கதியான முக்தியைப் பெற்றார். மைதிலனான பஹுலாஶ்வனும் அங்ஙனமே முக்தியைப் பெற்றான். எண்பத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஶ்ருதிகீதை

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ரஹ்மரிஷீ! ஜாதி குணம் க்ரியை இவற்றில் ஏதேனுமொன்

றை முன்னிட்டுக் கொண்டு அவற்றிற்கிடமான வஸ்துக்களை அறிவிப்பவைகளான வேதங்கள் பரப்ரஹ்மத்தை நேரே எப்படி அறிவிக்கவல்லவையாகும். ஏனென்றால், அப்பரப்ரஹ்மம் சேதனர்களோடாவது அசேதனங்களோடாவது ஒப்பிட்டு இத்தகையதென்று நிரூபிக்க முடியாதது; ஆகையால் ஜாதியை முன்னிட்டுக்கொண்டு அறிவிக்க முடியாது. அது சேதனாசேதனங்களைக்காட்டிலும் விலக்ஷணமாகையால் அதை அவற்றோடு ஒப்பிட்டு இத்தகையதென்று அறிவிக்க முடியாது. மற்றும், அந்தப் பரப்ரஹ்மம் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களும் தீண்டப்பெறாதது. குணத்தை முன்னிட்டு வஸ்துக்களை அறிவிக்கும் சப்தங்கள் அக்குணங்கள் தீண்டப்பெறாத அந்த ப்ரஹ்மத்தை எங்ஙனம் அறிவிக்கும்? இங்ஙனமே செயல்களெவையுமில்லாத அந்த ப்ரஹ்மத்தைச் செயல்களை முன்னிட்டு வஸ்துக்களை அறிவிக்கும் சப்தங்கள் எங்ஙனம் அறிவிக்க வல்லவையாம்? (ஆகையால் வேதங்களெல்லாம் பரப்ரஹ்மத்தையே முக்யமாக அறிவிக்கின்றனவென்று நீர் பல தடவைகளில் மொழிந்தது எங்ஙனம் பொருந்தும்?)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—திறமையுள்ள ஸர்வேஸ்வரன் ஜீவாத்மாக்களுக்குக் கரணகளேபரங்களை அளிப்பதற்காகவும் அவர்களுக்கு க்ஷேமங்களை விளைப்பதற்காகவும் அவர்கள் ஸ்வரூபத்தை அறிந்து மோக்ஷம் பெறுதற்காகவும் லீலைக்காகவும் ஜனங்களுக்கு புத்தி இந்த்ரியம் மனம் ப்ராணன் இவற்றைப் படைத்தான். ஈஸ்வரன் இருபத்து நான்கு தத்வங்களையும் தேவமனுஷ்யாதி சரீரங்களையும் படைத்து அவற்றுள் ஜீவன் மூலமாய் ப்ரவேசித்து அவற்றைச் சரீரமாகக்

கொண்டு அவற்றின் நாமங்களுக்குத் தானே முக்ய மான பொருளாகி அவையெல்லாம் அவனேயென்னும் படி அமைந்திருக்கிறுனுகையால் அவனிடத்தில் தேவ மனுஷ்யத்வாதி ஜாதியாவது ஸத்வரஜஸ்தமோ குணங் களாவது போதல் வருதல் முதலிய செயல்களாவது இல்லையாயினும் அவற்றை முன்னிட்டுப் பொருள்களை அறிவிக்கிற வேதவாக்யங்களெல்லாம் அவற்றிற்கிட மான சேதனு சேதனங்கள் மூலமாய் அவனை அறிவிக் கின்றனவாகையால் வேதங்களெல்லாம் அவனையே முக் யமாக அறிவிக்கின்றன வென்பதற்குத் தடையில்லை. ஆனுல் 'ஸமஸ்த சப்தங்களுக்கும் பரமபுருஷனே முக்ய மான பொருளென்பது உலகத்தவர்களுக்கு ஏன் தெரிய வில்லை? உலகத்திலுள்ளவர் அந்தந்த சப்தங்களுக்கு அந்தந்த வஸ்துக்களையே பொருளாக அறிகிறுர்களன் றிப் பரமபுருஷனே முக்யமான பொருளென்று அறிய வில்லை. இப்படி உலகத்தில் ஏற்பட்டிருக்கிற வழக்கத் தை அழித்துப் புதிய வழக்கத்தை எப்படி ஸாதிக்க முடியும்' என்றுல் சொல்லுகிறேன்; கேள். ஸமஸ்த சப்தங்களும் பரப்ரஹ்மத்தையே முக்யமாக அறிவிக்கிற தென்னும் இந்த ரஹஸ்யம் உபநிஷத்துக்களின் அர்த் தங்களை ஆராய்ந்தறிந்தவர்களுக்குத் தெரியுமன்றி மற் றவர்களுக்குத் தெரியாது. பெரியோர்களுக்கும் பெரி யோர்களான வாமதேவாதி மஹர்ஷிகள் இந்த ரஹ ஸ்யத்தை நிச்சயித்திருக்கிறுர்கள். இங்ஙனம் ரஹஸ்ய மான இந்தச்சப்த சத்தியை ஸ்ரத்தையுடன் மனத்தில் தரிக்கும் புருஷன் ப்ரார்த்திக்கவேண்டியது மற்று எதுவுமின்றி முக்தியாகிய க்ஷேமத்தைப் பெறுவான். இவ்விஷயத்தில் ரிஷிவேஷந்தரித்துப் பதரிகாஸ்ரமத் தில் வஸிக்கிற நாராயணனுக்கும் நாரதமஹர்ஷிக்

கும் விஞவிடையாக நடந்த ஒரு இதிஹாஸத்தைச் சொல்லுகிறேன்; கேள். பகவானிடத்தில் அன்புடையவரும் அவனுக்கு அன்பரும் ஓயாமல் உலகங்களில் திரிந்து கொண்டிருப்பவருமாகிய நாரதமஹர்ஷி ஒருகால் புராணரிஷியாகிய நாராயணனைப் பார்க்கவிரும்பி வர்ணாஶ்ரமதர்மங்கள் ஆத்மஜ்ஞானம் ராகத்வேஷாதிகள் நீண்டபெருமையாகிற சாந்தி இக்குணங்களுடையவனாகி இப்பாரதவர்ஷத்திலுள்ள ப்ராணிகளின் க்ஷேமத்திற்காகவும் மோக்ஷத்திற்காகவும் கல்பம் வரையில் தவத்தில் இழிந்திருக்கிற அந்நாராயணனுடைய ஆஶ்ரமமாகிய பதரிகாஶ்ரமத்திற்குச் சென்றார். கௌரவ ஶ்ரேஷ்டனே! அங்குக் கலாபக்ராமவாஸிகளான ரிஷிகளால் சூழப்பட்டு உட்கார்ந்திருக்கின்ற அந்நாராயணனை நாரதர் வணங்கி நீ வினவின இவ்விஷயத்தைப் பற்றியே வினவினர். மஹானுபாவனாகிய அந்நாராயணனும் அந்நாரத மஹர்ஷிக்கு ரிஷிகள் கேட்டுக்கொண்டிருக்கையில் உனக்கு நான் சொன்ன இந்தப் பரிஹாரத்தையே மொழிந்தான். ஜனலோகவாஸிகளான பெரியோர்களாகிய ஸனந்தனாதிகளுக்கும் இவ்விஷயத்தைப் பற்றியே முன்பு விஞவிடையாக ஸம்வாதம் நடந்தது. அந்த ப்ரஹ்மவாதத்தையே நாராயண பகவான் நாரதருக்கு மொழிந்தான்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—நாரதரே! முன்பு ஜனலோகத்தில் அங்கு வாஸஞ் செய்பவர்களும் ப்ரஹ்மாவின் மானஸபுத்ரர்களும் ஊர்த்வரேதர்களும் (ஜன்மம் முதல் ஜிதேந்த்ரியர்களும்) ஆகிய ஸனகாதி முனிவர்கள் பரப்ரஹ்மத்தின் குணங்களை அனுபவிக்கையாகிற ப்ரஹ்மஸத்ரமென்னும் யாகத்தை நடத்தினார்கள். அப்பொழுது நீ ஶ்வேதத்வீபநாதனான பக

வானைத் தர்சனஞ்செய்ய அவ்விடம் போயிருந்தனே. வேதங்கள் எந்த விஷயத்தை ஒருமிடமாக நிரூபிக்கின்றனவோ அத்தகைய பரப்ரஹ்மத்தைப்பற்றி அம்முனிவர்கள் வாதஞ் செய்தார்கள். நீ எந்த விஷயத்தைப் பற்றி என்னை வினவுகின்றனேயோ இந்த விஷயத்தைப் பற்றியே அம்முனிவர்களுக்குள் ப்ரஸ்னம் நடந்தது. ஸனகாதி முனிவர்கள் செய்த ப்ரஸ்னத்தையே நீயும் செய்தனை. உன்புத்தியின்திறமை மிகவும் அற்புதமாயிருக்கின்றது. பாபமற்றவனே! அப்பொழுது அந்த ப்ரஸ்னத்திற்கு நடந்தபரிஹாரங்களையெல்லாம் சொல்லுகிறேன்; கேட்பாயாக. ஸனகாதிகளான அம்முனிவர்கள் அனைவரும் ஸாஸ்த்ரஜ்ஞானம் உபவாஸம் முதலியதவம் ப்ரஹ்மோபாஸனம் அதற்கு வேண்டிய நல்லொழுக்கம் இவையெல்லாம் ஒத்திருக்கப்பெற்றவர்களே. மற்றும், அவர்கள் எல்லோரும் தம்முடையவர்கள் சத்ருக்கள் மத்யஸ்தர் ஆகிய எல்லாரிடத்திலும் பேதபுத்தியின்றி ஸமமாகவேயிருப்பவர். (அவர்களுக்குத் தம்முடையவனென்றும் சத்ருவென்றும் உதாஸீனனென்றும் பேதபுத்தி கிடையாது). எல்லாரும் ப்ரஹ்மவாதஞ் செய்யுந்திறமையுடையவர்களே. ஆயினும் ப்ரவசனஞ் செய்யும்படி ஸனந்தனர் ஒருவரை ஏற்படுத்தி மற்ற ஸனகாதிகள் அனைவரும் வெறுமனே கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

ஸனந்தனர் சொல்லுகிறார்:—பரமபுருஷன் தான் படைத்த சேதநாசேதனரூபமான இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் ஸம்ஹரித்து ஸூக்ஷ்மாவஸ்தையை அடைந்த ப்ரக்ருதி புருஷ காலங்களாகிற சக்திகளுடன் சயனித்துக்கொண்டிருக்கையில் அந்த ப்ரளயத்தின்

முடிவில் ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் வேதங்கள், பூமண்டலத்திற்கெல்லாம் நாதனான அரசனை அடுத்துப் பிழைக்கும் வந்திகள் விடியற்காலத்தில் வந்து சயனித்துக்கொண்டிருக்கிற அவ்வரசனை அவனுடைய பராக்ரமங்களைச் சொல்லித் துதிப்பதுபோல, அப்பரமபுருஷனுக்கு அஸாதாரணமான தர்மங்களை வெளியிடுகிற அடையாளங்களைச் சொல்லி அவனை ஸ்தோத்ரஞ் செய்தன.

ஶ்ருதிகள் சொல்லுகின்றன:—அஜிதனே! (ஒருவராலும் வெல்லப்படாதவனே!) நீ மிகவும் மேன்மையுற்றிருப்பாயாக. ஜீவாத்மாக்களிடத்தில் தோஷங்கள் பல இருப்பினும் அவற்றைப் பாராமல் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் முதலிய ஏதேனுமொரு குணத்தைக் கொண்டுஅவர்களை அங்கீகரிக்குந்தன்மையனே! ஜீவாத்மாக்களுக்கு தோஷங்களை விளைக்கின்ற ஸத்வரஜஸ்தமோகுணங்களுக்கிடமான ப்ரக்ருதியை அழிப்பாயாக. (உன்னிடத்தில் மறைந்திருக்கிற ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் ஸம்ஸாரத்தை விளைப்பதாகிய ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தை விடுவித்து மேன்மையுற்றிருப்பாயாக). நீ எல்லோரையும் வென்ற ப்ரக்ருதியாலும வெல்லப்படாதவன். ஆகையால் நீ ஜீவாத்மாக்களுக்கு அந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தை விடுவிக்கவல்லவன். மற்றும், நீ இயற்கையாகவே ஜ்ஞான சக்தி பல ஐஶ்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்களும் அமைந்தவன். ஜங்கமஸ்தாவரரூபமான பற்பல சரீரங்களாகப் பரிணமிக்கப்போகிற ப்ரக்ருதிகுணங்களுக்கும் அத்தகைய சரீரங்களை ஏற்றுக்கொள்கிற ஜீவாத்மாக்களுக்கும் உள்ள சக்தியை வெளியிடுபவனே! அவர்க்கு ப்ரக்ருதி ஸம்பந்தத்தை விளைத்த நீயே அதைப் போக்க

வல்லவனன்றி மற்றவர் எவரும் வல்லரல்லர். ஒருகால் நீ சேதனாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டு ஜங்கம ஸ்தாவரரூபமான ப்ரபஞ்சமாய் விரிந்திருக்கையில் வேதங்களெல்லாம் அத்தகையனான உன்னை நிரூபிக்கின்றன. (பரமபுருஷன் ஜாதி குண க்ரியைகளற்றவனாயினும் சரீரவாசக சப்தங்கள் சரீரிபர்யந்தம் சொல்லுமாகையால் சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய அப்பரமனை அச்சேதனாசேதனங்கள்மூலமாய் நிரூபிக்கின்றன. ஆகையால் ஜாதிகுணாதிகளை முன்னிட்டு அந்தந்த வஸ்துக்களை அறிவிக்குந்தன்மையுடைய வேதங்கள் அவை யெவையுமில்லாத பரமபுருஷனை எங்ஙனம் நிரூபிக்குமென்று சங்கிக்கவேண்டாம்). ஜகத்தையெல்லாம் ஸம்ஹரித்து நாமரூபங்களுக்கிடமல்லாத ஸூக்ஷ்மசேதனாசேதனங்களைச் சரீரமாகக்கொண்டு தான் மாத்ரமே மிகுந்திருக்கிற காரணவஸ்துவாகிய பரப்ரஹ்மத்தினிடத்தினின்று உண்டான இந்தஜகத்தெல்லாம் பரப்ரஹ்மமென்றே வேதாந்தங்கள் அறிவிக்கின்றன. பரப்ரஹ்மமென்று ஓதப்படுகிற பரமபுருஷன் தன்னிடத்தினின்று உண்டான இந்த ஜகத்தைப் பாதுகாத்து ப்ரளயகாலத்தில் ஸம்ஹரிக்கிறான். (அவனிடத்தினின்று உண்டாகி அவனால் உட்புகுந்து பாதுகாக்கப்பட்டு அவனிடத்திலேயே மறைகின்றதாகையால் எப்பொழுதும் அவனைவிட்டுப்பிரியாத இந்த ஜகத்தெல்லாம் அவனே யென்று சொல்லத் தடையில்லை), எந்த வஸ்து எதினின்று உண்டாகி எதினிடத்தில் மறைகின்றதோ, அவ்வஸ்து அக்காரண வஸ்துவைக் காட்டிலும் வேறுபட்டதன்று. மண்ணுருண்டையினின்று குடம் முதலியன உண்டாகின்றன; அதிலேயே மறைகின்றன. அவையெல்லாம் அம்மண்ணுருண்டை

யைக்காட்டிலும் வேறுபட்டவையன்றல்லவா? அங்ஙனமே பரமபுருஷனிடத்தினின்று உண்டாகி அவனிடத்திலேயே மறைகின்ற இந்த ஜகத்தெல்லாம் உன்னைக் காட்டிலும் வேறுப்பட்டதன்று; ஆகையால் ரிஷிகள் ஸர்வகாரணனான உன்னிடத்திலேயே தங்கள் மனம் வாக்கு செயல் ஆகிய மூன்று கரணங்களையும் நிலைநிறுத்தி உன்னையே த்யானிப்பதும் துதிப்பதும் பணிவதும் செய்து வந்தார்கள். ஆகாயத்தில் வைத்த அடிவைப்புக்கள் வீணாவதுமாத்ரமேயல்லாமல் பிடிப்பில்லாமையால் கீழ்விழுவதற்கும் காரணமாகுமேயன்றிப் பூமியில் வைத்த அடிவைப்புக்கள் எப்படி வீணாகும்? வீணாகவே மாட்டா. இங்ஙனமே மனோவாக்காயங்களென்கிற மூன்று கரணங்களும் உன்னிடத்தில் உபயோகப்படுமாயின் அமோகங்களாகி ஸம்ஸாரதாபங்களை அழிக்கும். அவையே வேறு விஷயத்தில் உபயோகப்படுமாயின் ஸம்ஸாரதாபங்களைப் போக்கவல்லவையாக மாட்டாமைமாத்ரமேயல்லாமல் மேன்மேலும் அந்த ஸம்ஸாரதாபங்களையே விளைப்பவையாம். பரமபுருஷா! நீயே வேதங்களின் பொருள். அவற்றின் உட்கருத்தும் நீயே. அந்த வஸ்துக்களைப் பொருளாகவுடைய சப்தங்கள் பரமபுருஷனை எங்ஙனம் அறிவிக்குமென்று சங்கிக்க வேண்டாம். மெத்தை படுக்கை முதலிய இடங்களில் வைத்த அடிவைப்புக்கள் ஏன் பூமியில் வைத்தவையாக மாட்டா? அந்த மெத்தை முதலியவற்றிற்கும் பூமி ஆதாரமாகையால் பூமியில் வைத்தவையாகக் கூடுமல்லவா? அங்ஙனமே அந்த வஸ்துக்களைப் பொருளாகவுடைய வேதசப்தங்கள் அவற்றிற்குக் காரணனும் அந்தராத்மாவுமாகி அவையே யென்னும்படி அமைந்திருக்கிற பரமபுருஷனைக் கூறுமென்பதில் ஐயமில்லை.

ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு நிர்வாஹகனே! ஆகையால் விவேகமுடைய பெரியோர்கள் ஸகல ஜனங்களின் பாபங்களையும் போக்கவல்ல உன் கதையாகிற அம்ருத ஸமுத்ரத்தை அவகாஹித்தமாத்ரத்தில் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களை யெல்லாம் துறந்தார்கள். பரமனே! உன்னை உள்ளபடி அறிந்து அவ்வறிவின் மஹிமையால் ராக த்வேஷாதிகளான மனோ தோஷங்களை உதறி ஜனன மரணம் முதலிய கால குணங்களையும் கடந்து ஸமாதியினால் நித்யஜ்ஞானந்தஸ்வரூபனான உன்ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கிற மஹானுபாவர்கள் ஸம்ஸார தாபங்களைத் துறப்பார்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? உன்னைப் பணிந்து உஜ்ஜீவிப்பதற்குரிய ஜன்மம் பெற்றவர்களும் உன்னைப் பணியாமல் துறந்து கேவலம் ப்ராணேந்த்ரியங்களின் த்ருப்தியில் ஊக்கமுற்றுச் சப்தாதி விஷயங்களைத் தேடிக்கொண்டு திரிவார்களாயின், அவர்கள் தோல்பெய்கள்போல் வெறுமனே மூச்சுவிட்டுக்கொண்டிருப்பார்களேயன்றி வேறில்லை. 'நீங்கள் சொல்லுவது வாஸ்தவமே. நான் காரணவஸ்துவாகின்றேன்; முமுக்ஷுக்களால் உபாஸிக்கக்கூடியவனாயிருக்கை எனக்குப் பொருந்தும். எனக்கு ஜகத்காரணத்வமே பொருந்தாது. இனி ஜகத்காரணவஸ்துவின் தன்மையாகிய முமுக்ஷூபாஸ்யத்வம் எனக்கு எங்ஙனம் பொருந்தும்? அசேதனமான ப்ரதானமே மஹத்து அஹங்காரம் முதலிய நாம ரூபங்களைப் பெற்றுப் பலவாறு பரிணமிக்கும் தன்மையுடையதாகையால் அதுவே காரணவஸ்துவாம். சேதனர்களுக்குப் போக்யமாயிருப்பதும் ஸத்வரஜஸ்தமோ குணமயமும் ஆகாசம் முதலிய நாமரூப விகாரங்களுக்கிடமுமாகிய ஜகத்தாகிற கார்யவஸ்து

வுக்கு அத்தன்மையதான வஸ்துவே காரணமாகக் கூடு மாகையால் ஸத்வாதி குணங்களின் ஸாம்யாவஸ்தை யை அடைந்த ப்ரதானமே காரணமன்றி நான் காரண னல்லேன். ஆனது பற்றியே கார்யகாரணங்களிரண் டும் ஒன்றேயன்றி வேறுபட்டவை யன்றென்பதற்கு மண்ணுருண்டையினின்றுண்டான குடம் முதலியவற் றை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுவதும் பொருந்துகின் றது' என்கிறாயோ? அப்படி அன்று). மஹத்து அஹங் காரம் முதலிய தத்வங்கள் உன்னால் அனுப்ரவேசம் செய்யப்பெற்று உன்னுடைய அனுக்ரஹத்தினால் ஸத் தைபெற்று அண்டத்தைப் படைத்தனவன்றி அசேத னங்களான அவற்றிற்கு ஸ்வதந்த்ரமாகப் படைக்குந் திறமை எப்படி அமையும்? 'ப்ரதானம் அசேதனமா கையால் அது காரணமாகக் கூடாதாயினும் ஜீவாத் மாக்களில் ஒருவன் காரணமாயிருக்கக் கூடுமல்லவா? ஸங்கல்பித்து ஸங்கல்பித்தபடியே ஸ்ருஷ்டிப்பது அவ னுக்குக் கூடுமல்லவா?' என்றால், அதுவும் கூடாது. ஏனென்றால், ஆநந்தவல்லியில் அன்னமய ப்ராணமய மனோமய விஜ்ஞானமய ஆநந்தமயங்களில் கடைசியில் சொல்லப்பட்ட ஆநந்தமயவஸ்து புருஷாகாரமாக நிரூ பிக்கப்பட்டது. சிரஸ்ஸு முதலிய புருஷாகாரங்களை யுடைய அவ்வாநந்தமயன் நீயேயன்றி ஜீவாத்மாவாக மாட்டான். ஏனென்றால், அவ்வாநந்தமயன் சேதனு சேதனரூபமான இந்த ப்ரபஞ்சத்தை யெல்லாம் தானே படைத்து அதற்குள் புகுந்து அதெல்லாம் தானேயென் னும்படி அமைந்து அவற்றின் நாமங்களுக்குத், தானே பொருளாயிருக்கிறானென்று சொல்லப்பட்டது. அத் தன்மை பத்தசேதனர்களுக்காவது முக்த சேதனர் களுக்காவது ஸம்பவிக்காது. மற்றும், சேதனு சேதன

ரூபமான இந்த ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் அவ்வாநந்தமயனை விலக்ஷணனாக ஸ்ருதி கூறுகின்றது. மற்றும், இந்த அன்னமயம் முதலியவை நான்கும் ஸம்ஹரிக்கப்பட்டபின்பும் அவ்வாநந்தமயம் ஒன்று மாத்ரம் விகாரங்களின்றி மிகுந்திருக்கிறதென்று ஸ்ருதி நிரூபிக்கின்றது. ஆகையால் அவ்வாநந்தமயவஸ்து நீயேயன்றி மற்றெதுவுமன்று. ஆனதுபற்றி ஜீவன் காரணனாகக்கூடுமேயென்று சங்கிக்கலாகாது. ஸூக்ஷ்ம புத்தியுடையவர்களும் அருணவம்சத்தில் பிறந்தவர்களுமாகிய சிலர் வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பல உபாஸனமார்க்கங்களுக்குள் ஹ்ருதயத்தில் இருப்பவனும் தஹரமென்று கூறப்படுகின்றவனுமாகிய உன்னை உபாஸிக்கிறார்கள். வேறு சிலர் வயிற்றில் உள்ள ஜாடராக்னியைச் சரீரமாகவுடைய உன்னை உபாஸிக்கிறார்கள். அனந்தனே! வேறு சிலர் அந்த ஹ்ருதயம் முதல் உன்னுடைய உபாஸன ஸ்தானமாகிய புருவங்களின் மத்ய ப்ரதேசம் வரையில் மேல் நோக்கி வ்யாபித்திருப்பதும், எந்த வழியாகக் கிளம்பின ஜீவாத்மாக்கள் மீளவும் இந்த ப்ரக்ருதி மண்டலத்தில் ம்ருத்யுவின் முகம்போன்ற ஸம்ஸாரத்தில் வந்து விழமாட்டார்களோ, அத்தகையதுமாகிய ஸுஷும்நநாடி மார்க்கத்தில் இருக்கின்ற உன்னை உபாஸிக்கிறார்கள். நீ ஸகலஜகத்திற்கும் உபாதான காரணமாயிருந்து நிர்மித்த விசித்ரமான தேவ மனுஷ்யாதி தேஹங்களிலும் அத்தகையதேஹங்களையுடைய ஆத்மாக்களிடத்திலும் உள்புகுந்து, என்றும் ஒருவாறாயிருப்பவனாயினும். அக்னி, புல்கட்டை முதலியவற்றில் பற்றிப் பலவாறு தோற்றுவதுபோல், ஜ்ஞானத்தின் சிறுமை பெருமையாகிற தாரதம்யத்துடன் படைக்கப்பட்ட அத்தேஹங்களை அனுஸரித்

துப் பலவாறு தோற்றுகின்றனே. ஆயினும் பரிசுத்த மான மதியுடையவர்கள் உன்குணங்களைச் சொல்லி உன்னைத் துதித்துக்கொண்டு இந்தத் தேவமனுஷ்யாதி தேஹங்கள் ஸம்ஹரிக்கப்பட்டிருக்கும்பொழுதும் ஸம்ஹரிக்கப்படாமல் ஒருவாறாகி இடைவிடாத அளவற்ற ஆநந்தமயமான உன்ஸ்வரூபத்தை உபாஸித்து உன்னை அடைகின்றார்கள். உன்னால் படைக்கப்பட்டவைகளும் உன்னுடைய வாஸஸ்தானங்களுமாகிய தேவ மனுஷ்யாதி தேஹங்களில் ஸமஸ்த ஆச்சர்ய சக்திகளும் அமைந்த நீ உள்ளென்றும் வெளியென்றும் நிபந்தனையின்றி எங்கும் வ்யாபித்திருக்க வல்லதும் ஸங்கோசகாரணங்களற்றதும் புருஷாகாரமுமான உருவத்தை உன் ஸங்கல்பத்தினால் ஏற்றுக் கொண்டிருக்கின்றனையென்று வேதாந்தங்கள் கூறுகின்றன. இப் புவியிலுள்ள சில விவேகிகள் இத்தகைய புருஷாகாரமான உன்னுருவத்தையும் உன்னுடைய ஆராதனத்திற்காகவே ஏற்பட்ட தங்கள் மனுஷ்ய ஜன்மத்தையும் ஆராய்ந்து நிச்சயித்து ப்ராணாயாமத்தினால் ப்ராணன்களையும் இந்த்ரியங்களையும் வென்று மிகுந்தநம்பிக்கையுடன் வேதங்களால் நிரூபிக்கப்படுவதும் ஜ்ஞானத்தை விளைப்பதும் ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுத்து மோக்ஷங் கொடுப்பதுமாகிய உன் பாதாரவிந்தத்தை உபாஸிக்கிறார்கள். ஜகதீசனே! சில விவேகிகள் வருந்தி அறியக்கூடிய உனது உண்மையை அறிவிக்கும்பொருட்டு ராமக்ருஷ்ணாதி உருவங்களை ஏற்றுக்கொண்ட உன்னுடைய சரித்ரமாகிற பெரிய அம்ருதஸாகரத்தில் மூழ்கி ஆத்யாத்மிகம் முதலிய ஸம்ஸாரதாபங்களெல்லாம் தீர்ந்து உன்பாதாரவிந்தங்களையே சரணமாகப் பற்றின பெரியோர்களின் கூட்டங்களோடு ஸஹவா

ஸஞ் செய்து அந்த ஸஹவாஸத்தின் மஹிமையால் க்ரு ஹம் முதலியவற்றில் மனப்பற்றைத் துறந்து மோக்ஷத் தையும் விரும்பாதிருக்கிறார்கள். கூடுபோன்ற இம்மனு ஷ்யசரீரம் உன்னுடைய ஆராதனத்திற்கு உபயோகப் படுமாயின், அப்பொழுது ஆத்மாவையும் நண்பனையும் ப்ரியனான உன்னையும் நிகர்த்ததாகும். சிலர் இத்தகைய மனுஷ்ய சரீரத்தைப் பெற்றும் சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்று, நிலைநின்ற அளவற்ற ஆநந்த முடைய வனும் ப்ரீதிக்கிடமாயிருப்பவனும் ஹிதத்தையே செய்ப வனும் ஏதேனுமொரு ஆனுகூல்யத்தைக்கண்டாயினும் சேதனர்களை அங்கீகரிக்க எதிர்பார்த்துக்கொண்டிருப் பவனும் அந்தராத்மாவுமாகிய உன்னைப் பணியாமல் அழிந்து போகிறார்கள். அவர்கள் * ஆத்மகாதிகளே. இதென்ன வருத்தம்? இப்படியும் அழிந்துபோவதுண் டோ? அவர்கள் ஜன்மங்கள்தோறும் அநுபவித்து மிகுந்த கர்மத்தினால் மேன்மேலும் தேஹங்களைப் பெற்றுப் பல பயங்களுக்கிடமான ஸம்ஸாரத்தில் சுழ ன்று கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் நிந்திக்கத்தகுந்த சரீரமுடையவர்கள்; சோகிக்கத் தகுந்தவர்களே. (உன்னிடத்தில் ப்ரீதி செய்யமாட் டாமை இருக்கட்டும். உன்னிடத்தில் த்வேஷாதிகளை யும் செய்யமாட்டார்கள். விலக்ஷணவிஷயமான உன் னிடத்தில் த்வேஷம் செய்யினும் அவை உன்னை அடைவிக்கும்.) ப்ராணன்களையும் மனத்தையும் மற்ற இந்த்ரியங்களையும் அடக்கிக்கொண்டு எவ்விதத் திலும் தடைபடாதபடி உன்னை உபாஸிக்கிற முனிவர் கள் எத்தகையதான உன்ஸ்வரூபத்தை உபாஸிக்கி றார்களோ அந்த ஸ்வரூபத்தையே சத்ருக்களும் த்வே

* ஆத்மஸ்வரூபத்தை அழிப்பவர்களே.

ஷத்துடன் ஸ்மரித்துப் பெற்றார்கள். அங்ஙனமே கோபஸ்த்ரீகளும் ஆதிசேஷனுடைய உடல்போல் திரண்டுருண்டு நீண்ட உன்பாஹுதண்டங்களில் மிகவும் மனப்பற்றுடையவர்களாகி அத்தகைய உன்ஸ்வரூபத்தை அடைந்தார்கள். உன்பாதாரவிந்தங்களையே நிரூபித்துக்கொண்டு அவைகளையே அம்ருதம்போல் அனுபவித்துக் கொண்டிருக்கிற வேதாபிமானி தேவதைகளாகிய நாங்களும் உனக்குத் துல்யர்களே. (அந்த முனிவர்களைப்போல் தாத்பர்யவ்ருத்தியினாலும் முக்ய வ்ருத்தியினாலும் எங்களுக்கு விஷயமான உன்னையே அடைகின்றோம்). நீ எல்லாரிடத்திலும் ஸமமாயிருக்குந்தன்மையன். மேடுபள்ளங்களைப் பார்த்துப் பக்ஷபாதஞ் செய்பவனல்லை. ‡வைஷம்யநைர்க்ருண்யங்களைப் பரிஹரிக்கும்பொருட்டு ஏதேனு மொன்றை வ்யாஜமாகக் கொண்டு எல்லோரையும் அனுக்ரஹிக்க விரும்புகிற உனக்கு எல்லாரும் துல்யர்களே. இவ்வுலகத்தில் தேவாதிகளுக்குப் பிற்பட்ட ஜன்மமரணங்களையுடையவன் எவன் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸூக்ஷ்மசேதனுசேதனங்களைச் சரீரமாகவுடைய உன்னை வேதசாஸ்த்ரத்தினால் அறிவதொழிய மற்றப்படி அறியவல்லனாவான்? உன்னிடத்தினின்றே ப்ரஹ்மதேவன் உண்டானான். அந்த ப்ரஹ்மதேவனுக்குப் பின்பு நிவ்ருத்திதர்மநிஷ்டர்களான ஸனகாதிகளும் ப்ரவ்ருத்திதர்மநிஷ்டர்களான மரீசி முதலியவர்களுமாகிய இருவகைப்பட்ட தேவர்களும் உண்டானார்கள். மனுஷ்யர்கள் அவர்களுக்குப் பின்பட்டவர்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? நீ சாஸ்த்ரத்தை உன்ஹ்ருதயத்தில் அடக்கிச் சயனித்துக்கொண்டிருக்கும் பொழுது (ஸ்ருஷ்டிக்குப் பூர்வகாலத்தில்) கார்யாவஸ்தமான சேதன

‡ வைஷம்யம்-பக்ஷபாதஞ் செய்கை-நைர்க்ருண்யம்-மன இரக்கமில்லாமை.

வஸ்துவும் அசேதனவஸ்துவும் இரண்டும் கலந்த கார்ய வஸ்துவும் காலத்தின் பிரிவுகளும் ஆகிய எவையுமே இல்லை. ஆயிரம் சொல்லி என்ன? அப்பொழுது எதுவுமே இல்லை. முதலே இல்லாமல் அழிந்துபோகிறதென்றும் சிலர் நினைக்கிறார்கள். ஆத்மாக்களுக்குச் சிறுமை பெருமை மனுஷ்யன் ம்ருகம் முதலிய பேதங்கள் உண்டென்று சிலர் நினைக்கிறார்கள். தேவதைகளும் மனுஷ்யர்களும் ஒருவர்க்கொருவர் செய்துகொள்கிற உபகாரத்தினால் உண்டாவதும் வாணிஜ்யத்தினால் (வர்த்தகத்தொழிலால்) விளையும் பலன்போன்றதுமாகிய ஸ்வர்க்காதி பலனை நித்யமென்று சிலர் நினைக்கிறார்கள். அவர்கள் தாங்கள் நினைக்கைமாத்ரமன்றியே ஆபாஸயுக்திகளைக் கொண்டு பிறர்க்கும் இதுவே உண்மையென்று உபதேசிக்கிறார்கள். மற்றும் சிலர் ஜீவன்மாத்ரமே உள்ளவன் அவனைக்காட்டிலும் வேறுபட்ட ஈஶ்வரனென்பவன் கிடையாது. அந்த ஜீவனும் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களென்கிற முக்குணங்கள் நிறைந்தவனென்கிறார்கள். இங்ஙனம் ஏற்படுகிற மதபேதமெல்லாம் உன்னுடைய உண்மையை அறியாமையைப்பற்றி வந்ததேயன்றி வேறன்று. உள்ளதும் இல்லதுமாகிய சேதனாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணனும் ஜ்ஞானாநந்தஸ்வரூபனுமாகிய உன்னை உள்ளபடி அறிவார்களாயின், அந்த அஜ்ஞானமும் அதன்மூலமாய் விளைகிற மதபேதமும் உண்டாகாது. மனுஷ்யர்வரையிலுமுள்ள ப்ராணிகளின் ஸத்வரஜஸ்தமோமயமான மனம் கார்யஞ்செய்வதுபோல் தோற்றிக்கொண்டிருப்பினும் உன்னிடத்தில் கார்யகரமாகாமல் அஸத்ப்ராயமாயிருக்கிறது. (சேதனாசேதனரூபமான ஜகத்தைச் சரீரமாகவுடைய உன்னை

அறியவல்ல தாகிறதில்லை). உன்னுடைய உபாஸன
மாகிற யோகத்தினால் பரிசுத்தமான மனமுடைய
பெரியோர்களோ வென்றால் ஜகத்தையெல்லாம் பர
மாத்மாவாகவே அறிகின்றார்கள். (ஸூக்ஷ்ம சேதனா
சேதனங்களைச் சரீரமாகக் கொண்டு காரணமான பர
ப்ரஹ்மமே ஸ்தூல சேதனாசேதன ரூபமான ஜகத்தா
கிற கார்யமாய் விரிந்திருக்கையால் இந்த ஜகத்தெல்
லாம் அந்த ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறுபட்ட
தன்றென்றும் பரப்ரஹ்மத்திற்கு சரீரமாகி உபாஸ்ய
கோடியில் சேர்ந்திருக்கையால் உபாதேயமென்றுமே
அங்கீகரிக்கிறார்கள்.) ஸ்வர்ணத்தின் பரிணாமமான
வளை முடி முதலியவற்றை இவையெல்லாம் ஸ்வர்ணமே
யென்று நினைத்து எடுத்துக்கொள்வார்களன்றித் துறக்
கமாட்டார்களல்லவா? அங்ஙனமே பரமபுருஷன் தன்
னால் படைக்கப்பட்ட இந்த ஜகத்திற்கு அந்தராத்மா
வாய் அமைந்திருக்கிறானாகையால் இந்த ஜகத்தெல்லாம்
உபாஸ்யனான பரமாத்மாவென்றே நினைக்கிறார்கள்.
எவர்கள் உன்னை ஸர்வ ஜகத்திற்கும் அந்த
ராத்மாவாக உபாஸிக்கிறார்களோ, அவர்கள்தான்
ம்ருத்யுவைப் பொருள்செய்யாமல் அதன் தலையைக்
காலால் மிதிக்கின்றார்கள். (ம்ருத்யுவென்று கூறப்
படுகிற ஸம்ஸாரத்தினின்று விடுபடுகிறார்கள்). நீ ஸர்
வாந்தராத்மா வென்பதை அறியாத மூடர்களைச் சாஸ்
த்ரமாகிற நல்ல உபதேசத்தினால் திருத்திக் கொழுத்
துத்திரியும் பசுக்களை மூக்காங்கயிறு முதலியவற்
றால் அடக்கிச் சிக்ஷிப்பதுபோல, நல்வழியில் நடத்து
கின்றனை. (சாஸ்த்ரங்களை ஆராய்ந்து நீ இத்தகைய
னென்று அறிவார்களாயின் அவர்களும் க்ரமமாக
உன்னை உபாஸித்து ஸம்ஸாரத்தினின்று விடுபடுகிறார்

கள். உன்னிடத்தில் மிகுந்த நட்புடைய பெரியோர்
கள் சாஸ்த்ரங்களை ஆராய்ந்தறியுந்திறமையற்ற மூடர்
களும் உன்னிடத்தில் வைமுக்ய மில்லாதிருப்பார்களா
யின் அவர்களைப் புனிதஞ் செய்கிறார்கள். (சாஸ்த்
ரத்தினால் உன்னை அறிந்து உபாஸிக்க வல்லரல்லாத
மூடர்களும் உன்னடியார்களைப் பணிந்து வருவார்க
ளாயின் இந்த ஸம்ஸாரத்தினின்று அநாயாஸமாக
விடுபடுவார்கள்). நீ ஜகத்ஸ்ருஷ்டி முதலியவற்றை
யெல்லாம் ஸங்கல்பமாத்ரத்தினால் நடத்துந்தன்மையனா
கையால் உன்னைப்போல் சீக்ரமாகக் கார்யஞ்செய்ப
வன் ஒருவனும் இல்லை. நீ சக்ஷுஸ்ஸு முதலிய கர
ணங்களை எதிர்பாராமலே எல்லாவற்றையும் ஸ்வயமாக
வே ஸாக்ஷாத்கரிக்குந் திறமையுடையவன்; ஸ்வதந்த்
ரன்; (கர்மவஶ்யனாகாமல் கர்மவஶ்யரான ஜீவாத்மாக்
களைத் தூண்டுந்தன்மையன்); நிமித்த காரணம் உபா
தான காரணம் ஸம்ப்ரதானம் அபாதானம் அதிகர
ணம் முதலிய ஸமஸ்தகாரணங்களுக்கும் அவற்றின்
சக்திகளுக்கும் நிர்வாஹகன். ப்ரக்ருதிக்குப் பரதந்த்ரர்
களான வாயு ஸூர்யன அக்னி இந்த்ரன் முதலிய தே
வதைகளும் ப்ரஜாபதிகளும் எவரெவர் எந்தெந்த வ்யா
பாரங்களில் அதிகரித்திருக்கிறார்களோ அவரவர் அந்
தந்த வ்யாபாரங்களை உன்னிடத்தினின்று பயந்து தவறா
மல் நடத்துகின்றனர், பாரதாதிவர்ஷங்களைப் பாது
காக்குஞ் சிற்றரசர்கள் ஸார்வபௌமனான பேரரசனுக்
குக் கப்பங் கொடுப்பதுபோல உனக்குப் பூஜை செய்
கின்றார்கள். மற்றும், அவர்கள் உன்னால் கொடுக்கப்பட்ட
போகங்களை அனுபவிக்கின்றார்கள்; ஸ்தாவரஜங்கம
ரூபமான ஸமஸ்த ப்ராணிகளும் ப்ரக்ருதியின் கார்ய
மும் துக்கத்திற்கு நிமித்தமுமாகிய சரீரங்களை உடைய

வர்களாயிருக்கின்றார்கள். (அவர்களுக்கு அந்த ப்ராக்ருதிஸம்பந்தத்தை ஒருகாலும் விடமுடிகிறதில்லை). இப்படியிருக்கும் ப்ராணிகளில் எவரேனும் ஒருகால் அந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தினின்று விடுபடுவார்களாயின், அது உன் கடாக்ஷத்தினாலன்றி வேறு காரணத்தினாலன்று. ஹேயகுணங்கள் சிறிதும் தீண்டப்பெறாமல் அவற்றினின்று நன்றாக விடுபட்டவனே! மன இரக்கமுடையவர்களில் உன்னைக் காட்டிலும் மேற்பட்டவன் எவனும் கிடையாது. இங்ஙனம் பரமகாருணிகனாகிய உனக்கு 'ஒருவன் கருணைக்கு விஷயமானவன். மற்றொருவன் கருணைக்கு விஷயமாகாதவன்' என்பது கிடையாது. ஸமஸ்த ஆத்மாக்களும் உனக்குச் சரீரமாகையால் உனக்கு ரக்ஷிக்கத்தகாதவன் எவனுமே கிடையான். ஆகையால் நீ ஸர்வரக்ஷகன். உனக்கு வைஷம்யம் முதலிய ஹேயகுணங்கள் உண்டென்று சங்கிக்க இடமே இல்லை. ஆனால் ப்ரக்ருதிஸம்பந்தம் எல்லோர்க்கும் துல்யமாயிருக்க, அவர்களில் சிலரை அதினின்று விடுவித்துச் சிலரை விடுவியாதொழிவது வைஷம்யம் ஆகாதோவென்றால், ஏதேனுமொரு வ்யாஜமாத்ரத்தை அவலம்பித்துச் சிலரை விடுவிக்கிறாயாகையால் அது வைஷம்யம் ஆகாது. ஆகாயம் எங்கும் நிறைந்திருப்பினும் அவ்வவற்றின் சிறுமை பெருமை முதலிய விகாரங்கள் தீண்டப் பெறாதிருப்பது போல நீ ஹேயகுணங்கள் எவையும் தீண்டப்பெறாதவன். நீ எங்கும் வ்யாபித்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாமையால் அவற்றில் இல்லாதுபோலவே இருக்கின்றனை. உனக்கு விளையாட வேண்டுமென்னும் விருப்பம் எப்பொழுது உண்டாகின்றதோ, அப்பொழுது ப்ரக்ருதிபுருஷர்களைக் காட்

டியும் விலக்ஷணனான உன் ஸங்கல்பத்தினால் ப்ரக்ருதி யிடத்தினின்றுண்டானவைகளும் தேஹ நிமித்தங்களுமான புத்தி இந்த்ரியாதிகளுடன் ஜங்கமஸ்தாவர ரூபமான ஸமஸ்த ப்ராணிகளும் கூடுகின்றன. நீயோ வென்றால் அந்த ப்ரக்ருதியினின்று என்றும் நன்றாக விடுபட்டவன். ஜீவாத்மாக்களோவென்றால் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய குணங்கள் இன்றி ஹேய குணங்கள் பலவும் அமைந்திருக்கையால் குடம் முதலியவற்றைப் படைக்கவேண்டுமென்றாலும் ஸங்கல்பமாத்ரத்தினால் படைக்கவல்லராகிறதில்லை. நீ எல்லோர்க்கும் மேற்பட்டவனாகையால் உன்னை மேற்பார்வையிடுகிறவன் ஒருவனும் இல்லை. நீயே பரமகாரணன். ஆகையால் உனக்குக் கார்யமாகாத வஸ்துவாவது சரீரமாகாத வஸ்துவாவது எதுவுமே இல்லை. நீ ஸர்வாந்தராத்மாவாய் ஸர்வத்தையும் சரீரமாகக் கொண்டிருப்பினும், எங்கும் நிறைந்த ஆகாயம் அவ்வவற்றின் விகாரங்கள் தீண்டப் பெறாதிருப்பதுபோல, அவ்வவற்றின் ஹேய குணங்கள் எவையும் தீண்டப்பெறாதிருக்கின்றனை. என்றும் அழியாமல் நிலைநின்றிருப்பவனே! ஜீவாத்மாக்கள் கணக்கற்றவர்கள்; என்றும் அழியாதவர்கள்; (மற்றும், அணுஸ்வரூபர்கள். அவர்களைச் சிலர் விபுஸ்வரூபர்களென்றும் ஆனதுபற்றியே எங்கும் நிறைந்தவர்களென்றும் சொல்லுகிறார்கள். அப்படியாயின் ஆத்மாக்கள் அனைவரும் அத்தன்மையில் துல்யர்களாகையால் பரமாத்மாவாலாவது தங்களுக்குள் ஒரு ஜீவாத்மாவாலாவது நியமிக்கப்படுகை கூடாது. மற்றும், வேதங்களில் ஆத்மாக்கள் சரீரங்களினின்று கிளம்புவதும் போவதும் வருவதுமாயிருக்கிறார்களென்று சொல்லு

கிற நியமங்கள் சேரா. ஆகையால் ஜீவாத்மாக்கள் அணுஸ்வரூபர்களே). இந்த ஜகத்தெல்லாம் பரமாத்மாவால் வ்யாபிக்கப்பட்டுத் தன்மயமாகவே இருக்கின்றது. அப்பரமாத்மா இந்த ஜகத்தை எப்பொழுதும் விடாமல் உள்ளே இருந்து நியமித்துக்கொண்டிருக்கிறான். இங்ஙனம் ஏற்பட்டிருக்கிற இவ்வுண்மையை அறியாதவர்கள் சொல்லும் மதமெல்லாம் துஷ்டமாகையாலே ப்ராமாணிகர்கள் விரும்பமாட்டார்கள். இவ்வுண்மையை அறிந்த ப்ராமாணிகர்கள் விரும்பாத மதமெல்லாம் ப்ரமாணவிருத்தமாகையாலே ஆதரிக்கத்தக்கதன்று. ப்ரக்ருதி புருஷர்கள் நித்யர்களாகையாலே அவர்களுக்குப் பிறவியென்பது கூடாது. ஆயினும், முன்பே இருக்கின்ற ஜலத்துளிகள் காற்றினால் தாண்டப்பட்டு ஒன்றோடொன்று சேர்ந்து நீர்க்குமிழி உண்டாவதுபோல, கர்மமடியாக ஏற்பட்ட ப்ரக்ருதிபுருஷர்களின் ஸம்பந்தத்தினால் பற்பல நாமரூபங்களோடுகூடின பலவகை ப்ராணிகள் ஆதாரமாகிய உன்னிடத்தில் உண்டாகின்றன. மீளவும் ப்ரளயதசையில் நாமரூபங்களை விட்டு நதிகள் ஸமுத்ரத்தில் மறைவதுபோலவும், மாக்ஷிகமென்னும் தேனில் மற்ற மகரந்தங்களெல்லாம் மறைவதுபோலவும், பரமாத்மாவான உன்னிடத்தில் மறைகின்றன. தெளிந்த மதியுடைய பெரியோர்கள் இவ்வுலகத்திலுள்ள மனுஷ்யர்களுக்கு உன் மாயையாலேற்பட்ட தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்ராத்மாபிமானம் முதலிய ப்ரமமே மேன்மேலும் ஸம்ஸாரம் தொடர்ந்துவருவதற்குக் காரணமென்று நிச்சயித்து உன்னிடத்தில் மிகவும் பக்தியை வளர்த்திக்கொண்டு வருகிறார்கள். உன்னைப் பணிகிறவர்களுக்கு ஸம்ஸ்ருதிபயம் எப்படி உண்

டாகும்? சீதம் உஷ்ணம் வர்ஷம் என்கிற மூன்று காலங்களாகிற மூன்று நேமிகளையுடையதும் உன்னுடைய *ப்ருபங்கரூபமுமாகிய ஸம்வத்ஸராத்மகமான காலசக்ரம் உன்பாதாரவிந்தங்களையே உபாயோபேயமாகப் பற்றாதவர்களுக்கு ஸம்ஸ்ருதிபயத்தை விளைக்குமேயன்றி அதையே உபாயோபேயமாகப் பற்றினவர்களுக்கு அந்தப் பயத்தை விளைவிக்காது. அதிசஞ்சலமாயிருப்பதும் இந்த்ரியங்களையும் ப்ராணன்களையும் ஜயித்த மஹாதீரர்களாலும் அடக்கமுடியாததுமாகிய மனமாகிற குதிரையை அடக்குவதற்கு ஆசார்யனுடைய பாதாரவிந்தங்களையொழிய வேறு உபாயங்களில் இழிந்து வருந்தி யத்னிக்கிறவர்கள் ‡கர்ணதாரனில்லாத ஓடத்திலேறின வர்த்தகர்கள்போலப் பற்பல வ்யஸனங்களால் வ்யாகுலப்பட்டு இந்த ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்துவார்களன்றிக் கரையேறமாட்டார்கள். மனுஷ்யர்களுக்குள் எவனேனும் உன்னைப் பணிவானாயின், அவனுக்கு ஸகலவித ஸுகஸ்வரூபனும் அந்தந்த ஸுகங்களைக் கொடுப்பவனும் ப்ரியதமனுமாகிய நீ இருக்கையில் பந்து பிள்ளை தேஹம் மனைவி பணம் வீடு பூமி ப்ராணன் வாஹனம் இவைகளால் என்ன ஸுகம் ஆகவேண்டும்? ஒரு ஸுகமும் இல்லை. இங்ஙனம் நிரதிசய புருஷார்த்த ரூபமான உன்ஸ்வரூபத்தை அறியாமல் ஸுகத்திற்காக ஆணும் பெண்ணுமாய்க் கலந்திருக்கின்ற மனிதர்களுக்கு ஆத்மஸ்வரூபம் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் மறைக்கப்பட்டுத் தனக்கு அஸாதாரமான ஜ்ஞான ஐஸ்வர்யாதி குணங்

---

* ப்ருபங்கம்—புருவ நெரிப்பு. புருவநெரிப்புமாத்ரத்தினால் நடப்பதுபற்றி அங்ஙனம் புருவநெரிப்பென்றே காலத்தை வழங்குகிறார்கள்.

‡ கர்ணதாரன் – ஓடம் நடத்துகிறவன்.

களும் தடைபட்டு அஸத்ப்ராயமாயிருக்கையில் அர்த்த காமங்களில் எதுதான் ஸுகத்தை விளைக்கும்? எதுவும் ஸுகத்தை விளைக்காது. நித்யஸுகஸ்வரூபனும் அந்தராத்மாவுமாகிய உன்னிடத்தில் ஒருகாலாயினும் மனம் செலுத்துவார்களாயின், அவர்கள் ஆத்மாக்களின் ஜ்ஞானவைராக்யாதிரூபமான ஸாரத்தைப் பறிப்பதாகிய இல்லறவாழ்க்கையை மீளவும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஆத்மபரமாத்மாக்களின் உண்மையை அறிந்தவர்களும் தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்ராத்மாபிமானம் முதலிய மதமற்றவர்களும் எப்பொழுதும் உன் பாதாரவிந்தங்களையே மனத்தில் தரித்துக்கொண்டிருப்பவர்களும் பாபங்களையெல்லாம் போக்கவல்ல ஸ்ரீபாததீர்த்தமுடையவர்களுமாகிய அம் மஹானுபாவர்கள் பூமியிலுள்ள பற்பல வகைப்பட்ட புண்யதீர்த்தங்களையும் புண்யக்ஷேத்ரங்களையும்புனிதஞ் செய்யும்பொருட்டு ஆங்காங்குத் திரிந்துகொண்டிருப்பார்கள். * 'பரமார்த்தமாகவே உள்ளதாகிய பரப்ரஹ்மத்தினின்று உண்டான இந்த ப்ரபஞ்சம் முழுவதும் பரமார்த்தமாக உள்ளதே' யென்பது யுக்தமன்று. ஏனென்றால், அது யுக்திக்குப் பொருந்ாது. எந்த வஸ்து எதினிடத்தினின்று உண்டாயிற்றோ, அந்த வஸ்து அதைப்போலவே இருக்கும். மண்ணுருண்டையினின்றுண்டான குடம் மண்ணாகவே யிருக்கின்றது. ஸ்வர்ணத்தினின்றுண்டான முடி முதலிய ஆபரணம் ஸ்வர்ணமாகவே இருக்கிறது. ஆகையால் கார்யகாரணங்களிரண்டும் துல்யமாயிருக்கவேண்டும். ஆயினும் சேதனனான புருஷனிடத்தினின்று மயிர் பல் நகம் முத

*ஜகமெல்லாம் பொய்யென்று சொல்லுகிறவர்களின் மதத்தை தக் கண்டிக்கிறதற்காக அதை அனுவாதஞ் செய்கிறார்கள்.

லிய அசேதனங்களும், அசேதனமான கோமயத்தி னின்று தேள் முதலிய சேதனங்களும் உண்டாகக் காண்கையால் கார்ய காரணங்கள் துல்யமாயிருக்க வேண்டுமென்கிற நியதியில்லை. ஸத்யமான ஸ்வப்னத்தி னின்று அஸத்யமான யானை குதிரை முதலியவை உண்டாகக் காண்கையாலும் ஸத்யமான முத்துச்சிப்பி யினின்று அஸத்யமான வெள்ளி உண்டாகக் காண்கை யாலும் முன்னமே ஸித்தமாயிருக்கும் வஸ்து உண் டாக வேண்டியது இல்லையாலும் காரணத்தைப் போல் கார்யமும் ஸத்யமாயிருக்க வேண்டியதில்லை. ஆகையால் கார்யம் அஸத்யமே. ஸத்யமான பரப்ரஹ்ம மத்தினின்றுண்டான ப்ரபஞ்சம் அஸத்யமே' என்று சிலர் வாதஞ் செய்கிறார்கள். அது ஸரியல்ல. கார்ய காரணங்கள் துல்யமாகவே யிருக்குமென்கிற நியதிக்கு எங்கும் மாறுபாடில்லை. புருஷனிடத்தினின்று மயிர் முதலிய அசேதனங்கள் உண்டாகின்றனவே யென்றால், அங்கும் அசேதனாம்சமே காரணமன்றிச் சேதனன் காரணனன்று. ஸ்வப்னத்தினின்று உண்டான யானை குதிரை முதலியனவும் முத்துச்சிப்பியிலுண்டாகிற வெள்ளியும் பொய்யல்லவா வென்றால், எங்குப் பொய் யாகிறது? எங்கும் பொய்யில்லை. ஸ்வப்னத்தில் காண் கிற யானை முதலியவைகளும் சேதனர்களின்கர்மானு குணமாக அவ்வவர்மாத்ரமே அனுபவிக்கும்படி ஈஸ்வரனால் படைக்கப்படுகின்றன வாகையால் அவை உண் மையேயன்றிப் பொய்யல்ல. பஞ்சீகரணத்தின் உண் மையை ஆராய்ந்தால் எல்லாவற்றிலும் எல்லாம் அமைந்திருப்பது உண்மையே யென்று நிச்சயிக்கலாம். ஆகையால் முத்துச்சிப்பியில் வெள்ளியின் அம்சமும் கலந்திருக்கையால் அங்கு வெள்ளி இருப்பதாகத்

தோற்றுவது உண்மையேயன்றி அதுவும் பொய்யல்ல. முன்னமே ஸித்தமாயிருக்கும் வஸ்து மீளவும் உண்டாவதுவென்பதுவும் ஸரியன்று. முன்பு மண்ணுருண்டையாயிருந்தது பின்பு குடமாயிருக்கிறது. குடமாயிருக்கும் அவஸ்தை முன்பில்லாமையால் அந்நிலைமையோடு கூடின வஸ்து உண்டாயிற்றென்பது எப்படி விருத்தமாகும்? முன்பு ஒரு அவஸ்தையோடிருந்த வஸ்து மற்றொரு அவஸ்தையுடன் தோற்றுவது ஸஹஜமே. ஒரு மண்ணுருண்டையே குடம் மடக்கு முதலிய பல அவஸ்தைகளை அடைகிறதாகையாலும் 'குடத்தினால் ஜலம் கொண்டுவா' என்னும் இவை முதலிய வ்யவஹாரங்களுக்காகவும் ஜலங்கொண்டு வருவது முதலிய கார்யங்களுக்காகவும் அந்தந்தவித அவஸ்தாப்ராப்தி இஷ்டமாகையாலும் உத்பத்தியென்பது ஸஹஜமே. குணங்களை நிரூபிக்க முயன்ற வேதவாக்ய ஒருவாக்யத்திற்குப் பலவாறு பொருள் தோன்றும்படி செய்து அனாதியாய வாஸனையால் கலங்கின மதியுடைய மூடர்களுக்கு அந்த பரம்பரையாக ப்ரமத்தை விளைவிக்கின்றது. (ஒருவன் மதிகேட்டு முதலில் ஒருவிதமாகப் பிதற்றினால் பல மதிகேடர்கள் அங்ஙனமே அவன் பிதற்றினதை ப்ரமாணமாகக் கொண்டு ப்ரமித்து நடத்துகிறார்கள்). 'இந்த ஜகத்து ஸ்ருஷ்டிக்குமுன்பு இல்லை. ப்ரளயத்திற்குப் பின்பும் இருக்கப்போகிறதில்லை. ஆகையால் ஆதியந்தங்களில் இந்த ப்ரபஞ்சம் இல்லாததுபோல இடையிலும் இது ஏகரஸனான உன்னிடத்தில் பொய்யாகவே இருப்பதுபோல் தோற்றுகிறது. இது நிச்சயம். மண்ணுருண்டை முதலிய காரணவஸ்துக்களே குடம் முதலிய கார்ய வஸ்துக்களாய் நிரூபிக்கப்படுகின்றன. அந்தக்குடம் முதலியவையெல்லாம் மண்ணேயன்றி

வேறன்று. பேர் மாத்ரம் வேறுபட்டிருக்கிறது. ஆகை யால் காரணமான மண் முதலியவையே உண்மையன் றிக் கார்யமான குடம் முதலியவை அஸத்யங்களே. அங்ஙனமே ப்ரஹ்மத்தின் கார்யமான ஆகாசம் முத லியவற்றிற்கு நாமமாத்ரமே யொழிய அவை உண்மை யல்ல. பரப்ரஹ்மமே உண்மை' என்றால் அறிவு கேடர் கள் வீணாகத் தங்கள் மனம்போனபடி கார்யம் பொய் யென்று கற்பித்துச் சொல்லுகிறார்களன்றி, அது உண்மையன்று. அவர்கள் கார்யம் பொய்யென்று பேசுவதை ப்ராமாணிகமென்று வேதத்தின் பொரு ளறியாத மூடர்களே அங்கீகரிப்பார்களன்றி அதன் பொருளறிந்த பெரியோர்கள் அங்கீகரிக்க மாட்டார் கள். (ஸ்ருஷ்டிக்கு முன்பும் ப்ரளயத்திற்குப் பின்பும் இந்த ப்ரபஞ்சம் இல்லையே யென்றால், அப்பொழுதும் முதலே இல்லாமற்போகிறதில்லை. ஆனால் நாமரூபங் களுக்கிடமாகாமல் பரம புருஷனிடத்தில் மறைந்திருக் கின்றது. ஆகையால் ப்ரபஞ்சம் உண்மையே யன்றிப் பொய்யன்று). உன்னைப்போல் ஜீவாத்மாக்களும் நித் யத்வம் ஏகரஸத்வம் இயற்கை மாறாதிருக்கை முத லிய குணங்களுடையவராயிருக்கும் அவர்கள்மாத்ரம் ப்ரக்ருதிக்கு உட்பட்டு வருந்துவதும் நீ அதற்கு உட் படாதிருப்பதும் ஏனென்றால், ஜீவன் உன்மாயையி னால் மோஹித்து ப்ரக்ருதியின் பரிணாமமான தேவ மனுஷ்யாதி சரீரங்களை அடைகிறான்; அப்பால் சப் தாதி விஷயங்களை அனுபவியாநின்றுகொண்டு பெரு மை சிறுமை முதலிய தேஹதர்மங்களைத் தன்னிடத் தில் ஏற்றுக்கொண்டு தன்னை அந்தத் தேவ மனுஷ் யாதி தேஹமாகவே அபிமானிக்கிறான்; அப்பால் மர ணத்தை அடைகிறான். இங்ஙனம் ஜன்ம மரணாதி

ஸம்ஸாரத்தை மாறாமல் அனுபவித்துக் கொண்டு வருகையால் ஜ்ஞானம் ஐஸ்வர்யம் முதலிய தன் மஹிமையெல்லாம் அழியப் பெறுகிறான். நீயோ வென்றால், ஸர்ப்பம் தோலை விடுவதுபோல அந்த ப்ரக்ருதியைத் துறக்கின்றனை. ஆகையால் ஜ்ஞான சக்தி பல ஐஸ்வர்யாதிகுணங்கள் அழியப் பெறாமல் விளங்குகின்றனை. ஆனால் ஜீவாத்மாவின் குணங்களைப்போல உன் குணங்களும் பரிச்சின்னங்களோ வென்றால், அப்படியன்று. உன்னுடைய ஐஸ்வர்யாதி குணங்கள் அளவற்றவை. நீ அபஹதபாப்மத்வம் முதலிய எட்டுக் குணங்கள் என்றும் அமைந்திருப்பதும் அளவற்றதும் ஸ்வயம்ப்ரகாசமுமாகிய ஸ்வரூபத்தில் இருந்துகொண்டு பூஜிக்கப்படுகிறாய். மனவூக்கமுடைய முனிவர்களும் மனத்திலுள்ள விருப்பங்களின் வேர்கள் போன்ற வாஸனைகளை அறுக்கமாட்டார்களாயின், நீ அவர்கள் மனத்தில் இருப்பினும் கழுத்தில் தரித்த ரத்னம்போல் அறியமுடியாதவனாகவே இருக்கின்றனை. ரத்னத்தைக் கழுத்தில் தரித்தும் அதை மறப்பார்களாயின், அதை அறியாததுபோலவே யல்லவா? ப்ராணன்களின் த்ருப்தியையும் இந்த்ரியங்களின் த்ருப்தியையும் விரும்பிக் காமவேர்களை அறுக்க முயலாதிருக்கின்ற அம்முனிவர்களுக்கு இஹலோகத்திலும் பரலோகத்திலும் துக்கமேயன்றி ஸுகமில்லை. ஏனென்றால், அவர்களுக்கு ஸம்ஸாரம் தீராதாகையால் இங்கும் ஸுகமில்லை. உன் பதவியை அடையமாட்டார்களாகையால் அங்கும் ஸுகமில்லை. பகவானே! அவரவர்க்கு ஏற்பட்ட தர்மங்களை உல்லங்கனஞ் செய்யில் தண்டிக்குந் தன்மையனான உன்னிடத்தினின்று அவர்களுக்கு இஹபரலோகங்களிரண்டிலும் துக்கமே. உன்னை உள்ளபடி அறிக்

தவனேன்றால், ஸம்ஸாரத்தில் விளைகிற புண்யபாப கர்மங்களின் பலனான ஸுகதுக்கங்களையாவது ப்ராணிகள் செய்யும் புகழ் பழிகளையாவது பொருள் செய்கிறதில்லை. அவனுக்கு நீ தேஹாவஸானத்தில் மோக்ஷங் கொடுக்க ஸித்தமாயிருக்கின்றனையாகையால் பரலோகத்தில் ஸுகமே. இஹத்திலும் உன் பக்தர்களோடு கலந்து அளவற்ற கல்யாண குணங்களையுடைய நீ புகழ்களோடும் அவதரித்துச் செய்யும் கதைகளாகிற அம்ருதத்தைத் தினந்தோறும் செவிகளால் பானஞ்செய்து உன்னை மனத்தில் தரித்துக்கொண்டிருக்கிறானாகையால் ஸுகமே. ஆகையால் அவன் ஸுகதுக்கங்களையாவது புகழ் பழிகளையாவது அறிகிறதில்லை. ஸ்வர்க்காதி லோகங்களுக்குப் பதிகளாகிய இந்த்ராதிகளும் உன் ஸ்வரூபஸ்வபாவங்களின் கரையை அறியவில்லை. மற்ற மனுஷ்யாதிகள் அறியமாட்டார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆயிரஞ் சொல்லியென்? நீயுங்கூட அதன் கரையை அறியமாட்டாய். ஏனென்றால், உன் ஸ்வரூபஸ்வபாவங்கள் அளவற்றவை. (ஆயினும் இதனால் உனக்கு ஸர்வஜ்ஞத்வம் குறையாது. உள்ளதை உள்ளபடி அறிகையன்றோ ஸர்வஜ்ஞத்வமாவது. அளவற்றதை அத்தகையதென்றறிகை அறிவுக்கு அடையாளமேயன்றி வேறன்று). உன்னிடத்தில் ஒவ்வொரு ரோமகூபத்திலும் (மயிர்க்காலிலும்) எழாவரணங்களோடுகூடின ப்ரஹ்மாண்டங்களின் ஸமூஹங்கள் ஆகாயத்தில் பக்ஷிகளுடன் தூள்கள் ஸஞ்சரிப்பது போல ஸஞ்சரிக்கின்றன. ஆகையால் வேதங்கள் ப்ரக்ருதிபுருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனென்று உன்னை அறிவித்துக்கொண்டு உன்னிடத்திலேயே முடிந்து பயன் பெறுகின்றனவன்றி, உன் ஸ்வரூபஸ்வபாவாதிகளை முழுவதும் அறிவிக்க வல்லவையல்ல.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—இங்ஙனம் ஸ்ருதிகள் சொன்னதாக ஸனந்தனுதிகள் சொல்ல ப்ரஹ்மபுத்ரர்களான மரீசி முதலிய ஸித்தர்கள் தங்கள் கேள்வியின் உத்தரமாகிய அதைக் கேட்டுப் பரமாத்மாவின் ப்ரகாரத்தை உள்ளபடி அறிந்து ஸனந்தனரைப் பூஜித்தார்கள். மஹானுபாவர்களும் ஆகாயத்தில் திரியுந் தன்மையர்களுமாகிய மரீசி முதலிய அப்பெரியோர்கள் இங்ஙனம் ஸமஸ்த வேதங்கள் புராணங்கள் உபநிஷத்துக்கள் ஆகிய இவற்றின் ஸாரமான கருத்தைத் தொகுத்தெடுத்தார்கள். ப்ரஹ்மபுத்ரனே! நீயும் ப்ராணிகளின் காமங்களாகிற விதைகளையெல்லாம் முளைக்கவொட்டாமல் அறுப்பதும் பரமாத்மாவின் உண்மையை அறிவிப்பதுமாகிய இந்த ஸ்ருதிகீதையை மனத்தில் தரித்து இஷ்டப்படி பூமியில் திரிவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! ஜிதேந்த்ரியர்களின் வ்ரதத்தை அனுஷ்டிப்பவராகிய நாரதர் ஸர்வலோக குருவாகிய பதரீநாராயணன் சொன்னதை மனவூக்கத்துடன் தெரிந்துகொண்டு ஸம்சயம் தீர்ந்தமையால் நிறைந்த மனமுடையவராகிக் கேட்டதைத் தரித்துக்கொண்டு அந்தப் பகவானைக் குறித்து இங்ஙனம் மொழிந்தார்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—ஸமஸ்த லோகங்களுக்கும் ஸுகத்தை விளைப்பவனும் கர்மவச்யமல்லாத சுத்த ஸத்வமயமான திவ்யமங்கல விக்ரஹமுடையவனும் (பரிசுத்தமான புகழுடையவனும்) ஸமஸ்த பூதங்களுக்கும் மோக்ஷம் உண்டாகும்படி நிர்மலமான வித்யைகளைத் தரித்துக்கொண்டிருப்பவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய அத்தகைய உனக்கு நமஸ்கார.

ரம். (நீ வேண்டிய வித்யைகளை உபதேசித்து ஸமஸ்த பூதங்களுக்கும் மோக்ஷஸுகத்தை விளைக்கின்றனை. உனக்கு நமஸ்காரம்).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நாரதர் இங்ஙனம் ஆதி ரிஷியாகிய நாராயணனையும் நிர்மலமான மதியுடைய அவன் சிஷ்யர்களையும் நமஸ்கரித்துப் போய் வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு தானே நேராக என் தந்தையாகிய த்வைபாயனருடைய ஆஸ்ரமத்திற்கு வந்தார். மஹானுபாவராகிய த்வைபாயனரால் அம்முனிவர் பூஜிக்கப்பட்டு அவர் அளித்த ஆஸனத்தில் உட்கார்ந்து அந்த த்வைபாயனருக்கு நாராயணனிடத்தினின்று தான் கேட்டதையெல்லாம் உபதேசித்தார். (அவர் எனக்கு உபதேசித்தார்). ராஜனே! நீ என்னைக்குறித்து எது வினவினையோ, அதற்கு உத்தரமாக அந்த ஸ்ருதிகீதையை உனக்குச் சொன்னேன். இதனால் அநிர்த்தேச்யமும் நிர்க்குணமுமாகிய ப்ரஹ்மத்தை வேதங்கள் எங்ஙனம் நிரூபிக்க முடியுமென்கிற ஸம்சயம் தீர்ந்து மனம் தெளிவு பெறும். இந்த ப்ரபஞ்சத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை எவன் தன் ஸங்கல்பத்தினால் நடத்துகின்றானோ; ப்ரக்ருதிபுருஷர்களை எவன் உள்ளே புகுந்து நியமிக்கின்றானோ; மற்றும், எவன் மஹத்து முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள ஸமஷ்டி தத்வங்களால் [illegible] சதுர்முகனென்னும் ஜீவஸமூஹமாய் [illegible] தேவமனுஷ்யாதி சரீரங்களைப் படைத்தானோ; அனந்தரம் அந்தச் சரீரங்களை எவன் நியமிக்கின்றானோ; கர்மவச்யனான ஜீவன் எவனைச் சரணம் புகுந்து கூடில் சேர்ந்து உறங்கும் பறவை அதைத் துறந்து போவதுபோல ப்ரக்ருதியைத் துறந்து அப

ஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் விளங்கப் பெறுகி
ருனே; அத்தகையனும் ஸம்ஸாரிகளுக்கு மோக்ஷங்
கொடுத்துப் பிறவி முதலியவற்றால் விளையும் துக்கத்
தைப் போக்குபவனும், எவனைப் பற்றினால் பயமெல்
லாம் தீருமோ அத்தகையனும் தன்னைப் பற்றின
ருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனுமாகிய
பரமபுருஷனை எப்பொழுதும் த்யானிக்க வேண்டும்.
எண்பத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

( பகவத் பக்தர்களின் ஏழ்மைக்குக் காரணங்
கூறுதலும், பஸ்மாஸுர வ்ருத்தாந்தமும் )

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—(மஹ
ர்ஷீ!) தேவதைகளிலும் அஸுரர்களிலும் மனுஷ்யர்
களிலும் எவர் அமங்கலனான ருத்ரனைப் பணிகிறார்
களோ, அவர்கள் பெரும்பாலும் பணக்காரர்களும்
போகமுடையவர்களுமாயிருக்கின்றார்கள். ஸ்ரீ மஹா
லக்ஷ்மிக்கு வல்லபனான பரமபுருஷனைப் பணிகிறவர்
களோவென்றால் அங்ஙனம் பணக்காரர்களாயிருக்கிற
தில்லை. (செல்வத்திற்கு அதிஷ்டான தேவதையான
ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனான பரம புருஷனைப் பணி
கிறவர்களன்றோ பணக்காரர்களாயிருக்கவேண்டும்.
கையில் கபாலமேந்திப் பிச்சையெடுக்கிற சிவனைப் பணி
கிறவர்கள் ஏழைகளாயிருக்கவேண்டுமல்லவா? அப்படி
யிருக்க ஏன் இப்படி விபரீதமாயிருக்கிறது?) விஷ்ணு
ருத்ரர்களிருவரும் ஒருவரோடொருவர் பொருந்தாத
ஸ்வபாவமுடையவர்கள். அந்த ப்ரபுக்களைப் பணிகிறவர்
களுக்குப் பலன் விபரீதமாயிருக்கின்றது. இவ்விஷயத்
தில் எங்களுக்குப் பெரிய ஸந்தேஹமாயிருக்கிறது.
இதை நாங்கள் அறிய விரும்புகிறோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சிவன் பார்வதியுடன்கூடி ஸர்வகாலமும் மூன்று வகைப்பட்ட அஹங்காரம் நிறைந்த மூர்த்தியுடையவன்; மற்றும், தமோகுணத்தினால் மூடப்பட்டவன். அஹங்காரம் வைகாரிகமென்றும் தைஜஸமென்றும் தாமஸமென்றும் மூன்று வகைப்பட்டது. அந்த மூன்று வகைப்பட்ட அஹங்காரத்தினின்று பதினொரு இந்த்ரியங்களும் தன்மாத்ரங்களோடுகூடின பஞ்சபூதங்களுமாகிய பதினாறு விகாரங்கள் உண்டாயின. (தாமஸாஹங்காரத்தினின்று தன்மாத்ரங்களோடுகூடின பஞ்சபூதங்களும் வைகாரிகாஹங்காரத்தினின்று பதினொரு இந்த்ரியங்களும் உண்டாயின. ராஜஸாஹங்காரம் அவ்விரண்டிற்கும் உதவி செய்யுந் தன்மையது. இம்மூன்று வகைப்பட்ட அஹங்காரங்களுக்கும் ருத்ரன் அதிஷ்டானதேவதை). இந்த வகைய அஹங்காரம் அதன் விகாரங்கள் ஆகிய இவற்றின் அதிஷ்டானதேவதைகளான ருத்ரன் முதலியவர்களில் எவரையேனும் பணியும் புருஷன் ஸமஸ்த ஸம்பத்துக்களையும் பெறுகின்றான். பரமபுருஷனோ வென்றால் ஸத்வம் முதலிய ப்ராக்ருத குணங்களுக்கு உட்படுந்தன்மையற்றவன்; ஜ்ஞான ஐஸ்வர்யாதி குணங்களெல்லாம் நிறைந்தவன்; சேதநாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணன்; ஸர்வஜ்ஞன்; அருகிலிருந்து ஜீவாத்மாக்களின் குணதோஷங்களைப் பார்த்துக் கொண்டிருப்பவன். ருத்ராதிகளோவென்றால் இதற்கு நேரே விபரீதமான ஸ்வபாவமுடையவர்கள். ஆகையால் அத்தகைய பரம புருஷனைப் பணிகிறவன் ப்ராக்ருத குணங்களற்று முக்தனாகிறான். (ப்ரஹ்மருத்ராதிகள் ரஜஸ்தமஸ்ஸுக்கள் நிறைந்த ஸ்வபாவமுடையவராகையாலும் ஸத்வாதிகுணங்களுக்கு உட்பட்டு நடப்

பவராகையாலும் ஷாட்குண்யபூர்ணரன்றாகையாலும் ஜீவகோடியில் சேர்ந்தவராகையாலும் ஸர்வஜ்ஞரன்றாகையாலும் அவர்களுக்கு மோக்ஷங்கொடுக்குந்திறமை கிடையாது. பின்னையோவென்றால், தங்கள் சக்திக்குத் தகுந்தபடி அர்த்த காமாதிகளைத்தான் அவர்கள் கொடுப்பார்கள். பகவானுக்கோவென்றால் தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற நான்குவகைப் புருஷார்த்தங்களையும் கொடுக்குந்திறமை உள்ளதே. ஆயினும் அவன் ஸர்வஜ்ஞனும் பரமகாருணிகனுமாகையால் 'நான் என் பக்தனுக்குத் தர்ம அர்த்த காமங்களில் ஏதேனுமொருபலனைக் கொடுப்பேனாயின், இவன் அதன் முடிவில் அடிக்கடி 'அது வேண்டும். இது வேண்டு' மென்று என்னை யாசித்துக்கொண்டு நித்ய தரித்ரனாகவே யிருப்பான். ஆகையால் இவனை அனுக்ரஹிக்கிறேன்' என்று ஆலோசித்துப் பெரும்பாலும் தன் பக்தர்களுக்கு முக்தியையே கொடுக்கிறான். ஒருவனுக்கு நிர்ப்பந்தத்தினால் தர்மாதிகளையும் கொடுக்கிறான்). (இது நான் என்புத்தியால் கல்பித்துச் சொன்னதன்று. இங்ஙனம் பகவான் தானே மொழிந்தான்). உங்கள் பாட்டனாகிய யுதிஷ்டிர மன்னவன் அஸ்வமேத யாகங்கள் முடிந்தபின்பு ஸ்ரீக்ருஷ்ணபகவானிடத்தினின்று தர்மங்களைக் கேட்கும்பொழுது அந்த அச்சுதனைக் குறித்து இங்ஙனம் நீ வினவினாற்போலவே வினவினான். ப்ரபுவும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் கேட்க வேண்டுமென்று விருப்பமுற்ற யுதிஷ்டிரனிடத்தில் ஸந்தோஷமுற்று ப்ராணிகளின் க்ஷேமத்திற்காக யதுகுலத்தில் அவதரித்தவனாகையால் அவனுக்கு விசதமாக உத்தரம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—நான் எவனை அனுக்ரஹிக்க விரும்புகிறேனோ, அவனுடைய தனத்தைப் பறிக்கிறேன். அப்பால் பணமற்றவனும் துக்கபரம்பரைகளால் வருத்தமுற்றவனுமாகிய அவனை அவன் பந்துக்கள் துறக்கிறார்கள். அவன் பணத்தாசையால் வருந்தி முயற்சிகள் செய்யினும் பணமில்லாதவனுடைய முயற்சிகள் பலிக்கமாட்டாவாகையால், அவையெல்லாம் வீணாகப்பெற்று வெறுப்புறுவான். அப்பொழுது அவன் 'சப்தாதிவிஷயங்களால் வினையும் ஸுகம் கிடைப்பதரிது' என்று நிச்சயித்துக்கொண்டு அதில் ஆசையற்று என்பக்தர்களோடு நட்புறுவான். அப்பொழுது அவனுக்கு நான் செய்யக்கூடிய அனுக்ரஹத்தைச் செய்வேன். அங்ஙனம் என் பக்தர்களோடு ஸ்னேஹமுடைய அவனுக்கு ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணமும் ஸர்வத்திலும் உள்நுழையும்படி ஸூக்ஷ்மமாயிருப்பதும் கேவலஜ்ஞானாநந்தஸ்வரூபமும் தேசகாலவஸ்து பரிச்சேத மற்றதுமாகிய பரப்ரஹ்மத்தைத் தெளிவாகக் காட்டுவேன். இங்ஙனம் முதலில் துக்கத்திற்கிடமாயிருக்கையாலே வருந்தியும் ஆராதிக்கமுடியாத என்னைத் துறந்து முதலில் ஸுகம் கொடுக்கிறார்களென்று கடைசியில் துக்கமே பலனாக முடியுமென்பதை ஆராயாமல் ருத்ரன் முதலிய மற்றவர்களை ப்ராணிகள் பணிகின்றார்கள். அப்பால் அவர்கள் சீக்ரத்தில் ஸந்தோஷம் அடையுந்தன்மையர்களான அந்த ருத்ராதிகளிடத்தினின்று ராஜ்யத்தைப் பெற்றுச் செல்வப்பெருக்கினால் வழிதப்பி மதித்து மனவூக்கமற்று வரங்கொடுத்த அந்த ருத்ராதி தேவதைகளையே மறந்து அவமதிக்கின்றார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ரஹ்மா விஷ்ணு சிவன் முதலிய ஸமஸ்ததேவதைகளும் நிக்ரஹ அநுக்ரஹங்களைச் செய்வதில் ஸமர்த்தர்களே. ஓ ராஜனே! ஆயினும் சிவனும் ப்ரஹ்மாவும் அந்த க்ஷணமே நிக்ரஹ அநுக்ரஹங்களைச் செய்யுந்தன்மையர். தன் பக்தர்களை எப்பொழுதும் கைவிடாது பாதுகாக்குந் தன்மையனாகிய விஷ்ணுவோவென்றால் அத்தகையனல்லன்; பெரும்பாலும் அநுக்ரஹத்தையே செய்யுந்தன்மையன்; சிலவிடத்தில் நிக்ரஹஞ்செய்யினும் அதுவும் கடைசியில் அநுக்ரஹமாகவே முடியும். இதே விஷயத்தில் ருத்ரன் வ்ருகாஸுரனுக்கு வரங்கொடுத்து ஸங்கடம் அடைந்த பழையதாகிய இவ்விதிஹாஸத்தை நிதர்சனமாகச் சொல்லுகிறார்கள். சகுனியின் புதல்வனாகிய வ்ருகனென்னும் அஸுரன் வழியில் நாரத மஹர்ஷியைக் கண்டு துர்ப்புத்தியுடையவனாகையால் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களாகிய மூன்று தேவர்களில் எவன் சீக்ரத்தில் ஸந்தோஷம் அடையுந்தன்மையனென்று வினவினான். அந்நாரதரும் அவ்வஸுரனைப் பார்த்து 'நீ ருத்ரனைப் பணிவாயாக. அவன் சீக்ரத்தில் ஸந்தோஷம் அடைவான். அவன் தன்னடியார்களிடத்தில் சிறிது குணம் காணினும் சீக்ரத்தில் ஸந்தோஷம் அடையுந்தன்மையன்; அங்ஙனமே சிறிது தோஷம் காணினும் சீக்ரத்தில் கோபத்தையும் அடைவான். அவன் ஸ்துதி பாடகர்களைப்போல் துதிக்கின்ற ராவணபாணாஸுரர்களுக்கு நிகரற்ற ஐஶ்வர்யங்கொடுத்து அவர்களிடத்தினின்றுமே ஸங்கடத்தை அடைந்தான். (ராவணன் ருத்ரனுடைய வாஸஸ்தானமான கைலாஸ பர்வதத்தை அடியோடு பிடுங்க அதனால் அவன் ஸங்கடத்தை அடைந்தான். பாணாஸுரன்

தன்பட்டணத்தைக் காக்கும்படி வேண்ட அவன் அதைக் காத்துக்கொண்டிருக்கையாகிற வருத்தத்தை அடைந்தான்)' என்று மொழிந்தார். அவ்வஸுரன் அம்முனிவரால் இங்ஙனம் மொழிந்து நன்கு தூண்டவும்பெற்று அந்த ருத்ரனைத் தன்தேஹமாம்ஸத்தினால் ஆராதித்தான். அவன் அங்ஙனம் தன்தேஹமாம்ஸத்தை அக்னியில் ஹோமஞ்செய்து அக்னிமுகத்தில் இருக்கின்ற ருத்ரனை ஆராதித்துக்கொண்டிருப்பினும் அந்தத் தேவனுடைய தர்சனம் நேரப்பெறாமல் ஏழாவது நாள் அந்தப் புண்யதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கையால் நனைந்த மயிர்களையுடைய தன்தலையைக் கத்தியினால் அறுக்கத் தொடங்கினான். அப்பொழுது மிகவும் மன இரக்கமுடைய அந்த ருத்ரதேவன் அக்னியே வடிவங்கொண்டு நேரில் வந்தாற்போல் விளக்கமுற்று அரணியினின்றும் அக்னி உண்டாவதுபோல அக்னியினின்றும் மேல்கிளம்பித் தன்கைகளால் அவ்வஸுரனைக் கைகளில் பிடித்துக்கொண்டு தடுத்தான். அவ்வஸுரன் அந்த ருத்ரனுடைய ஸ்பர்சத்தினால் சரீரத்தில் புண்களெல்லாம் ஆறி முன்போலவே இருக்கப் பெற்றான். அந்த ருத்ரன் அவ்வஸுரனைப் பார்த்து 'ஓ வ்ருகாஸுரனே! ஹோமஞ்செய்தது போதும் போதும். உன்னிஷ்டப்படி வரம் வேண்டுவாயாக. உனக்கு நான் கொடுக்கிறேன். வெறும் நீரைக்கொண்டு பணிகிற ப்ராணிகளிடத்திலுங்கூட நான் ஸந்தோஷம் அடையுந்தன்மையன். நீயோவென்றால் வீணாக உன் தேஹத்தை மிகவும் வருத்தினை' என்றான். பாபிஷ்டனாகிய அவ்வஸுரனும் அதைக் கேட்டு அந்தத் தேவனைப் பார்த்து 'நான் எவனெவன் தலையில் கையை வைப்பேனோ, அவனவன் மரணம்

அடையவேண்டும்' என்று ஸமஸ்த ப்ராணிகளுக்கும் பயத்தை விளைப்பதாகிய இவ்வரத்தை வேண்டினான். பாதகுலாலங்காரனே! மஹானுபாவனாகிய ருத்ரன் அதைக் கேட்டு மனவருத்தமுற்றுப் பலாத்காரமாக அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டு ஸர்ப்பத்திற்கு அம்ருதங் கொடுப்பதுபோல அவனுக்கு அவ்வரத்தைக் கொடுத்தான். அவ்வஸுரன் இது மெய்யோ பொய்யோவென்று அந்த வரத்தைப் பரீக்ஷிக்கும் பொருட்டு அந்த ருத்ரன்தலையிலேயே தன்கையை வைக்கத்தொடங்கினான். அப்பொழுது அந்த ருத்ரன் தான் செய்த அபராதத்தினின்று பயந்தோடினான். அவன் அவ்வஸுரனால் தொடரப்பெற்றுப் பயந்து உடம்பு நடுங்கி ஆகாயம் பூமி திசைகள் இவை எவ்வளவுண்டோ அவ்வளவும் வடக்குமுகமாகத் தொடங்கி ஓடிப்போனான். நான்முகன் இந்த்ரன் முதலிய தேவதைகள் அதற்கு ப்ரதிக்ரியை செய்யத் தெரியாமல் வெறுமனே இருந்தார்கள். அப்பால் அந்த ருத்ரன் ப்ரக்ருதியின் கார்யமற்றதும் ப்ரகாசித்துக்கொண்ருப்பதும் சரணாகதிதர்மத்தில் நிலைநின்று இந்த்ரியங்களை வென்று ப்ராணித்ரோஹமில்லாத பெரியோர்களுக்குப் பரமகதியான ஸ்ரீமந்நாராயணன் எங்கு வாஸம் செய்கிறானோ, எங்குச் சென்றவர்கள் மீண்டு வரமாட்டார்களோ அத்தகையதுமாகிய வைகுண்டமென்கிற விஷ்ணுலோகத்திற்குச் சென்றான். ஷாட்குண்ய பூர்ணனும் தன்னைப் பற்றினவருடைய துக்கங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பரமபுருஷன் அந்த வ்ருகாஸுரனையும் அங்ஙனம் அவனிடத்தினின்று பயந்து வருந்தி ஓடிவருகின்ற ருத்ரனையும் கண்டு தன்னுடைய ஆச்சர்யசக்தியினால் ப்ராஹ்மசாரியின் உருவங்

கொண்டு தூரத்தினின்றே அவனை எதிர்கொண்டான். அரைநாண் மான்தோல் தண்டம் இவைகளோடு கூடித் தேஜஸ்ஸினால் அக்னிபோல் ஜ்வலிக்கின்ற மாணியுருவங் கொண்ட அப்பரமபுருஷனை தர்ப்பமும் கையுமாய் வணக்கத்துடன் அபிவாதனஞ்செய்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—சகுனியின புதல்வனே! நீ மிகவும் இளைப்புற்றிருக்கின்றனை. இது நிச்சயம். (உன்னைப் பார்த்தபொழுதே நீ மிகவும் இளைப்புற்றிருக்கின்றனை யென்று நன்றாகத் தெரியவருகின்றது). நீ ஏதுக்காக வெகுதூரம் வந்தனை. ஒருக்ஷண காலம் இளைப்பாறுவாயாக. ஆத்மாவுக்கு இத்தேஹம் விருப்பங்களை யெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பதல்லவா? ஆகையால் அதை இங்ஙனம் வருத்தலாகாது. ப்ரபூ! உங்கள் முயற்சி எங்கள் செவியில்பட உரியதாயின், அதைச் சொல்லவேண்டும். புருஷன் தான் செய்ய விரும்புங் கார்யத்தைப் பெரும்பாலும் ஆப்த புருஷர்களோடு கலந்தாலோசித்துச் செய்யவேண்டுமல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானால் அம்ருதத்தை வர்ஷிக்கின்ற உரைகளைச் சொல்லி வினவப்பெற்ற அவ்வஸுரன் ஓடிவந்த ஶ்ரமம் தீர்ந்து அவனுக்கு முன்பு நடந்ததையெல்லாம் உள்ளபடி மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ வ்ருகாஸுரனே! இப்படியாயின், அப்பொழுது எனக்கு அவன் வார்த்தையில் நம்பிக்கை இல்லை. ஏனென்றால், அவன் தக்ஷருடைய சாபத்தினால் பிசாசத் தன்மையை அடைந்து ப்ரேதங்களுக்கும் பிசாசங்களுக்கும் ப்ரபுவாயிருக்கின்றனன். (பிசாசங்களின் வார்த்தையை நம்பலாகுமோ?)

தானவஶ்ரேஷ்டனே! ஜகத்திற்கெல்லாம் குருவென்று நீ அபிமானித்திருக்கிற அந்த ருத்ரனிடத்தில் உனக்கு நம்பிக்கை உளதாயின், அப்பொழுது உன் கையை உன் தலையிலேயே வைத்துக்கொண்டு பரீக்ஷித்துப் பார். தானவஶ்ரேஷ்டனே! ருத்ரனுடைய வார்த்தை எள்ளளவேனும் பொய்யாயிருக்குமாயின், அதன்பிறகு பொய்பேசுந்தன்மையனாகிய இந்த ருத்ரனை வதிப்பாயாக. இல்லாதபக்ஷத்தில் மீளவும் இப்படியே அவன்பேசி வஞ்சிப்பானல்லவா? அப்படி இல்லாதிருக்கும்படி அப்பொழுதே அவனை வதித்து விடலாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கெடுமதியனாகிய அவ்வஸுரன் இங்ஙனம் மதிமயக்கத்தை விளைப்பவைகளும் புன்னகையினால் அழகாயிருப்பவைகளுமாகிய பகவானுடைய உரைகளால் அறிவு கெட்டுத் தன தலையில் கையை வைத்தால் தானே மரணம் அடைந்தால் அதன் பிறகு என் செய்வோமென்பதை மறந்து தன் கையைத் தன் தலையில் வைத்துக் கொண்டான். அனந்தரம் அவ்வஸுரன் வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்டவன்போல் தலை வெடித்து விழுந்தான். அப்பொழுது ஆகாயத்தில் ஜயசப்தமும் நமச்சப்தமும் ஸாது சப்தமும் உண்டாயின. (‘ஜயவிஜயீபவ’ என்றும், ‘நமோ நம:’ என்றும் ‘நல்லது நல்லது’ என்றும் பலசப்தங்கள் ஆகாயத்தில் உண்டாயின.) பாபிஷ்டனாகிய வ்ருகாஸுரன் இங்ஙனம் மாண்டுபோகையில் தேவதைகளும் ரிஷிகளும் கந்தர்வர்களும் பூமழை பொழிந்தனர். இங்ஙனம் பகவானால் உபாயஞ்செய்து சிவன் ஸங்கடத்தினின்று விடுவிக்கப்பட்டான். ஷாட்குண்ய பூர்ணனாகிய பரமபுருஷன் ஸங்கடத்தினின்றும் விடுபட்டிருக்கின்ற ருத்ரனைக் கிட்டி இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ தேவனே! மஹா தேவனே! பாபிஷ்டனாகிய இவ்வஸுரன் தன் பாபத்தினால் தானே மாண்டுபோனான். ஈசனே! பெரியோர்களிடத்தில் அபராதஞ் செய்தவன் எவன்தான் க்ஷேமப்படுவான்? அப்படியிருக்க, ஜகத்திற்கெல்லாம் ஈஸ்வரனும் ஜகத்குருவுமாகிய (ஜகத்திற்கு ஹிதஞ் செய்பவனுமாகிய) உன்னிடத்தில் அபராதஞ் செய்தவன் க்ஷேமப்படமாட்டானென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத அளவற்ற ஆச்சர்யமான பல சக்திகளுக்கு ஸமுத்ரம்போன்றவனும் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனும் அந்த ப்ரக்ருதி புருஷர்களின் உள்ளே புகுந்து நியமித்துக்கொண்டிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதவனும் உலகங்களுக்கெல்லாம் தாரகனும் தன்னைப் பற்றினாருடைய வருத்தங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பகவான் ருத்ரனைப் பெரிய ஸங்கடத்தினின்று விடுவித்த இந்த வ்ருத்தாந்தத்தை எவன் சொல்லுகிறானோ, எவன் கேட்கிறானோ, அவ்விருவரும் ஸாம்ஸாரிக துக்கங்களினின்றும் சத்ருக்களிடத்தினின்றும் விடுபட்டு ஸுகப்படுவார்கள். எண்பத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களில் விஷ்ணுவே பரனென்று அறுதியிடுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவனே! ரிஷிகள் ஸரஸ்வதிநதிக்கரையில் ஸத்ரயாகம் நடத்த உட்கார்ந்தார்கள். ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களாகிய

மூன்று தேவர்களுக்குள் எவன் பெரியவனென்று அவர்களுக்குள் விவாதம் உண்டாயிற்று. மன்னவனே! அவர்கள் அதை நிச்சயிக்க விரும்பி ப்ராஹ்மாவின் புதல்வராகிய ப்ருகுமஹர்ஷியை அதைத் தெரிந்துகொண்டு வரும்படி அனுப்பினார்கள். அவர் ப்ரஹ்மதேவனுடைய ஸபைக்குச் சென்றார். அம்முனிவர் ப்ரஹ்மதேவனுடைய ஸத்வகுணத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு அத்தேவனை ஸ்தோத்ரஞ் செய்யாமல் வெறுமனே இருந்தார். தன்னொளியினால் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற மஹானுபாவனாகிய அந்த ப்ரஹ்மதேவன் அங்ஙனம் ஸ்தோத்ரஞ் செய்யாதிருந்ததற்கு அம்முனிவர்மேல் கோபித்துக் கொண்டான். அவ்வயன் ஸமர்த்தனாகையால் அக்னியை அதன் கார்யமான ஜலத்தினால் அணைப்பதுபோலத் தன் புதல்வராகிய ப்ருகுமுனிவர் விஷயமாகத் தன்மனத்தில் உண்டான கோபத்தைத் தன்விவேக புத்தியினால் அடக்கிக் கொண்டான். அப்பால் அம்முனிவர் சிவனுடைய ஸத்வ குணத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டுக் கைலாஸ பர்வதத்திற்குப் போனார். மஹேஶ்வரனாகிய அந்த ருத்ரதேவன் ஸந்தோஷத்துடன் எழுந்து ப்ராதாவான அம்முனிவரை அணைத்துக்கொள்ள ஆரம்பித்தான்; அம்முனிவர் 'நீ வழிதப்பித் தப்புவழியில் நடப்பவன். நீ என்னைத் தீண்டலாகாது' என்று மொழிந்து அவன் தன்னை அணைப்பதற்கு இசையாதிருந்தார். அவ்வுருத்திரன் கோபித்து நெருப்பெரிகின்ற தீக்ஷ்ணமான கண்களுடையவனாகிச் சூலத்தை ஏந்திக்கொண்டு அந்த ப்ருகுமுனிவரை வதிக்கத் தொடங்கினான். பார்வதீதேவி அவனுடைய பாதங்களில் விழுந்து வேண்டாமென்று நல்வார்த்தைகள்

சொல்லி ஸமாதானப்படுத்தினுள். அனந்தரம் அம் முனிவர் எங்கு ஜனார்த்தனன் வாஸஞ் செய்கிருனே அத்தகையதான வைகுண்டலோகத்திற்குச் சென்று ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் மடியில் சயனித்துக் கொண்டிருக் கிற அப்பகவானை மார்பில் காலால் உதைத்தார். ஸத் புருஷர்களுக்குக் கதியாகிய அந்தப் பகவான் உடனே ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் படுக்கையினின்றும் எழுந்து இறங்கிச் சீக்ரமாக அம்முனிவரைச் சிரத்தினல் நமஸ் காரஞ் செய்தான். மற்றும், அப்பகவான் அம்முனி வரைப் பார்த்து மேல் வருமாறு கூறினன்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறன்:—அந்தணரே! உமக்கு நல்வரவா? இந்த ஆஸனத்தில் க்ஷணகாலம் வீற்றிருப் பீராக. ப்ரபூ! நீர் வந்ததை அறியாதிருந்த எங்க ளுடைய அபராதத்தைப் பொறுத்தருளவேண்டும். மஹானுபாவரே! கங்காதி புண்ய தீர்த்தங்களுக்கும் தூய்மையை விளைக்கவல்ல உமது ஸ்ரீபாததீர்த்தத்தி ஞல் என்னையும் என்னுடைய லோகத்தையும் என் னிடத்தில் நிலைநின்ற மனமுடைய லோகபாலர்களையும் புனிதஞ் செய்வீராக. மஹானுபாவரே! இப்பொழுது நான் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு என்றும் மாருத இடமாயி னேன். உம்முடைய பாதம் படுதலால் பாபங்களெல் லாம் தீரப்பெற்ற என்னுடைய மார்பில் ஸ்ரீமஹா லக்ஷ்மி என்றும் தவருது வஸித்திருப்பாள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீ வைகுண்ட நாதனு கிய பகவான் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் ப்ருகு முனிவர் அப்பரமனுடைய கம்பீரமான உரையி னல் ஸந்தோஷத்தையும் த்ருப்தியையும் அடைந்து பக்தியின் மிகுதியால் கண்களில் நீர் தளும்பப் பெற்று

வெறுமனே இருந்தார். ராஜனே! அம்முனிவர் மீண்டு ஸத்ரயாகம் நடக்கிற ஸரஸ்வதிநதிக்கரைக்கு வந்து தான் ஆங்காங்குச் சென்று அனுபவித்ததை யெல்லாம் ப்ராஹ்மவாதிகளான (வேதங்களை ஓதி உணர்ந்து அதன் பொருளைப் பிறர்க்கு உபதேசிக்க வல்லவர்களான) முனிவர்களுக்கு வர்ணித்தார். அப்பால் அம்முனிவர்களும் அதைக் கேட்டு வியப்புற்று ஸம்சயம் தீர்ந்து, எவனிடத்தில் சாந்தி குடிகொண்டிருக்கின்றதோ, எவனை உபாஸிப்பவர்களுக்குச் சாந்தி விளையுமோ, முக்தியும் கைகூடுமோ, அத்தகைய ஞன ஸ்ரீமஹாவிஷ்ணுவையே எல்லோரிலும் மேற்பட்டவனென்று நிச்சயித்தார்கள். ப்ராஹ்மணர்களுக்கு நன்மை செய்கையாகிற தர்மமும் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கு மறிவும் சாந்தி முதலியவற்றோடு கூடின வைராக்யமும் அணிமை முதலாக எட்டுவகைப்பட்ட ஐஶ்வர்யமும் தன்னைப் பணியும் ஆத்மாக்களுடைய பாபங்களைப் போக்கும் புகழும் எவனிடத்தில் நிலைநின்றிருக்கின்றனவோ, இவையெல்லாம் ஆத்மாக்களுக்கு எவனிடத்தினின்று விளையுமோ, அத்தகைய மஹாவிஷ்ணுவையே அவர்கள் ஸர்வஸ்மாத் பரனென்று நிச்சயித்தார்கள். ப்ராணிகளுக்கு த்ரோஹஞ் செய்கை தவிர்ந்து இந்த்ரியங்களை அடக்கி எல்லாம் பரப்ராஹ்மமேயென்னும் புத்தியுடையவராகையால் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்ப்பவர்களும் பரமபுருஷனுடைய முகமலர்த்தியைத் தவிர மற்றொரு ப்ரயோஜனத்தை விரும்பாதவர்களும் பரோபகாரஞ் செய்பவர்களுமாகிய முனிவர்களுக்கு எவனைப் பரமகதியாகச் சொல்லுகிறார்களோ, அத்தகைய மஹாவிஷ்ணுவையே அவர்கள் ஸர்வஸ்மாத்பரனென்று.

நிச்சயித்தார்கள். ரஜஸ்தமஸ்ஸுக்கள் தீண்டப்பெறாத சுத்தஸத்வம் எவனுக்கு ப்ரியமான சரீரமோ; எவனுக்கு ப்ராஹ்மணர்கள் இஷ்டதேவதைகளோ; மற்றும், ப்ராஹ்மணர்கள் நிபுணபுத்தியர்களாகி இந்த்ரியங்களை வென்று மற்றொரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் எவனைப் பணிகின்றார்களோ; அத்தகைய மஹாவிஷ்ணுவை அவர்கள் ஸர்வஸ்மாத்பரனாக நிச்சயித்தார்கள். இத்தகையனும் இணையெதிரற்றவனுமாகிய அந்தப் பரமபுருஷனுடைய ஸத்வரஜஸ்தமோகுணமயமான மாயையினால் படைக்கப்பட்ட ராக்ஷஸர்கள் அஸுரர்கள் தேவர்கள் என்று மூன்றுவகைப்பட்ட பூதங்களும் அவனுடைய சரீரங்களே. (அவர்களில் தேவர்கள் ஸத்வகுணம் நிறைந்தவர். அஸுரர்கள் ரஜோகுணம்நிறைந்தவர். ராக்ஷஸர்கள் தமோகுணம் நிறைந்தவர். இவர்களெல்லோரும் பகவானுக்குச் சரீரங்களேயாயினும் ப்ரக்ருதிஸம்பந்தத்தினால் ஜ்ஞானம் மழுங்கினவராகையால் உபாஸிக்கத் தகுந்தவர்களல்லர்.) சுத்தஸத்வமயமான பகவானுடைய அஸாதாரணமான திவ்யமங்கல விக்ரஹமே உபாஸிக்கப்பட்டு ப்ரக்ருதி ஸம்பந்தத்தை முழுவதும் போக்கி ஆத்மாக்களுக்குச் சுத்தியைவிளைக்குந்திறமையுடையது. ஆகையால் அது தான் உபாஸிக்கத்தகுந்தது. ஸரஸ்வதிநதிக்கரையில் வஸிக்கும் ப்ராஹ்மணர்கள் ப்ராணிகளின் ஸம்சயம் தீரும்படி இங்ஙனம் நிச்சயித்து அப்பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களைப் பணிந்து முக்தியை அடைந்தார்கள்.

ஸூதர் சொல்லுகிறார்:—வ்யாஸமஹர்ஷியின் புதல்வராகிய சுகமஹர்ஷியின் முகமாகிற தாமரை மலரின் பரிமளமுடையதும் ஸம்ஸாரபயத்தைப் போக்குந்

தன்மையாதும் வெகுமதிக்கத் தகுந்தநுமாகிய பரமபுரு ஷனுடைய மேன்மையை வெளியிடுமிதிஹாஸமாகிற இந்த அம்ருதத்தை ஸம்ஸாரமாகிற பெருங்காட்டு வழியில் நடந்து களைகாணாது வருந்தும் புருஷன் காது களாகிற தொன்னைகளால் எப்பொழுதும் பானஞ்செய் வானாயின் அந்தக் காட்டு வழியில் திரிந்தலையும் ஶ்ரமத் தைத் துறந்து முக்தியைப் பெறுவான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—பரதவம்சாலங்காரனே! ஒருகால் த்வாரகாபுரியில் ஒரு ப்ராஹ்மணபத்னி யின் குழந்தை பிறந்தமாத்ரத்தில் பூமியை ஸ்பர் சித்தவுடனே மரணம் அடைந்தது. அந்த ப்ராஹ் மணன மரணம் அடைந்த அந்தக் குழந்தையை எடுத் துக்கொண்டு ராஜக்ருஹத்தின் வாசலில் விரைந்து சென்று மனவருத்தத்துடன் குழந்தையை வைத்துப் புலம்பிக்கொண்டே இங்ஙனம் மொழிந்தான்.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—ப்ராஹ்மண த்வே ஷியும் கெடுமதியனும் பேராசையுற்றவனும் இந்த்ரியங் களை வெல்லுந்திறமையற்றவனும் க்ஷத்ரியாதமனுமாகிய ராஜனுடைய தோஷத்தினால் என்குழந்தை மரணம் அடைந்தது. (என்னிடத்தில் ஒரு தோஷமும் இல்லை). பிறர்க்கு ஹிம்ஸை செய்வதையே விளையாட்டாக வுடை யவனும் கெடுநடத்தையுடையவனும் இந்த்ரியங்களை வெல்ல முடியாதவனுமாகிய மன்னவனைப் பணியும் ப்ர ஜைகள் வருந்துவார்கள்; என்றும் வருந்தி ஏழைகளு மாவார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனமே அந்த ப்ராஹ் மணஶ்ரேஷ்டன் பிறந்தவுடனே மரணம் அடைந்த இரண்டாங் குழந்தையையும் மூன்றுங் குழந்தையையும் ராஜ க்ருஹத்தின் வாசலில் கொண்டுவந்து வைத்துக்

கீழ்ச்சொன்னபடியே புலம்பினான். (இங்ஙனமே எட்டுத் தடவைகள் நடத்தினான்). ஒருகால் ஸ்ரீக்ருஷ்ணனிடம் சென்ற அர்ஜுனன் ஒன்பதாவது குழந்தையும் அங்ஙனமே பிறந்தவுடன் மரணம் அடையப்பெற்ற அவ்வந்தணன் வந்து புலம்பின அப்புலம்பலைக் கேட்டு அந்தணனைக் குறித்து அர்ஜுனன் மொழிந்தான்.

அர்ஜுனன் சொல்லுகிறான்:—ஓ ப்ராஹ்மணனே! உன்னுடைய வாஸஸ்தானமாகிய இப்பட்டணத்தில் வில்லைத் தரிக்கும் க்ஷத்ரியன் ஒருவனும் இல்லையாயென்ன? (ஒரு க்ஷத்ரியாதமனுங்கூட இல்லையா?) இங்குள்ளவர்களோவென்றால் ஸத்ரயாகஞ் செய்யும் ப்ராஹ்மணர்களைப்போலப் பணம் முதலியவற்றைச் சேர்த்துக்கொண்டு ஸுகமாயிருக்கிறார்கள். எவர்கள் ஜீவித்துக்கொண்டிருக்கையில் ப்ராஹ்மணர்கள் பணம் மனைவி மகன் முதலியவற்றைப் பறிகொடுத்து இங்ஙனம் வருந்துகிறார்களோ, அவர்கள் க்ஷத்ரியவேஷம் பூண்ட நட்டுவர்கள் போன்று கேவலம் தங்கள்ப்ராணன்களைப் பாதுகாத்துக்கொள்கை மாத்ரத்திலேயே மனவூக்கமுற்று ஜீவிக்கிறார்கள். (அவர்கள் ஜீவச்சவம்போன்றவர்களே). மஹானுபாவனே! வருத்த முற்றிருக்கின்ற ப்ராஹ்மண தம்பதிகளாகிய உங்களுக்கு இனிமேல் பிறக்கிற ப்ரஜையை நான் இங்கேயே இருந்து காத்துக்கொடுக்கிறேன். நான் இந்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றாது போவேனாயின், அப்பொழுது அக்னிப்ரவேசஞ் செய்து ப்ராஹ்மணனுடைய புலம்பலைக்கேட்ட பாபத்தினின்றும் பொய் சொன்ன பாபத்தினின்றும் விடுபடுகிறேன்.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—பலராமன் ஸ்ரீக்ருஷ்ணன் வில்லாளிகளில் சிறந்த ப்ரத்யும்னன் இணையெதிரில்லாத அநிருத்தன் ஆகிய இவர்களெல்லோரும்

ஜையைப் பாதுகாத்துக் கொடுக்க வல்லமை யற்றிருக்கின்றார்களோ; அப்படிப்பட்ட என் ப்ரஜையை நீ எப்படி காக்கப்போகின்றனை. ஜகதீஸ்வரர்களான ஸ்ரீக்ருஷ்ணாதிகளாலும் செய்யமுடியாத கார்யத்தை நீ எங்ஙனம் செய்ய வல்லனாவாய்? நீ மூடத்தனத்தினால் செய்ய விரும்புகின்றனையன்றி வேறில்லை. ஆகையால் உன் வார்த்தையை நாங்கள் நம்பமாட்டோம்.

அர்ஜுனன் சொல்லுகிறான்:—ப்ராஹ்மணனே! நான் பலராமனல்லேன்; அவன் தமையனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுமல்லேன்; அவன் பிள்ளையாகிய ப்ரத்யும்னனுமல்லேன். பின்னை யாரென்றால், நான் அர்ஜுனனென்று ப்ரஸித்திபெற்றவன். என்னுடைய தனுஸ்ஸு காண்டீவமென்று எங்கும் புகழ் பெற்றது. ப்ராஹ்மணனே! என்னுடைய வீர்யத்தை அவமதிக்க வேண்டாம். நான் என்னுடைய வீர்யத்தினால் முக்கண்ணனாகிய ருத்ரனையுங்கூட ஸந்தோஷப் படுத்தினேன். ப்ரபூ! நான் யுத்தத்தில் ம்ருத்யுவையும் ஜயித்து உன் ப்ரஜையைக் கொண்டு வருகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— சத்ருக்களைத் தபிக்கச் செய்பவனே! அவ்வந்தணன் இங்ஙனம் அர்ஜுனனால் நம்பிக்கை உண்டாகும்படி ஸமாதானம் சொல்லப்பெற்று அர்ஜுனனுடைய வீர்யத்தைக் கேட்டு மனக்களிப்புற்றுத் தன்க்ருஹத்திற்குப் போனான். அவ்வந்தணர்தலைவன் தன் பார்யைக்கு ப்ரஸவகாலம் ஸமீபித்திருக்கையில் ஆதுரத்துடன் அர்ஜுனனிடம் வந்து 'என்ப்ரஜையை ம்ருத்யுவினிடத்தினின்றும் காப்பாய் காப்பாய்' என்று முறையிட்டான். அவ்வர்ஜுனன் பரிசுத்தமான ஜலத்தை எடுத்து ஆசமனஞ் செய்து மஹேஸ்வரனை நமஸ்கரித்து திவ்யாஸ்த்ரங்களை ஸ்ம

ரித்து நாணுடன் கூடிய காண்டீவமென்னும் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு சென்று பலவகை அஸ்த்ரங்கள் சேர்க்கப்பெற்ற பாணங்களால் ஸூதிகாக்ருஹம் முழுவதையும் தைத்தனன். கீழும் மேலும் குறுக்கும் ஆக முழுவதும் * சரக்கூடு கட்டினான். அனந்தரம் ப்ராஹ்மண பத்னிக்குக் குமரன் பிறந்து உடனே மரணம் அடைந்து கண்ணுக்குப் புலப்படாமல் ஆகாயமார்க்கமாய்ச் சென்று மறைந்தான். அப்பொழுது அந்தணன் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய ஸந்நிதானத்தில் அர்ஜுனனைக் குறித்து அவனைப் பழித்துக்கொண்டே 'ஆ! என்னுடைய மூடத்தனத்தைப் பாருங்கள். ஆண்மையில்லாத நபும்ஸகன் பிதற்றின பிதற்றலை நான் நம்பினேனே! ப்ரத்யும்னனாவது அநிருத்தனாவது பலராமனாவது ஸ்ரீக்ருஷ்ணனாவது எதைக் காக்கவல்லரல்லரோ, அத்தகைய வஸ்துவை மற்ற எவன்தான் காக்கவல்லவனாவான்? ஆகையால் இங்ஙனம் பொய்சொல்லின அர்ஜுனனைச் சுடவேண்டும். தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளுந் தன்மையனாகிய அர்ஜுனனுடைய தனுஸ்ஸையும் சுடவேண்டும். இவ்வர்ஜுனன் துர்ப்புத்தியனாகித் தெய்வம் லோகாந்தரத்திற்குக் கொண்டுபோனதை மூடத்தனத்தினால் திருப்பிக்கொண்டு வர விரும்புகிறான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ப்ராஹ்மணரிஷி இங்ஙனம் சபித்துக்கொண்டிருக்கையில் அவ்வர்ஜுனன் ஸமஸ்தலோகங்களிலும் ஸஞ்சரிக்குந்திறமையை விளைக்கவல்ல யோகவித்யையைக் கைப்பற்றி, மஹானுபாவனாகிய யமன் எவ்விடத்தில் வாஸஞ்செய்கிறானோ அத்தகையதாகிய ஸம்யமனியென்கிற யமபுரிக்குச் சென்றான்.

---

* சரம்—பாணம்.

அவன் அங்கு ப்ராஹ்மணகுமாரனைக் காணாமல் அவ்விடத்தினின்று இந்த்ரனுடைய பட்டணத்திற்குச் சென்று அங்கும் காணாமல் அக்னி நிருதி யமன் வாயு வருணன் இவர்களுடைய பட்டணங்களுக்குச் சென்றும் அவ்விடங்களிலும் காணாமல் பின்பு பாதாளம் ஸ்வர்க்கத்திற்கு மேலுள்ள லோகம் மற்றுமுள்ள லோகங்கள் ஆகிய எல்லா இடங்களுக்கும் சென்று வில்லும் கையுமாய்த் திரிந்தும் எங்கும் ப்ராஹ்மண குமாரன் அகப்படாமையால் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற முடியாமல் அக்னி ப்ரவேசஞ் செய்ய விரும்புகையில் ஸ்ரீக்ருஷ்ணன் அவனைத் தடுத்து மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—அர்ஜுனா! உனக்கு நான் ப்ராஹ்மணகுமாரர்களைக் காட்டுகிறேன். உன்னை நீ அவமதித்துக்கொள்ளவேண்டாம். இதனால் மனுஷ்யர்கள் நிர்மலமான உன்புகழை நிலைநிறுத்துவார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹேஸ்வரனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் மொழிந்து அவ்வர்ஜுனனுடன் திவ்யமான குதிரைகள் பூட்டப்பெற்ற ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு மேற்கு திசையில் நுழைந்தான். அம்மஹானுபாவன் எவ்வேழுமலைகள் அமைந்த ஏழு த்வீபங்களையும் ஏழு ஸமுத்ரங்களையும் லோகாலோகபர்வதத்தையும் கடந்து பெரிய அந்தகாரத்தில் நுழைந்தான். பரதஸ்ரேஷ்டனே! சைப்யம் ஸுக்ரீவம் மேகபுஷ்பம் வலாஹகமென்னும் பெயர்கள் பூண்ட அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய குதிரைகள் அவ்வந்தகாரத்தில் போகமுடியாமல் நடை தடைபடப்பெற்று நின்றன. மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் குதிரைகள் அங்ஙனம் நடக்கமுடியாமல்

தடைபட்டிருப்பதைக் கண்டு மஹாயோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வராஜ்ஞையால் ஆயிரம் இரவிகள் உதித்தாற் போலிருக்கின்ற தன் சக்ராயுதத்தை முன்னே போகும்படி அனுப்பினான். * மனோஜவமுடைய அந்த ஸுதர்சனசக்ரம் நுழைய முடியாததும் மிகவும் பயங்கரமாயிருப்பதும் அளவற்றதும் பகவானால் படைக்கப்பட்டதுமாகிய அவ்வந்தகாரத்தை மிகவும் அளவற்றதாகிய தன் தேஜஸ்ஸினால் பிளந்து ராமனது நாணினின்று நழுவின பாணம் ராவணஸேனையைப் பிளந்துகொண்டு செல்வதுபோல் சென்றது. அர்ஜுனன் அவ்விருட்டுக்கு தூரத்திலிருப்பதும் பகவானுடைய அளவற்ற ஒளியை அடைந்திருப்பதுமாகிய அந்த ஸுதர்சனசக்ரத்தை அதன்பின்னே ஏற்பட்ட த்வாரத்தினால் கண்டு அதன் தேஜஸ்ஸினால் கண்கள் அடிபடப்பெற்று இரண்டு கண்களையும் மூடிக்கொண்டான். அனந்தரம் அவ்வந்தகாரத்திற்கப்பால் பெருங்காற்றினால் கிளம்புகிற மிகப் பெரிய அலைகளால் பயங்கரமாயிருக்கின்ற ஜலப்ரவாஹத்தில் நுழைந்து அதன்கீழ் மிகுந்த ஒளியுடையதும் சிறந்ததும் திகழ்கின்ற ரத்னமயமான ஆயிரம் ஸ்தம்பங்கள் அமைந்ததும் அற்புதமுமாகிய ஒரு க்ருஹத்தைக் கண்டான். அங்கு மிகவும் பயங்கரனும் ஆச்சர்யத்தை விளைப்பவனும் ஆயிரம் பணங்களுடையவனும் அப்பணங்களிலுள்ள மஹாரத்னங்களின் காந்திகளால் திகழ்கின்றவனும் தீக்ஷ்ணமான இரண்டாயிரங் கண்களுடையவனும் பெரிய வெள்ளிமலை போன்றவனும் கறுத்த கழுத்தும் நாக்குகளுமுடையவனுமாகிய அனந்தனென்னும் பெயருடைய ஆதிசேஷனைக் கண்டான். அவ்வாதிசேஷனுடைய சரீரத்தின்மேல் ஸுகமாக வீற்

* மனோவேகம்.

திருப்பவனும் மஹானுபாவனும் புருஷர்களில் சிறந்த ப்ரஹ்மாதிகளைக் காட்டிலும் சிறந்தவனும் நீர்நிறைந்த மேகத்தோடொத்த ஒளியுடையவனும் அழகிய பீதாம்பரம் உடுத்தவனும் தெளிந்த முகமும் அழகிய நீண்ட கண்களுமுடையவனும் மிகவும் சிறப்புடைய ரத்னங்களின் திரைகள் நிறைந்த கிரீடம் குண்டலம் இவற்றின் ஒளிகள் நிரம்பி முழுவதும் விளங்குகின்ற அளவற்ற குந்தலங்களுடையவனும் திரண்டுருண்டு நீண்டழகிய எட்டுப் புஜங்களுடையவனும் அழகிய கௌஸ்துபமணி அணிந்தவனும் ஸ்ரீவத்ஸமென்னுந் திருமறுவுடையவனும் வனமாலையால் அலங்கரிக்கப்பட்டவனும் ஸுநந்தன் நந்தன் முதலிய பாரிஷதர்களும் விக்ரஹங்களையுடைய சக்ரம் முதலிய தன் ஆயுதங்களும் மூர்த்திகளையுடைய புஷ்டி ஸ்ரீ கீர்த்தி அஜை என்னும் சக்திகளும் அங்ஙனமே மூர்த்திகரித்த அணிமை முதலிய ஸமஸ்த விபூதிகளும் பணியப்பெற்று ப்ரஹ்மாதிகளுக்கு ப்ரபுவுமாகிய பரம புருஷனைக் கண்டனன். பிறவிமுதலிய ஹேயகுணங்கள் தீண்டப்பெறாதவனும் தன்னைக் காட்டிலும் வேறுபடாதவனுமாகிய அப்பரமபுருஷனை ஸ்ரீக்ருஷ்ணன் வந்தனஞ் செய்தான். அங்ஙனமே அர்ஜுனனும் அப்பரம புருஷனைக் கண்டமாத்ரத்தில் பய பக்திகள் உண்டாகப் பெற்று அவனை வணங்கினான். மேன்மையுடையவர்களான ப்ரஹ்மாதிகளுக்கும் ப்ரபுவான அப்பரமன் கைகுவித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீ க்ருஷ்ணனையும் அர்ஜுனனையும் பார்த்துக் கம்பீரமான உரையுடன் மொழிந்தான்.

பரம புருஷன் சொல்லுகிறான்:—நான் உங்களைப் பார்க்க விரும்பி ப்ராஹ்மண குமாரர்களை இவ்விடம் கொண்டு வந்தேன். நீங்கள் தர்மத்தைக் காக்கும்

பொருட்டுப் பூமியில் என்னுடைய அம்சமாய் அவதரித்தவர்கள்; பூமிக்குப் பாரமாயிருக்கின்ற அஸுரர்களை வதித்து மீளவும் சீக்ரத்தில் என்னிடம் வந்து சேருவீர்களாக. நீங்கள் கல்யாணகுணங்களெல்லாம் அமைந்து சிறந்தவர்களாகையால் பூர்ண காமர்களாயினும் முன்பு நரநாராயணர்களென்னும் பெயருடைய இரண்டு ரிஷிகளாகி ஜகத்ரக்ஷணத்தின்பொருட்டு உலகங்களையெல்லாம் தர்மத்தில் மூட்ட முயன்று தர்மத்தை ஆசரித்தீர்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனர்கள் பரமபதவாஸியான பரம புருஷனால் இங்ஙனம் கட்டளை இடப்பெற்று அப்படியே யென்று அங்கீகாரஞ் செய்து அளவற்ற மஹிமையுடைய அவனை நமஸ்கரித்து ப்ராஹ்மண குமாரர்களை எடுத்துக்கொண்டு மனக்களிப்புற்றுப் போனவழியே திரும்பித் தங்களிருப்பிடம் வந்து ப்ரபுக்களாகிய அந்த க்ருஷ்ணார்ஜுனர்கள் முன்போலவேயிருக்கின்ற குழந்தைகளை அந்தணனுக்குக் கொடுத்தார்கள். அர்ஜுனன் விஷ்ணுவின் ஸ்தானத்தைக் கண்டு மிகவும் வியப்புற்று உலகில் புருஷர்களுக்குப் பௌருஷமென்பது ஏதேதுண்டோ, அதெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய க்ருபையால் கிடைத்ததே யென்று நினைத்தான். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் தெய்வமானுஷச் செயல்களைக் கடந்த அனேகமாயிரம் ஆச்சர்ய சரித்ரங்களை நடத்திக்கொண்டு கர்மவஶ்யர்களைப்போல் க்ராம்ய போகங்களை அனுபவித்தான்; எல்லா விதத்திலும் மிகச் சிறப்புடைய யாகங்களாலும் ஆராதித்தான். இந்த்ரன் மழைக்காலத்தில் தவறாமல் மழை பெய்வதுபோல, மேன்மையுடைய பகவான் ப்ராஹ்மணர் முதலிய ஸமஸ்த ப்ரஜைகளுக்கும் அவரவர் விரும்பும்

விருப்பங்களை யெல்லாம் கறந்தான். அப்பரமன் அதர் மிஷ்டர்களான சில ராஜர்களைத் தான் நேரில் வதித்தும் சிலரை அர்ஜுநாதிகளைக் கொண்டு வதிப்பித்தும் யுதிஷ்டிராதிகளைக்கொண்டு ருஜுவான மார்க்கத்தினால் அநாயாஸமாகவே வர்ணாஶ்ரமாதிகளுக்குரிய தர்மத்தை நடத்தினான். எண்பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் தன் பத்னிகளோடு க்ரீடித்த விதமும், அவர்களுக்கு அவனிடத்திலுள்ள ப்ரேமாதிசயமும், அவனுடைய புத்ர பௌத்ராதி ஸந்ததியும், இந்த ஸ்கந்தத்தின் ஶ்ரவணாதி பலமும் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வல்லபனான அந்த ஸ்ரீ க்ருஷ்ண பகவான் ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்து மேன்மையுடைய வ்ருஷ்ணிகளால் சூழப்பெற்றதும் சிறந்த அலங்காரங்களை அணிந்து புதிய யௌவனவயதினால் மிகுந்த ஒளியுடையவர்களும் உப்பரிகைகளில் பந்து முதலியவற்றைக் கொண்டு விளையாடலுற்று மின்னல்கள்போல் விளங்குபவர்களுமாகிய பெண்மணிகள் மனக்களிப்புடன் வாஸஞ் செய்யப் பெற்றதும் மதஜலத்தைப் பெருக்குகின்ற யானைகளாலும் நன்கு அலங்கரித்துக் கொண்டிருக்கிற போர் வீரர்களாலும் ஸ்வர்ணாலங்காரஞ் செய்யப்பெற்று விளங்குகின்ற குதிரைகளாலும் அத்தகைய தேர்களாலும் என்றும் நிரம்பின ராஜமார்க்கங்களையுடையதும் உத்யானங்கள் உபவனங்கள் இவை நிறைந்திருப்பதும் புஷ்பித்திருக்கின்ற வ்ருக்ஷங்களின் வரிசைகளில் நுழைந்து மதுபானஞ்செய்து களித்திருக்கின்ற வண்டுகளின் ஸமூஹங்களால் முழுவதும் த்வனி உண்டாயிருக்கப்

பெற்றதுமாகிய த்வாரகையென்னும் தன் பட்டணத்தில் பதினாறுயிரம் பத்னிகளுக்கும் தானொருவனே வல்லபனாகி அத்தனை அற்புத உருவங்களை ஏற்றுக்கொண்டு * போக்ய போகோபகரணாதி ஸம்ருத்திகளெல்லாம் நிறைந்திருப்பவைகளும் மலர்ந்த நெய்தல் செங்கழுநீர் ஆம்பல் தாமரை ஆகிய இப்புஷ்பங்களின் தாட்கள் படிந்து வாஸனையமைந்த நிர்மலமான ஜலமுடையவைகளும் பக்ஷிகள் இனமினமாய்க் கூவப்பெற்றவைகளுமாகிய அப்பெண்மணிகளின் க்ருஹங்களில் விளையாடிக்கொண்டிருந்தான். அளவற்ற வைபவமுடைய அப்பரமன் மடந்தையர்கள் ஆலிங்கனம் செய்யவும் அவர்களது கொங்கையின் குங்குமக்குழம்பு தன்னங்கமெல்லாம் படியவும் பெற்று அவர்களுடன் தாமரைமடுக்களில் இழிந்து ம்ருதங்கம் பணவம் ஆனகம் வீணை முதலிய வாத்யங்களை வாசிக்கிற கந்தர்வர்களாலும் ஸூத மாகதவந்திகளாலும் பாடப்பெற்று விளையாடினான். தன்னை அடைந்தவர்களைக் கைவிடாது காக்குந்தன்மையுள்ள அம்மஹானுபாவன், அம்மடந்தையர்மணிகள் சிரித்துக்கொண்டு ஜலமிறைக்கும் பாத்ரங்களால் ஜலத்தை எடுத்திறைக்கத் தானும் அவர்கள்மேல் ஜலத்தை எடுத்திறைத்துக்கொண்டு யக்ஷராஜன் யக்ஷஸ்த்ரீகளோடு விளையாடுவதுபோல் அவர்களோடு விளையாடினான். வஸ்த்ரங்கள் நனைந்து ஸ்தனப்ரதேசங்கள் வெளித்தோன்றவும் பெரிய தலைச்சொருக்கினின்று புஷ்பங்கள் உதிரவும் பெற்ற அம்மாதரசிகள் தங்காதலன் தங்கள்மேல் ஜலம் இறைப்பதைப்

---

* போக்யஸம்ருத்தி - அனுபவிக்கத்தகுந்த வஸ்துக்களின் ஸம்ருத்தி. போகோபகரணஸம்ருத்தி - போகத்திற்கு வேண்டிய கருவிகளின் ஸம்ருத்தி.

பரிஹரிக்கவேண்டுமென்னும் எண்ணத்தினால் அவனை யே ஆலிங்கனஞ்செய்து அதனால் விளைந்த மன்மத விகாரத்தினால் திகழ்கின்ற அழகிய முகமுடையவர்க ளாகி விளங்கினார்கள். ஸ்ரீக்ருஷ்ணனோவென்றால் தான் அணிந்த பூமாலையில் அப்பெண்மணிகளுடைய கொங் கைமேலுள்ள குங்குமக்குழம்பு படியவும் விளையாட்டி லுள்ள மனவூக்கத்தின் மிகுதியால் தலைமயிர்முடி அவிழ்ந்தலையும் தான் அடிக்கடி அப்பெண்மணிகளின் மேல் ஜலத்தை வாரி இறைத்துக்கொண்டு அவர்கள் தன்மேல் ஜலம் இறைக்கவும் பெற்று யானைப் பேடுக ளால் சூழப்பட்ட தலைமையுள்ள ஆண்யானைபோல் விளங்கினான். ஸ்ரீக்ருஷ்ணன் பாட்டுக்களாலும் வாத் யங்களாலும் பிழைக்குந் தன்மையுள்ள நடர்களுக்கும் நர்த்தர்களுக்கும் மனக்களிப்புடன் அணியத் தகுந்த ஆபரணங்களையும் ஆடைகளையும் கொடுத்தான். அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பத்னிகளும் அங்ஙனமே ஆடை யாபரணங்களைக் கொடுத்தார்கள். இங்ஙனம் விளை யாடிக் கொண்டிருக்கிற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய நடை உரை பார்வை புன்னகை விளையாட்டு பரிஹாஸம் ஆலிங்கனம் இவைகளால் அம் மடந்தையர்களின் மதிகள் பறியுண்டன. ஆகையால் போகமோக்ஷங் களைக் கொடுக்குந்திறமையுள்ள ஸ்ரீக்ருஷ்ணனொருவ னிடத்திலேயே நிலைநின்ற மதியுடைய அம்மடந்தையர் மணிகள் அவன் இல்லாதபொழுது தாமரைக் கண்ண னாகிய அம் மஹானுபாவனைச் சிந்தித்துக்கொண்டு க்ஷணகாலம் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்து அதன்பிறகு பலவாக்யங்களை மொழிந்தார்கள். அவற் றைச் சொல்லுகிறேன். என்னிடத்தினின்று அவை களைக் கேட்பாயாக.

ஸ்ரீக்ருஷ்ண மஹிஷிகள் சொல்லுகிருர்கள்:— அவர்களில் ஒருத்தி சொல்லுகிருள்:— குரரப்பறவையின் பேடையே! இவ்வுலகில் ராத்ரியில் ஜகதீஸ்வரனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் வெளிவிஷயங்களைப்பற்றின அறிவுகளெவையுமின்றிச் சயனித்துக்கொண்டிருக்கிருன். நீயோவென்றால் தூக்கமில்லாமல் புலம்புகின்றனை; சயனிக்காமலே யிருக்கின்றனை. (இப்படி ஸ்ரீக்ருஷ்ணனுடைய நித்ரைக்கு நீ பங்கஞ்செய்வது யுக்தமா? யுக்தமன்றே). ஆனுல், தோழி! நீயும் எங்களைப்போல் தாமரைக்கண்ணனை அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய புன்னகையோடு கூடின கம்பீரமான லீலாவலோகனத்தினுல் நன்கு மனம் பிளவுண்டனையா வென்ன?

மற்றொருத்தி சொல்லுகிருள்:—சக்ரவாகப்பறவையின் பேடையே! ராத்ரியில் உன்பந்துவாகிய காதலனைக் காணுமல் கண்களை மூடிக்கொண்டிருக்கின்றனையே என்ன? ஏன் மன இரக்கம் உண்டாகும்படி அடிக்கடி மிகவும் புலம்புகின்றனை? ஆ! இது என்ன கஷ்டம்! எங்களைப்போல் நீயும் ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தாஸ்யத்தை அடைந்து தலைச்சொருக்கினுல் அவன் சூடிக் களைந்த பூமாலையைத்தரிக்க விரும்புகின்றனையாஎன்ன?

மற்றொருத்தி சொல்லுகிருள்:—ஸமுத்ரமே! தூக்கம் பிடிக்காமல் கண் விழித்துக்கொண்டு ஸர்வகாலமும் ஓயாமல் உரக்க முறையிடுகின்றனையே. ஸ்ரீக்ருஷ்ணன்விஷயத்தில் எங்களைப்போல் நீயும் கடக்கமுடியாத அவஸ்தையை அடைந்தனையா என்ன? ஆ! என்ன கஷ்டம்! நாங்கள் கொங்கைமேல் அணிந்த குங்குமக்குழம்பு முதலிய அடையாளங்களெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸம்போகத்தினுல் பறியுண்டிருப்பது போல் நீயும் கௌஸ்துபம் முதலிய உன்னடையாளங்க

ளெல்லாம் ஸ்ரீ க்ருஷ்ணனால் பறியுண்டு புலப்படுகின்ற னையே!

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—சந்த்ரனே! நீ வலிவுள்ளதான க்ஷயரோகத்தினால் மிகவும் பீடிக்கப் பட்டு இளைத்திருக்கின்றனையாகையால் உன் கிரணங் களைக்கொண்டு அந்தகாரத்தைப் போக்க வல்லமையற் றிருக்கின்றனையே என்ன? நீயும் எங்களைப்போல் ஸ்ரீ க்ருஷ்ணன் மொழிந்த ரஹஸ்யவார்த்தைகளை நினைத் துக்கொண்டு அவனிடத்தில் ஆழ்ந்த மதியுடையவனா கிப் பேசமுடியாமல் வாய் தடைபட்டவனாக எங்களுக் குப் புலப்படுகின்றனை.

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—மலயமாருதமே! (தென்னலே!) உனக்கு நாங்கள் என்ன அப்ரியம் செய் தோம்? ஸ்ரீ க்ருஷ்ணனுடைய கடைக்கண்ணோக்கங்க ளால் மிகவும் பிளவுண்ட எங்கள் ஹ்ருதயத்தில் மன் மத வேதனையை விளைக்கின்றனையே. (நாங்கள் உனக்கு ஒருவித அனிஷ்டமும் செய்யாதிருக்கையில் மன்மத பாதையை விளைத்து எங்களை வருத்துவது உனக்குத் தகுதியன்று.)

ஒருத்தி காதலனைத் தேடுகின்ற மற்றொருத்தி யைப் பார்த்து அவளைப் புஷ்பங்களைத் தேடுவதுபோல் பாவித்துச் சொல்லுகிறாள்:—ஒன்றுமறியாத பேதை யே! என்ன த்யானஞ் செய்கின்றனை? எதிரில் மலரா முயன்றிருக்கிற இந்தக் குந்த புஷ்பத்தைப் பறித்துக் கொள்வாயாக. மற்றொருத்தி சொல்லுகிறாள்:—இந்த (மு என்னும் அக்ஷரமில்லாத வெறும்) குந்தத்தினால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? ஒருத்திசொல்லுகிறாள்: ஆனால் உனக்கு எத்தகைய புஷ்பங்கள் ப்ரியமானவை? மற்றொருத்தி சொல்லுகிறாள்:—ஶ்ருதிஶிரோவிஶேஷ

பூஷணமான புன்னாகத்தையன்றோ நான் தேடுகிறேன். பசுக்களுங்கூட இந்தப் புந்நாகத்தினுடைய வாஸனையின் மிகுதியைக் கண்டு அதற்கெதிர்முகமாக ஓடிச் சென்று தேடிக்கொண்டிருந்தனவல்லவா? (இவ்விஷயத்தில் அசேதனமான பசுக்களின் கதி இதுவானால் சேதனர்களின் கதியைச் சொல்லவேண்டுமோ?)

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—மேகமே! யாதவ ஶ்ரேஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நீ நண்பனாயிருக்கின்றனை. நிச்சயம். அதனால் நீ எங்களைப்போல் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலுள்ள ப்ரேமத்தினால் கட்டுண்டு அசையாமல் அவனை த்யானித்துக்கொண்டிருக்கிறாயா என்ன? எங்களைப்போன்றவன்போல் நீயும் பேராவலுற்று ஹ்ருதயத்தில் ஈரமுடையவனாகி நீர்த்தாரைகளைப் பெய்கின்றனை. (இது யுக்தமே). அவனிடத்தில் மனப்பற்று செய்தால் அது வருத்தத்தை விளைவிக்கும்.

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—அழகிய குரலுடைய குயிலே! இனிதாகப் பேசுந்தன்மையுள்ள ஸ்ரீக்ருஷ்ணனுடைய உரைகள்போன்ற உரைகளை உரைக்கின்றனை. மரணம் அடைந்தவர்களையும் நன்கு பிழைப்பிக்கவல்ல இக்குரலுடன் எனக்குச் சொல்வாயாக. நான் உனக்கு என்ன ப்ரியஞ் செய்யவேண்டும்?

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—இனத்தில் தலைமையுள்ள கிளியே! யாதவ ஶ்ரேஷ்டனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகான கதையைப் பாடுவாயாக. நாங்கள் உனக்குப் பாலால் அபிஷேகம் செய்கிறோம். நீ விரஹாக்னியால் தபிக்கப்பட்ட எங்கள் ஹ்ருதயத்தில் பூமங்கையின் கேள்வனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதையாகிற அம்ருதத்தை நன்கு பெய்வாயாக.

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—ஆழ்ந்த மதியுடைய பர்வதமே! நீ அசையாதிருக்கின்றனை; மற்றும், பேசாதிருக்கின்றனை. பின்னையோவென்றால் நீ ஏதோ ஒரு பெரிய பொருளைச் சிந்திக்கிறாப்போல் தோற்றுகிறது. நாங்கள் வஸுதேவகுமாரனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதத்தை ஸ்தனங்களால் தரிக்க விரும்புவதுபோல், நீயும் ஸ்தனங்கள்போன்ற கொடுமுடிகளால் அவனுடைய பாதத்தைத் தரிக்க விரும்புகின்றனையா என்ன? ஆ! என்ன கஷ்டம்?

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—ஸமுத்ர ராஜனுடைய பத்னிகளாகிய நதிகளே! நாங்கள் யதுபதியினுடைய அனுராகம் அமைந்த கடைக்கண்ணோக்கம் நேரப் பெறாமல் அதனால் மனம் பறியுண்டு உடம்பு மிகவும் இளைத்திருப்பதுபோல், நீங்களும் இப்பொழுது (க்ரீஷ்மருதுவில்) மடுக்களெல்லாம் உலர்ந்து தாமரை மலர்களின் சோபையும் அழிந்து அன்பிற்கிடமான கணவனாகிய ஸமுத்ரராஜனுடைய அனுராகம் அமைந்த கண்ணோக்கம் நேரப்பெறாமல் இளைத்திருக்கிறீர்களா என்ன? ஆ! என்ன வருத்தம்?

மற்றொருத்தி சொல்லுகிறாள்:—ஹம்ஸப்பறவையே! உனக்கு நல்வரவா? உட்காருவாயாக. பாலைப் பருகுவாயாக. ஓ ஹம்ஸமே! ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதையைச் சொல்லுவாயாக. உன்னை ஸ்ரீக்ருஷ்ணனுடைய தூதனென்று நாங்கள் எண்ணுகிறோம். ஒருவராலும் வெல்லமுடியாத மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் க்ஷேமமாயிருக்கிறானா? நட்பு நிலைநிற்கப்பெறாத அப்பரமன் எங்களுக்கு முன்பு ஏகாந்தத்தில் சொன்னதையெல்லாம் மறவாதிருக்கிறானா? ('அதையெல்லாம் நினைத்துத்தான் என்னை அனுப்பினான்' என்கி

ருயா?) க்ஷுத்ரதூதனே! (அற்பத்தன்மையுள்ள அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தூதனே!) எதுக்காக நாங்கள் அவனைப் பணியவேண்டும்? ('காமத்திற்காக உங்களை அவன் அழைக்கிறுன்' என்கிறுயா?) ஆனுல் அவனையே இங்கு வரவழைப்பாயாக. (அப்படியே ஆகட்டுமென்று போகத் தொடங்கின அவ்வன்னத்தைக் குறித்து மீளவும் சொல்லுகிருள்:—) எங்களெல்லோரையும் வஞ்சித்துத் தானொருத்தியேயாகக் கூடிக் களிக்கின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியைத் தவிர அவனைமாத்ரமே அழைப்பீர்களாக. ('அவள் அவனை விட்டு எப்பொழுதும் பிரியமாட்டாளே. அவளை எப்படி பரிஹரிக்க முடியும்' என்கிறுயா?) அவளொருத்திமாத்ரந்தான் அவனிடத்தில் நிலைநின்ற அன்புடையவளோ? நாங்களெல்லாரும் அத்தகையரல்லோமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—ஸ்ரீக்ருஷ்ணபத்னிகள் யோகீஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனுகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் இங்ஙனம் மனுேபாவத்தைச் செய்து அதனுல் வைஷ்ணவகதியான முக்தியைப் பெற்றுர்கள். பெரும்புகழுடையவனும் பெரியோர்களால் பாடப்பட்டவனுமாகிய அப்பரமபுருஷன் பல பாட்டுக்களால் பாடின மாத்ரத்திலும் எவ்விதத்திலாவது காதால் கேட்ட மாத்ரத்திலும் ஸ்த்ரீகளின் மனத்தைப் பலாத்காரமாகப் பறிக்குந்தன்மையன். அவன் தன்னை நேரே பார்க்கிற மடந்தையர்களின் மனத்தைப் பறிப்பானென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? எவர்கள் ஜகத்குருவான அந்த ஸ்ரீக்ருஷ்ணனைத் தங்கள் கணவனென்னும் புத்தியால் பாதஸம்வாஹனம் முதலியன செய்து ப்ரேமத்துடன் சுஶ்ரூஷித்தார்களோ; அத்தகைய மடந்தையர்களின் தவத்தை என்னென்று வர்ணிப்பேன்? ஸத்

புருஷர்களுக்குக் கதியும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனு
மாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் க்ருஹஸ்தாஸ்ரமமே தர்ம
அர்த்த காமங்களுக்கு விளைநிலமென்பதை நன்றாக
அறிவிக்கும்பொருட்டு வேதங்களில் விதிக்கப்பட்ட
வர்ணாஸ்ரம தர்மங்களைப் பரக்க அனுஷ்டித்துக் காட்
டினான். க்ருஹஸ்தாஸ்ரமத்தைக் குறைவற அனுஷ்
டித்துக் கொண்டிருக்கிற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குப்
பதினாறாயிரம் பத்னிகள் இருந்தார்கள். அப்பெண்
மணிகளுக்குள் ருக்மிணி முதலிய எட்டுப் பேர்கள்
முக்யமானவர்களென்று முன்னமே மொழிந்தேன்.
அவர்களெல்லோரும் பிள்ளையுடையவர்களே. (பிள்ளை
யில்லாதவள் ஒருத்தியும் இல்லை.). எங்கும் தடை
படாத ஸங்கல்பமுடைய அப்பரமபுருஷன் தன் பார்யை
கள் எத்தனைபேர்கள் உண்டோ, அவர்களுக்குள் ஒவ்
வொருத்தியிடத்திலும் பவ்வத்து பிள்ளைகளைப் பெற்
றான். அளவற்ற வீர்யமுடைய அப்பிள்ளைகளுக்குள்
பதினெட்டுப் பேர்கள் மஹாரதர்களும்பெரும்புகழர்
களுமாயிருந்தார்கள். அவர்களுடைய நாமங்களைச்
சொல்லுகிறேன், கேள். ப்ரத்யும்னன், அநிருத்தன்,
தீப்திமான், பானு, ஸாம்பன், மது, ப்ருஹத்பானு,
சித்ரபானு, வ்ருகன், அருணன், புஷ்கரன், தேவபா
ஹு, ஸ்ருததேவன், ஸுநந்தனன், சித்ரபாஹு, விரூ
பன், கவி, ந்யக்ரோதன் என்னுமிவர்கள் பதினெண்மர்.
த்ரிவக்ரையின் புதல்வன் உபக்ரோசனென்பவன். அவன்
ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து நாரதமஹர்ஷிக்குச் சிஷ்
யனாகிப் பகவானிடத்தில் மனம் மாறப்பெறாதிருக்கை
யாகிற வ்ரதத்தை ஓயாமல் அனுஷ்டித்து வந்தான்.
அவன் பஞ்சராத்ர சாஸ்த்ரத்தின் பொருள்களை அனை
வரும் எளிதில் அறிந்துய்யுமாறு அதிஸங்க்ரஹமும்

அதிவிஸ்தாரமுமின்றி நடுத்தரமான ஒரு ப்ரபந்தத்தை இயற்றினான். அதை அறிகிறவன் முக்தியை அடைவான். அதில் ஸ்த்ரீகள் சூத்ரர்கள் தாஸர்கள் இவர்கள் அனைவரும் ஸ்ரீமஹாவிஷ்ணுவை அடைவதற்கிடமான தாபம் புண்ட்ரம் முதலிய வைஷ்ணவஸம்ஸ்காரமெல்லாம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிள்ளைகளாகிய இந்தப் பதினெண்மர்களுக்குள் ருக்மிணியின் பிள்ளையாகிய ப்ரத்யும்னனென்பவனே முதல்வன். அவன் உருவத்திலும் குணங்களிலும் தந்தையோடொத்தவன். மஹாரதனாகிய அந்த ப்ரத்யும்னன் தன்னுடைய அம்மானாகிய ருக்மியின் புதல்வியை மணம் புரிந்தான். அவனுக்கு அவளிடத்தில் பதினாயிரம் யானை பலமுடைய அநிருத்தனென்னும் புதல்வன் பிறந்தான். ருக்மியின் பெண் வயிற்றுப் பேரனாகிய அவ்வநிருத்தன் அந்த ருக்மின் பிள்ளைவயிற்றுப் பேத்தியை மணம்புரிந்தான். அவனுக்கு அவளிடத்தில் வஜ்ரனென்னும் பிள்ளை பிறந்தான். மௌஸலசாபத்தினாலேற்பட்ட யாதவகுலக்ஷயத்தினின்று அவனொருவனே மிகுந்தான். அவ்வஜ்ரனிடத்தினின்று ப்ரதிபாஹுவென்பவன் பிறந்தான். அவன்பிள்ளை ஸுபாஹு. அவன்பிள்ளை தர்மஸேனன். அவன்பிள்ளை ஶ்ருதஸேனன். இந்த வம்சத்தில் பிறந்தவர்கள் பணமில்லாதவர்களாகவாவது, பல புதல்வர்களைப் பெறாதவர்களாகவாவது, ஆயுள் அற்பமாயிருக்கப் பெற்றவர்களாகவாவது, அற்பவீர்யர்களாகவாவது, ப்ராஹ்மண குலத்திற்கு வேண்டியவற்றை நிறைவேற்றாதவர்களாகவாவது பிறக்கவில்லை. யதுவம்சத்தில் பிறந்தவர்களெல்லோரும் புகழ்பெற்ற செயலுடையவர்கள். அனேகமாயிரமாண்டுகள் எண்ணினும் அவர்களை எண்ணி

முடியாது. யதுகுலகுமாரர்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசார்யர்கள் மூன்று கோடியே எண்பத்தெண்ணாயிரத்து முன்னூறு பேர்களென்று கேள்வி. (ஆசார்யர்களே இத்தனை பேர்களாயின் படித்த பிள்ளைகள் எத்தனை பேர்களாயிருப்பார்களென்று நீயே ஊஹித்துப் பார்.) யதுவம்சத்தில் அடங்கிய வஸுதேவனொருவனே பதினாயிரம் பதினாயிரலக்ஷம் பிள்ளைகளுடையவன். மஹானுபாவர்களான யாதவர்களெல்லோரையும் எவன்தான எண்ணவல்லவன்? தேவாஸுரயுத்தத்தில் மிகவும் பயங்கரர்களான அஸுரர்கள் எவரெவர் அடியுண்டு மாண்டார்களோ; அவர்களெல்லாரும் மனுஷ்யஜாதியில் சிசுபாலன் ஜராஸந்தன் முதலியவர்களாகப் பிறந்து கொழுத்து ப்ரஜைகளைப் பீடித்துக்கொண்டிருந்தார்கள். தேவதைகள் அவர்களை நிக்ரஹிக்கும் பொருட்டு ஸ்ரீமஹாவிஷ்ணுவால் நியமிக்கப்பட்டு யதுகுலத்தில் பிறந்தார்கள். இவர்கள் வ்ருஷ்ணிகள் அந்தகர் தாசார்ஹர் என்னுமிவை முதலாக நூற்றொருவம்சங்கள். பகவான் அந்த யாதவகுலங்களுக்கு ப்ரபுவாக ஸ்ரீக்ருஷ்ணரூபியாய் அவதரித்தான். யாதவர்கள் எவரெவர் உண்டோ அவர்கள் எல்லோரும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து வளர்ந்து வந்தார்கள். அந்த யாதவர்கள் படுத்தல் உட்காருதல் உலாவுதல் பேசுதல் விளையாடுதல் நீராடுதல் புசித்தல் முதலிய எல்லாச் செயல்களிலும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவர்களாயினும் அவன் தங்களுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவென்று அறியாமல் தங்களைப்போல் யாதவர்களில் ஒருவனென்றே நினைத்திருந்தார்கள். மன்னவனே! இதற்கு முன்பு பகவானுடைய ஸ்ரீபாததீர்த்தமும் தேவநதியுமாகிய கங்கையே புண்யதீர்த்தங்களெல்

லாவற்றிலும் மேலாயிருந்தது. இப்பொழுதோவென்ருல் அப்பகவான் யதுகுலத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுய் அவதரித்துத் தன் புகழாகிற புண்யதீர்த்தத்தை எங்கும் வெள்ளமிடச்செய்து அக்கங்கையை அற்பமாக்கினுன். அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஓயாமல் த்வேஷஞ் செய்த சத்ருக்களும் அனுராகஞ் செய்த நண்பர்களும் அவனேடு ஸாரூப்யத்தை அடைந்தார்கள். எவனுடைய கடாக்ஷத்தின் சிறுதுளி தங்கள்மேல் விழவேண்டுமென்று ப்ரஹ்மருத்ராதிகளான மற்றவர்களெல்லாரும் ப்ரயத்னஞ் செய்கிருர்களோ, அத்தகையளும் ஒருவராலும் வெல்லப்படாத பாதாரவிந்தங்களுடையவளுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மி இந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கே அனன்யார்ஹசேஷமா யிருப்பவள் (மற்றொருவர்க்கும் உரியளாகாதபடி அவனுக்கே சேஷமாயிருப்பவள்). மற்றும், இந்த ஸ்ரீ க்ருஷ்ண பகவானுடைய பெயரைக் கேட்கிலும் சொல்லிலும் அதன்பொருள் தெரியாமற் போயினும் அது அவர்களுடைய அமங்களங்களையெல்லாம் போக்கும். மற்றும், இவன் அந்தந்த யாதவகுலங்களில் தர்மங்களையெல்லாம் நடத்தினுன். மற்றும் அவன் காலத்திற்கு அபிமானியாகிய ஸுதர்சனசக்ரத்தை ஆயுதமாகவுடையவன். அத்தகையனுகிய இந்த ஸ்ரீ க்ருஷ்ணன் இப்பூமியின் பாரத்தை நீக்கினது ஓராச்சர்யமன்று. இம்மஹானுபாவன் தேவகியிடத்தில் பிறந்தானென்பது வெறும் பேச்சுமாத்ரமேயன்றி உண்மையன்று. இவன் ஜனங்களுக்கெல்லாம் தான் ஆதாரமும் ஜனங்களைத் தனக்கு ஆதாரமாகவுடையவனுமாயிருப்பவன். இவன் யாதவக் கூட்டங்களாகிற தன் புஜங்களால் அதர்மத்தை நீக்கும்பொருட்டே அவதரித்தான். (இவன் பூமியில் அவதரித்தமைக்கு

அதர்மத்தைப் போக்குவதுமாத்ரமே முக்யப்ரயோ ஜனமன்று. அதை அவன் கேவலம் தன் ஸங்கல்பத்தி னல் நடத்தவல்லவன். ஆனால் பின்னை எது முக்யப்ர யோஜனமென்றால்,) இவன் ப்ருந்தாவனாதி இடங்களி லுள்ள மரம் செடி கொடி முதலிய ஸ்தாவரங்கள் பசு பக்ஷிமுதலிய ஜங்கமங்கள் ஆகிய இவற்றின்பாபங்களைத் தன் ஸம்பந்தத்தினால் போக்கும்பொருட்டே அவதரித் தான். இவன், அழகிய புன்னகை அமைந்த தன் திரு முகத்தினால் இடைச்சேரியிலுள்ள மடந்தையர்களுக் கும் பட்டணத்து மடந்தையர்களுக்கும் காம விகாரத் தை வளரச் செய்து அவ்வழியில் அவர்களை அங்கிகரித் தான். இத்தகையனாகிய ஸ்ரீக்ருஷ்ண பகவான் மிகுந்த மேன்மையுடன் விளக்கமுற்றிருக்கின்றான். இந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் தனக்குப் பக்தி விளையவேண்டுமென்று விரும்புகிறவன், தன்னுடைய ஆஜ்ஞாரூபமான வேதத்தில் விதிக்கப்பட்ட தர்ம மர் யாதையைக் காக்கும்பொருட்டு லீலைக்காகத் திருவுரு வத்தை ஏற்றுக்கொண்ட யாதவஶ்ரேஷ்டனாகிய பரம புருஷன் இங்ஙனம் மனுஷ்யசேஷ்டைகளை அனுஸரித் துச்செய்தவைகளும் கேட்பவர்களுக்கும் சொல்பவர்களு க்கும் பாபங்களைப்போக்கி நிரம்பவும் பக்தியோகத்தை விளைக்க வல்லவைகளுமான அவனுடைய திவ்யாவதார சரித்ரங்களைக் கேட்கவேண்டும். மனுஷ்யன் ஸந்தி கள்தோறும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகான கதை யைக் கேட்பதும் சொல்லுவதும் செய்துகொண்டு அவன் விஷயமான சிந்தையை மேன்மேலும் வளர்த் திக்கொண்டு வருவானாயின், கடக்க முடியாத யம னிடம் அகப்பட்டு வருந்தும் ப்ராணிகளின் துக்கங்களை முடிப்பதாகிய அப்பகவானுடைய ஸ்தானத்தை அடை

வான். இந்த ஸ்தானத்தைப் பெற விரும்பியே பற்பல மன்னவர்களும் தவஞ் செய்யும்பொருட்டு க்ராமத்தி னின்று வனஞ் சென்றார்கள். (அப்படிப்பட்ட விஷ்ணு வின் ஸ்தானத்தை அவனுடைய குண சரித்ரங்களைக் கேட்டு அதில் சிந்தனை வளரப்பெற்றவன் அநாயாஸ மாகப் பெறுவான்). தொண்ணூறாவது அத்யாயம் முற்றிற்று.

பத்தாவது ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணமஸ்து.

Dr. U. V. S. IYER LIBRARY
22483
MADRAS-90